ஸ்ரீ:

# ஸ்ரீராமாயணம்

## பாலகாண்டம்.

### தமிழ் வசனம்.

இஃது

ஸ்ரீவால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

இயற்றப்பெற்று



சென்னை

ஆர். வேங்கடேச்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆனந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு,

வெளியிடப்பட்டது.

1923.

ஸ்ரீ:

ஸ்ரீராமசந்த்ரபரப்ரஹ்மணே நம:.

# முகவுரை.

---

ஸ்ரீமந்நாராயண பரிபூர்ணாவதாரமாகிய ஸ்ரீராமனது சரிதாம்ருதத்தைக் கூறுவதும், ஆனது பற்றியே ஆஸ்திக சிரோமணிகள் அனைவர்க்கும மிக்க இனிதாயிருப்பதும், தத்வங்களை யுணர்ந்த வால்மீகி மஹர்ஷியால் இயற்றப்பட்டதும், வாசிப்பது கேட்பது எழுதுவது பூசிப்பது முதலியவற்றால் ஐஹிகாமுஷ்மிக பலன்களைக் கொடுக்கவல்லதுமாகி விளங்கும் ஸ்ரீராமாயணத்தின் மகிமையைக் குறித்துச் சிறிதும் எழுதவேண்டிய அவச்யமில்லை. மேலும அதில் ப்ரதிபாத்யவஸ்துவாகிய ஸ்ரீராமனிடத்தில் ப்ரதிபத்தியில்லாத இதர மதஸ்தர்களுக்கும், அது நவரஸங்களையும் பொழிந்து கொண்டு தட்டுத்தடையின்றிய செய்யுள் நடை யமைந்த காவ்ய ரத்நமாகையால், மிகவும் ஆதரிக்கத் தக்கதாயிருக்குமென்றால் இனி ப்ரதிபாத்ய வஸ்துவில் பக்த்யதிசயத்தைப் பற்றியும் ஒப்பின்றியகவிதாரஸதைப்பற்றியும் அதுநம்மைப் போன்றவர்களுக்குமேன்மேலும் ஆதரிக்கத்தக்கதாயிருக்குமென்பது சொல்லவேண்டுமோ? ராமனது கல்யாணகுணங்கள் ஒப்பற்றவை; பின்னும் இவ்வளவவ்வளவென்று கணக்கிடமுடியாதவை. ஸீதையின் பதிபக்தி நிகரற்றது. ராம

லக்ஷ்மணர்களுடையவும் பரத சத்ருக்நர்களுடையவும் ஸ்நேஹமானது யாவரும் புகழும்படி விளங்கும். அதில் ராமனுக்குள்ள பித்ருபக்தியையும், ஸத்யவ்ரதத்தையும், ஆச்ரித பாரதந்த்ர்யத்தையும், பகைவரைப் பறந்தோடச் செய்யவல்ல வீரரஸவிலாஸத்தையும் ஸ்புடமாக வர்ணிக்கும் விதம் அதி மநோஹரமாயிருக்கும். அந்தந்த ரஸங்களைப் பொழியும் ரசனைகள் மிக்க ஸௌகுமாரங்களாயிருக்கும். அந்தந்த பாவங்களைக் கூறும் வகை அதிப்ரௌடமாயிருக்கும். நாயிகா நாயகர்களின் குணங்களும் விருத்தாந்தங்களும் அதிஸரளமும் மிக்க மதுரமுமாகிய வால்மீகியினது கவிதாமிருதப்ரவாஹத்தில் மிதந்துகொண்டிருந்த மாதுர்யம் பொருந்தி விளங்கும். இப்படிப்பட்ட ராமாயணத்தைப் பல கவிகள் பல பாஷைகளில் வசந சைலியிலும் செய்யுள் நடையிலும் அநேக வழிகளில் அழகாகச் செய்திருக்கின்றார்களேயன்றி, ப்ரஹ்மாவின் அநுக்ரகத்தினால் ஸரஸ்வதி அவதரித்த இம் மஹர்ஷியினது வாக்கிலிருந்து வந்த இவ்வழகிய சொற்களும், அவைகளின் ஸஹஜமாதுர்யமும் மற்றொன்றிலும் புலப்படவில்லை. ஆகையால் ஸ்ரீராமாயணத்தை மஹர்ஷி மொழிந்த உரைகளையே தமிழ் தேசஸ்தர்கள் அநுபவித்து ஆநந்திக்கவேண்டுமென்னும் எண்ணத்துடன் ஸ்த்ரீகளுக்கும் பாலர்களுக்கும் தெரியக்கூடிய தெளிவான தமிழ் பாஷையில் மிருதுவான நடையில் முதலில் இப்பாலகாண்டத்தை இயற்றி வெளியிடலாயினம்.

கோவிந்தராஜர் மஹேச்வரதீர்த்தர் முதலியவர் செய்த வியாக்கியானங்களிலுள்ள விசேஷ விஷயங்களும்

ரஹஸ்யார்த்த விவரணங்களும் தெளிவான தமிழ் நடை யில் எழுதப்பட்டிருக்கின்றன. மற்றைக்காண்டங்களும் உடனுடனே வெளியாகும். தமிழ் பாஷாபிமானிகள் அனை வரும் இதைக்கைப்பற்றி இங்ஙனம் முயன்ற எமக்கு உத்ஸா ஹத்தை மேன்மேலும் விளைவிப்பார்களாகவென்று வேண் டிக்கொள்கின்றனம்.

சென்னை,
10-11-23.

இங்ஙனம்,
ஸ்ரீமான் அ. வீ. நரஸிம்ஹாசாரியர்.

# படங்களின் விவரம்.

——:o:——

# பொருளடக்கம்.

ஸர்க்கம. பேஜ்

ஸர்க்கம். | பேஜ்.

ஸர்க்கம். பேஜ்.

ஸர்க்கம். பேஜ்.







1 ஸீதை லக்ஷ்மணன, பரதன், சத்ருக்கன், ஹநுமான முதலியவர்களோடு கூடிய ஸ்ரீராமபிரான்.



# ஸ்ரீராமாயணம்.

## பாலகாண்டம்.

### * முதல் ஸர்க்கம்.



ன்பு ஒருகாலத்தில், † தவத்திலும் வேதமோதுவதிலும் ஒழிவற்ற விருப்பமுள்ளவரும் சாஸ்த்ரங்களை யறிந்தவர்களிற் சிறந்தவரும் ஸரஸ்வதீபுத்ரர்களாகிய மரீசியாதிகளில் மேன்மை பெற்றவரும் முனிவர்களில் தலைவருமான நாரதரைப்

---

* இந்த ஸர்க்கத்தை ஸங்க்ஷேபராமாயணமென்றும் பாலராமாயணமென்றும் சொல்லுவார்கள். ஸங்க்ஷேபம்—சுருக்கம்.

† 'ஆசார்யாத்த்யைவ வித்யா விதிதா ஸாதிஷ்டம் ப்ராபத்' என்றும் 'ஆசார்யவான் புருஷோ வேத' என்றும் ஸத்குரூபதேசத்தைப் புகழ்ந்திருப்பதால், நாரதருக்குள்ள ஆசார்யலக்ஷணபூர்த்தி இவ்வாக்யத்திற் சொல்லப்படுகிறது. 'அபிஜநவித்யாஸமுதேதம் ஸமாஹிதம் ஸம்ஸ்கர்த்தாரமீப்ஸேத்' என்று ஆசார்ய லக்ஷணம் ஆபஸ்தம்பத்திற் சொல்லப்பட்டது. இதில், அபிஜநமென்பது—நற்குலத்திற் பிறப்பு; வித்யை—கல்வி; ஸமாஹிதமென்கிற ஸமாதானமாவது—மனத்தை யடக்கி நல்விஷயத்திற்செலுத்துகை. (தவத்திலும்) இத்யாதி. இங்கு மனத்தை நிர்மலமாகச்செய்யும் சாந்த்ராயணம் முதலான வ்ரதங்களைத் தவமென்கிறது. 'தபோ வித்யாச விப்ரஸ்ய நிச்ச்ரேயஸகரம் பரம்| தபஸா கல்மஷம் ஹந்தி வித்யயா ஜ்ஞாநமச்நுதே' என்று தவமும்

பார்த்து, மிகத்தவம பொருந்திய வால்மீகி முனிவர்,

---

வித்யையும் ப்ராஹ்மணனுக்கு மோக்ஷத்தைத் தருவதில் உயர்ந்தவை. ஏனெனில் தவஞ்செய்வதால் பாவத்தைப்போக்கி வேதமோதி ஞானம் பெறலாயிருக்குமென்று மநுவால் இவ்விரண்டும் புகழப்பட்டன. இதனால், மநஸ்ஸமாதாநம தோற்றும். (சாஸ்த்ரங்களை யறிந்தவர்களிற் சிறந்தவரும்) என்பதால் கல்வி சொல்லப்பட்டது. இது 'வாக்விதாம்வரம்' என்கிற பதத்தின் பொருள். இதற்கு வேறுபொருளையுட் கொண்டு (ஸரஸ்வதீபுத்ரர்களாகிய) இத்யாதி. 'வாக்' என்று ஸரஸ்வதி, 'கீர் வாக் வாணீ ஸரஸ்வதீ' என்று நாமலிங்காநுசாஸநத்திற் சொல்லப்பட்டது. (தயா விதந்தே லபந்தே இதி வாக்விதஃ) அவளால் அடையப்பட்டவர்கள். அதாவது ஸரஸ்வதியின் பிள்ளைகளாகிய மரீசி முதலானவர்கள். அவர்களில் இவர் பகவத் பக்தராகையால் மேன்மை பெற்றவர். இதனால் நற்குலத்திற் பிறந்தமை தோற்றும். இவ்வாறு ஆசார்ய லக்ஷணங்கள் மூன்றும் சொல்லப்பட்டன. (நராணாம் ஸம்பந்தி நாரம் அஜ்ஞாநம்,நாரம் த்யதி வண்டயதி ஸ்வோபதேசேநேதி நாரதஃ) நாரமென்றால் மனிதர்களின் அஜ்ஞாநம்; அதைத் தன்னுபதேசத்தால் போக்குவதைப்பற்றி நாரதரென்று இவருக்குப்பேர். அன்றியே (நரதி ஸத்கதிம் ப்ராபயதீதி நரஃ பரமாத்மா, தத்விஷயம் ஜ்ஞாநம் நாரம். தத்ததாதீதி நாரதஃ) நரனென்று நற்கதியைக் கொடுப்பவராகையால் பரமாத்மாவைச் சொல்லுகிறது. 'நரதீதி நரஃ ப்ரோக்தஃ பரமாத்மா ஸநாதநஃ' என்று பாரதத்திற் சொல்லப்பட்டது. அவனையறிகை நாரம், அதைத் தருபவராகையால் நாரதரென்னவுமாம். (மிகத்தவம் பொருந்திய) என்பதனால் வால்மீகிக்குள்ள சிஷ்யலக்ஷணபூர்த்தியும் தோற்றுகிறது. இங்கு தவமென்று 'தபஸா ப்ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ' 'ஸதபோதப்யத| ஸதபஸ்தப்த்வா| ஆநந்தோ ப்ரஹ்மேதிவ்யஜாநாத்' என்று சொல்லப்பட்ட ப்ரஹ்மஜ்ஞாந ஸாதநமான தபஸ்ஸைச் சொல்லுகிறது. அன்றியே தவமென்றது வேதத்தையும் வேதாங்கமான வ்யாகரணத்தினறிவையும் சொல்லும். ஆக, இத்தால் ஸாங்கமாக வேதங்களையோதிக் கேவலமான கர்மத்தினால் வரும் பயன் அல்பமாகி நிலையின்றியிருக்குமென்றுணர்ந்தவரென்று சொல்லப்பட்டது. தவமென்று நிர்வேதத்தையும் சொல்லுவார்கள். இத்தால் ஸம்ஸாரத்தில் அருசி பிறந்து மோக்ஷத்தில் ருசிபிறந்தவரென்கிறது. அன்றியே 'தஷ்

நமஸ்கரித்து வணக்கத்துடன் இவ்வாறு வினவினர்.

---

மாந்யாஸ மேஷாந்தயஸாமதிரிக்தமாஹு:’ என்று தவமென்று தவங்களிலுயர்ந்த ந்யாஸத்தைச் சொல்லுகிறது. ந்யாஸமாவது—‘தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா’ என்ற நமஸ்கார பூர்வகமாகச் சொல்லப்பட்ட ஆசார்ய சரணாகதி. (வல்மீகஸ்யாபத்யம் வால்மீகி:) வல்மீகமென்று புற்று; அதிற் பிறந்தவராகையால் வால்மீகியெனகிறது. இப்படியாகில் ‘ருக்ஷோऽபூத் ஸார்கவஸ்தஸ்மாத் வால்மீகிர்யோऽபிதீயதே’ என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் ‘ஸார்கவேணேதி ஸம்ஸ்க்ருதௌ’ ‘ஸார்கவேண தபஸ்விநா’ என்று இப்பிரபந்தந்தத்தில் உத்தரகாண்டத்திலும் இவரை ப்ருகுபுத்ரராகவும் இவருக்கு ருக்ஷரென்று பெயரென்றுஞ் சொல்லுகை யெப்படி சேரும்? அன்றியும் ‘சக்ரே ப்ரசேதஸ: புத்ரஸ்தம் ப்ரஹ்மாப்யந்வமந்யத’ என்றும் ‘வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா’ என்றும் இவரை வருணன் பிள்ளையாகச் சொல்லுவதும் எங்ஙனே சேரும்? என்றால்—இவர் கடோரமாகத் தவஞ்செய்கையில் இவரைப் புற்று மூடிப்போக, வருணன் ஓயாமல் மழைபெய்து அப்புற்றைக் கரைத்து வெளிப்படுத்தினமையால் ப்ருகுவின் பிள்ளையாகிய இவருக்குப் புற்றிற் பிறந்தமையும் வருண புத்ரராகையும் சேரும். இதுவன்றியே ப்ருகுவம்சத்திற் பிறந்தவன் ப்ரசேதஸ்ஸென்று ஒருவனுண்டு. இவர் அவனுடைய பிள்ளை. ருக்ஷரென்று பேருடையவர். இங்ஙனலாகில ‘சக்ரே ப்ரசேதஸ: புத்ர:’ என்று ப்ரசேதஸ்ஸின் பிள்ளையென்றவிடம் நன்கு சேராது. இங்கு வால்மீகியென்றது தன்னுடம்பைப் பேணாமல் கடோரமாகத் தவஞ்செய்து மனம் முதலான இந்த்ரியங்களை யெல்லாம் அடக்கியிருக்குந் தன்மையாகிற ஞானத்திற்கு அங்கமான சமம்தமம் முதலானவற்றை யுடையவரென்று காட்டுவதற்காக. ஆக இவ்விரண்டு பதங்களாலும் ‘பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத் நாஸ்த்யக்ருத: க்ருதேந’ என்கிறபடியே கர்மத்தால் வருபவையெல்லாம் அல்பமாகி நச்வரமாயிருப்பவையென்று நன்றாக ஆராய்ந்து அவைகளில் மனவெறுப்புற்று அந்தமில் பேரின்பமான மோக்ஷத்தில் ருசிபிறந்து சமம்தமம் முதலான ஆத்மகுணங்களுமுடையராகி ஆசார்யசரணாகதி செய்பவரென்று சிஷ்யலக்ஷணபூர்த்தி சொல்லப்பட்டது.

[1]இக்காலத்தில் இவ்வுலகத்தில் ஸகல நற்குணங்களும் பொருந்தியிருப்பவன் எவன்? தாழ்ந்தாருடைய தாழ்ச்சியை நினையாது அவர்களுடன் கலந்து பேசிக் கூந்தன்மையன் எவன்? [2] எவனுடைய மனம் விகாரத்தை விளைவிக்கும் காரணங்கள் இருப்பினும் விகாரமின்றியிருக்கும்? [3]தனக்கு ஒரு துன்பமும் நேராமல் பிறரை வெல்லுந் திறமையுடையவன் எவன்? [4] தர்மா தர்மங்களை நன்றாக அறிந்தவன் எவன்? [5] பிறர் செய்த உபகாரம் அணுவாயினும் அதைப் பெரிதாக நினைப்பதோடு நில்லாமல், எவ்வளவு அபகாரஞ் செய்தபோதிலும் அதில் கண்வைக்காமல் மறந்திருப்பவன் எவன்? எவ்விதசங்கடத்திலும் பொய்யில்லாதவன் எவன்? ஒன்றைச் செய்ய நினைத்தால் அது பலிக்குமளவும் நிறைவேற்றும்படியான மனவுறுதியையுடையவன் எவன்? தன குலாசாரத்தை எப்பொழுதும் விடாமலிருப்பவன எவன்? ஸகலப்ராணிகளுக்கும் நன்மை செய்பவன எவன்? சாஸ்த்

---

1 (இக்காலத்தில) எனகையால் இக்குணங்களெல்லாம் நிறைந்த காலாந்தரத்திலுள்ள நரஸிம்ஹாவதாரம் முதலானவற்றையும, (இவ்வுலகத்தில்) எனகையால் தேசாந்தரமான பரமபதத்திலுள்ள ஸ்ரீ மஹா விஷ்ணுவையும தவிர்க்கிறது.

2 இவ்வர்த்தம 'ஸத்ஸ்வபி விகார ஹேதுஷு அவிக்ருதத்வம் வீர்யம்' என்கிற வ்யாக்யானத்தையுட்கொண்டது.

3 இவ்வர்த்தம 'யேந ஸ்வய மக்ஷதஸஸந் பராந் ஜயதி தத் வீர்யம்' என்கிற வ்யாக்யானத்தையுட்கொண்டது. இங்ஙனம் மேலிற் சில விடங்களிலும கண்டுகொள்வது.

4 தர்மாதர்மங்களை யறிகையாவது—தர்மங்களைத் தவறாமற் செய்யவேண்டுமென்றும், அதர்மங்களைச் செய்யாமல் தவிர வேணடுமென்று மறிகை. அதை நன்றாக அறிகையாவது—ஸாமாந்யமாயும் விசேஷமாயுமுள்ள தாமாதர்மங்களை யறிகை. 'தர்மஸ்ய ஸூக்ஷ்மா கதி:' என்று தர்மகதி ஸூக்ஷ்மமன்றோ.

5 'கதஞ்சி துபகாரேண க்ருதே நைகேந துஷ்யதி। நஸ்மரத்

ரங்களெல்லாம் உணர்ந்தவன் எவன்? அந்தச் சாஸ்த்ரங்களின் பொருளையெல்லாம் நன்றாக உரைக்கவல்லவன் எவன்? எவ்வகைக் கார்யங்களையும் குறைவற நிறைவேற்றுந் திறமையுடையவன் எவன்? யாவராலும் ப்ரியமாகப் பார்க்கத்தக்கவன் எவன்? அழிக்கக்கூடாத தைர்யமுடையவன் எவன்? கோபத்தை வென்று அதைத் தனக்கு ஸ்வாதீநமாகச் செய்து கொண்டவன் எவன்? [1] ஆயிரம் சந்த்ரஸூர்யர்கள் உதித்தாற்போல் அளவற்ற ஒளியுடையவன் எவன்? நற்குணங்களிலும் குற்றமேறிடும்படியான பொறாமையற்றவன் எவன்? எவன் யுத்தத்திற் கோபங்கொண்டால் தேவர்களும் பயப்படுவார்கள்? [2] இக்குணங்களையுடைய மஹாபுருஷனைக் கேட்க

---

யப காராணும் ஸதமபயாத்மவதநயா' என்று இங்கு மேல் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது.

1 'திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா। யதி பாஸ்ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந:' என்கிற வசநத்தை யுட்கொண்டு இந்த அர்த்தம் சொல்லப்பட்டது. அநுகூலர்க்கு ஸுகமாகவும் ப்ரதிகூலர்க்கு துக்கமாகவும் இருக்கிறபடியால் சந்த்ர ஸூர்யர்களிருவரும் உபமாநமாகச் சொல்லப்பட்டனர்.

2 வால்மீகி ராமசரித்ரமெல்லாம் நன்றாக அறிந்தவர். 'இதி ஸீதா ச ராமஶ்ச லக்ஷ்மணஶ்ச க்ருதாஞ்ஜலி:। அபிகம்ய ஆஶ்ரமம் ஸர்வே வால்மீகி மபிவாதயந்' என்று ஸீதை ராமன் லக்ஷ்மணன் இம்மூவரும் வணக்கத்துடன் கையைக் கூப்பிக்கொண்டு வால்மீகியினாஶ்ரமத்தேறச் சென்று வால்மீகியை வணங்கினார்கள் என்று அயோத்யாகாண்டத்தில் தான் சொல்லப்போகிறார். பின்னும 'ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:। ராமபூதம் ஜகதபூத்ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி' என்று ஸாமாந்ய ஜநங்களும் அறிந்த ராமவைபவத்தை ராம ராஜ்யத்தின் மத்யத்தில் வாஸஞ்செய்யும் மஹர்ஷியாகிய வால்மீகி அறியாரென்பது சேருமோ? இதை ஸத்யலோகத்திலிருந்து வந்த தேவர்ஷியாகிய நாரதரைக் கேட்டுத்தான் அறியவேணுமோ? நாரதரும் ஆராய்ந்தறிந்து சொல்லுகிறேன் கேளீரென்ன வேணுமோ?

விரும்புகிறேன். இவ்விஷயத்தில் எனக்கு அளவற்ற குதூஹலமாயிருக்கின்றது. தேவரீர் ஜ்ஞானிகளில் மஹிமை பெற்றவரன்றோ? இப்படிப்பட்ட மஹாபுருஷனை யறியவல்லமை உமக்கன்றோ வுள்ளது. ஆகையால், இந்த மஹாபுருஷனை அடியேனுக்குத் தெரியச்சொல்ல வேணுமென்று ப்ரச்நம் பண்ணினார்.

இப்படி வினவிய வால்மீகியின் வசனத்தைக்கேட்டு மூவுலகத்திலுமுள்ள வ்ருத்தாந்தங்களையும் அறிந்த அந்நாரதமாமுனிவர் மிகவும் ஆநந்தமடைந்து, கேளுமென்று அழைத்து உத்தரஞ் சொல்லத்தொடங்கினார். முனிவரே! நீர் வினவிய குணங்கள் வெகுவாயிருக்கின்றன. இவை யெல்லாங் கிடைக்கத்தக்கவையல்ல. இக்குணங்களோடு கூடின புருஷனை [1] ஆராய்ந்தறிந்து சொல்லு

---

என்றால்-வால்மீகி ராமனைக்குறித்து வினவினவரன்று; வேதாந்தங்களில் பரதத்த்வம் பலவிடங்களிற் பலவிதமாகச் சொல்லப்படாநின்றது. ஆகையால் ஆங்காங்கு சொல்லப்படும் பரதத்த்வம் விஷ்ணுவோ, அல்லது ருத்ராதிகளில் ஒருவனோ என்பது வினவிய வால்மீகியின் கருத்து. இக்கருத்தறிந்த நாரதரும் ராமனாகி அவதரித்த ஸ்ரீவிஷ்ணுவே வேதாந்தங்களில் ஓதப்படும் பரதத்த்வம். அவனே யாவர்க்கும் மேலானவன். ப்ரஹ்மா முதலானவர்கள் அனைவரும் அவனுடைய ஆணைக்குட்பட்டவர்கள். வேதங்களெல்லாம் பலவிதமாகச் சொல்லுவது மவனையே யென்று வேதங்களிற் சொல்லும் குணங்களை யெல்லாம் ராமனிடத்திற் காட்டி உத்தரமருளிச்செய்கிறார். ஆகையால் இவையெல்லா மமையும்.

1 நாரதர் ஸ்ரீராமசரித்ரத்தைச் சொல்லவந்தவராகையாலும் வால்மீகியின் கேள்விக்கு ஸ்ரீராமனையே சொல்லவேண்டியிருப்பதனாலும் உடனே சொல்லவேண்டியிருக்க ஆராய்ந்தறிகை யேதுக்கென்றால்—தானுத்தேசித்த விஷயத்தையே கேட்டதனால் வந்தகளிப்பாலும் ராமகுணங்களை நினைத்து அதில் மூழ்கியிருந்தமையாலும் மெய்ம்மறந்திருந்தமை பற்றி இங்ஙனம் சொல்லக்கூடும்.

கிறேன், கேளீர். [1] இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்து [2] ராம னென்று பேர்பெற்றவன ஒருவன உளன். அவனை உம் மைப்போனறவர்களன்றியே ஸகலஜநங்களும் நன்ருகக் [3] கேட்டறிவார்கள். [4] அவனுடைய ஸ்வபாவம் என்றும்

1 ஜநகாதி மஹாகுலஙகளுமிருக்க இக்ஷ்வாகு வம்சததில் வந்த வதரித்ததற்குக் காரணமென்னென்ருல்?—இச்சங்கைம் தீருகைக்காகவே இங்கு இக்ஷ்வாகுசப்தம் சேர்க்கப்பட்டது. இக்ஷ்வாகு வென்பவன் மநுமஹாராஜனுடைய மூத்தகுமாரன். இவன்தான் முன் வெகு காலம் விஷ்ணுவை ஆராதித்து அவருடைய மூர்த்திவிசேஷமாகிய ரஙகநாதனைப்பெற்ருன். ஆகையால்தான் இந்த வம்சத்தில் ரங்கநாதன் ஆராதிக்கப்பட்டிருந்தது. இவ்விக்ஷ்வாகுவினிடத்தில் பக்ஷபாததாலே இவ்வம்சத்தில் பகவான அவதரித்தது. 'ஒரு குலத்தில வைஷ்ணவனுயிருப்பானெருவன் பிறந்தால்' 'வைஷ்ணவோ நः குலேஜாதः ஸ்நஸ்ஸந்தாரயிஷ்யதி' என்கிறபடியே அவ்வம்சத்திற பிறந்தவர்களனைவரும் உத்தீர்ணராகிருர்களெனகிறது. இப்படியிருக்க யாதொரு வம்சத்திற் பிறந்த அரசாகள் அனைவரும் பகவன் மூர்த்தி விசேஷமாகி இப்பொழுதும் காவேரியினிடையிற் பள்ளிகொண்டிருக்கிற ரங்கநாதனைத் தன க்ருஹத்தில் ஆராதித்துக்கொண்டு வைஷ்ணவோத்தமாகளாயிருந்தார்கள்; அவ்வமசத்தில் அம்மஹா புருஷனே வநதவதரித்தான். ஆகையால் அவவம்சததின் பெருமை சொல்லத்தரமன்றென்கிற இவ் வதிசயந் தோற்றுகைக்காக (இக்ஷ்வாகுவம்சத்தில) என்னப்பட்டது.

2 (ரமயதி ஸர்வாந் குணைரிதி ராமः) தன் குணஙகளால் யாவரையும் ஸந்தோஷிக்கச் செய்வதிஞல் ராமன். (ரமந்தே அஸ்மிந் ஸர்வே குணைரிதி ராமः) இவனிடத்தில் யாவரும் குணங்களைக்கண்டு சந்தோஷிக்கிருர்களாகையால் ராமனென்றுஞ் சொல்லுவார்கள்.

3 (கேட்டறிவார்கள்) தாடகையைக் கொன்றது, ஸுபாஹு மாரீசாகளை வென்றது, விச்வாமித்ர யாகத்தைக்காததது, அஹல்யையின் சாபத்தை விடுவித்தது, சிவனுடைய வில்லை முறித்தது, பரசுராமனை நிக்ரஹஞ்செய்தது, மராமரங்களேழையும் பிளந்தது, வாலியை முடித்தது, கடலில் அணைகட்டினதுः, இராவணனுடைய மூலபலத்தை யழித்தது முதலான சரித்ரங்களைக்கேட்டு இவனே ஸ்ரீமந் நாராயணனென்று நன்ருக அறிவார்களென்கிறது.

4 இஙகு 'நாஸ்யஜராயைதஜ்ஜீர்யதி நவயோநாஸ்யஹந்யதே' 'அப

ஒருபடிப்பட்டு மாறுபாடின்றியிருக்கும். [1] அவனுடைய சக்தி இவ்வளவென்றும் இத்தன்மையதென்றும் எண்ணக்கூடாமல் நாநாவிதமாகி விசித்திரமாயிருக்கும்;- [2] அவன் ஜ்ஞாந ஸ்வரூபனாகையாலே ஸ்வயம்ப்ரகாசன; [3] நிலையாகி அளவற்று மிகுதியுடைய ஆநந்தமுடையவன்; [4] உலகத்தையெல்லாம் தனவசமாக்குந் தன்மையன; [5] சிறந்த புத்தியுள்ளவன. [6] அழியாத நீதியமைந்தவன். [7] அவன்தான வேதங்களை ப்ரஹ்மாவுக்கு முதலில் வெளியிட்டவன. [8] அவனது ஐச்வர்யம அள

ஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிவத்ஸோபிபாஸ: முதலான ச்ருதிகள் ப்ரமாணம்.

1. இங்கு 'பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியாச' என்கிற சருதி ப்ரமாணம:

2 இங்குப்ரமாணம் 'விஜ்ஞாநவநஏவ' என்கிறச்ருதி.

3 இங்கு 'ஆநந்தோ ப்ரஹ்ம'

4 இங்கு 'ஸர்வஸ்யவஶீ ஸர்வஸ்யேஶாந:'

5 இங்கு, புத்திக்குச் சிறப்பாவது— 'ஶுஶ்ரூஷா ஶ்ரவணஞ்சைவ க்ரஹணம் தாரணம்ததா|ஊஹாபோஹோர்த விஜ்ஞாநம் தத்த்வஜ்ஞாநம்ச தீகுணா:' என்று சொல்லப்பட்ட குணங்களெல்லாம் நிறைந்தமை.

6 இங்கு, 'யாதா தத்யதோ அர்த்தாந் வ்யததாச் சாச்வதீப்ய: ஸமாப்ய:' என்றும் 'ஏஷஸேதுர்விதரண ஏஷாம் லோகாநாமஸம்பேதாய' என்றும் சருதிகள் ப்ரமாணம்.

7 'யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை'

8 நித்யவிபூதியும் லீலாவிபூதியுமாகிற உபய விபூதிகளுக்கு மீசவரனென்றுகருத்து; 'பாதோஸ்ய விச்வாபூதாநி' என்று லீலாவிபூதியை ஒரு பங்காகச் சொல்லி 'த்ரிபாதஸ்யாம்ருதம்திவி' என்று நித்யவிபூதியை லீலாவிபூதியைக்காட்டிலும் மும்மடங்கு அதிகமாக ச்ருதி சொல்லிற்று. இனி லீலாவிபூதியைப் பார்த்தால் ஒரு ப்ரஹ்மாண்டம்

வற்றிருக்கும். அவன் சத்ருக்களை வெல்லும் ஸ்வபாவன். [1] அவனுடைய தோள்கள் [2] உயர்ந்து பருத்திருக்கும்; [3] புஜங்கள் திரண்டுருண்டு நீண்டிருக்கும்; [4] கழுத்து சங்குபோல் மூன்று ரேகைகளால் அலங்கரிக்கப்பட்டு அழகாயிருக்கும். [5] கன்னங்கள் சதைபிடித்துப் பருத்திருக்கும், [6] மார்புபரந்துயர்ந்து பருத்துக் கடினமாயிருக்

---

பலவகையாகப் பிரிந்து அளவிடவொண்ணாதிருக்கும். இவ்விதமான ப்ரஹ்மாண்டங்களை 'அண்டாநாந்து ஸஹஸ்ராணி நியுதாந்யயுதாநிச' என்று கணக்கற்றிருக்கும். ஆனபின்பு லீலாவிபூதியைவிட மும்மடங்கான நித்யவிபூதியின் அளவற்றமை இனிச்சொல்லவேண்டுவதொன்றன்று. ஆகையால் (அவனதைசவாயம அளவற்றிருக்கு)மெனகிறது. 'ஸர்வமிதமபியாதத:' எனகிற சுருதி இங்கு ப்ரமாணம.

1 இது முதலாக 'யஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே' இத்யாதியில் அந்தராதித்ய வித்யையிற் சொல்லப்பட்ட ஸர்வாங்கஸுந்தரமான திருமேனியைச் சொல்லுகிறது.

2 தோளுயர்ந்திருக்கை மஹாபுருஷ லக்ஷணமாக 'கக்ஷ: குக்ஷிஶ்ச வக்ஷஶ்ச க்ராணஸ்கந்தௌலலாடிகா| ஸர்வபூதேஷு நிர்திஷ்டா உந்நதாஸ்து ஸுகப்ரதா:' என்று ஸாமுத்ரிகத்திற் சொல்லப்பட்டது.

3 இதுவும் 'ஆஜாநுலம்பிநௌ பாஹூ வ்ருத்தபீநௌமஹீஶ்வர:' என்கிறபடியே மஹாபுருஷலக்ஷணம். இப்படி மேலும் கண்டு கொள்வது.

4 இங்கு 'கம்பு க்ரீவஸ்து ந்ருபதிர்லம்பகர்ணோதி பூஷண:' என்று ஸாமுத்ரிகம். 'ரேகாத்ரயாந்விதா க்ரீவாகம்பு க்ரீவேதிக த்ருஶ்யதே' என்று நிகண்டுவிற்சொல்லுகையாலே மூன்றுரேகையுள்ள கழுத்தைக் கம்புக்ரீவை யென்கிறது.'கம்பு' என்றால் சங்கு. சங்கு போன்ற கழுத்தென்று பொருள். சங்குக்கு அடியில் மூன்றுரேகைகளுண்டு. அதையுடையவன் கம்புக்ரீவன்.

5 இங்கு 'மாம்ஸலௌ து ஹநுயஸ்ய ஹவதஸ்த்வீக்ஷணௌ ததௌ | ஸகரோ ம்ருஷ்டமஶ்நாதி யாவஜ்ஜீவம் ஸுகாந்வித:'' என்று லக்ஷணம்.

6 இங்கு 'ஸ்திரம்விஶாலம் கடிநமுந்நதம்மாம்ஸலம் ஸமம்|வக்ஷோ யஸ்ய மஹீபால ஸ்தத்ஸமோவாஹவேந்நர:' என்று லக்ஷணம்.

கும்; சரீரம் மிகவும் மேலான வில்லைத் தாங்கத்தக்க தாயிருக்கும்; [1] கழுத்தெலும்பு சதைபிடித்து வெளியில் தோன்றுதிருக்கும்; [2]அவனைப் பார்த்த மாத்திரத்தில் பகைவரெல்லாம் பயந்தோடுவார்கள். [3]அவன் ஸ்வபாவத்தால் பாபங்களை வெறுப்பவன; [4]அவனுடைய சிரஸ்ஸு வட்டமாகிக் குடைபோலிருக்கும்; [5]நெற்றி அஷ்டமீசந்திரனபோல் விளங்காநிற்கும்; [6]அவன் நடந்தால் யானை

1 இங்கு 'விஷமைர் ஜத்ருபிர் த்ஸ்வா அதிஸந்க்ஷமைஶ்சமாநவாஃ। உந்நதைர் ஹோஷிரோ நிமநைர் திஸ்ஸுவாஃ பீநைர் நராயிபாஃ' என்று லக்ஷணம்.

2 முன்பின்னெல்லாம் திருமேனியைச சொல்லாநிற்க இடையில் இது சேருமோ வென்றால், இதுவும் திருமேனியின் பெருமையைத் தோற்றுவிக்குமாகையால் சேரும்.

3 இங்கு இது சேரும்படி யெங்ஙனே? திருமேனியின் குணமன்றே, என்றால்—உலகத்தில் ஜீவராசிகள் தந்தம் பாபத்திற்கு அநுகுணமாகச்சரீரத்தைப் பெறுவதுபோலன்று இவன் இங்குப்பிறந்திருப்பது. அதற்கடியான பாபமவனுக்கில்லை. ஆகையால் 'இச்சாக்ருஹீதாபிமதோருதேஹஃ' என்கிறபடியே இவனுடைய திருமேனி தன்னிச்சையால்,தன்மனத்துக்குகப்பாகவும் கம்பீரமாகவும் கொள்ளப்பட்டது. இங்ஙனம கருத்தாகையாலே இதுவும் சேரும். இங்கு இந்த ச்லோகத்துக்குத் தன்னை யாச்ரயித்தவர்களினிச்சாநுஸாரமாக அவர்கள் திருவுள்ளத்துக்குகப்பாகத் திருவுருவங் கொள்ளுமென்றும் பொருள் சொல்லுவர்.

4 இங்கு 'ஸமவ்ருத்த ஶிராஶ்சைவ சத்ராகாரஶிரா ஸ்தாயா।ஏகசத்ராம் மஹீம் ஸுங்க்தே தீர்வமாயுஶ்சஜீவதி' என்று லக்ஷணம்.

5 இங்கு 'அர்யசந்திரஸந்நிபம் லலாடம் யஸ்ய ஸம்ரஃ' என்று லக்ஷணம்

6 இங்கு 'ஸிம்ஹர்ஷ கஜவ்யாக்ர கதயோ மநுஜா முநே। ஸர்வத்ர ஸுவமேயந்தே ஸாவதர ஜயிநஸ்ஸதா' என்று லக்ஷணம்.

யோடும் ஸிம்ஹத்தோடும் ஒத்திருக்கும் [1]அவனுடைய தேக அதிகஉயர்மும் அதிக குறுக்கமுமில்லாமல் லக்ஷணம் பொருந்தி ஸமமாயிருக்கும்; [2]அவயவங்கள் ஒனறோடொன்று ஸமமாகப் பிரிந்திருக்கும்; [3]அவன் நீலமேகம்போல கிருகிகென்று மழமழத்துக் காண்போர் கண்களைக் கவரும்படியான தேககாந்தி யுடையவன். அவன் அளவற்ற பராக்ரமமுடையவன். அவனுடைய அவயவங்களை யெல்லாம் தொகுத்துப் பார்க்கில் மிகவும் அழகாயிருக்கும். அவனுடைய மார்பு பருத்து அழகாயிருககும். [4] அவனுடைய கண்கள் தாமரையிதழ்போல் விசாலமாகி நீண்டு செவ்வரியோடியிருக்கும். அவனது அவயவங்களெல்லாம் அழகு பொருந்தியிருக்கும். ஸாமுத்ரிகத்திற் சொனன சுபலக்ஷணங்கள் முழுமையும் அவனுக்கேயுள்ளவை. [5]அவன [6]தர்மங்களின ஸூக்ஷ்மங்களையெல்லாமறிந

---

1 இங்கு 'ஷண்ணவத்யங்குலோத்ஸேதஸ் ஸாவம்ஹைமோஹவேஷ ந்ருப:' என்று சொல்லப்பட்ட லக்ஷணம் பொருந்தியென்கிறது.

2 இஙகு 'ஹ்ரஸ்வௌ நாஸா புடௌ நேத்ரே கர்ணவோஷ்டௌ ச சுசுகே| கூபபரௌ மணிபந்தௌ ச ஜாநுநீ வ்ருஷணே கடீ|கரௌ பாதௌ ஸ்பிசௌ யஸ்ய ஸமௌ ஜ்ஞேயஸ் ஸ பூபதி:' எனறு லக்ஷணம்.

3 இஙகு 'சக்ஷுஷஸ்ஸ்நேஹேந ஸௌபாக்யம் தந்தஸ்நேஹேந போஜநம் | த்வசஸ ஸ்நேஹேந ஸய்யாச பாதஸ்நேஹேந வாஹநம்' என்று லக்ஷணம். ஸ்நேஹமாவது—னிகுனிகுப்பு.

4 இஙகு 'ரக்தாந்தை: பத்மபத்ராபைர் லோசநைஸ்ஸுவஹோமிந:' எனறு லக்ஷணம.

5 இபபடி ஆசரிதா அநுபவிக்கும் திருமேனியைச சொல்லி, இனிமேல் ஆசரிதரக்ஷணத்துக்குறுப்பான குணங்களைச சொல்லுகிறது.

6 தர்மத்தின் ஸூக்ஷ்மமாவது-குற்றம பாராமல் சரணம் புகுந்தவனை ரக்ஷிககவேண்டுமென்கையே. இக்குணம் 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந| தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத்அகர்ஹிதம்' என்று வெளியிடப்பட்டது.

தவன்; [1] சொன்ன சொல் தவறுன்; ஸகலப்ராணிகளுக்கும் ஹிதஞ்செய்வதில் ஊக்கமுடையவன்; [2] இப்படிப்பட்ட குணங்களுடையவனென்று பெருங்கீர்த்தி பெற்றவன்; [3] எல்லாவற்றையும் ஒருமிக்க அறியுந்திறமுள்ளவன்; மிகப் பரிசுத்தன்; தன்னையடுத்தவர்களுக்கு ஸ்வாதீநமாயிருப்பவன்; அவர்களின் நன்மையிற் சிந்தைகூர்ந்தவன்; [4] ப்ரஹ்மதேவனோடொத்தவன்; தனக்குப் பத்தினியான

---

1 இதுவும் 'அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம்வா ஸீதே ஸலக்ஷ்மணாம் । நது ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:' என்று இது முதலான விடங்களில் காணலாம்.

2 இங்கு 'தஸ்ய நாம மஹத் யச:' என்று ச்ருதி.

3 இங்கு 'யஸ்ஸர்வஜ்ஞ ஸர்வவித்' என்று ச்ருதி. இது 'ஜ்ஞாநஸம்பந்ந:' என்கிற பதத்தின் பொருள். இதற்கு 'தன ஸ்வரூபத்தையுணர்ந்தவன்' என்று பொருள்கூறி, 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்று தானுக ஏறிட்டுக்கொண்டதித்தனை. இதனுல் 'மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்சலோகா நநுத்தமாந்' என்று ஜடாயுவைக்குறித்து 'நீமேலானலோகங்களையடைவாய். இவ்வாறு நானுனக்கநுமதி கொடுக்கிறேன்' என்று சொன்னமை சேரும். ப்ரஹ்மோபதேசமில்லாமல் அவ்வுலகங்களுக்குப் போகையரிது. ப்ரஹ்மஜ்ஞாந மில்லாதவன் ப்ரஹ்மோபதேசம் பண்ணச் சேராது ஆகையால் இவ்வாறு பொருள்கொள்ள வேணுமென்பா சிலர். 'ஜடாயுவுக்கு மோக்ஷங்கொடுத்தமை' 'ஸத்யேந லோகாந்ஜயதி' என்று ராமன் ஸத்யத்தால் உலகமெல்லாம் வென்றவனுகையால் அமையும். ஆனபினபு இவ்வாறு பொருள்கூறவேண்டிய நிர்ப்பந்தமில்லை.

4 'மயி யேவிரிஞ்சிகிரிசப்ரயமாவதாரா:, என்று ப்ரஹ்மருத்ரர்களுக்கு நடுவில் லோகத்தை ரக்ஷிக்கும்பொருட்டு விஷ்ணுவாக அவதரித்தாற்போல ப்ரஹ்மாவைப்போ லிங்கவதரித்தானென்கிறது. ப்ரஹ்மதேவனென்று ஸாக்ஷாத்பரமபுருஷனைச்சொல்லி ஸாக்ஷாத் பரமபுருஷனோ டொத்தவனென்றுஞ் சொல்ல வமையும். ஆனுல் ராமனே பரப்ரஹ்மமாயிருக்க இதெங்ஙனே சேருமென்றால்?— மநுஷ்ய தர்மங்களான சோகமோஹாதிகளைத் தானேறிட்டுக்கொண்டமை பற்றி பேதங்கற்பித்துப் போலியாகச் சொல்லவேண்டும், பரசுராமனுயடைய

ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு இணைபிரியாதிருப்பவன; யாவரையும்போஷிக்கவல்லவன; தனது அன்பர்களின் விரோதிகளைக் களைபவன; [1] இவனவனென்னாது ஸர்வப்ராணிகளுக்கும் ரக்ஷகனுயிருப்பவன; [2] தர்மத்தை யாவரும் தவறுதபடி நன்ருக நிலைநிறுத்துபவன; [3] தன்னுடைய தர்மத்

---

லோகங்களைத்தடுக்கை, ஜடாயுவுக்கு மோக்ஷங்கொடுக்கை, தன்னுடன் அயோதயையிலுள்ள புல்லெறும்பு முதலாகச சராசரங்களை யெல்லாம் வைகுந்தமேறச்செய்கை முதலான அற்புதசரித்ரங்களாலொத்திருக்கை.

1 இனி யிவ்வவதாரத்துக்குரிய குணங்களைச சொல்லுகிறது. (இவனவனென்னுது) என்று தொடங்கி. உலகத்தில் ப்ரபுவாயிருப்பவன தனது ஜநங்களைமாத்திரம் காப்பாற்றுவதுண்டு. இவன் அப்படியன்றி ஸர்வேச்வரனுகையாலே யாவரையும் காப்பவனென்கிறது.

2 இப்படி ஸர்வரக்ஷகனுகில் பாபிகளாயிருப்பவர்களுக்கும் இஷ்டங்களைசசெய்து அநிஷ்டங்களைத தவிர்க்கவேண்டுமே, அது சேராதேயெனருல், சொல்லுகிறது (தர்மத்தை யாவரும்) என்று தொடங்கி. அதாவது—தர்மத்தைத் தான் அநுஷ்டித்தும் பிறரை யனுஷ்டிக்கசசெயதும் நிலைநிறுத்துபவ னென்கை. இத்தால் சாஸ்தரத்தை மறுத்து நடப்பவர்களையும் வைததியன வியாதியைப்போக்கி ஸுகப் படுத்துவதுபோல் தக்க தண்டனைகளால் பாபங்களைப் போககிப் பரிசுத்தராகச செய்பவனென்கிறது.

3 தனனுடைய தர்மமாவது தன்னை அடைந்தவாகளைத் தான் விடாமல் ரக்ஷிக்கையெனகிற தன்னுடைய விசேஷதாமம். அல்லது க்ஷத்ரியஜாதியிற் பிறந்திருக்குந் தன்னுடைய க்ஷத்ரதர்மததைச் சொல்லுகிறது. க்ஷத்ரியாகளுக்குச சொனன தர்மங்களைக் குறைவற நடத்துபவனென்கை. உலகில் யாவரும் பிறர்க்குச சொல்லுவதில் வல்லரே. தாம் செய்யும்போது அவ்வல்லமையிருப்பது அதரிதாகையாலே அப்படியன்றி யாவருந் தன்னைப்பார்த்துத் திருந்தும்படி நடப்பவனென்கை. 'பரோபதேஶஸமயே ஜநாஸ்ஸர்வேபி பண்டிதா:।ஸ்வாநுஷ்டாநஸ்ய ஸமயே முநயோபி ந பண்டிதா:'. அன்றியே

தில் குறைவற நடப்பவன்; தன்னைப்பற்றினரை விசேஷமாகக் காப்பவன்; வேதங்களையும் வேதாங்கங்களையும் நன்றாகக் கற்றறிந்தவன்; தநுர்வித்யையில் மிகவுந் தேர்ந்தவன்; மற்றுமுள்ள ஸகல சாஸ்த்ரங்களின மர்மங்களையும் உள்ளபடியறிந்து மறப்பின்றி மேன்மேலும் பரவுகின்ற புத்தியின்தோற்றமுடையவன்; அவனுக்கு உலகமெல்லாம் ப்ரியமாயிருக்கும். அவனும் உலகுக்கெல்லாம் ப்ரியன்; எல்லாவற்றையும் ஸாதிக்கவல்லவன்; அதிகம்பீரஸ்வபாவன்; நன்றாகப்பேசவல்லவன்; ஸமுத்ரத்தை நதிகள் ஓயாமற் சூழ்வதுபோல் ஸத்புருஷர்கள் அவனை [1]யெப்பொழுதுஞ் சூழ்ந்துகொண்டிருப்பார்கள்;

---

தன்னுடைய தர்மமாவது யாவரிலும் மேலாயிருக்கை. அதைச் சிவதநுர்ப்பங்கஞ்செய்வது பரசுராமனை ஜயிப்பது முதலான வ்யாபாரங்களால் நிலைநிறுத்திக் கொள்பவனென்கை.

1. (எப்பொழுது) மென்கையாலே-அஸ்த்ரவித்யை கற்கும்பொழுது ராமன இடையில் சரமந்தீருகைக்காக ஓர் மரத்தின் கீழலிலொதுங்குமளவிலும் தர்மஸந்தேஹங் கேட்கப்பெரியோர்கள் வந்துசூழ, 'ஜ்ஞாநவ்ருத்தையர் வயோவ்ருத்தையஶ்சீல வ்ருத்தையஶ்ச ஸஜ்ஜநை:। கத்யந்நாஸ்தவை நித்யமஸ்ரத்யோக்யாந்தரேஷ்வபி' என்கிறபடியே அவர்களுடன் கலந்திருப்பவனென்கிறது. அஸ்த்ரவித்யாப்யாஸத்திலிப்படியாகில் ஹோமம் தேவபூஜை ஸபை முதலான காலங்களில் சொல்லவேண்டியதில்லை. இதனால் ஈசவரனைப் பற்றுகைக்குக் காலதேசநியமமில்லையென்பது தோற்றும். நதிகள் ஸமுத்ரத்தைச் சூழ்வதுபோல் என்கையால் எப்படி நதிகள் ஸமுத்ரத்தில் கலக்கையால் மஹாநதிகளென்று மேன்மைபெறும், அப்படியே ராமனைப்பற்றி யிவர்களும் பெருமைபெற்றவரென்கிறது. எப்படி நதிகள் வந்து வீழ்ந்தபின்பும் ஸமுத்ரமே தனியாகி விளங்கி நிற்கும், அப்படியே ஸஜ்ஜநகோஷ்டியில் நக்ஷத்ரங்களில் சந்த்ரன்போல ராமன் தனியே விளங்கிநிற்குமென்கிறது. எப்படி பதினாயிரம் நதிகள் வந்து வீழ்ந்தபோதும் ஸமுத்ரம் கலங்காதிருக்கும், அப்படியே ராமனும் ஜாபாலி முதலானோர் எவ்வளவு கலக்கப்பார்க்கிலும் கலக்கமுடியாதிருப்பவ

பெரியோர்கள் அணுகத்தக்க பெருமை பாருந்தினவன்; ஆகிலும், ஸர்வர்க்கும் ஸமனாயிருப்பவன். பார்க்கப் பார்க்க மேன்மேலும்ரீதியை விளைவிக்கும்படியானகாட்சியுடையவன். முனிவரே! [1] அவன் குணங்கள் என்னால் எடுத்துரைக்கமுடியா. அவன் ஸகலமான மங்கல குணங்களுக்கும் இருப்பிடம். அவனே [2]கோஸலராஜன் திருமகளான கௌஸல்யாதேவியின் வயிற்றிற் பிறந்து அவளுக்கு மஹாநந்தத்தை விளைவிப்பவன். [3] அவன் ஸமுத்ரம்போல் மஹாகம்பீரன்; ஹிமாலயம்போல் அதிதீரன்;

---

ன்னென்கிறது. உலகத்தில் ராஜகுமாரராயிருப்பார் ஒருகால் விநோதார்த்தமாக ச்ருங்காரஹாஸ்யரஸிகர்களுடன் சூழ்ந்திருப்பார்; இவனப்படியன்றி ஸத்புருஷர்களால் சூழப்பட்டவனென்கிறது.

1 இங்கு 'இஷ்வாகூயாங்ஷிவர்தங்தே நாந்தரிக்ஷக்ஷிதிக்ஷயாத், மதிக்ஷயாங்ஷிவர்தங்தே ந மோவிந்த ஒணக்ஷயாத்' என்று ப்ரமாணம்.

2 தசரத சக்ரவர்த்தியின் பிள்ளை யென்னாமல் கௌஸல்யையைச் சொல்லுவானென்னென்றால் தசரதசக்ரவர்த்தி பட்டாபிஷேகஞ் செயயத்தொடஙகி இடையில் விக்நம் வந்து மரித்துப்போனனைகையாலே புத்ரனல் வந்தஸுகத்தை யவன் பூர்ணமாக அநுபவிக்கவில்லை. கௌஸல்யையே அநுபவித்தவளாகையாலே இங்ஙனஞ் சொல்லப்பட்டது. இப்படியே 'கௌஸல்யா லோகபர்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ' என்கிற விடத்திலும் கண்டுகொள்வது. 'பட்டமஹிஷியின் பிள்ளையாகையால் ராஜ்யாபிஷேகத்துக்குத் தக்கவனிவனே யென்று தோற்றுகைக்காக வென்றுஞ் சொல்லுவார்கள்.

3 இனி இவன் ஙிகரில்லாதவன் என்றும் இவனுக்கு மேற்பட்ட வஸ்துவில்லை யென்றுஞ் சொல்லுகைக்காக உலகத்தில் உயர்ந்தவஸ்துக்களைப் பொறுக்கி ஒவ்வொருகுணத்துக்கு ஒவ்வொன்றைப் போலியாகச் சொல்லுகிறது. இதுவும் 'ஸூர்யன் பாணம்போல் போகிறான்' என்பதுபோல் வஸ்துவின் ஸ்வரூபத்தை யறிவிக்கைக்காகச் சொன்னதித்தனை; முற்றுவமையன்று.

வீரத்தனமையில் விஷ்ணுபோன்றவன். சந்த்ரன்போல் பார்க்க ப்ரியமாயிருப்பவன ; கோபத்தில் காலாக்னியோடொத்தவன; பொறுமையில் பூமியைப்போன்றவன்; ஸத்யத்தில் ஓர்வடிவுகொண்ட தர்மதேவதைபோலிருப்பவன்.

[1] இப்படிப்பட்ட நற்குணங்களும், உண்மையான வீரத்தனமையும நீதிசாஸ்த்ரங்களில் விசேஷமாகச் சொல்லப்பட்ட ஸந்தி விக்ரஹம் முதலான குணங்களும் பொருந்தி, பரஜைகளுகககு நன்மைசெய்யும் தனமை

1 இவவாறு வேதாந்தங்களிற்சொனன கல்யாணகுணஙகளெல்லாம் நிறைந்த பரதத்த்வம் ராமனேயென்று நிரூபிக்கைக்காக அக்குணங்களையெல்லாம அவனிடத்திற் சொல்லி இப்படிசொன்ன குணங்களையும மற்றும சொல்லாதவற்றையும் ராமனிடத்தில் அவனுடைய சரிதர மூலமாக வெளியிடும்பொருட்டு அசசரித்ரம் அயோத்யாகாண்டம் முதலாகச சொல்லப்படுகிறது—(இப்படிப்பட்ட ஸகலநற்குணங்களும்) என்று தொடங்கி. இம்முதல் ஸர்க்கத்துக்கு ஸஙக்ஷேப ராமாயணமெனப் பேரென்று கீழிற் சொல்லபட்டது. ராமாயணத்தின்கதையெலலாம் இங்கு ஸங்க்ஷேபமாகச சொல்லப்படுவது பற்றியன்றோ இது ஸங்க்ஷேப ராமாயணமெனப்படுகிறது. ஆனால் பாலகாண்டக் கதை ஏன் சொல்லவில்லையெனில்—அதுவும் கீழ் வாக்யங்களில் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. எப்படியெனில்— (இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்து) என்கையால் - ராமாவதாரமும், (அவனுடைய சக்தி இவ்வளவென்றும இத்தன்மையதென்றும் எண்ணக்கூடாமல் நாநாவிதமாகி விசித்திரமாயிருக்கும்) என்கையால் தாடகாவதமும், தாடகையின் புத்ரர்களாகிய ஸுபாஹு மாரீசாகளை யொழித்தமையும். (தநுர் வித்யையில் மிகவுந தேர்நதவன்) என்கையால்-விச்வாமித்ரரிடமிருந்து திவ்யாஸ்தரங்களெல்லாம் பெற்றமையும், (தனக்குப் பத்தினியாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு இணைபிரியாதிருப்பவன்) என்கையால் லக்ஷ்மியவதாரமாகிய ஸீதாதேவியை மணம் புரிந்ததுமாகிய பாலகாண்டக்கதையுஞ் சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

யுடையவனும் தனக்கு மிகவும் ப்ரியனும் மூத்தகுமாரனுமாகிய ராமனைத் [1] தசரதசக்ரவர்த்தி மந்திரி முதலானவர்களின் ப்ரியஞ் செய்யவேண்டியும் தனக்குள்ள ப்ரீதியாலும் [2] இளவரசனாகச் செய்ய விரும்பினான். அவனுடைய ராஜ்யாபிஷேகத்திற்காகச் சேர்க்கப்பட்டுள்ள மங்களவஸ்து ஸம்பாரங்களையெல்லாம் [3] பார்த்து, தசரத சக்ரவாத்தியின் பாரியையாகிய கேகயராஜனுடைய புத்திரி கைகேயியென்பவள் முன் சம்பராஸுரயுத்தத்தில் பர்த்தாவினிடம் இரண்டு [4] வரங்களைப் பெற்றவளாகையால் அவற்றில் ஒன்றுக்கு ராமன் காட்டுக்குப் போகவேண்டியதென்றும் மற்றொன்றுக்குத் தனபுத்திரன் பரதனுக்கு ராஜ்யாபிஷேகம் ஆகவேண்டியதென்றும் இவ்விரண்டு வரங்களை அவ்வரசனைக் கேட்டுக்கொண்டாள். [5] அத்தசரத சக்ரவர்த்தியும் மந்திரிமுதலானவர்

1 (தசரதசக்ரவர்த்தி)—(தஶஸு திக்ஷு ரதோ யஸ்ய ஸ: தஶரத:) பத்துத்திசைகளிலும் யாதொரு தடையுமின்றித் தேரில் திரிபவனானதுபற்றி இம்மன்னவனுக்குத் தசரதனென்று பேர். இதற்கு — 'தான் நிர்வஹிக்க முடியாமற் பயந்து பிள்ளைக்கு ராஜ்யங் கொடுத்தானல்லன்' என்று கருத்து. இதனால் 'மறுபடியும தான் வாங்கிக்கொள்வனோ' என்கிற சந்தேகந் தீரப்பெற்றது. (சக்ரவர்த்தி)-பூமண்டலத்துக்கதிபதி. 'இதனால் பூமியைக்கொடுக்க இவன உடையவனோ, அல்லனோ' என்கிற சந்தேகந் தீர்க்கப்பட்டது.

2 தகப்பன் நிர்வஹித்துக் கொண்டிருக்கச் செய்தேயும் ஸகலத்தையும் நிர்வஹிக்கும்படி அபிஷேகஞ் செய்யப்பட்ட புத்திரன் இளவரசன்.

3 (பார்த்து)-மந்தரையின் வாயால் கேட்டுத் தான் பார்த்தாற்போல் எல்லாவற்றையும் அறிந்து.

4 ஶம்பராஸுரவிஜயத்தில் கைகேயி தனக்கு ஸாரத்யஞ் செய்ததற்காகச் சந்தோஷித்து அவளுக்குப் பரிசாக இரண்டு வரங்களைக் கொடுத்தானென்கிற கதையைக் கண்டுகொள்வது.

5 'ராமோ விக்ரஹவாந் தர்ம:' என்று ஸாக்ஷாத் பரம தர்ம

களோடு கலந்து ஆலோசித்து ராமனுக்கு ராஜ்யாபி ஷேகஞ் செய்ய வேண்டுமென்று நிச்சயித்திருந்தும் கை கேயிக்குத் தான் கொடுத்தவரத்தை நினைத்து ஸத்தி யந்தவறாமையென்னும் தர்மமாகிற கயிற்றாற்கட்டுண்டு செயலற்றுத் தனக்கு மிகவும் ப்ரியனாகிய ராமனைக் காட் டுக்கனுப்பினான். ராஜ்யத்தைக் காக்கவல்ல வீரத்தன் மைபொருந்திய ராமனும் கைகேயியின் இஷ்டத்தை நிறைவேற்றுவதற்காக ஏற்பட்ட பிதாவின் நியமனப்படி [1] தான் கைகேயிக்குச் செய்த ப்ரதிஜ்ஞையை அநுசரித் துக் காடேறச்சென்றான். இப்படி ராமன் காடேறச்

மாகச் சொல்லப்பட்ட ராமனை விட்டுப் பின்பு நேரிட்ட ஸ்த்ரீவிஷய மான ஸத்யந்தவறாமையென்னும் க்ஷுத்ரதர்மத்தை அவலம்பித்தா னென்று கருத்து. இதனால் 'ஸாகேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோ ஹேலநமேவவா | வைகுண்டநாமக்ரஹணமசேஷாகஹரம் விது:' என்றும், 'ஆக்ருஷ்ய புத்ரமகவாநயதஜாமிலோபி நாராயணேதி ம்ரியமாண உபைதி முக்திம்' என்றும், 'காமாத் த்வேஷாத் பயாத் ஸ்நேஹாத்' என்றும் இவ்வாறாக எவ்விதத்திலாயினும் பகவந்நாமோச்சாரணஞ் செய்தவர்களுக்கு மோக்ஷம் கிடைத்ததாகச் சொல்லி யிருக்க, எக்காலத்திலும் ராமனையே நினைத்துக்கொண்டிருந்த தசரத மன்னவனுக்கு மோக்ஷமில்லையெனக் கூடுமோ' என்கிற சந்தேகம் தீர்க்கப்பட்டது. ஸித்தோபாயமாகிய பகவானை விட்டு ஆபாஸதர் மத்தைப் பற்றினபடியால இவனுக்கு மோக்ஷப்ரஸக்தி யில்லையென்று கருத்து. ஆக இத்தால மோக்ஷத்தை விரும்புகிறவன் தசரதனைப் போலிருக்க வொண்ணாதென்று சொல்லப்பட்டது.

1 தான கைகேயிக்குச செய்த ப்ரதிஜ்ஞையாவது—ராமன் கைகேயியின் திருகத்திற்குச்சென்று அங்குசசோகித்து மோஹித்துக் கிடக்கும் தசரதசக்ரவர்த்தியைப் பார்த்துக் கைகேயியை நோக்கி 'தத் ப்ரூஹி வசநம் தேவி ராஜ்ஞோ யதபிகாங்க்ஷிதம் | கரிஷ்யே ப்ரதிஜாநே ச ராமோ த்விர்நாபிபாஷதே' என்று, தாயே! ஐயர் இங்ஙனம் கிடப்பதற்குக் காரணமென்ன? அவர் மனத்தில் விரும்பி யிருப்பதியாது? அதைச சொல்வாயாக. அதை அப்படியே செய்கி

செல்ல, லக்ஷ்மணனும் அவனிடத்தில் தனக்குள்ள ஸ்னேஹத்தை வெளியிட்டுக்கொண்டு அவனைப் பின் சென்றான். [1] லக்ஷ்மணன் மகதராஜன் புத்திரியாகிய ஸுமித்ராதேவிக்கு மஹாநந்தத்தைக் கொடுக்கும் பிள்ளை; ராமனுக்குப் பின் பிறந்தவன், அவனிடத்தில் மிகவும் அன்புடையவன்; அவனுடைய அன்புக்கு இட மானவன். அவன் ராமனுடைய குணங்களில் ஈடுபட்டு அவனுக்கு வணக்கத்துடன் ஸகலவிதமான பணிவிடை களுஞ் செய்யுந் தன்மையன்; [2] அவனைப் பிரிந்து அரை க்ஷணமும் தரிக்கமாட்டாத நேசமுடையவன். ராம னுக்கு ஸீதை யென்பவள் மிகவும் பரியமான பாரியை. அவள் ஜநகமகாராஜனது வம்சத்திற் பிறந்தவள். ராம னுக்கு எப்பொழுதும் ப்ராணன போன்றவள். அவ னுக்கு நன்மையையே செய்யுந் தன்மையள். அமிர்தங் கடைந்தபோது அஸுரர்களை மோஹிப்பிக்கும் பொ ருட்டு விஷ்ணு தான ஸ்த்ரீவேஷங்கொண்ட மோஹினி போலவும் ஓர்வடிவுகொண்ட விஷ்ணுவின் ஆச்சரிய சக்திபோலவும் விளங்கி நிற்பவள். ஸாமுத்திரிகத்திற் சொன்ன சுபலக்ஷணங்களெல்லா மமைந்தவள். ராமன் தான் புருஷோத்தமனு யிருப்பதுபோல இவளும் பெண்

---

றேன். இங்ஙனம் பரதிஜ்ஞை செய்கிறேன். ராமன் மறுத்துச் சொல்லுகிறவனல்லன்' என்றிவ்வாறு செய்த ப்ரதிஜ்ஞை.

1 காடேறப் போகும் பொழுது ஸுமித்திரைக்கு ஆநந்தத்தை விளைவிப்பவ னென்று சொல்லுவானென்? இப்பொழுது அவன் துயரத்தை யன்றோ விளைக்கவேண்டும்? என்றால்—அதில்லை; இப்பொழுதுதான் அவன் அவளுக்கு மஹாநந்ததைதக் கொடுப்ப வன். 'ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய' என்றும், 'ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம்| அயோத்யாமடவீம்வித்தி கச்சதாத! யதா ஸுகம்' என்றும் அவதாரத்தின் கருத்தறிந்த ஸுமித்ரா தேவியின் சொற் கண்டால இது வெளியாகும்.

2 இக்குணம் 'நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ| முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ' என்று மேலிற் சொல்லப்பட்டது

பாலாரனைவரிலுந் தலைவியாயிருப்பாள். அவளும் [1] ரோஹிணி சந்திரனைப் பின்செல்வது போல் ராமனைப் பின்சென்றாள். [2] அந்நகரத்தில் வஸிக்கும் ஜநங்கள் ராமகுணங்களுக்குத் தோற்றவர்களாகையால் அவனை விட்டுப் பிரிந்திருக்கப் பொறாமல் வெகுதூரம் பின்சென்றார்கள். தகப்பனாகிய தசரத சக்ரவர்த்தியும் தனக்கு அன்பனாகிய ராமனை விடமாட்டாமல் கொஞ்சதூரம் பின்றொடர்ந்தான்.

[3] தர்மத்தைச் செய்யும் ஸ்வபாவனாகிய ராமனும் பின்றொடர்ந்த ஜநங்களைத் திருப்பிவிட்டு [4] சிருங்கிபேரமென்னும்பட்டணத்துக்கு அருகான கங்கையின்கரையில்

---

1 ரோஹிணி யென்பவள் சந்திரனுக்கு அஸாதாரணமான பத்தினி; அவள் பெண்களனைவரிலும் மேலானவள். அவள் சந்திரனை விட்டு ஒரு முகூர்த்தகாலமும் பிரிந்திராள். இவ்வர்த்தம்—'வரிஷ்டா ஸர்வநாரீணாமேஷாச திவி தேவதா| ரோஹிணீ நவினா சந்த்ரம் முஹூர்த்தமபி த்ருஸ்யதே' என்று சொல்லப்பட்டது.

2 இதனால் நகரத்து ஜநங்களுக்கு ராமனிடத்திலுள்ள பரமபக்தி சொலலப்பட்டது. பரமபக்தியாவது-தாம் கலந்த விஷயத்தைப் பிரிந்திருக்கப் பொறாமை. 'புநாவிஸ்லேஷபீருத்வம் பரமாஸக்திருச்யதே' என்று சொல்லப்பட்டது. இவர்களுக்கு இவ்வளவு முண்டாகைக்குக் காரணம் அந்தத் தேசத்தில் வஸிகைகையே யன்றி வேறில்லை. இதனால் பகவத்தேச வாஸத்தின்மகிமை சொல்லப்பட்டது.

3 இங்கு தர்மமாவது-ஆச்ரிதர்கள் பக்கல வாத்ஸல்யமும் ஸௌசீல்யமும். வாத்ஸல்யமாவது-வத்ஸத்தின் பக்கல் தேநு விருக்குமிருப்பு வத்ஸம்-கன்று. தேநு-பசு. ஸௌசீல்யமாவது-ஆச்ரிதரோடு புரையறக் கலந்திருக்கை.

4 (சிருங்கிபேரமென்னும பட்டணத்துக்கு) - (ஸ்ருங்கிணோ ம்ருகா:, தேஷாம் வேராணி க்ருத்ரிம ஸரீராணி யஸ்மிந தத் ஸ்ருங்கிவேரம்); சிருஙகிகளென்றால் மான்கள். பேரமென்றால பொய்யுருவங்கள். மான்களைப் பிடிபபதற்காக மான்களைப் போலவே தோற்றம்படியாகச செய்யப்பட்ட பொய்ம்மானுருவங்கள் அங்கிருக்கிறபடியால் அந்தப் பட்டணத்துக்குச சிருங்கிபேரமென்று பேர்.

1 வேடர்களுக்குத் தலைவனான குஹனென்பவனைக் கண்டு ஆத்யாதரத்துடன் ப்ரீதிபண்ணி, 2 அவனுடன்கலந்து தன்னுடன் வந்த ஸாரதியான ஸுமந்திரனைப் பட்டணமேறப் போகவிட்டான்; அங்கு லக்ஷ்மணனோடும் ஸீதையோடும் குஹனோடும் கலந்திருந்து களித்தனன் 3 பின்பு அம்மூவரும் அந்தக்குஹனுடைய ஸஹாயத்

1 வேடர்களாவார், மிருகங்களைக் கொன்று ஜீவிப்பவர். அவர்களில் தலைவனென்று ஜாதியில் இழிவு சொல்லப்பட்டது. குஹனென்ற நாமத்தினால், (கூஹதி கோபயதி வஞ்சயதி பரஸ்வமிதி கூஹ:.) என்று வ்யுத்பத்தியைக்கொண்டு பரத்ரவ்யத்தை வஞ்சித்துக்கொள்பவன் என்று தொழிலிலும் இழிவு சொல்லப்பட்டது. ஆயினும் தன்னிடத்தில அநுகூலனாயிருப்பதுபற்றி அவனிடத்தில் அங்ஙனம் ப்ரீதி பண்ணினானென்று கருத்து. இதனால் ஸௌசீல்யஞ் சொல்லப்பட்டது.

2 (அவனுடன் கலந்து தன்னுடன் வந்த ஸாரதியான ஸுமந்திரனைப்போக விட்டான்-அப்பொழுதீன்ற கன்றின் மீதுண்டான ப்ரீதிவிசேஷத்தினால் முன்னணை கன்றைக் கொம்பிற் கொள்ளும பசுவைப்போல் குஹனுடன் கலந்த ராமன் வம்ஸபரம்பரையாக வெகு காலம் ஸாரதியாகி அநுஸரித்து வந்த ஸுமந்திரனைப் போகவிட்டானென்று கருத்து. இதனால் வாத்ஸல்யம தோற்றும்.

3 இங்கு

'தேவநேநவநங்கத்வா நதீஸ்தீர்த்வா பஹூதகா:।
சித்ரகூடமநுப்ராப்ய பரத்வாஜஸ்ய ஸாஸநாத் ॥
ரம்யமாவஸதங் க்ருத்வா ரமமாணா வநே த்ரய:।
தேவகந்தர்வஸங்காஸாஸ்தத்ர தே ந்யவஸந் ஸுகம் ॥

என்று மூலம். இதற்குத் தனிசலோகி—'தே அவநேந வநம் கத்வா' என்று பதம். அம்மூவரும் ஒருவரையொருவர் பாதுகாத்துக் கொண்டு காட்டுக்குச் சென்று; 'அக்ரதோ கச்ச ஸௌமித்ரே ஸீதா த்வா மநுகச்சது। ப்ருஷ்டதோ உஹங் கமிஷ்யாமி த்வாஞ்ச ஸீதாஞ்ச பாலயந் ॥ அந்யோந்யஸ்யேஹ நோ ரக்ஷா கர்தவ்யா புருஷர்ஷப' என்று இவ்வண்ணம் மேலிற்சொல்லப்பட்டது- அன்றியே அவநேந வநம் கத்வா - பித்ருவசநபரிபாலனத்திற்காகக் காட்டுக்குச்

தால் நீர்நிறைந்த கங்கையைத் தாண்டி யமுனை முதலிய மற்ற நதிகளையும் கடந்து கால்நடையாகவே காடுகாடாகச் சென்று அங்குப் பரத்வாஜமஹர்ஷியைக் கண்டு ஸேவித்து அவருடைய நியமநப்படி சித்திரகூட

சென்று. அல்லது-அவநேந- லோகரக்ஷணத்திற்காக. ராவணன் முதலிய துஷ்டர்களைக் கொன்று அவ்வழியாலே லோகங்களுக்கு நன்மை செய்யும்பொருட்டன்றோ அவர்கள் காட்டுக்குச் சென்றது. அன்றியே 'தேவஎு தேவநே' என்கிற தாதுவின்மேல் தேவநம் என்று ஒரே பதமாயிருக்கிறது. தேவநேந-விளையாட்டாகவே. ஆயாஸமொன்றுமின்றியே யென்றுபொருள், அல்லது தேவநம் வேட்டை ஆங்காங்கு வேட்டையாடிக்கொண்டு அதில் மனஞ் செலுத்தி வருத்தமின்றிக் காடுகாடாகத் திரிந்தனரென்று கருத்து. அல்லது - தேவநம-பாதஸஞ்சாரம். ஸாரதியை யனுப்பின பின்பு தேரினின்று மிழிந்து கால்நடையாகவே காடுகளெங்குந் திரிந்து. இங்ஙனம் கருதியே மூலத்தில் 'கால்நடையாகவே காடுகாடாய்ச்சென்று' என்று சொல்லப்பட்டது. அல்லது அவநேந ஸஹ வநம் மத்வா-அவநமாவது காடில்லாத பிரதேசம், நடுநடுவே வெறும்புறமானவழியாகச் சென்று காட்டுக்குப்போய் என்று பொருள். அன்றியே—வநேந ஸஹிதம் வநம் மத்வா-ஜலத்தோடு கூடி ஸுலபமாகிய காட்டு வழியாகச் சென்று மருகாந்தாரங்களில் சென்று வருத்தப்படாமலென்று கருத்து வநம் ஜலம்; 'பயஃ கீலாலமம்ருதம் ஜீவநம்ஹுவநம வநம்' என்று ஜலத்தின் பேர்களில் வநஶப்தம் படிக்கப்பட்டது. (வஹூதகாஃ) பரம்பின ஜலத்தையுடைய. அல்லது-ஆழ்ந்த ஜலத்தையுடைய ஓடங்கொண்டு தாண்டத்தக்கவையென்று கருத்து. (நதீஃ) கங்கை யமுனை மந்தாகினி ஆகிய நதிகளை. மந்தாகினியாவது-சித்திரகூடத்தினருகிற்-பெருகுகிற ஓர்நதி. ஸௌகரியத்துக்காக ஒரேதடவையிற் சொன்னது. (ஸரத்வாஜஸ்ய ஸாஸநாத் சித்ரகூடமநுப்ராப்ய) ப்ரஜைகளைப் பரிக்குந் தன்மையரா யிருப்பதுபற்றி இம்முனிக்குப் பரத்வாஜரென்று பேர். இங்ஙனம ருக்வேதத்தில் ஆரணத்தில் - 'ஏஷவை விஹீரத் வாஜஃ ப்ரஜாவை வாஜஸ் தா ஏஷ விஸர்தி, யதிவிஸாதி தஸ்மாத் ஸரத்வாஜ இத்யாசக்ஷதே' என்று சொல்லப்பட்டது. அன்றியே வாஜம் என்றால் ரேதஸ்ஸு; அதைவிடாமல் தரித்திருப்பவ ராகையால் பரத்வாஜர். 'ஸரத்வாஜோ ஹ த்ரிஹிராயுர்ஹிர்

பர்வதத்தைச் சேர்ந்து அங்கு அழகான ஓர் பர்ண சாலையைக் கட்டிக்கொண்டு தேவ கந்தர்வர்கள் போல

---

ஸீ ரஹ்மசர்யமுவாஸ' என்று வெகுகாலம் ப்ரஹ்மசர்யத்தி லிருந்தா ரென்று ஸ்ருதியிற் சொல்லப்பட்டது. (ஹரஜீவாஜஸ்ய மாஸநாத்) சித்திரகூடத்தில் நீங்களிருக்கவேண்டும்; 'அதற்கு இது வழி' என்று இவ்விதமான நியமநத்தினால். (அது) ராஜகுமாரர்களாகிய தமக்குத் தகுந்திருக்கிற. (சித்ரகூடம் ப்ராப்ய) சித்திரகூடத்திற் சென்று. அல்லது (சித்ரகூடமநுப்ராப்ய) சித்திரகூடத்தின் பின் பாகத்திற்சென்று. அற்புதமான சிகரங்களை யுடையதாகையால் இப்பாவதத்திற்குச் சித்திரகூடமென்ற பேர் (ரமமாணஃ) வைதைக் கும் ராமனுக்கும் பூப்பறிப்பது ஜலக்ரீடை செய்வது முதலியவற்றா லுண்டாயிற்று ஸந்தோஷம்; லக்ஷ்மணனுக்கு அவ்விருவருடையவும் சேர்த்தியிற் செய்யும் பணிவிடையாலுண்டாயிற்று ஸந்தோஷமென்க. (த்ரயோ ரமமாணஃ) என்பதனால் மூவர்க்கும் ஸந்தோஷத்தை விளை விக்குங்காரணம் பேதித்திருப்பினும் ஸந்தோஷத்தில் பேதமில்லை யென்று தோற்றுகின்றது.(ரமமாணஃ)என்று நிகழ்காலத்தினால் இடை விடாத ஆநந்தமென்று தோற்றும். (தேவ ஙந்யர்வஸங்காஸாஃ) தேவ கந்தர்வர்கள் மநுஷ்யகந்தர்வர்களைக் காட்டிலும் அதிகமான ஆநந் தத்தை யுடையவர் அல்லது (தேவீச தேவஸ்ச தேவௌ லக்ஷ்மீ நாராயணௌ) தேவியென்று ஸ்ரீமஹாலக்ஷ்மி. தேவன் ஸ்ரீமந்நாரா யணன். இவ்விருவரையும் தேவர்களென்கிறது. (ஙாநம் யாரய தீதி ஙந்யர்வஃ) 'ஏதத்ஸாம ஙாயந்நாஸ்தே' என்று சொலலப்பட்ட ஸாமகாநஞ் செய்து கொண்டிருக்கிற முக்தனைக் கந்தர்வனென்கிறது. (தேவௌச ஙந்யர்வஸ்ச தேவஙந்யர்வாஃ) ஆக இம்மூவரும் தேவ கந்தர்வர்கள். அவர்களைப்போல என்று பொருள். பரமபதத்தில் ஸ்ரீமந்நாராயணனும் அவனுடைய மஹிஷியான பெரியபிராட்டியா ரும் அவ்விருவருடைய சேர்த்தியை யநுபவிக்கிற முக்தனும் ஆகிய இம்மூவரும் ஆநந்தித்திருப்பதுபோல இம்மூவரும் ஆநந்தித்திருந் தார்களென்று கருத்து. 'தேஸூவம் ந்யவஸந்' அவர்களாகவே ஸுகமாக வஸித்திருந்தனர். அதாவது அயோத்திமாநகரியில் வஸிப் பதுபோலவே இக்கானகத்திலும் ஸுகமாகவஸித்திருந்தனர். அல் லது-(தே) எப்பொழுதும் வநத்தில் வஸிப்பவர்களாகவே. அதாவது-

மநோஹரமான அம்மலைச்சாரல்களில் லீலாரஸம் அநு பவித்து ஸுகமாக வஸித்திருந்தார்கள்.

இப்படி ராமன் சித்திரகூடத்தேறப் போகையில் தசரதசக்ரவர்த்தி புத்திரசோகத்தால் வருத்தமுற்று 'ராம ராம' என்று அலறிக்கொண்டே ஸ்வர்க்கமடைந் தான். இவ்வாறு தசரதசக்ரவர்த்தி காலஞ்சென்ற பின்பு வஸிஷ்டன் முதலிய அந்தணர்கள் பரதனை ராஜ் யாபிஷேகஞ் செய்துகொள்ளும்படி நியமிக்க, அவன் தான் ஸஹாயமின்றித் தனியாகவே ராஜ்யஞ்செய்யவல் லனாயிருந்தும் அதை அங்கீகரிக்கவில்லை. கையில் வந்த ராஜ்யத்திலும் கண்வைக்காதபடி ஐம்புலன்களென்னும் சத்துருக்களைவென்ற அப்பரதன் ஸ்ரீராமனுடைய திருவ டிகளைப் பணிந்து அவனது அனுக்கிரகம பெறவேண்டு

நகரத்திற் பிறந்து வளர்ந்தவர்களாயினும் காட்டிலேயே வெகு காலம வஸித்துப் பழக்கப்பட்டவர்கள்போல வஸித்திருந்தனர். வந வாஸத்திற் சிறிதாயினும் முகத்தில் வாட்டம் முதலியவை உண்டா கிலன்று இவர்கள் பரதேசிகளென்றும் வநவாஸத்திற் பழக்கமற்ற வர்களென்றுந் தோற்றுவது, அவர்களுக்கு அது சிறிதுமுண்டாக வில்லையென்று கருத்து. இங்கு (தேவகந்தர்வர்கள் போல) என்னும் உவமையினால் யாவனொருவன தன்ஸ்வரூபத்தை யுள்ளபடி யறிந்து பகவானிடத்தில் மிகுந்த ப்ரீதியுடனிருக்கிறான், அவனைப பகவான் பிராட்டியுடன் வந்து திவ்யவிமாநத்தில் ஏறவைத்துக்கொண்டு ஆதி வாஹிகர்களைக் கொண்டு ஸத்காரஞ்செய்வித்து விரஜையைத் தாண்டி திவ்யகாந்தாரங்கடந்து அமாநவனிடம் அநுமதி கொடுப் பித்து திவ்யலோகஞ்சென்று அங்கு மாமணிமண்டபத்தில் திவ்யஸிம் ஹாஸநத்தில் எழுந்தருளியிருந்து பிராட்டியுடன் அமந்தாநந்தம் பெற்று அவனால் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகல வித கைங்கர்யங்களுஞ் செய்யப்பெற்று அவனுக்குத் தனனோடொக்க ஆநந்தத்தையுங் கொடுத்து அவனுடன காலதத்துவ முள்ளதனையும் கலந்திருக்குமெனனு மிவ்வர்த்தந் தோற்றுகிறது.

மென்று காடேறச்சென்றான். தனது நன்மையைக் கண்டு யாவருங் கொண்டாடும்படியிருக்கிற பரதன், அங்கு சித்திரகூடத்தைச் சேர்ந்து இயற்கையாகவே தெளிந்த மனமுடையவனும் ஸத்தியத்தில் நிலைநிற்பவனும் தமையனுமாகிய ராமனைக் கண்டு தண்டனிட்டு 'ஸ்வாமீ! தேவரீர் மூத்தகுமாரராகையால் ராஜ்யாபிஷேகஞ் செய்து முடி சூடி ராஜனாக வேண்டுவது நியாயம்; தமையனிருக்கத் தம்பி ராஜ்யத்துக்கு யோக்கியனல்லனென்னுந் தர்மம் அறியீரோ; ஆகையால், எனனுடைய விண்ணப்பத்தைத் தலைக்கட்டவேணும்' என்று வணக்கத்துடன் பிரார்த்தித்தான். இதைக் கேட்ட ராமனும் தனது குணங்களால் யாவரையுங் களிக்கச்செய்பவனாயினும் தனனைப்பற்றினோர் கருத்தையெல்லாம் நிறைவேற்றுந் தன்மையனாயினும் தனனைக்கிட்டி ஒருவனென்று கேட்கப்பெறில் முகமலர்த்தி யடைபவனாயினும் இத்தகைய செயலால் பெருங்கீர்த்தி பெற்றவனாயினும் இவையெல்லாஞ் செய்ய வல்லானாயினும், தகப்பனாஜ்ஞைக்குட்பட்டுத் தான் ராஜ்யத்தை அங்கீகரிக்கவில்லை. இப்படி ராமன் பரதனுக்குத் தமையனாகி அவனிஷ்டத்தைச் செய்யவேண்டியிருந்தும அது செய்யாமல் தனக்கு பிரதிநிதியாக ராஜ்யபரிபாலனஞ் செய்யத் தன்பாதுகைகளைக் கொடுத்துத் தனனைப் பிரியமாட்டாமல் மறுக்கின்ற அவனை அடிக்கடி தொடர்ந்து பட்டணத்துக்குப் போகத் திருபபி யனுப்பினான். இப்படி அந்தப்பரதன் தன்னுடைய மனோரதம் நிறைவேறப்பெறாமல் ஸ்ரீராமனது பாதுகைகளை ஸேவிததுக்கொண்டும் ராமன் திரும்பி வருவதை யெதிர்பார்த்துக்கொண்டும் ராமனில்லாமல் அயோத்தியில் வஸிபபது ஸஹிக்க முடியாததாயிருக்கையாலே அதற்கு ஸமீபமான நந்திக்கிராமத்தில் ராஜ்யஞ்செய்து கொண்டிருந்தான்.

[1] ராமனும் பரதன போனபின்பு தகப்பனாகிய சக்ரவர்த்தியின் வாக்கியத்தை நிறைவேற்றுவதால் மிகவு மொளிபெற்றுப்[2] பிரதிஜ்ஞை தவறாமல் ஐம்புலனகளையும் வென்று விளங்கினான். பின்பு ராமன் 'நாம் இங்கிருந்தோமானால் நகரத்திலுள்ள ஜனங்கள் அடிக்கடி வரக்கூடும்' என்று ஆலோசித்தும் தண்டகாரணியத்திலுள்ள முனிவர்கள் அபிப்பிராயத்தை அநுஸரித்தும் சித்திரகூடத்தை விட்டு, [3] மிக்க ஊக்கத்துடன தண்டகாரணியத்திற் பிரவேசித்து அதின் காட்சியால் கண் மலரப் பெற்றவனாகித் தனக்கு விரோதஞ் செய்து கொண்டு வந்த விராதனென்னும் ராக்ஷஸனைக்கொன்று அதையே உபஹாரமாகக் கொண்டு சரபங்கமஹர்ஷியைக் கண்டு தண்டனிட்டு அவரிடம் அநுமதி பெற்று, ஸுதீக்ஷ்ணரையும அகஸ்தியரையும் அவர் தம்பியாகிய ஸுதர்சநமுனிவரையும் சென்று பணிந்தான். அவ்வளவில் அகஸ்தியரும் தனக்கு இந்திரன் கொடுத்த வில்லையுங் கத்தியையும் அழிவில்லாத பாணங்களுடைய அம்பறாத்தூணிகளையும் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று

1 இங்ஙனம் அயோத்யாகாண்டத்தில் பிரதாநமான 'பித்ருவசந பரிபாலநம் செய்தான்' என்கிற அர்த்தத்தைச் சொல்லி, மேல்ஆரணியகாண்டத்தின்கதை சுருக்கமாகச சொல்லப்படுகிறது—(ராமனும்) என்று தொடங்கி.

2 பரதன் வந்து, விடேனென்று நிர்ப்பந்தித்தபோதிலும் நெறி தப்பாமலிருந்ததைப் பற்றி (பிரதிஜ்ஞைதவறாமல) என்கிறது. தாயுந் தம்பியும நாட்டாருடன கூட்டங்கூடிவந்து வேண்டிக்கொண்ட பொழுதிலும் ராஜ்யத்தில் ஆசையின்றி யிருந்தமை பற்றி (ஐம்புலன்களையும் வென்று) என்கிறது,

3 (மிக்கஊக்கத்துடன்)-பிதாவின வசநத்தைப் பரிபாலநஞ்செய்வதில் மிக்க ஊக்கங்கொண்டு. அல்லது விரோதிகள் நிறைந்திருக்குந் தேசமாகையால் இங்ஙனஞ் சொல்லுகிறது. (தண்டகாரணியம்) தண்டகனென்னும் அரசனது தேசமாகிய தண்டகம் சுக்ர சாபத்தினால் காடாய்விட்டது பற்றித் தண்டகாரணியமென்று பேர்பெற்றது.

ராமனுக்குச் சொல்ல, அவனும் தன் வீரியத்திற்குத் தகுந்த ஆயுதங்கள் அகப்பட்டனவென்று ஸந்தோஷித்து அம்முனிவருடைய வசனத்தின்படி அவைகளைக் கைக்கொண்டான். பின்பு ராமன் சரபங்காச்ரமத்தில் வாஸஞ் செய்துகொண்டிருக்க, நாலு பக்கங்களிலுள்ள ரிஷிகளனைவரும் தமக்கு விரோதிகளான அஸுரர்களையும் ராக்ஷஸர்களையும் அழிக்கவேணுமென்று நினைத்தவர்களாகி ராமனைச் சென்று கிட்டினர். ராமனும் ராக்ஷஸர் குடி புகுந்திருக்கும் அத்தண்டகாரணியத்தில் அம்மஹர்ஷிகள் கேட்டுக்கொண்டபடி செய்வதாக அங்கீகரித்தான். அக்கிபோல் விளங்கி நிற்குந தண்டகாவநவாஸிகளான அம்முனிவர்களின் முன்பு ராக்ஷஸர்களைக் கொல்லுவதாகப் பிரதிஜ்ஞையும் செய்தான். இப்படி பிரதிஜ்ஞை செய்து ராமன தண்டகாவநத்தில் வஸித்திருக்கையில், நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவளும் ஜநஸ்தாநத்தில் நித்ய வாஸம் செய்பவளுமாகிய சூர்ப்பணகை யென்னும் ராக்ஷஸி வந்து விரோதஞ் செய்ய, அவளைக் காதையும் மூக்கையும் அறுத்து விரூபையாகும்படி செய்தான. பின்பு சூர்ப்பணகையின சொற்கேட்டுப் பொருவதாகவந்த ராக்ஷஸர்களனைவரையும் அவர்களில தலைவரான கரன் த்ரிசிரஸ்ஸு தூஷணன என்னுமிவர்களையும் அவரைப் பினதொடர்ந்தவர்களையும் மிச்சமில்லாதபடி யுத்தஞ் செய்து முடித்து விட்டான் ராமன இவ்வாறு அவ்வநத்தில வஸித்துக்கொண்டிருக்கையில் ஜநஸ்தாநத்தில் வஸிக்கும் பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் மிச்சமின்றி மாளப்பண்ணினான். பின்பு ராவணன் தனனுடைய பந்துக்களாகிய கரன் தூஷணன் முதலான ராக்ஷஸர்கள் மாண்டு போனதைக் கேட்டு மிகுந்த கோபாவேசங்கொண்டு ஸீதையை அபஹரிப்பதற்கு மாரீசனென்னும் ராக்ஷஸனை ஸஹாயமாக வேண்டினான். அம்மாரீசனும் 'ராவணா!

ராமன் அளவற்ற பலமுடையவன்; அவனோடு விரோதித்துக் கொள்வது உனக்கு நன்மையன்று' என்று அவனை வெகுதூரம் மறுத்தான். ராவணன் ம்ருத்யுவாலேவப்பட்டு, அவ்வார்த்தையை ஆதரிக்காமல் அம்மாரீசனுடன் கூடவே அக்காலம் கரதூஷணாதிகளை வென்று விளங்கிநின்ற ஸ்ரீராமனுடைய ஆச்ரமத்திற்குச் சென்றான். சென்று, நாநாவர்ணமாகிக் கண்டபோதே ஆசைப்படத்தக்க ஓர் மான் வடிவங்கொண்ட மாயாவியாகிய மாரீசனைக்கொண்டு ராஜபுத்திரர்களான ராமலக்ஷ்மணர்களிருவரையும் வெகுதூரம் போகச்செய்து இடையில் தடுப்பதாக வந்த ஜடாயுவென்னும் கழுகைக் குற்றுயிராகக் கொன்று ராமனோடு இணைபிரியாதிருக்கும் ஸீதையை அபஹரித்துக்கொண்டு சென்றான். ராமனும் மாரீசனைக் கொன்று ஆச்ரமத்திற்கு வந்து அங்கு ஸீதையைக் காணாமல் தேடிக்கொண்டு போகையில் ராவணனாலடியுண்டு குற்றுயிராயிருக்கும் ஜடாயுவைக் கண்டு ஸீதையை ராவணன் அபஹரித்ததாகச் சொல்லக்கேட்டு,[1] இவ்விரண்டு வருத்தங்களால் மிகவும் பரிதபித்து இந்திரியங்களெல்லாங் கலங்கும்படி யழுதான். பின்பு அவ்வருத்தத்துடனே

---

1 இரண்டு வருத்தங்களாவன—ஸீதையைக் காணாமையும், ஜடாயுவைக் குற்றுயிராகக் காண்கையும். ஆயினும் கம்பீரஸ்வபாவமுடைய இம்மஹாபுருஷனுக்கு ஓர் பெண்பிள்ளையைக் காணாமையால் இங்ஙனம் வருந்துவது கூடுமோ? என்றால்—கூடும் லோகோத்தர குணம் பொருந்திய வஸ்துவைப் பிரிந்தும் ஒருவன் வருந்தாதிருப்பானாயின, அவன் எப்படி புருஷர்களிற் சிறந்தவனாவான்? அவ்வஸ்துவும் எப்படி அழகியதாகும். அவ்விரண்டுக்கும் நமஸ்காரஞ் செய்துவிடவேண்டுமேயன்றி வேறில்லை. மேலும் மஹாபுருஷ குணங்களைச் சொல்லுமிடத்தில் 'வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித:' என்று சொல்லிற்று. ஒரு பெண் பிள்ளைக்காக ஒருவன் இங்ஙனம் வருந்துவதுமுண்டோ என்று நினைத்திருந்த ஹநுமானும், ஸீதையைக் கண்டபின் 'து:ஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யதநயா ப்ரபு: । தாரயத்யாத்மநோதேஹம் நது:கேநாவஸீததி' என்று

ஜடாயுவுக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரஞ்செய்து அவ்வநத்தில் ஸீதையைத் தேடிக்கொண்டு போகையில் விகாரமான உருவங்கொண்டு பார்க்கபயங்கரனாயிருக்கிற கபந்தனென்னும் ராக்ஷஸனைக் கண்டான். புஜபலம் பொருந்திய ராமன் அநதக் கபந்தனைக் கொன்று அவன் வேண்டிக்கொண்டபடி அக்நி ஸம்ஸ்காரஞ் செய்ய அவனும் ஸ்வர்க்கத்திற்குச் சென்றான். அவன் போகும் பொழுது ராமனைப்பார்த்து [1]'குருசுச்ருஷை முதலிய தர்மங்களைச் செய்யுந்தன்மை பொருந்தியவளும் அதிதி பூஜை முதலியவற்றில் மிகவுநதேர்ச்சி யடைந்தவளும் [2] துறவறத்திலிருப் பவளும் வேடஜாதியில்பிறநதவளும் ஆனது பற்றியே [3] சபரியென்று பிரசித்தி பெற்றவளுமான ஓர் பெண்பிள்ளையின் ஆச்ரமத்திற்குச் செல்வாய்' என்றான். ராமனும இவ்வாறு கபந்தனை வருத்தின சாபத்தைப் போக்கி ஸ்வர்க்கமேறச் செய்து அவன் சொன்னசொற்கேட்டு மிகவுங் களிப்புற்று மிக்கவிளக்கமும் பெற்றுச் சபரியினிடஞ் சென்றான். அச்சபரியும் தசரதசக்ரவர்த்தி குமாரனாகிய ராமனை மிகவும் ஆதரத்துடன் நன்றாகப் பூஜித்தாள்.

---

ராமன ஸீதையை விட்டுப் பிரிந்தும் பிழைத்திருப்பது மிக அரிதென்று வியப்புற்றான். ஆகையால் இது கூடும்.

1 (குருசுச்ருஷை முதலிய தர்மங்களைச செய்யுந்தன்மை பொருந்தியவளும்)—ஆசார்யாபிமாநமாகிற சரமபர்வநிஷ்ட்டையி லூக்கமுற்றவளென்று கருத்து. (அதிதிபூஜைமுதலியவற்றில் மிகவுந் தேர்ச்சியடைந்தவளும்) தேர்ச்சியடைகையாவது — தர்மஸூக்ஷ்மங்களையறிந்திருக்கை. இவள் ராமன் வரப்போகிறானென்று தெரிந்து அவனுக்காக நல்ல பழங்களைத தான் புசித்துப் பரீக்ஷித்துப் பார்த்து வைத்திருந்தாளென்று ப்ரஸித்தம்.

2 துறவறம்—ஸந்யாஸாச்ரமம். 3 சபரி—வேடப்பெண்.

[1] பின்பு ராமன் தாமரை முதலியவைகளால் நிறைந்து அழகான பம்பையென்னுந் தாமரையோடையின் கரையிற்சென்று ஸீதாதேவியை நினைத்துத் துயரத்தினால் மிகவும் பரிதபித்திருக்கையில் ஹநுமானென்னும் வாநரன் அவ்விடம் வந்து ஸந்திக்க அவனுடன் கலந்து நேசித்து அவனது சொற்படி ஸுக்ரீவனைக் கிட்டினான். ராமன் ஸஹாயமின்றித் தனியே யெல்லாஞ் செய்ய வல்லனாயிருந்தும் லோகரீதியை யநுஸரித்து ஸஹாயத்தை விரும்பி ஸுக்ரீவனுக்கு முதலேபிடித்து நடந்தவைகளை யெல்லாவற்றையும் அவற்றில் விசேஷமாக ஸீதையின விருத்தாந்தத்தையும் உண்மையாகத் தெரியச்சொன்னான். வாநரனாகிய ஸுக்ரீவனும ராமனுடைய விருத்தாந்தங்களையெல்லாம கேட்டுத் தன்னோடொத்த துயரமுள்ளவனாகிப் பலசாலியாயிருப்பவன் ஒருவர் தனக்கு ஸஹாயமாக நேரிட்டதைப்பற்றி மிகவும ஆநந்தித்து அக்நிசாட்சிகமாக அவனை நேசஞ் செய்து கொண்டான். பின்பு வாநரர்க்கரசனாகிய ஸுக்ரீவன் தனது துயரங்களை நினைத்துக் கண்ணுங்கண்ணீருமாகித் துக்கித்தது கண்டு ராமன் வினவ, வாலிக்கும் தனக்கும் நடந்த விரோதத்தைச் சொன்னான். ராமனும் அது கேட்டவுடன் வாலியைக் கொல்லுவதாகப் பிரதிஜ்ஞை செய்தான். அவ்வாநரமஹாராஜனும் வாலிக்குள்ள பலத்தை ராமனுக்குச் சொன்னான். பின்னும் அவன் ராமனைக் கண்டது முதல்

---

1 இங்ஙனம் பிரதிஜ்ஞை தவறாமலிருப்பவனென்னு மர்த்தத்தைப் பிரதாநமாகக்கொண்ட ஆரண்யகாண்டத்தின் கதையைச் சுருக்கமாகச்சொல்லி முடித்து, நண்பர்காரியத்தை நிறைவேற்றுந் தன்மையைத் தெரிவிக்கிற கிஷ்கிந்தாகாண்டத்தின் கதை சுருக்கமாகச் சொல்லப்படுகிறது—(பின்பு ராமன் தாமரை) என்று தொடங்கி.

'இவன் வீரத்தன்மையில் வாலியோடொத்திருப்பனோ?' என்று அடிக்கடி சந்தேகித்திருந்தான். இன்னும் வாலி பலத்தை ராமனுக்கு நன்றாகத்தெரியச்செய்யும்பொருட்டும் ராமனது பலத்தைத் தான அறியும் பொருட்டும் பெரிய மலைபோலுயர்ந்து கட்டுத்தளராமல் சரீராகாரமாகிக் கிடக்கிற துந்துபியெனனும் ஓர் அஸுரனுடைய உடலுடம்புக்குவியலை 'இது வாலி கால்கால் தள்ளப்பட்டது' என்று காட்டினான். நீண்ட புஜங்களையுடையவனும் மிக்க பலசாலியுமாகிய ராமன் இதெவ்வளவென்று சிறிது சிரித்துத் தன கால்கட்டைவிரலால் பத்துயோஜனை தூரத்திற்குக் குறைவில்லாமற் போம்படி உயரத் தூக்கி யெறிந்தான. அதனாலும ஸுகரீவனுக்கு நம்பிக்கை பிறககவில்லை யென்றறிந்து, பினனும அவனுக்கு விச்வாஸத்தை விளைவிக்கும்பொருட்டு ஓரம்பைத்தொடுத்து இணைநது ஓங்கிப்பருதது வலிவுபெற்றிருக்கும் மராமரங்களேழையும் அருகிலிருநத மலையின் தாழ்வரையையும் பாதாளலோகத்தையும் பிளந்தான். ஸுக்ரீவனும் மானிடரால் செய்யக்கூடாத ராமனுடைய அச்செயல்களைக் கண்டு இவன்வாலியை வெல்லவல்லனென்று நம்பிக்கை யடைந்து கூடிய சீக்கிரத்தில் ராஜ்யத்தைப் பெறலாமென்று நிச்சயித்துக் களிப்புற்று ராமனுடன் கூடப் புறப்பட்டுப் பர்வதங்களின் மத்தியத்தில் குகைபோலிருக்கும் கிஷ்கிந்தா பட்டணஞ் சென்றான். பின்பு ஸந்தோஷத்தினால் பொனனிறம் பெற்று விளங்கிய வடிவங்கொண்டு வாநரர்களில்லைவனாகிய ஸுக்ரீவன் வெகு உத்ஸாஹத்துடன் ஸிம்ஹம்போல் கர்ஜித்தான். வாநரர்க்கரசனாகிய வாலியும் முன்போலன்றி மிகவுங் கம்பீரமான அபபெருங்காஜனையைக் கேட்டு அவனுடன் போர்செய்வதாகப் புறப்பட்டு, வேண்டாமென்று மறுக்

குந் தாரைக்குத் தக்க மறுமொழி சொல்லி விடுவித்துக் கொண்டு ஸுக்ரீவனோடு கலந்து போர்புரிந்தான். அப்பொழுது ரகுகுலத்திற் பிறந்து தர்மஸூக்ஷ்மங்களை யறிந்த ராமனும் ஸுக்ரீவனோடு சண்டை செய்து கொண்டிருந்த வாலியைத் தான் ஒரு பாணத்தையெய்து முடித்து விட்டான். இப்படி ஸுக்ரீவன் வேண்டிக் கொண்டபடி யுத்தத்தில் வாலியைமுடித்துக்கிஷ்கிந்தா ராஜ்யத்தில் அவனை அபிஷேகஞ் செய்வித்தான். இவ்வாறு வாநரராஜ்யம்பெற்ற ஸுக்ரீவனும் ஜநகராஜன் பெண்பிள்ளையாகிய ஸீதையைத் தேடும்பொருட்டு ஆங்காங்குள்ள வாநரர்களனைவரையும் வரவழைத்து ஸீதையைக் கண்டு வாருங்களென்று கட்டளையிட்டு நான்கு திசைகளிலும் அனுப்பினான்.

[1]பின்பு ஸீதையைத்தேடப்போனவர்களில் பலசாலியாகிய ஹநுமான் ஸம்பாதியென்னுங் கழுகின்மொழியால் ஸீதை லங்கையிலிருப்பதாகக் கேட்டு நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள லவணஸமுத்திரத்தைத் தாண்டி, ராவணனால் ஆளப்பட்ட லங்கையிற் சென்று அங்கு அசோகவநத்திலே ராமனை இடைவிடாமல் நெஞ்சிற் கொண்டிருக்கும் ஸீதாதேவியைக்கண்டு ராமன் அடையாளமாகக்கொடுத்த கணையாழியைக் கொடுத்து ராமன் ஸுக்ரீவனோடு கலந்து நேசித்தது முதலாக வாநரர்கள் தேடப்போனதீறாக வுள்ள விருத்தாந்தங்களையெல்லாந் தெரியச்சொல்லி, நாயகனாகிய ராமன் சீக்கிரத்தில் இங்கு வரப்போகிறானென்று ஸமாதாநமுஞ் சொல்லி விட்டு, அவ்வுத்யாநத்தின் வெளிப்புறத்து வாசற்படியின்

---

[1] இனி ஸுந்தரகாண்டத்தின் கதை சுருக்கமாகச் சொல்லப்படுகிறது—(பின்பு ஸீதையைத் தேடப் போனவர்களில்) என்று தொடங்கி.

கோபுரத்தை இடித்தான். அதை அறிந்து ராவணனால் ஏவிண்ட ஸேநாதிபதிகளைவரையும் மந்த்ரிகுமாரர்களேழுவரையும முடித்து, ராவணனது புதல்வனும் மஹாவீரனுமாகிய அக்ஷனென்பனைச் சூர்ணஞ் செய்து, பின்பு இந்திரஜித்தினுடைய ப்ரஹ்மாஸ்திரத்தினால் கட்டுண்டான. ஆயினும் ப்ரஹ்மாஸ்திரத்தினால் சிறிதுபொழுது கட்டுண்டிருந்து உடனே விடுபடும்படி ப்ரஹ்மாவினிடம் வரமபெற்றவனாகையால் தான் அஸ்த்ரத்தினின்று விடுபட்டதறிந்தும் தனனைக்கயிற்றாற் கட்டிக்கொண்டு போகும் ராக்ஷஸர்களைச் சிதறும்படி செய்யவலல மஹாவீரனாயிருந்தும் அதையெல்லாம பொறுத்துக்கொண்டு ஸீதையிருக்குமிடந்தவிர லங்கை முழுமையும தீமூட்டிவிட்டு, ராமனுக்குச் சீதையைக் கண்டது முதலாகிய ப்ரியமான சங்கதிகளைச் சொல்லும்பொருட்டுத திரும்பினான். அளவற்ற புத்திபலமுடைய ஹநுமானும், ஸீதையைப் பிரிந்தும மனந்தளராத ராமனைக் கிட்டி வலஞ்செய்து தண்டனிட்டுக் 'கண்டேன ஸீதையை' என்று உள்ளபடி விண்ணப்பஞ் செய்தான்.

[1]இப்படி ஹநுமானுடைய சொற்கேட்ட பினபு ராமன், ஸுக்ரீவன முதலான வாநரப்படையுடன் மிகவும் அகன்று ஆழ்ந்த ஸமுத்திரத்தின் கரையிற் சென்று, அது வழிவிடாமையாலே சூரியன்போன்ற பாணங்களால் அந்தச் சமுத்திரத்தை யடிகாணக் கலக்கினான். பின்பு நதிகளுக்கு வல்லபனாகிய ஸமுத்திரராஜனும் தன் வடிவங்கொண்டு வந்து தன்மேல ஸேதுவைக்கட்டி அவ்வழியாகப போகலாமென்ன, அவ்வார்த்தையைக் கேட்டு

1 இனிமேல் யுத்தகாண்டத்தின கதை சுருக்கமாகச் சொல்லப்படுகிறது—(இப்படி ஹநுமானுடைய சொற்கேட்டபின்பு) என்று தொடங்கி.

ராமனும் களனைக்கொண்டு ஸமுத்திரத்தில் அணை கட்டி அவ்வழியாக லங்காபட்டணத்தைச் சேர்ந்து யுத்தத்தில் ராவணனைக்கொன்று ஸீதாதேவியையடைந்தான். பின்பு ராமன் 'நம்வீரத்தன்மையைக் காப்பாற்றுவதற்காகச் சத்துருவை வென்றோமன்றிப் பிறர்வீட்டிலிருந்தவளை நாம் எப்படி அங்கீகரிப்பது' என்று மிகவும் வெட்கித் தேவதைகளும் வாநரர்களும் நிறைந்த ஸபையில் ஸீதையைப் பார்த்துக் கடோரமாகச்சொல்ல, பதிவிரதையாகிய ஸீதாதேவியும் அவ்வார்த்தையைப் பொறாமல் அக்நியிற் பிரவேசித்தாள். உடனே அக்நியும் அவளைக் கையிலேந்திக்கொண்டு ராமனைப் பார்த்து 'இவள் மாசற்றவள்; இவளை அங்கீகரிக்கவேணும்' என்ன, அவ்வாக்கியத்தினால் ஸீதையைத் தோஷமற்றவளென்றறிந்து அவளை யங்கீகரித்து மிகவுங் களிபபுற்று விளங்கினான். அதுகண்டு தேவதைகள் அனைவரும் ராமனைப் பூஜித்தார்கள்.

கமபீரஸ்வபாவத்தையுடைய ராமன் செய்த ராவண வதமாகிற பெருஞ்செயலைக் கண்டு தேவர்களும் ரிஷிகளும் மற்றுமுள்ள [1]ஜங்கமஸ்தாவரங்களும் நிறைந்த மூவுலகங்களும் மிகக்களித்தன. அப்பொழுது ராமன் விபீஷணனை லங்கையில் ராக்ஷஸர்களுக்கு அரசனாக அபிஷேகஞ் செய்வித்துத் தான நினைத்த காரியம்

---

1 ஜங்கமங்களாகிய மனிதர் பசு பக்ஷி முதலானவைகளின் களிப்பு தெரியக்கூடும், ஸ்தாவரங்களாகிய மரம் முதலியவைகளின் களிப்பறிவதெப்படியென்றால்—அந்த க்ஷணத்தில் காரணமின்றித் தளிர்விடுவது புஷ்பிப்பது முதலியவைகளால் தோற்றக்கூடும். ஸ்தாவரங்களுக்கு ஞானமில்லாமையால் அவைகளுக்கு ஸந்தோஷமில்லையென்று சொல்லவமையாது. 'அந்தஸ்ஸஞ்ஜ்ஞா ஐவந்த்யேதே' என்று அவைகளுக்கும் ஞானமுண்டென்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் சொல்லப்பட்டது.

நிறைவேறினது பற்றி மனக்கவலை தீர்ந்து, ஆநந்த மடைந்தான். பின்பு தேவர்கள் வரங்கொடுக்கப்பெற்று மரணமடைந்த வாநரர்களை யெழுப்பிக்கொண்டு அன்பர்களால் சூழப்பட்டுப் புஷ்பகவிமாந மேறி அயோத்யைக்குப் புறப்பட்டுப்போயினன். இவ்வாறு ஸத்யத்தை நிறைவேற்றுவதில் மனவுறுதியுடைய ராமன் போகும்போது பரத்வாஜாச்ரமத்தேறச் சென்று, தான் வருவதைப் பரதனிடஞ் சொல்ல ஹநுமானை யனுப்பினான். அப்பொழுது ராமன் ஸுக்ரீவன் முதலானவர்களோடு மீளவும் புஷ்பகவிமாநமேறி முன்னடந்த கதைகளைச் சொல்லிக்கொண்டு நந்திக்கிராமத்தை யடைந்தான். இப்படி தகப்பனுருடைய வாக்கியத்தை அவ்வாறே நிறைவேற்றிப் பரதனுடைய இஷ்டந்தவிர்த்ததனால் வந்த வியஸனமுந தீர்ந்து நந்திக்கிராமத்தினின்று அயோத்யைக்கு வந்து தம்பிகளுடன் சேர்ந்து ஜடையை விடுத்து நனறாக அலங்கரித்து திவ்யஸிம்ஹாஸநத்தில சீதையோடு பட்டாபிஷேகங்கண்டருளி மீளவும் ராஜ்யத்தை யடைந்து பரிபாலித்து வந்தான்.

இப்படி ராமன் ராஜ்யபரிபாலநஞ் செய்யும்பொழுது ஸகல ஜநங்களும் அவரவர்களிஷ்டங்களையெல்லாம் பெற்று மயிர்க்கூச்செறியச் சந்தோஷமடைந்தனர். ப்ரஜைகள் அனைவரும் முன் ராமனைப் பிரிந்திளைத்திருந்தமை தீர்ந்து அவனுடைய ஸேவையைப்பெற்றுக் களிபபுற்று தேகம்பருத்து விளங்கினர். பின்னும் உலகத்திலுள்ள ஜீநங்கள்யாவரும் தாஞ்செய்யுஞ் செயல்களையெல்லாம் ராமபக்தியை முன்னிட்டுச் செய்துகொண்டு ராமனுடைய நன்மைக்காகத் தேவதாநமஸ்காரம் முதலியவைகளைக் குறைவற நடத்திவந்தனர்; மனவருத்தம் யாதுமின்றிச் சரீரத்திலும் வியாதியென்பதை யறியாமல் க்ஷாமம்முதலிய பயமும் நீங்கப்பெற்று வாழ்ந்தனர்.

மனிதர்கள் அனைவரும் எங்கும் பிள்ளையைச் சாகக் கொடுப்பது [1] காணார். [2] பெண்களும் விதவைகளாகாமற் கணவனைப் பின்சென்றிருப்பார். [3] நெருப்பினாலுண்டாகும் பயமேதும் உண்டாகாது. பிராணிகள் ஜலத்தில் வீழ்ந்து மூழ்கிச் சாவதும் நேரிடாது. காற்று ஜ்வரம் பசி திருடர் முதலியவைகளாலுண்டாகும் பயஞ் சிறிது

1 'காணார்' என்று எதிர்காலமாகச் சொல்லுவானேனென்றால் 'ப்ராப்தராஜ்யஸ்ய ராமஸ்ய வால்மீகிர்பகவாந்ருஷி:। சகார சரிதம் க்ருத்ஸ்நம் விசித்ரபதமாத்மவாந்' என்று ராவணனைக் கொன்று ராமன் ராஜ்யமாளுங்காலத்திலேயே வால்மீகி ராமாயணத்தைச் செய்ததாகத் தெரிகிறது. ஆகையால அவன் ராமாயணஞ் செய்யும் போது ராமராஜ்யாரம்பமாகையால் அவனுடைய ராஜ்யத்திலிருக்கும் ப்ரஜைகளின் க்ஷேமங்களை யெதிர்காலவினையிற் சொல்லுகிறது.

2 'பெண்களும் விதவைகளாகாமல்' என்றால் புருஷர்களுக்கு மரணமே யில்லையென்னும் அஸங்கதி வரும். ஆகையால் அதற்குக் கருத்து இங்ஙனம் கொள்ளவேணும். அதாவது ஸ்த்ரீகள் கணவனோடு ஸஹமரணஞ் செய்வார்களென்றும், அப்படி செய்யாமல் பிழைத்திருந்தாலும் பர்த்தாவின் அம்சமாகிய பிள்ளையுண்டாயிருப்பதால் விதவைகளனென்றும்; இதனால் கௌஸல்யை முதலானவர்கள் ராமன் முதலான பிள்ளைகளிருப்பதனாலும் மிகவும் வயஸ்ஸு சென்றவர்களாகையாலும் விதவைகளன்றென்று கருத்து. இவ்வர்த்தம் 'கௌஸல்யாதயஸ்து புத்ரவத்தயா வ்ருத்தயாவா ந விதவா இதி பாவ:' என்று கோவிந்தராஜீயவியாக்யாநத்திற் சொல்லப்பட்டது. அன்றியே (விவிதா தவா யாஸாம் தா: விதவா: வ்யபிசாரிண்ய:) என்கிற வ்யுத்பத்தியைக்கொண்டு விதவைகளென்றால் வியபிசாரமுடையவர்கள். அப்படியாகாமலிருப்பார்களென்று பொருள். வியபிசாரமில்லாவிடினும் கணவனிடத்திற் பிரீதியில்லாமலிருப்பதுண்டு; அதுவும் இராதென்கிறது - 'கணவனைப் பின்சென்றிருப்பார்' என்று.

3 அக்னி ஜலம் காற்று இவைகளாலுண்டாகும் பயம் ஆதிதைவிகம்; அதாவது தைவத்தால் வருவது. ஜ்வரம் முதலியவைகளால் வரும் பயம் ஆத்யாத்மிகம்; அதாவது சரீரத்தால் வருவது. திருடர் முதலானவைகளால் வரும் பயம் ஆதிபௌதிகம். அதாவது ஜந்துக்களால் வருவது. இதைத் தாபத்ரயமென்பார்கள். அதில்லையென்று கருத்து.

மிராது. நகரங்களும் நாடுகளும் தநதாந்யங்கள்நிறைந்திருக்கும். ஜநங்கள் அனைவரும் க்ருதயுகத்திற்போல எப்பொழுதும் மிகக்களித்திருப்பர். இவ்வாறு பெருங்கீர்த்திபெற்ற ராமன் அநேக அச்வமேத யாகங்கள் செய்து அப்படியே கணக்கில்லாத ஸுவர்ணகமென்னும் யாகங்களையுஞ் செய்து அந்தணர்களுக்குக்கோடி கோடியாகக் கோதாநங்கள் செய்து தநங்களையும் அளவில்லாமற் கொடுத்து வைகுந்தமேறப்போகிறான். ராமன் இவ்வுலகத்தில் ராஜ வம்சங்களை நூறுபங்கதிகமாக நிலைநிறுத்தப்போகிறான். இப்படி உலகத்தில் தர்மஸம்ஸ்தாபநம பண்ணிப் பதினோராயிரம் வருஷம் ப்ரஜைகளின் மனங் கோணாமல் ராஜ்ய பரிபாலநஞ் செய்து ப்ரஹ்மலோகத்தேறப்போகிறான. ஸ்ரீராமனுடைய இச்சரிதமானது வேதங்களோடொத்துத் தன்னை ஆதரிப்பவர்களைப் பாவநமாகச் செய்து அவர்களது பாவங்களைப் போக்கி மேன்மேலும் நன்மை விளையச் செய்யவற்றாயிருக்கும். இச்சரித்திரத்தை எவன் படிக்கிறான், அவன எவ்வித பாபத்தினின்றும் விடுபடுவான். வாழ்நாளை வளரச்செய்யும் பாலராமாயணமென்கிற இவ்விதிஹாஸத்தைப் படிப்பவன எவனுயிருந்தாலும் பிள்ளைபேரனகளோடும் மற்றுமுள்ள தன்னைச சேர்ந்தவர்களோடுங் கூடியிருந்து, சரீரம் விட்டபின்பு ஸ்வர்க்கமேறச் சென்று, அங்கு மிகவும் பூஜைபெற்று விளங்கி நிற்பான. இதைப் படிப்பவன் ப்ராஹ்மணனுகில் வேதம் வேதாங்கம் முதலிய கல்விகளிற் சிறந்திருப்பான். க்ஷத்திரியனுயிருக்கில் சக்ரவர்த்தியாவான். வைச்யனுகில் வியாபாரம் மிகுந்து லாபம் பெறுவான் சூத்திரனுகில் இக்கதையைச் சொல்லக்கேட்டுத் தன்னினத்தில் மேன்மை பெற்றிருப்பான்.

முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

பிரமன் ப்ரத்தியக்ஷமாகி வால்மீகியை யனுக்கிரகித்தது.

[1] தர்மத்தில் மனஞ்சென்ற வால்மீகிமாமுனிவர் நாரதருடைய அம்மொழியைக்கேட்டு வாக்கியங்களின் உட்கருத்தறியவல்லராகையால் சிஷ்யர்களுடன் கூடி அந்நாரதரைப் புகழ்ந்தனர். அப்பொழுது தேவரிஷியாகிய அந்நாரதரும் வால்மீகிமாமுனிவரால் தக்கபடி பூஜிக்கப்பட்டுப் போய்வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு ஆகாயத்தை நோக்கிச் சென்றனர். அந்நாரதர் நொடிப்பொழுதில் தேவலோகமேறச்செல்ல, அப்பொழுது வால்மீகிமுனிவரும் மத்யான்னத்தில் செய்யவேண்டிய ஸ்நாநத்திற்காகக் கங்கைக்கருகான தமஸாநதியின் கரைக்குச் சென்றார். அம்மாமுனிவர் தமஸாநதியின கரைக்குப் போய், சேறில்லாமல் தெளிந்திருக்குந் துறையைக் கண்டு பக்கத்தில் நிற்கும் பரத்வாஜரென்னும் சிஷ்யரைப் பார்த்து 'ஓ பரத்வாஜனே! ஸத்துக்களின் மனம்போல் தெளிந்த ஜலம்

1 தயாநிதியாகிய வால்மீகி 'இஷ்டம்ஹி விதுஷாம் லோகே ஸமாஸவ்யாஸதாரணம்' என்று ஒரு விஷயத்தைச் சுருக்கமாகச் சொல்லுவதும், பினபு அதைப் பரக்கச சொல்லுவதும் கற்றவர்களுக்கு விருப்பமாயிருக்கு மென்கையாலே கீழே சுருக்கமாகச் சொன்ன ராம சரித்திரத்தைப் பரக்கச் சொல்லவேண்டுமென்று கருதி அதில் பார்க்கிறவர்களுக்குப் புத்திசெல்லும்பொருட்டு வக்தாவின வைலக்ஷண்யத்தையும் அதிற் சொல்லப்படும் விஷயத்தின வைலக்ஷண்யத்தையும் காட்ட உத்தேசித்து முதலில் இந்த ஸர்க்கததாலே வக்தாவின் வைலக்ஷண்யத்தைக் காட்டுகிறார். வக்தாவுக்கு வைலக்ஷண்யமாவது-மிகவும் ஆப்தனாயிருக்கை. ஆப்தியாவது-பொருள்களை யுள்ளபடி யறிந்து அறிந்தபடியே சொல்லுகை. அதில் மிகுதியாவது-ப்ரஹ்மாவின் வரப்பிரஸாதத்தால் வந்தமேன்மை. இதைக்காட்டத் தொடங்குகிறார் (நாரதருடைய) என்றிதுமுதலாக.

நிறைந்துசேறில்லாமல் அழகாயிருக்கும் இத்துறையைப் பார்த்தனையா. அப்பா! கமண்டலுவைக் கீழேவைத்து மரவுரியைக் கொடு. கங்கைக்கு மேலான இத்தமஸா நதியின் துறையிலே யிழிந்து ஸ்நாநஞ் செய்யப்போகிறேன்' என்று இவ்வாறு மொழிந்தனர்.

ஆழ்ந்தமனமுடைய வால்மீகிமாமுனிவர் இங்ஙனம் சொல்லப் பரத்வாஜரும் குருவின் மொழிதவறுதிருப்பவராகையால் அப்படியே வால்மீகியின் மரவுரியைக் கொடுத்தனர். அவ்வால்மீகியும் சிஷ்யராகிய பரத்வாஜரது கையிலிருந்து மரவுரியை வாங்கிக்கொண்டு, தாம் ஐம்புலன்களையும் வென்றவராயிருந்தும் பரந்திருக்கிற அந்நதியின் கரையிலுள்ள கானகத்தை நாற்பக்கத்திலும் [1]விதிவசத்தினால் பார்த்துக்கொண்டு உலாவினர். சாபங்கொடுக்கவும் அநுக்கிரகஞ்செய்யவுமுரிய மகிமை பொருந்திய அவ்வால்மீகி மாமுனிவர் அவ்வநத்தில் அந்தத்துறையினருகில் ஆணும் பெண்ணுமாகி இரண்டு க்ரௌஞ்சப்பறவைகள் ஒன்றோடொன்று பிரியாமல் ஓரபயமுமின்றியே ஸஞ்சரித்துக் கலகலவென்று அழகாக ஒலித்துக்கொண்டிருக்கக் கண்டார். இப்படியிருக்கையில் அங்கே ஒரு வேடன் வந்தான். அவன் மிருகங்களை

1 (விதிவசத்தினால்) ஐம்புலன்களையும் வென்றவராகையால் இவர் அவ்வநத்தினழகைப் பார்க்கப்போனார் என்பது சேராது. ஆகிலும் தைவத்தாலேயுண்டென்றுரெனகிறது. இங்கு ஸ்நாநஞ் செய்யத்தக்க துறையைத் தேடும்பொருட்டுத் திரிந்தாரென்று சிலர் சொல்லுகிறார்கள். அதுவும் (சேறில்லாமல் அழகாயிருக்கும் இத்துறையிலேயே யிழிந்து ஸ்நாநஞ் செய்யப்போகிறேன்) என்று 'அகர்தமமிதந் தீர்த்தம் பரத்வாஜ நிசாமய| ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா' என்றும் 'இதமேவாவகாஹிஷ்யே தமஸாதீர்த்தமுத்தமம்' என்றுஞ் சொல்லுகையால் தேடவேண்டுகை தோற்றாமையாலே சேராது. (தீர்த்தம்) என்று அந்நதிஜலஸமுதாயத்தைச் சொல்லுவோமென்றால் 'அகர்தமமிதந்தீர்த்தம்' என்றவிடம் போரவமையாது.

யும் பக்ஷிகளையுங் கொன்று பிழைக்குந் தன்மையனாகை யால் அவைகளில் இயற்கையாகவே வைரங்கொண்டவன். ஆகையால் அவன் அந்தப்பக்ஷிகளிரண்டும் சுகித்துக்கொண்டிருக்கக் கண்டும் மன இரக்கமின்றி அவைகளைக் கொல்லவேண்டுமெனக் கடோரமாக நிச்சயங் கொண்டு அம்பாமுனிவர் பார்த்துக்கொண்டிருக்கும பொழுதே அவவிரண்டிலொன்றாகிய ஆண்பக்ஷியை அடித்தான அடியுண்ட ஆண்பக்ஷி பூமியில் விழுந்து உடம்பெல்லாம் உதிரம் பொழியப் புரண்டு நோவு படுவதைக்கண்டு பேடை சிவந்த சிகையோடும் உயர்ந்த சிற கோடுங்கூடி அழகாகி எனறும பிரியாது மகிழ்த்துத் தனனைப் புணரவந்த தன்சேவலோடு தனக்கு நேரிட்ட பிரிவை ஆற்ற மாட்டாமல் கேட்டவர் மனம கரையும்படி கருணமாகக் கூவியழுதது. இவவாறுவேடனாலடியுண்ட அபபறவையைப் பார்த்துத தர்மசிந்தையுள்ள அவவால்மீகிமாமுனிவருக்கு மனஇரக்கமுண்டாயிற்று. பினபு அந்தணராகையால் இயற்கையாகவே காருண்யமுள்ள அவ்வால்மீகி சேவலின் பிரிவால் மனவருத்தங்கொண்டு கூக்குரலிடும பேடையைக் கண்டு மிகவும மனமிரங்கி யிருந்தமைபற்றி ஒன்றோடொனறு புணரும பொழுது அடிப்பது தர்மமன்றெனறு சிந்தித்து -

1 'மாநிஷாத ப்ரதிஷ்டாம த்வமகமஸ் ஸாஸ்வதீஸ்ஸமா:|
யத்க்ரௌஞ்சமிது நாதேகமவதீ: காமமோஹிதம்'

என்று மொழிந்தனர்.

---

1 இதற்கு—'அட பாக்கியமறற வேடனே! காமவேட்கைகொண்டு மெய்மமறந்திருந்த கிரௌஞ்சப் பறவைகளிரண்டிலொன்றாகிய சேவலைக் கொன்றதினால் அநேகமாண்டுகள் நீ வாழ்வற்றிருப்பாயாக' என்று வேடனைச சபித்ததாகப் பொருள்கூறுவர் நான்முகனருளால் வால்மீகியின் முகததில் முதலிலுண்டான இந்தச்லோகம் வேடனைச சபித்ததுமாத்திரத்திலே முடியத் தக்கதல்ல இத்தால் ஸ்ரீராமாவதாரஞ்செய்த பகவானுக்குப் பல்லாண்டு பாடுறாரென்று முன்புள்ளார் கூறுவர். அதெங்ஙனே யெனறால்—(நிஷீதந்தி அஸமிந்நிதி நிஷாத:) என்று நிஷாதசப்தம் இருப்பிடச்



40. வால்மீகி க்ரௌஞ்சப் பறவையை அடித்த வேடனைச் சபித்தல்.

தையும், மாஸப்பதம் லக்ஷ்மியையும் சொல்லுமாகையால் (மாயாஃ நிவாஸஃ மாநிவாஸஃ) என்கிற வித்தால் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு இருப்பிடமானவனே யென்கிறது. (யத்) எதனால் (க்ரௌஞ்சமிதுநாத்) ராக்ஷஸஜாதியான ராவணனை மண்டோதரி யென்னுமிவ்விரட்டையிலிருந்து, (காமமோஹிதம்) காமவிகாரங்கொண்ட (ஏகம்) ஒருவனாகிய ராவணனை, (அவதீஃ) கொன்றாய்; [அதனால்] (த்வம்) நீ, (ஶாஶ்வதீஃ ஸமாஃ) பல்லாண்டுகள், (ப்ரதிஷ்டாமகமஃ) நிலைபெற்றிருப்பாயாக—என்று. இப்படி இந்த ஶ்லோகத்தால் இஷ்டதேவதையை நினைக்கையாகிற மங்களஞ் செய்யப்பட்டது. மேலும் இதில் ராமாயணத்தின் கதை யெல்லாந் தோன்றும். எங்ஙனே யென்றால்—(மாநிவாஸ) என்று லக்ஷ்மீக்கிருப்பிடமானவனே யென்கையால் ராமன் ஸீதையை மணம்புரிந்த பாலகாண்டத்தின் கதையும், (த்வம் ப்ரதிஷ்டாமகமஃ) என்று நீ நிலைபெற்றிருப்பாயாக வென்கையால் ராமன் பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலித்து நிலைபெற்றமையைச் சொல்லுகிற அயோத்யாகாண்டத்தின் கதையும், (க்ரௌஞ்சமிதுநாதேகம் காமமோஹிதம் அவதீஃ) என்று 'க்ருஞ்ச ஹதிகௌடில்யால்பீபாவயோஃ' என்கிற தாதுவிலே யுண்டான க்ரௌஞ்சஶப்தம் கோணலாய் நடக்கும் குரங்குகளைச் சொல்லுமாகையால் தாரை வாலியென்கிற விரட்டையிலொருவனாகி ஸுக்ரீவபத்நியின்மீது காமமோஹங் கொண்ட வாலியைக் கொன்றாய் என்று கிஷ்கிந்தாகாண்டத்தின் கதையும், (க்ரௌஞ்சமிதுநாதேகமவதீஃ காமமோஹிதம்) என்று க்ரௌஞ்சஶப்தம் அல்பீபாவத்தையும் சொல்லுமாகையால் ஒருவருக்கொருவர் பிரிந்திருப்பதனால் மிகவுமிளைத்து உருமாய்ந்திருக்கிற ஸீதை ராமனென்கிற இரட்டையிலொருவனாகி ராமனிடத்தில் மனஞ் சென்று மெய்ம்மறந்திருக்கும் ஸீதையை வதைத்துக் கொப்பான ஹிம்ஸை செய்தாயென்று ஸீதையின் துக்கத்தைச் சொல்லுகிற ஸுந்தரகாண்டத்தின் கதையும் சொல்லப்பட்டன. இதனை சிலர் கூறுவர்—(நிதராம ஸாதயதி பீடயதீதி நிஷாதஃ) நிஷாதஶப்தம் மூன்றுலோகங்களையும் மிதமின்றி நடுங்கச்செய்யும் ராவணனைச் சொல்லுகிறது. ஓ ராவணனே! (க்ரௌஞ்சமிதுநாத்) ராஜ்யத்தை விட்டு வநவாஸஞ் செய்வதால் மிகவுமிளைத்து அல்பமென்னும்படியான ஸீதை ராமனென்கிற இரட்டையிலிருந்து, (காமமோஹிதம் ஏகம்) ராமனிடத்தில் மனஞ் சென்று மெய்ம்மறந்திருந்த

ஒன்றாகிய ஸீதையை, (யத் க்ரௌஞ்சமிதுநாதேகம் அவதீ: காமமோஹிதம்) கொன்றாயெனனும்படி அநேகவிதமான பீடைகளைச் செய்தாயாதலால், (த்வம் ஶாஶ்வதீஸ் ஸமா: ப்ரதிஷ்டாம் மாகம:) நீ லங்கையிற் பிள்ளையும் பேரனுமாகக் களித்து வாழும்படி நான்முகக்கடவுள் அளித்த நிலையை இனியடைய மாட்டாய்-என்று. மற்றுஞ் சிலா இங்ஙனம் சொல்லுகின்றனர்—ராவணனை முன்னிலையாக்கிச் சொல்லுவது சேராது; ராவணனைக் கொன்று ராமன் அயோத்திக்குச் சென்று ராஜ்யஞ் செய்யுங் காலத்தில் நாரதரைக் கேட்டதாகத் தானே வால்மீகி சொல்லுகிறபடியால் அதற்குப் பின் பிறந்த இந்த சலோகத்திற்கு ராவணனை முன்னிலையாக்கி எதிர்காலமாகச் சொல்லுகிற இப்பொருள் எங்ஙனே சேரும்? எப்படிதான் எல்லாமறிந்த ஸரஸ்வதி நடந்த சங்கதியை நடக்கவேணுமென்று வேண்டத்தகும? இதில் வால்மீகிக்கு இவ்வாறு கருத்திருக்குமாயின 'நான இப்பறவையைப் பார்த்துச் சோகித்துச் சொன்னவிது எனனுய் விழுந்தது' என்று தம்மில் தாப சிந்திப்பது சேராது ஆனால் இது வாக்யமோ விருத்தமோ வென்று சிந்தித்தாரென்றால் குற்றமில்லையே யென்று சொல்ல வொண்ணாது. ஏனெனில் 'தஷ்ப்யேஷ ஶ்லோகோஹி தீத:-மருத: பரிவேவஷ்டாரோ மருத்தஸ்யாஹவந் க்ருஹே' என்று இவ்விதமாக வேதங்களிற் பலவு முண்டாகையாலே இங்ஙனம் சந்தேகிப்பது ரிஷிக்குச் சேராது. இவர் சலோகத்தையே யறியாராயின, நாரதர் மொழிந்த சலோகங்களைக் கேட்டபோது சந்தேகமுண்டாயிருக்க வேணும். ஆனால் நாரதா சொன்னது வாக்யமே யொழிய ஶ்லோகமன்றென்றால்—இது ஊஹமே யொழிய இதில் தக்க ப்ரமாணங் காணோம். மேலும் ப்ரஹ்மா வந்து உபதேசித்தபின்பே வால்மீகிக்கு இக்காவ்யஞ் செய்யவேணடு மென்கிற எண்ணம் பிறந்ததே யொழிய அதற்கு முன்பு கிடையாது. ஆகையால் இதில இக்காவ்யத்திற் சொல்லப்படும் பொருளெல்லா முரைக்கவேணு மென்பது வேண்டியதில்லை. ஆகையால் இதற்குண்மையான கருத்து இதுவே யாகவேணும். எனனெனில்—வால்மீகி நாரதரிடம ராமகுணங்களைக் கேட்டபின்பு அக்குணங்களை அவர் பிரபந்தமாகச் செய்ய உத்தேசிக்கப் பகவானுன ராமனும் இதறிந்து தனது சரிதரம கருணரஸமயமாயிருப்பதால் இதை மிகவுங் காருணயமுள்ள மனமுடையவரே செய்யவேண்டுமென்று பார்த்து வால்மீகிக்கு அத்தனமை யுண்டோவென்று தெரிவதற்காகவும், தனக்கு முன் பிருகுமஹா

ஷியால் வந்த சாபத்தை வால்மீகியால் இரட்டித்துக்கொள்ளவேணு மென்றும், தானே வேடனாகி வந்து அம்மாமுனிவர் பார்த்துக்கொண் டிருந்தபொழுதிலும் அதை லக்ஷ்யஞ் செய்யாமல் க்ரௌஞ்சப்பறவை யின வடிவங் கொண்ட ராக்ஷஸனை யடித்தான். அப்பொழுது வால்மீகி புத்திபூர்வகமாகவும் அந்தர்யாமியான பகவானுடைய ஏவுதலாலும இவன மிகவும் அதர்மஞ்செய்தானென்று கோபம் பிறந்து அப்படி சபித்தார். ஆகையால் ஸ்ரீலோகத்தின் பொருள் எப்படியெனில்—ஓ வேடனே! காமவேட்கை கொண்ட க்ரௌஞ்சப்பறவைகளினிரட் டையிலிருந்து ஒன்றைக் கொன்றாயாகையால் நீ பிழைத்திருக்கும் நாளில் அநேக மாண்டுகள் மனைவியுடன் சேர்ந்து சுகித்திருக்கு மிருப்பை யடையமாட்டாயாக—என்று ரிஷி சபித்தனர். க்ரௌஞ்சப் பறவை ராக்ஷஸனாகை யெங்ஙனேயெனறால்—பிரமனிடத்தில ராம விருத்தாந்தங்களெல்லாம் அறியும்படி வரம் பெற்றபின்பு செய்த 'தஸ் மாதஸ்மியாநாஷேகம்' எனகிற ச்லோகத்தில் 'வைரசீல:' என்கிற பதத்தால் ராக்ஷஸனென்பது தோற்றும். பகவானுக்கு ராக்ஷஸர்க ளின மேல் விரோதமென்பது உலகிலெங்கும் விளங்கிய விஷயமே. ஸாதாரணமான வேடனுக்கு ஜந்துக்களின் மீது வைரம் கிடையாது. ஆனால் ஆஹாரத்தின பொருட்டுப் பக்ஷிகளையும் மிருகங்களையும் கொல் வது இயற்கையென்பது நன்றாக வெளிவந்திருக்கும். ஆகையால் கேவ லம் க்ரௌஞ்சத்தின மேல் கேவலம வேடனாயிருப்பவனுக்கு 'வைர சீலய:' என்று சொல்வது ஒவ்வாது. க்ரௌஞ்சப்பறவை ராக்ஷஸனா கவும வேடன ராமனாகவுங் கொள்ளில் பொர அமைந்திருக்கும். ஆகை யால் க்ரௌஞ்சம் ராக்ஷஸனென்பது தோற்றும இதுவரையில சொன் ன விஷயமே பாத்ம புராணத்தில் சிவனுக்கும பார்வதிக்கும உண் டான ஸம்வாதத்தில் 'ஆஹ-ப லக்ஷ்மணம் ப்ராஹ ராமோராஜீவலோ சந:| ஸ்ரு ணு மே வசநம் ஹ்ருயம ஸீதாஸந்த்யாகாரணம்| வால்மீகி நா ஹ ணா ஸப்தோஸ்மி கில லக்ஷ்மண| தஸமாஷேநாந் த்ய ஜாம்யஹ்ய ஜநோ நைவாத்ர காரணம்' என்று ஸீதையை விட்டதற்குப் பிருகுவும் வால்மீகியும் சபித்ததே காரணம், ஜநாபவாதம் காரணமன் றென்று சொல்லப்பட்டது. இப்படியே ஸ்காந்த புராணத்தில் பாதா ளகண்டத்தில் 'ஸாபோக்த்யா ஹ்ருதி ஸந்தப்தம் ப்ராசேதஸமகல்மஷம்| ப்ரோவாச வசநம் ஸ்ரீ ப்ரஹ்மா தத்ராகத்ய ஸஸத்க்ருத:| ந நிஷாதஸ் ஸவை ராமோ ம்ருகயாஞ் சர்த்துமாகத:| தஸ்ய ஸம்வர்ணநேநைவ

இவ்வாறு அந்தப்பறவையைப் பார்த்துச் சொல்லிய அம்மாமுனிவருக்கு 'இப்பறவைக்காக வருந்தி யினை சொன்னது என்னுகி முடிந்தது' என்று நெஞ்சில் ஓரெண்ணம உண்டாயிற்று. இப்படி எண்ணங் கொண்டிருக்கும் அவ்வால்மீகிமாமுனிவர் மிகுந்த மதி பெற்றவரும் புலவரில் தலைவருமாதலால் தம் மனத்தில் நிச்சயித்துக்கொண்டு சிஷ்யராகிய பாத்வாஜரைப்பார்த்து 'பரத்வாஜனே! நான் பக்ஷியைக் கண்டு சோகித்துச் சொன்னது நாலடியுள்ளதும் ஒவ்வோரடிகளுக்கும் எழுத்துக்கள் சரியாகி, வீணையில் இசையுடன பாடக்கூடிய [1] ஓர் விருத்தமேயாகவேண்டும்; வேறில்லை' என்று இவ்வண்ணம் மொழிந்தனர். சிஷ்யராகிய பரத்

---

ஸாஶ்லோகஸ்த்வம் ஹவிஷ்யஸி। இத்யுக்த்வா தஞ்ஜஹாமாஸாவிர ஹ்யலோகம் ஸநாதநம்।ததஸஸம்வர்ணயாமாஸ ராகவம்ஶ்ரங்யகோடிஷி:' என்று வேடனைச் சபித்ததனல் தபித்துக்கொண்டிருக்கும் வால்மீகிக்கு பரஹ்மா வந்து அவ்வேடன் ராமனே யென்று தெரிவித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையாலிக்கருத்தே சரியானதென்று கண்டுகொள்வது. ப்ரபந்தத்திஞரம்பத்தில் சபித்தாரெனபது கூடாதென்று ஹிதமுரைத்ததாக வேறொருபொருள் கூறுவர். அதாவது— ஓ வேடனே! நீ அநேகமாண்டுகள் நிலைபெற்று நினருய்; அதாவது உனக்கு நிரம்பவும் வயதாயிற்று. ஆயிருந்தும் காமமோஹங் கொண்ட க்ரௌஞ்சப்பறவையினிரட்டையி லொன்ருகிய சேவலை யடித்தா யென்பது யாதொன்றுண்டு, அது இனிமேல் வேண்டாம், இனி யிவ்விதமான வ்யாபாரஞ் செய்யாதிருப்பாயாக --என்று.

1. இங்கு 'ஶ்லோகோ ஹவதுநாங்யதா' எனறு மூலம். இதில் ஶ்லோக ஶப்தம் 'பத்யே யஶஸி ச ஶ்லோக:' என்கிற நிகண்டுவின்படி கீர்த்தியைச் சொல்லுவதாகக்கொண்டு— சோகித்துச் சபித்ததுவது அநுசிதமேயாயினும் எனக்கு இது கீர்த்தியை விளைவிப்பதாக வேணுமன்றி வேருன அகீர்த்தியைத் தருவதாக வேண்டாமென்று பொருளென்று சிலர் கருத்து.

வாஜரும் அவ்வால்மீகி இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கையில் 'ஆம், இது சரியே' என்று ஸந்தோஷத்துடன் ராமாயணத்தின் பொருளெல்லாம் நிறைந்த அவ்விருத்தத்தைத் தன்மனத்தில் வாங்கிக்கொண்டனர். அம்மாமுனியும் அதை அவர் மனத்தில் வாங்கிக்கொண்டது கண்டு களித்தனர். பின்பு அவ்வால்மீகி முனிவர் அத்தமஸாநதியின் துறையில் மாத்யான்னிகஸ்நானத்தை முடித்துக்கொண்டு அவ்விருத்தத்தின் பொருளை நினைத்துக்கொண்டே தமது ஆச்ரமம் போகத் திரும்பினார். சாஸ்திரங்களெல்லாங் கேட்டுச் சிஷ்யராகிய பரத்வாஜரும் அம்மாமுனிவர் புறப்பட்டவுடனே அவரது ச்லோகத்தை மறவாமல் நெஞ்சிலுணர்ந்துகொண்டே ஜலம் நிறைந்த கலசத்தை யெடுத்துக்கொண்டு வணக்கத்துடன் அவரைப் பின்சென்றனர். தர்மங்களையறிந்த அவ்வால்மீகி மாமுனிவர் சிஷ்யருந் தாமுமாக ஆச்ரமமேறச் சென்று தேவபூஜாதிகளை முடித்துக்கொண்டு ஆஸநத்தில் உட்கார்ந்து ச்லோகத்தை நெஞ்சில் நினைத்துக்கொண்டே வேறு புண்யகதைகளையும் பாராயணஞ் செய்தார்.

அப்பொழுது நான்கு வேதங்களையும் ஒரேகாலத்தில் ஓதும்படி நான்கு முகங்களைப் பெற்று உலகங்களையெல்லாம் படைக்கும் பிரபுவாகி மகிமை பொருந்திய ப்ரஹ்மதேவன், நாரதர் தன்னிடம் வந்து புகழ்ந்து சொல்லிய அவ்வால்மீகியைப் பார்க்கத் தானே வந்தனன். வால்மீகியும் அவனைப்பார்த்துச் சடக்கென எழுந்திருந்து மிகவும் ஆச்சரியத்துடன் ஒன்றும் பேசாமல் கையைக் கூப்பிக்கொண்டு வணங்கி நின்றனர். பின்பு அந்த ப்ரஹ்மாவை [1]நூலிற் சொன்ன கட்டளைப்படி

---

1. நமஸ்காரஞ் செய்வதில் நூலிற்சொன்ன கட்டளையாவது 'மநோவாக்காயஜிமாநேந ஸஹ நயஸ்ய யராதலே| கூர்மவச்சதுர: பாதௌஞ் ஶிரஸ்தத்ரைவ பஞ்சமம்| ப்ரதக்ஷிணஸமேதேந ஹ்யேவம் ரூபேண ஸர்வதா| அஷ்டாங்கேந நமஸ்க்ருத்வா ஹ்யுபவிஶ்யா க்ரதோ ஹரே:' என்று இங்ஙனம் சொல்லப்பட்டது.

நமஸ்கரித்துக் கால்களை யலம்பி அர்க்கியம் கொடுத்து ஆஸநத்தில் உட்காரவைத்து, குறைவற க்ஷேமம் விசாரித்துப் பூஜித்தனர். இவ்வாறு பூஜிக்கத்தக்க பெருமைபொருந்திய ப்ரஹ்மாவும் இதுவே தகுந்ததென்று வால்மீகியால் புகழ்ந்து போடப்பட்ட உயர்ந்த ஓராஸநத்தில் உட்கார்ந்து மஹர்ஷியாகிய அவ்வால்மீகியையும் உட்காரும்படி கட்டளையிட்டான. இப்படி ப்ரஹ்மாவினிடம் அநுமதி பெற்ற வால்மீகியும் அருகில் ஓராஸநத்தில் உட்கார்ந்தார். இப்படி உலகங்களுக்கெல்லாம் பிதாமஹனுகிய அநதப்ரஹ்மாவானவன எதிரில் உட்கார்ந்திருக்கவும் அப்பொழுது வால்மீகிமுனிவர் தமஸாநதியின கரையில் வேடன் பக்ஷியைக் கொன்ற விருத்தாந்தத்திலே மனஞ்சென்று மிகவுஞ் சிந்தை கூர்ந்து 'பக்ஷிகளின் மீதுண்டான வைரத்தினுல் அந்தக்ரௌஞ்சபக்ஷியைப் பிடிக்கக்கருதிப் பாபத்தில் மனந்துணிந்து அங்ஙனம் பேடையோடு கலந்து அழகாகக்குலாவிக்கொண்டிருக்கும் ஆண் க்ரௌஞ்சப்பறவையைக் காரணமின்றிக் கண்போர்மனங் கதறும்படி அடிக்கவல்ல வேடன் செய்தசெயல் கடோரமானது' என்று துக்கத்தில் மூழ்கி அவ்வழியாலே சேவலைப்பிரிந்த பேடையை நினைத்துச் சோகித்துக்கொண்டே முன்பாடிய ச்லோகத்தினர்த்தத்தின் பெருமையை நினைத்து மீளவும் ப்ரஹ்மாவினருகிற் பாடினுர். பின்பு நான்முகக்கடவுளும் வால்மீகியை நோக்கி, நமது ஆணையின்மேல் தனது நாக்கில் ஸரஸ்வதியிருந்து இவ்வாறு வெளிப்புறப்பட்டமை யறியானிவனென்று சிரித்துக்கொண்டே 'நீ செய்தது ச்லோகமே; இதில் விசாரம் வேண்டாம்; மாமுநியே! இந்தச்லோகரூபமான ஸரஸ்வதி உன் மூலமாக ராமாயணத்தைப் பூலோகத்தில் வெளியிடவேண்டுமென்று நான் ஸங்கல்பித்ததுபற்றியே உன்னிடமிருந்து வெளியாயிற்று. ரிஷி

களில் தலைவனாகிய வால்மீகியே! ஸ்ரீராமனது சரித்திரம்
எல்லாவற்றையும் இத்தன்மை பொருந்திய ச்லோகங்க
ளால ஓர் பிரபந்தமாகச் செய்யவேண்டும். [1] தர்மத்தில்
நிலைநின்று உலகத்தில் ஒப்பிலலாத குணம் நிறைந்து
சிறந்தமதியுடையனாகித் தீரத்தன்மைபொருந்திய ஸ்ரீரா
மனுடையசரித்திரத்தை நாரதனிடங் கேட்டபடி சுருக்
கமாகச்சொல். சிறந்தமதிபொருந்திய ராமனுடையவும்
லக்ஷ்மணனுடையவும்ராக்ஷஸர்களுடையவும்ஸீதாதேவி
யுடையவும்பரதன்முதலானோருடையவும் ரஹஸ்யமாகவும்
பிரகாசமாகவுமுள்ள விருத்தாந்தங்களெல்லம்உனக்குத்
தெரியவரும். நீ நாரதனிடம் கேட்காமையால் உனக்
குத் தெரியாதவை மற்றும் தெரியப்போகின்றன. நீ செய்
யப்போகிற இக்காவ்யத்தில் உனனுடைய வாக்கு ஒன்

---

1 இங்குச் சொல்லுகிற குணங்களால் இக்கதாநாயகன் மிக
வும் மேன்மைபெற்றவனென்று தோற்றும். நாயகனது குணங்
களைப்பற்றி யல்லவோ கதைக்குப் பெருமை. செய்யுள் நடை கம்பீர
மின்றி யிருப்பினும் குணம்பொருந்திய நாயகனைப்பற்றி யிருக்குமா
யின் கற்றவர்களும் செவிகொடுத்து ஆநந்திக்கும்படியாயிருக்கும்.
'கவேரல்பாபி வாணீ வ்யததிர்விஷ்வக்கர்ணவதம்ஸதி| நாயகோ யதி
வர்ணயேத லோகோத்தர-குணோத்தரः' என்று இங்ஙனம் போஜ
ராஜன் புகழ்ந்தனன. நாயகனாவது-ப்ரபந்தத்தில் முக்யமாகச் சொல்
லப்படுபவன். அவனுடைய குணங்களாவன 'மஹாகுலீநதௌஜ்ஜ்
வல்யம் மஹாஸாஷீய முதாரதா| தேஜஸ்விதா விஷீயத்வம் யார்மி
கத்வாஷயோசி' என்றுரைககப்பட்டவை. (தர்மத்தில் நிலைநின்று)
என்கையால் 'தார்மிகத்வம்' என்கிற குணமும், (சிறந்த மதியுடைய
னாகி) என்கையால் 'விஷீயத்வம்' என்கிற குணமும், (தீரத்தன்மை
பொருந்திய) என்கையால் உலகங்களை யெல்லாம் ஆளவல்லனாகை
யாகிற 'மஹாபாக்யம்' என்கிற குணமும், (ஸ்ரீராமனுடைய) என்
கையால் இக்ஷ்வாகு வம்ஸத்திற்பிறந்தமை தோற்றுகையால் 'மஹா
குலீநதா' என்கிற குணமும், (உலகத்தில் ஒப்பில்லாத குணம்
நிறைந்து) என்கையால் மற்றக் குணங்களும் சொல்லப்பட்டன.

றேனும்பொய்யாகமாட்டாது. ஓர்பதமாயினுங்கெடாது. ஆகையால் பாபங்களை யெல்லாம் போக்கிப பாவநமாக் குவதும் கேட்க மிக இனியதுமாகிய ஸ்ரீராமசரித்தி ரத்தை இவவகை ச்லோகங்களடங்கிய ஓர் பிரபந்த மாகச் செய்யவேண்டும். பூமியில் மலைகளும் நதிகளும எவவளவு காலம் நிலையாயிருக்குமோ, அவ்வளவு காலம ராமாயணக் கதை உலகங்களெல்லாம பரவி நடந்து வரும். நீ செய்த ராமாயணககதை எவ்வளவு காலம் உலகங்களில் நடந்து வருமோ, அவ்வளவு காலம நீ இநதச்சரீரம் விட்ட பினபு லோகங்களுக்கெல்லாம மேலான என்னுடைய லோகத்தில வநது வஸிக்கப போகின்றாய்' எனறிவ்வாறு மொழிநதனன. இபபடி, மொழிந்தபினபு மகிமைபொருநதிய அந்நானமுகக்கட வுள் மறைய, வால்மீகியும சிஷ்யர்களுடன் கூடி மிகவும் ஆச்சரியமடைந்தனர்.

பினபு அவவால்மீகியின் சிஷ்யர்கள் அனைவரும் இந்த ச்லோகத்தை மீளவும் பாடினர். பினனும் மிக வும் ஆச்சரியமுற்றுக் களித்து அடிக்கடி இதென்ன அற்புதமென்று ஒருவருககொருவர் சொல்லிக்கொண் டனர். ஒன்றோடொன்று எழுத்துக்களொத்த நான் கடிகளுள்ளதாக யாதொரு ச்லோகம் மஹர்ஷியாகிய வால்மீகியால் காநஞ்செய்யப்பட்டது; [1] அந்த ச்லோகம் சிஷ்யர்களால் அடிக்கடி புகழப்படுவதுபற்றி ச்லோக மென்றே பேர்பெற்றது. அபபோது அவவாலமீகிமாமுனி

1 இங்கு 'ஶ்லோகஶ் 'ஶ்லோகத்வமாகத:' என்று மூலம 'ஶ்லோகஜ ஸங்காதெ' என்கிற தாதுவின்மேல் 'ஶ்லோக்யதே இதி ஶ்லோக:' என்று கிடக்கிறது. 'ஶோக: ஶ்லோகத்வமாகத:' என்றும் பாடமுண்டு. முந்தினபாடததில் ச்லோகத்தின் லக்ஷணம் அமைநதிருப்பதால் சலோகமெனப்பட்டது. சிஷ்யர்களால் அடிக் கடி கொண்டாடப்பட்டமையால் மீளவும் சலோகமெனறு பேர் பெற்றது. ஆக சலோகசப்தம் பதஙகளைச் சேர்த்துச்சொல்லுமையும்

வர் நெஞ்சில் பரமபுருஷனை த்யானஞ் செய்து இவ்வித மான ச்லோகங்களால் ராமாயணமென்கிற இக்காவ்யம் முழுமையும் செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்டார். பின்பு மிகவுங் கீர்த்திபெற்று ஆழ்ந்தமதியுடைய அந்த வால்மீகிமாமுனிவர் கம்பீரமாகி ரஸம் பொழிகிற விருத்தங்களும்பதங்களும் அமைந்து அடிகளில்ஒன்றோடொன்று எழுத்துக்கள் சரியாகிக், கேட்க இனிதான ச்லோகங்கள் நூறுநூருக அடங்கியதும் அழகான ராம சரித்ரத்தைச் சொல்லுவதும் எங்குங் கீர்த்திபெற்ற ராமனுக்கும் மேன்மேலெனப் பெருங்கீர்த்தியை விளைவிப்பதுமாகிய ராமாயணமென்னுங் காவ்யத்தை அப்பொழுதே செய்து முடித்தனர். இப்படி ஸமாஸங்களும் ஸந்திகளும் பதங்களும் லக்ஷணங்களுக்கொத்தபடியமைந்ததும் ஏற்றக்குறைவில்லாமல் இனிப்புடன் தெளிவான வாக்யங்கள் நிறைந்ததும் ரகுவம்சத்திற் பிறந்த ஸ்ரீராமனுடைய வ்ருத்தாந்தங்களைத் தெளியவுரைப்பதும் பத்துத்தலையனாகிய ராவணனுடைய வதத்தைச் சொல்லுவதும் ஸகல ஜனங்களும் ஆதரிக்கத்தக்கதுமாகிய-இம்மஹா காவ்யத்தைச் செய்து அம்மாமுனிவர் கேளுங்கள்" கேளுங்களென்று சீடர்களைக் கேட்பித்தார். இப்படிப்பட்ட இக்காவ்யத்தை யாவருங் கேளுங்கள். இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

புகழ்யையுமாகிற இரண்டு பொருளேயும சொல்லும். ஆனல் 'ச்லோகா ஸங்வாதே'' என்று பதங்களைச சேர்க்கையை மாத்ரம் பொருளாகச் சொல்லிற்றே யென்றால் 'யாதூநாமநேகார்யத்வம்' என்று தாதுக்களில் ஒன்றுக்கே அநேகம் பொருள் உண்டென்கிற ந்யாயத்தைக் கொண்டு இங்ஙன் சொல்லவேணும். ஆனதுபற்றியே 'பஜ்யே யஶவிச ஶ்லோகஃ' என்று அமரஸிம்ஹன் ச்லோகசப்தம் கீர்த்தியையும் சொல்லுமென்று சொன்னன். கீர்த்தியென்பது குணங்களைப்பற்றி வந்த புகழ். மற்றொரு பாடத்தில் 'ப்ராஹ—ஶீச ஹ்ருஶவிஸ்மிதாஃ' என்று கீழோடே சேர்க்கவேணும். இதற்கு-மஹர்ஷி சோகித்தபின்பு சொன்னதாகையால் அந்தச் சோகமுள்ளே யடங்காமல் ச்லோகமாக வெளிவந்ததென்று நாம் நினைக்கிறோமென்று சிஷ்யர்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டனரென்று பொருள்.

### ஸ்ரீராமாயண விஷய ஸங்க்ரஹம்.

[1] தர்மத்தில் மனஞ்சென்ற வால்மீகிமாமுனிவர் தர்மம் நிறைந்த ராமசரித்ரம் முழுமையும் நாரதரிடங் கேட்டு, சிறந்த மதியுடைய அந்த ராமனுடைய வ்ருத்தாந்தங்களும் அதுக்கு மேலும் யாதொன்றுண்டு, அதையும் நன்கறியும்பொருட்டு ஆலோசனை செய்தனர். அவ்வால்மீகிமாமுனிவர் தர்மத்தில் மனஞ்சென்றவராகையால் நன்கு ஆசமநஞ் செய்து கிழக்குநுனியாகப் பரப்பின தர்ப்பத்தின்மீது எழுந்தருளியிருந்து தன் குருவாகிய நாரதருக்கு நமஸ்காரஞ்செய்து நான்முகன் கொடுத்த வரமாகிற தர்மத்தினால் ராமன் முதலானருடைய விருத்தாந்தங்களையெல்லாம் ஆராய்ந்தனர். லக்ஷ்மணன், ஸீதை, தசரத சக்ரவர்த்தி, அவனது பத்நிகளாகிய கௌஸல்யை ஸுமித்ரை கைகேயி இவர்கள் நாட்டார் முதலானவர்களது வ்ருத்தாந்தங்களையெல்லாம் உள்ளபடி நன்றாகக் கண்டறிந்தனர். மேலும் ராகவன்முதலானோர் சிரித்ததும் மொழிந்ததும் நடந்ததும் மற்றும் செய்த செயல்களும் யாவையாவையுண்டு, அவையெல்லாவற்றையும் நான்முகன் அருளிய வரத்தின் மகிமையால் உள்ளபடி நன்கறிந்தனர். இப்படி ராமன் நகரத்திலிருந்தபோதுள்ள சரித்ரங்களையறிந்ததுமாத்ரமேயன்றி அவன் ஸத்யத்தில் நிலைநின்று தகப்பன்வார்த்தையை நிறைவேற்றும்பொருட்டு ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் காடுகாடாகத் திரிந்த

1 கீழ் ஸர்க்கத்தில் வக்தாவின் வைலக்ஷண்யஞ் சொல்லப்பட்டது. இதில் விஷயத்தின்வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறார். விஷயம் விலக்ஷணமாகையாவது - நல்லறிவுடன் கேட்டு மறவாமல் ஊன்றப்பட்டிருக்கையும் உயர்ந்த குணமுடைய நாயகனைப் பற்றியிருக்கையும். அதில் முதலிலே நன்றாகக் கேட்டமையும் அதிலூற்றமுஞ் சொல்லப்படுகின்றன.

பொழுது கேரிட்டவை யாவையாவையுண்டு, அவற்றையும் அவர் நன்றாகக் கண்டறிந்தனர். தர்மத்திற்சென்ற மனமுடைய அவ்வால்மீகிமாமுனிவர் ப்ரஹ்மதேவனிடம் வரம் பெற்று ராமன் முதலானோருடைய முன் நடந்த வ்ருத்தாந்தங்களையும் மேல் நடக்கப்போகிறவற்றையும் கனவிற் காண்பதுபோலன்றியே கையிலங்கு நெல்லிக்கனிபோல நன்றாகக் கண்டறிந்தனர். இவ்வாறு ராமனுடைய கல்யாண குணங்களை மனத்திற்கொண்டு மநநஞ்செய்து மிகவு மொளிபெற்ற அம்மாமுனிவர் எல்லாவற்றையும் உள்ளபடி கண்டறிந்து உலகங்களை யெல்லாந் தன்னழகில் துவளும்படி செய்யவல்ல ஸ்ரீராமபிரானுடைய சரித்ரத்தைச் செய்யத் தொடங்கினர். இங்ஙனந் தொடங்கின மகிமை பொருந்திய வால்மீகிமாமுனிவர் காமம் அர்த்தம் என்கிற இவ்விரண்டு புருஷார்த்தங்களை அப்ரதாநமாகத் தோற்றுவிப்பதும் தர்மம் மோக்ஷம் என்னுமிவ்விரண்டு புருஷார்த்தங்களை ப்ரதாநமாக எடுத்துரைப்பதும் ரத்நங்கள் நிறைந்த கடல் போன்றதும் சப்தங்களினழகால் எல்லோருடைய செவிக்குமினிமையைக் கொடுப்பதும் பொருளினினிமையால் அனைவருடைய மனத்தையும் கவரவல்லதுமான, ரகுவம்சத்திற் பிறந்த ஸ்ரீராமனுடைய சரித்ரத்தை நாரதமஹர்ஷி தமக்குச் சொன்னபடி முதலிற் சுருக்கமாகச் செய்து முடித்தனர். பின்பு தசரத சக்ரவர்த்தி பதினாயிரமாண்டுகள் பிள்ளைப்பேறில்லாமல் தவஞ்செய்ய, அத்தவத்துக்குப் பலமாக விஷ்ணு தானாக வந்தவதரித்த ஸ்ரீராமனுடைய அவதாரமும், தாடகைமுதலானோரைக் கொன்ற அவன் வீரத்தன்மையும், அவன் யாவர்க்கும் அநுகூலனாயிருக்கு மிருப்பும், அவன் உலகத்துக்கெல்லாம் ப்ரியனா யிருப்பதும், அவனுடைய பொறுமையும், அழகும், அவன் ஸத்யத்தவறா

திருப்பதும், ராமனும் லக்ஷ்மணனும் விச்வாமித்ரமா ஹரிஷியுடன் கலந்துபோகையில் நடந்த அற்புதமான பல விதக்கதைகளும், ஸீதை ஊர்மிளை முதலியவர்களுடைய விவாஹமும், சிவனுடைய வில்லை முறித்ததும், ராம னுக்கும் பரசுராமனுக்கும் நடந்த விவாதமும், ராம னுடைய குணங்களும், அவனுடைய பட்டாபிஷேகத் தொடக்கமும், கைகேயி மனப்பொல்லாங்கும், அத்தால் பட்டாபிஷேகந் தடைப்பட்டதும், ராமனைக காட்டுக்குப் போக்கினதும், தசரதசக்ரவர்த்தி சோகித்துப் புலம் பினதும், அவன் பரலோகஞ் சென்றதும், ஜனங்கள் வருந்தினதும், ராமன் அவர்களை வஞ்சித்துவிட்டுப் போனதும், வேடனாகிய குஹனோடு கலந்து மொழிந்த தும், ஸுமந்த்ரனென்னும் ஸாரதி ராமனிடமிருந்து திரும்பிவந்ததும், கங்கையைத் தாண்டினதும், பரத்வா ஜமஹர்ஷியைக் கண்டதும், பரத்வாஜரிஷியின் அநுமதி யால் சித்ரகூடபர்வதத்தைப் பார்த்ததும், அங்குப் பர் ணசாலை கட்டிக்கொண்டிருந்ததும், பரதன் வந்ததும், ராமனை ராஜ்யாபிஷேகங் கொண்டருள வேணுமென்று பரதன் வேண்டினதும், தகப்பனாகிய தசரதசக்ரவர்த் திக்கு ராமன் தர்ப்பணஞ் செய்ததும், பெருமைபொருந் திய ராமனது பாதுகைகளுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய் வித்ததும், பரதன் நந்திக்ராமத்திற் குடியிருந்ததும், ராமன் தண்டகாரண்யஞ் சென்றதும, விராதனைக் கொன்றதும், சரபங்கமஹர்ஷியைக் கண்டதும், ஸுதீ க்ஷ்ணரோடு ஸந்தித்ததும், [1]ஸீதை அநஸூயையோடு கலந்திருந்ததும், அநஸூயை ஸீதைக்குச் சந்தநங்

1 இந்த ஸர்க்கத்தில் ராமாயணத்தின் விஷயங்களைச் சொல்லுவ தில் தாத்பர்யமேயன்றிக் கதையின் க்ரமத்தில் தாத்பர்யமில்லை. ஆன து பற்றியே (அகஸ்த்யரைக்கண்டதும்) என்று மேலிற்சொல்லி, (அநஸூ யையோடு கலந்திருந்ததும், அநஸூயை ஸீதைக்குச் சந்தநங்கொடுத் ததும்) என்று முன்னமே சொல்லப்பட்டது. இங்ஙனம் மேலிற் சில விடங்களிலும் கண்டுகொள்வது.

கொடுத்ததும், அகஸ்த்யரைக்கண்டதும், ஜடாயுவோடு சேர்ந்ததும, பஞ்சவடிக்குப் போனதும், சூர்ப்பணகையைப் பார்த்ததும், சூர்ப்பணகையோடு வாதாடினதும், அவளை விரூபையாக்கினதும், கரன் தூஷணன் த்ரிசிரன் என்னும் அரக்கர்களைக்கொன்றதும, ராவணன் கோபங்கொண்டு ஸீதையைக் கொண்டு போவதாகக் கிளம்பினந்ததும், மாரீசனை முடித்ததும், ஸீதையையெடுத்துக் கொண்டு போனதும், ராமன் ஸீதையைக் காணமற் புலம்பினதும், ராவணன் ஜடாயுவைக் கொன்றதும், ராமன் கபந்தனைக்கண்டதும், பம்பையைப் பார்த்ததும், சபரியைக் கண்ணுற்றதும், ஹநுமானோடு சேர்ந்ததும், ருச்யமூகபர்வதம்போனதும், அங்கு ஸுக்ரீவனோடு கலந்ததும், அவனுக்கு நம்பிக்கையைப் பிறப்பித்ததும், ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் நடந்தஸ்நேஹமும், சுக்ரீவன் வாலிக்கும் தனக்கு முண்டான வைரத்தை ராமனிடத்திற் சொன்னதும், அவர்களது யுத்தமும், ராமன் வாலியை வதஞ்செய்ததும், ஸுக்ரீவனுக்குக் கிஷ்கிந்தாராஜ்யங் கொடுத்ததும், தாரை புலம்பினதும், சரத்காலம் பிறந்தவுடனே ஸீதையைத் தேடவேண்டுமென்று ராமனும் ஸுக்ரீவனும் ஸங்கேதம் பண்ணிக்கொண்டதும், மழைக்காலத்தில் இரவுபகலெல்லாம் ராமன் ருச்யமூகத்தில் ஸீதையைப் பிரிந்து வஸித்திருந்ததும், ரகுவம்சத்திற் பிறந்து ஸிம்ஹம்போன்ற ஸ்ரீராமன் ஸுக்ரீவன்மீது கோபித்துக் கொண்டதும், வாநரப்படையைச்சேர்த்ததும், அப்படைகளைத் திக்குகளிற் புறப்படச்செய்ததும், வாநரர்களுக்கு அந்தந்தப்பூமிநிலையைத் தெரிவித்ததும், ராமன் ஹநுமானிடம் மோதிரங்கொடுத்தனுப்பினதும், ஜாம்பவான் ஸ்வயம்ப்ரபையின் குகையைக் கண்டதும், வாநரர்கள் ஸீதையைக்காணாது

பற்றி ப்ராயோபவேசஞ் செய்யத்தொடங்கினதும், ஸம்பாதியைக்கண்டதும், ஹநுமான் கடலைத் தாண்டும பொருட்டு மலயபர்வதத்தின்மீதேறினதும், கடலைக் கடந்ததும், ஸமுத்ரராஜன் வார்த்தையைக் கேட்டு மேலெழுந்த மைநாகபர்வதத்தைக் கண்டதும், ஸிம்ஹிகையைக் கொன்றதும், லங்கையிலுள்ள [1]மலயமென்கிற ஓர் மலையைக் கண்டதும், ஹநுமான் இரவில் லங்கையில் நுழைந்ததும், பின்பு அவன் அங்குத் தனியேயிருந்து சிந்தித்ததும, ராவணனைக் கண்டதும், புஷ்பக விமாநத்தைப் பார்த்ததும், பர்னசாலைக்குள் போனதும், அந்தப்புரத்தைப் பார்த்ததும், அசோகவநத்திற் சென்றதும், அங்கு சீதையைக்கண்டதும், அவளுக்கு ராமனது அடையாளமான கணையாழியைக் கொடுத்ததும், அங்கு ராவணனைக் கண்டதும், ராக்ஷஸப் பெண்கள்ஸீதையைப்பயப்படுத்தினதும், த்ரிஜடையென்பவள் ஸ்வப்நங்கண்டதும்,ஹநுமானுக்கு ஸீதை சூடாமணியைக் கொடுத்ததும், அசோகவநத்திலுள்ள வ்ருக்ஷங்களை ஹநுமான் முறித்ததும்,அதைக்கண்டு ராக்ஷஸிகள் பயந்தோடினதும்,ஹநுமான் ராவணனனுப்பின படர்களைக் கொன்றதும், இந்த்ரஜித்தால் ஹநுமான் கட்டப்பட்டதும், ஹநுமான் லங்கையைக் கொளுத்தி ராக்ஷஸிகளை யழச்செய்ததும், திரும்பி ஸமுத்ரத்தைத் தாண்டினதும், மதுவநத்தை யழித்ததும், ராமனுக்குத் தேறுதல் சொன்னதும், ஸீதை கொடுத்த சூடாமணியை ராமனிடங் கொடுத்ததும், ஸமுத்ரராஜனோடு ஸந்தித்ததும், நளனைகொண்டு கடலில் அணை கட்டினதும், ஸமுத்திரத்தைத் தாண்டினதும், ராத்ரியில் லங்காப்பட்டணத்தைத் தகைந்து சூழ்ந்ததும்,

1 இம்மலயம் லஙகைக்கு ஆதாரமான மலையினோர்பாகம், கடலைச்கடக்கும்பொழுது ஹநுமான் ஏறிய மலயம் வேறு. 'மலயஃ பர்வதாந்தரே। பர்வதாம்ஸே' என்று நிகண்டுவிற் சொல்லப்பட்டது.

விபீஷணனோடு சேர்ந்ததும், அவன் இந்த்ராஜித்து முத லானோரைக் கொல்ல உபாயஞ்சொன்னதும், கும்பகர்ண னைக் கொன்றதும், மேகநாதனை முடித்ததும், ராவ ணனை வதஞ் செய்ததும், அந்தச் சத்ருபட்டணத்தில் ஸீதையைப் பெற்றதும், விபீஷணனுக்கு லங்கையில் ராஜ்யாபிஷேகஞ் செய்ததும், புஷ்பகவிமானத்தைக் கண்டதும், அயோத்யைக்குச் சேர்ந்ததும், பரதனோடு கலந்ததும், ராமாபிஷேகமஹோத்ஸவமும், அப்பட்டா பிஷேகமஹோத்ஸவத்திற்காக வந்த ஸைன்யங்களை யெல்லாம் திருப்பியனுப்பினதும் (ராமன் ராஜ்யத்தி லுள்ள ப்ரஜைகளை ஸந்தோஷிக்கச்செய்ததும், ஸீதை யைக் காட்டிற் கொண்டுபோய் விட்டதும்) இந்த ப்ர பந்தத்தில் அடங்கச்செய்தனர். மிகுந்த மகிமைபொ ருந்திய அவ்வால்மீகிமாமுனிவர் ராமனது வரப்போகிற சரித்திரம் [1]யாது சிறிதுண்டு, அதையும் உத்தரகாண் டத்திற் சொல்லி முடித்தனர். மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

குசலவர்கள் ராமாயணத்தைக் கானஞ் செய்தது.

[2] நான்முகனிடம் வரம்பெற்று எல்லாமறியவல்ல மிகுந்த ஞானமமைந்த வால்மீகிமுனிவர் ராமன் ராஜ னாகி உலகமாண்டு வருங்காலத்தில் அவனுடைய சரித் ரம் முழுதும் அற்புதமான பதங்களும் அலங்காரங்க ளும் ரஸங்களும் நிறைந்த ஓர் ப்ரபந்தமாகச் செய்த னர். அதில் இருபத்துநாலாயிரம் ச்லோகங்களும்

---

1 (யாது சிறிதுண்டு) என்கையால் ஸீதையைக் காட்டில் விடு வதற்கு முன் காலம் அதிக மென்றும் பிற்காலம் சிறிதென்றுந் தோற்றுமென்பர் சிலர். இதை உத்தரகாண்டத்தில் நன்காராய்ந் துரைக்கக்காண்க.

2 கீழ் ஸர்க்கத்தில் விஷயத்தின் வைலக்ஷண்யஞ் சொல்லப் பட்டது. இந்த ப்ரபந்தத்தின் வைலக்ஷண்யஞ் சொல்லப்படுகிறது.

ஐந்நூறு ஸர்க்கங்களும் ஆறு காண்டங்களும் ஏழாவதாக உத்தரகாண்டமும் மொழிந்தனர். சிறந்த மதியுடைய அவ்வால்மீகிமாமுனிவர் ராமாயணமென்னும் அந்த மஹாகாவ்யத்தை ராமபட்டாபிஷேகத்துக்குப் பின்பும் ராமன் அச்வமேதஞ் செய்தபின்பும் ஸீதை பூமியில் மறைந்ததற்குப் பின்பும் வரப்போகிற சரித்திரமனைத்து மடங்கியதாகச் செய்து முடித்து 'இதைப் பாடவல்லனெவனோ' என்று சிந்தித்துக்கொண்டிருந்தார். இங்ஙனம் இதற்குத் தக்கவன் நேரிட வேணுமே' யென்று சிந்தித்துக் கடவுளிடம் மனஞ் செலுத்தியிருக்கையில் காநத்திற் பயிற்சி பெற்று முநிவேஷம் பூண்ட குசலவர்கள் அம்மாமுநியின் திருவடிகளைப் பணிந்து 'நாங்கள் இதைக் கற்கவல்லோம்' என்று தொடர்ந்தனர். அவ்விருவரும் குருசுச்ரூஷையென்னுந் தர்மத்தை நன்றாக உணர்ந்தவர்; ராஜகுமாரர்கள்; ஒன்று செய்யத்தொடங்கினால் அது முடியும் வரையில் அதைத் தவிராது தொடர்ந்து நடத்துந்தன்மையுள்ளவர்கள்;கல்வியில் மிகவுங்கீர்த்திபெற்றவர்கள். இருவரும் உடன் பிறந்தவராகையால் அவரது கண்டம ஒன்றோடொன்றொத்து மதுரமான சாரீரம் பொருந்தியிருக்கும். மேலும் அவ்வாச்ரமத்தில் வஸிப்பவர்களாகையால் அவ்வால்மீகியின ப்ரீதிக்குப் பாத்ரமாயிருப்பவர்கள். ஆகையால் அவர்களை அவ்வால்மீகிமாமுனி

ப்ரபந்தத்திற்கு வைலக்ஷண்யமாவது—மிகவுமாப்தனுயிருப்பவனுற் செய்யப்பட்டிருக்கையும், புண்யபுருஷனைப்பற்றி யிருக்கையும், பெரியோர்கள் ஆதரிததிருக்கையும், ப்ரபந்தநாயகனுற் புகழப்பட்டிருக்கையும் இது முதலானவை. (அவனுடைய சரித்ரம்) என்கையால் புண்யபுருஷனைப்பற்றியிருக்கையும், (வால்மீகிமாமுனிவர்......செய்தனர்) எனகையால் மிகவுமாப்தனுற் செய்யப்பட்டமையுந் தோற்றம்.

வர் கண்டு 'இதை யிவர்களுக்கு உபதேசிக்கத்தகும்' என்று [1] மனத்திற் கொண்டனர். வல்லராகிய வால்மீகிமாமுனிவர் மறப்பின்றி நிலை நின்ற மதி பெற்று, அங்கமாறுடன் மறையெல்லாமோதி அதில் தேர்ந்திருக்கிற அக்குசலவர்களைக் கண்டு மறையினுட்கருத்தனைத்தும் வெளியிடவல்ல ராமாயணமென்கிறதமது ப்ரபந்தத்தைப் பாடுவிக்கும்பொருட்டு அவர்களை யங்கீகரித்தனர். ஸாந்தபநமென்றும் பராகமென்றும் சாந்த்ராயண மென்றும் பற்பல வ்ரதங்களைச் செய்து மாசற்று விளங்கும் மதியுடைய வால்மீகியானவர் சில விடங்களில் ராமசரித்தத்தை மொழிவதும், மற்றை முழுதிலும் [2] ஸீதையின் விருத்தாந்தத்தையே யுரைப்பதும் ராவணஸம்ஹாரமே இதில் முக்யமாகையால் 'ராவணவதம்' என்றே வழங்கிவரவற்றுமாகிய ராமாயணமென்கிற யாதொரு காவ்யத்

---

1 இதனால் ராமன் அபிஷேகங்கொண்டு ராஜ்யபரிபாலநஞ் செய்துகொண்டிருக்கையில் நிறைவேற்றின இக்காவ்யத்தை உபதேசம் பெறத்தக்க சிஷ்யர்களில்லாமையால் எதிர்பார்த்துக்கொண்டிருக்கையில் பின்பு சிலநாள் கழித்துக் குசலவர்கள் பிறந்ததாகத் தோற்றுகின்றது. இதையறிந்தே ராமன் வால்மீகியினாச்ரமத்திற் சீதையை விட்டதாகத் தெரிய வருகின்றது.

2 இதில் முக்யமாக ஸீதையின் வ்ருத்தாந்தமே சொல்லப்படும். ராமசரிதம் முக்யமன்று. இங்கு ஓர் பழமொழியுமுண்டு-'ப்ராதர்த்யூத ப்ரஸங்கேந மத்யாஹ்நே ஸ்த்ரீப்ரஸங்கதஃ। ராத்ரௌ சோரப்ரஸங்கேந காலோ கச்சதி தீமதாம்' என்ற. இங்கு ஸ்த்ரீபரஸங்கமாவது ராமாயணபாராயணம். ஸீதையின் சரித்ரத்தைக் கூறுவதைப்பற்றி யிங்ஙனஞ் சொல்லுகிறது. அன்றியே தன்புகழ்ச்சியில் மனஞ்செல்லாதிருக்குந் தன்மையனான தீரோதாத்தனாகச் சொல்லப்பட்ட ராமன் இதைக் குசலவர்கள் பாடச் சபையிலிருந்து கேட்டது சேராது. ஸீதையின் வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறதாயின் போரச் சேரும். நாயகியைப் பிரிந்திருப்பவன் அவளது கதையைக் கேட்டுப்பொழுது

தைச் செய்திருந்தனர், அதை அவ்விருவர்க்கு முபதே சித்தனர். அச்சிறுவர்களும் அவரிடம் உபதேசம் பெற்று, படிக்கிலும் பாடிலும் இனியதாகி [1] மூன்றளவுகளும் [2] ஏழு ஸ்வரங்களும் அமைந்து வீணையிற் சங்கீதத்துடன் பாடப்பொருந்திச்ருங்காரம் கருணம் ஹாஸ்யம் வீரம் பயாநகம் [3] ரௌத்ரம் முதலிய ரஸங்களைப் பொழிவதான ராமாயணமென்னும் இக்காவ்யத்தைப் பாடத் தொடங்கினர். அவவிருவரும் ஸங்கீதத்தின் நுட்பமெல்லாம் அறிநதவர்கள்; வீணை முதலிய வாத்யங்களில் தேர்ந்தவர்கள்; மெதுவாகவும் நடுத்தரமாகவும் உரக்கவும் உச்சரிக்கவேண்டிய இடங்கள் மூன்றும் நன்கு யுணர்ந்தவர்கள்; உடன் பிறந்தமையால் ஒக்கப் பாட வமைந்த குரலுடையவர்கள்; இனிதான சாரீ

---

போக்குவது எகரும்பரந்த விஷயமே. ஆகையால் ராமன் ராவணனைக் கொன்றானென்று மேலெழக் காட்டி ஸீதையின் சரித்ரத்தையே முழுவது முட்கருத்தாக வைத்து இப்ரபந்தத்தை வால்மீகி செய்தாரென்கிறது.

1 இங்கு மூன்றளவுகளாவன—பாட்டின்ஜெலியை விடுதநுக் காட்டுகிற, த்ர்யச்ரம் என்றும் சதுரச்ரம் என்றும் மிச்ரம் என்றும் பேர் பெற்றவையாவது, த்ருதம் என்றும் மத்யம் என்றும் விலம்பிதமென்றுஞ் சொல்லப்படுகிறவையாவது.

2 ஏழுஸ்வரங்களாவன—ஷட்ஜமென்றும் மத்யமமென்றும் காந்தாரமென்றும் நிஷாதமென்றும் ருஷபமென்றும் தைவதமென்றும் பஞ்சமமென்றுஞ் சொல்லப்படும் ஏழுஸ்வரங்கள்.

3 (ரௌத்ரம் முதலிய) என்கையால் பீபத்ஸம் அற்புதம் சாந்தம் எனகிற மற்றை மூன்று ரஸங்களும்இதிலுண்டென்கிறது. இதில் ராவணவதம் முக்யமாகையாலே வீரரஸம் முக்யமென்று சிலர் கூறுவர். ஸீதையின் சரித்ரமே முக்யமென்கையாலும் அந்த ராவணனைக் கொன்றது ஸீதையைப் பெறுவதற்காகையாலும் ச்ருங்காரமே முக்ய ரஸமென்று சிலர் சொல்லுவர்.



59. ஸ்ரீராமனது ஸபையில் குசலவர்கள் ராமாயண காநஞ்செய்தல்.

ரம் அமைந்தவர்கள்; மானிடவேஷம் பூண்ட கந்தர்வர் போலிருப்பவர்கள்; பாடும்பொழுது பாட்டுக்கிணங்க அபிநயிக்கும்படி நாடகலக்ஷண மறிந்தவர்கள்; இயற்கையாகவே இனியகுரலுடன் பேசவல்லவர்கள்; ராமனுடைய வடிவமாகிற பிம்பத்தினின்று கடைந்தெடுக்கப் பட்ட ப்ரதிபிம்பம்போல் மிகவும் அழகு பொருந்திக்கம்பீரத்தன்மையுள்ள வடிவங் கொண்டவர்கள். இங்ஙனங்குணங்கள் அமைந்துராஜபுத்ரர்களாயிருந்தும் முனிவேஷம் பூண்ட அக்குசலவர்களிருவரும் தர்மத்தினின்றும் தவறாது மேன்மை பொருந்திய அக்காவ்யம் முழுமையும் ஏட்டுப்புறம் பாராமல் வாயாற் சொல்லும்படி முனிவரிடங் கேட்டபடியே மனத்தில் நிறுத்திக்கொண்டு மாசற்று விளங்கினர். சிறந்த மதியும் மிகுந்த பாக்யமும் அமைந்துலக்ஷணங்கள் பொருந்திய அக்குசலவர்கள் இங்ஙனம் கற்றறிந்த ரிஷிகளும் அந்தணர்களும் நிறைந்தஸபைகளிற் சென்று பாடங்களிற் பிசகின்றித்தாங்கள் உபதேசம் பெற்றபடி ஒன்றும் மறவாமல் அக்காவ்யத்தைப் பாடிக்கொண்டிருந்தனர். பினபொருகால் ராமன் செய்த அச்வமேதயாகத்திற் சேர்ந்து ஹோமம் முடிந்து உட்கார்ந்திருக்கும் மதிநேர்ந்த மஹர்ஷிகளின் அருகிற் சென்று அக்குசலவர்கள் இக்காவ்யத்தைப் பாடினர். அதைக் கேட்ட முனிவர் யாவரும் கண்ணுங் கண்ணீருமாகி மிக்க ஆச்சரியங் கொண்டு 'நல்லது நல்லது' என்று அவ்விருவரையும் புகழ்ந்தனர். அம்முனிவர் அனைவரும் தர்மத்தில் மிகவும் அன்பு கூர்ந்தமையால் பொறுமையற்றிருக்குந் தன்மையர்; ஆகையால் அக்குசலவர்கள் யாவரும் புகழும்படி பாடுவதைக் கேட்டு மிகவுங் களிப்புற்றுப் 'பாட்டினினிமை அற்புதமாயிருக்கின்றது;

ச்லோகங்களினிமையோ மிகவுமற்புதமா யிருக்கின்றது. இது வெகுநாளுக்கு முன் நடந்தவற்றையும் இப்போ ழுது எதிரில் நடப்பதுபோற் காட்டுகின்றது' என்றிங்ஙனங் கொண்டாடினர். அவ்விருவரும் கவியின் கருத்து யாவர்க்குந் தெளிய வெளியாகும்படி நன்குபுட்புகுந்து தாளத்தையொத்து ஷட்ஜம் முதலிய ஸ்வரங்களும் ராகங்களும் அமைந்து இனிதா யிருக்கும்படி பாடினா' ரென்று முனிவரெல்லோரும் புகழ்ந்தனர். புகழத் தக்க தவம் பொருந்தினவர்களும், பொறுமையின் றிச் சிறந்த அறிவுடைய முனிவர்களால் அங்ஙனங் கொண்டாடப் பெற்றவர்களுமான குசலவர்கள் மிகவும் ஒழுங்கான ராகங்களோடு மிகுந்த இனிப்புடன் மேன் மேலெனப் பாடினர். அதைக்கேட்டு மிகவும்களித்த ஓர் முனிவர் எழுந்திருந்து கலசத்தை அவர்க ளுக்கு வெகுமதியாகக் கொடுத்தனர். ஸங்கீதத்தில் கீர்த்திபெற்ற மற்றொருவர் மனக்களிப்புற்று மரவுரியை யீந்தனர். மற்றொருவர் க்ருஷ்ணாஜிநத்தையும், மற் றொருவர் மௌஞ்சியையும், மற்றொருவர் கமண்டலு வையும், மற்றொருவர் யஜ்ஞோபவீதத்தையும், மற்றொ ருவர் அத்திப்பலகையாற் செய்யப்பட்ட தமது ஆஸநத் தையும், மற்றொருவர் ஜபமாலையையும் தந்தனர். [1]மற் றுஞ்சில மஹர்ஷிகள் மிகவும் மனக்களிப்புற்று' வெகுகா லம் வாழ்ந்திருக்க' என்று ஆசீர்வாதஞ் செய்தனர். இவ்வாறு முனிவர் புகழ்ந்தமையன்றியே ஜநங்களனை வரும் பார்த்து 'வால்மீகியாற் செய்யப்பட்டு இதிஹாஸ மென்று பேர்பெற்றுக் காவ்யஞ்செய்ய விருப்பமுள்ளகவி களுக்கெல்லாம் மூலாதாரமாயிருக்கும் இக்காவ்யமா னது ஆரம்பித்தவளவிலே முடிந்தது; ஸங்கீதமனைத்து

1 இதனாற் பெரியோர்களாதரித்தமை தோற்றும்.

மறிந்தவர்களே ! வாழ்நாளை வளரச்செய்து புஷ்டியை யுங் கொடுக்கவல்லதாகி ச்ருதிகளெல்லாம் அமைந்து யாவர் செவிக்கு மினியதாயிருக்கும் இக்காவ்யத்தை நீங்கள் நன்ருகப் பாடினீர்கள்' என்றிங்ஙனம் யாக சாலையிலும் தெருக்களிலும ராஜமார்க்கங்களிலும் புகழ்ந்தனர். இப்படி விளங்கிவரும் பாட்டில் தேர்ந்த அக்குசலவர்களை ராமன் ஒருகால் பரதன் காட்டக் கண்டனன். பகைவரை நீறுசெய்யவல்ல அந்த ராமனும் உடன்பிறந்தவராகையால் ஒரே வயதும் ஒரே வடிவமும் கொண்டு அற்புதமான கல்வியின் சிறப்பினுற் பூசிக்கத் தக்க அக்குசலவர்களைத் தன் மாளிகைக்கு வரவழைத்துப் பூசனை செய்தனன். [1] மேலும், உலகங்களுக்கெல்லாந் தனியாளாகி அச்வமேதயாகத்தில்தீக்ஷைகொண்டிருக்கிற ராமன்ஸுவர்ணமயமான ஓர்திவ்யஸிம்ஹாஸநத்தில் மந்த்ரிகளும் தம்பிமார்களுந் தன்னைச் சூழ உட்கார்ந்து அழகுபொருந்திய அக்குசலவர்களிருவரையுங் கண்டு லக்ஷ்மணனையும் பரதனையும் சத்ருக்னனையும் நோக்கி தேவதைகளைப்போல் விளங்குகின்ற இவர்கள் பாடும் அற்புதமான பொருள்களும் பதங்களும்நிறைநத இவ்விதிஹாஸத்தைக் கேளுங்கள்' என்று சொல்லிப் பாடுபவர்களாகிய அவ்விருவரையும் பாடும் பொருட்டுக் கட்டளையிட்டனன் அவர்களும் இனிய ராகத்துடன கலந்து புகழத்தக்க நீண்ட ஆலாபநங்களுடன் தந்தியிலேறிட்டு லயமமையும்படி மிக்க பொருள் தெளிவுடன் பாடினர்.செவிக்கினிய அப்பாட்டானது ஜநங்கள்நிறைந்த அச்சபையில் எல்லோருடைய உடலையும் மயிர்க்கூச்செறியச்செய்து மனத்தையும் அம்மனத்துக்கிருப்பிட

---

1 இனி இதை ப்ரபந்தநாயகன் புகழ்ந்தமை சொல்லப்படுகின்றது.

மான ஹ்ருதயத்தையும் மிகவும் ஆநந்திக்கச்செய்து விளங்கிற்று. அப்பொழுது ராமன் அச்சபையிலுள்ளவர்களைப் பார்த்து 'இவர்கள் முநிவேஷம் பூண்டிருந்தும் ராஜலக்ஷணங்களெல்லாம் அமைந்திருக்கின்றனர்; பாடுபவர்களாயிருந்தும் மிகத் தவம்பொருந்தி விளங்குகின்றனர்; இச்சரித்ரமும் ஸீதையைப்பற்றி யிருப்பதால் மிகவும் பெருமைபொருந்தியது; ஆகையால் எனக்கும் இது நன்மையை விளைவிப்பதாயிருக்கும்; இதைக்கேளுங்கள்' என்றிவ்வாறு மொழிந்தனன். பின்பு ராமனது வாயால் ஏவப்பட்ட அசுகுசலவர்களிருவரும் மார்க்கமென்கிற ராகத்தின் ஆலாபநவழியைக்கொண்டு ராமாயணத்தைப் பாடினர். அப்பொழுது ராமனும் அதில் மனமூன்றி அருகிலிருந்து கேட்டநுபவிக்க விரும்பியும் ஸீதையின் கதையாகையால் அதைக்கேட்டுத்தரிக்கலாமென்று ஆதரங்கொண்டும் [1] மெல்ல மெல்ல ஸபையின் நடுவே வந்தனன். நான்காவது ஸர்க்கம்முற்றிற்று

---

1 (மெல்ல மெல்ல)என்கையாலே ஸிம்ஹாஸநத்தினின்று எழுந்திராமலே நகர்ந்து வந்தானென்று கருத்து. எழுந்திருக்குமாயின யாவரும் என்னவோவென்று எழுந்திருப்பார். அப்பெழுது ரஸபங்கம்வரும். அதைபற்றி யாவரு மறியாமல் மெல்ல நகர்ந்து வந்தானென்கிறது, அல்லது 'ஏகஸ்ஸ்வாது ந பும்ஜீத' 'என்று மதுரமானவஸ்துவை ஒருவனுகப் புசிக்கலாகாதென்கையால் பல ஜநங்கள் நிறைந்த ஸபையிலிருந்தானுயினும் ஸிம்ஹாஸநத்தில் தான் தனியே வீற்றிருந்தானுகையால் தன்னைத் தனியனுக நினைத்து ஸபையின்நடுவில் ஜநங்களோடு கலந்து அம்மதுரமான கதையைக்கேட்டநுபவிக்க விரும்பினுனென்று கருத்து.

## ஆயோத்யாபுர வர்ணநம்.

[1] செல்வம் நிறைந்த இப்பூமியனைத்தும் மற்றையனை வர்க்குமரிதாகி மநுப்ரஜாபதி முதலாக வந்த யாதொரு

1. இந்த ஸர்க்கத்தில்தான் ராமாயணகதைக்காரம்பம். இதற்குக்கீழுள்ள ஸர்க்கங்கள் உபோத்காதமென்று சொல்லப்படுகின்றன; உபோத்காதமாவது ப்ரபந்தத்தைப் பெரியோர்கள் அங்கீகரிக்கும் பொருட்டு, அதில் சொல்லப்படும் விஷயத்தையும் அதற்கு ப்ரயோஜநத்தையும், அதற்கு அதிகாரிகள் இன்னாரென்பதையுஞ் சொல்லுகை. ராமாயணஞ் செய்தபின்பு நடந்த கதையைக் குறிக்கும் இந்த ஸர்க்கங்கள் ராமாயணத்துக்கு முன்னே யிருப்பது எப்படியெனில்—இது மேலே நடக்கப்போகிற வ்ருத்தாந்தமாயினும் த்ரிகாலத்தையும் அறிந்த வால்மீகிமஹர்ஷி முன்பாகவே இதைச் செய்து ப்ரபந்தத்திற் சேர்த்து வைத்தாரென்று கண்டுகொள்வது; ஆயினும் ஆத்மப்ரசமஸையில் வந்து முடிகிற இம்மூன்று ஸர்க்கங்களையும் எப்படி ரிஷி தாமே செய்யக்கூடுமென்றால்—பார்க்கிறவர்களுக்கு இப்ரபந்தத்தில் மனஞ்செல்லும்பொருட்டு ஒருவர்க்குந் தெரியாத இந்த வ்ருத்தாந்தத்தை முதலிற் சொல்லவேண்டியது அவிச்யமாகையால் இது கூடும். அல்லது—இம்மூன்று ஸர்க்கங்களையும் இந்த வால்மீகிமஹர்ஷியின் சிஷ்யர்களில் ஒருவர் ராமாயணம் முடிந்தவுடன் இதன் வைபவத்தைத் தெரியச்செய்யும் பொருட்டுப் பண்ணிச் சேர்த்தாரென்று கண்டுகொள்வது. ஆனால் இம்மூன்று ஸர்க்கங்களும் ராமாயணத்துக்கு முதலாயிருக்குமாயின் இதைக் குசலவர்கள் ராமனிடஞ் சென்று முதலிற் பாடத்தொடங்கும்பொழுதே அவர்களை ராமன் தன்புத்ரர்களென்று அறிந்திருக்கக்கூடும். அறிந்தானாயின் அப்பொழுதே ஸீதையை அழைத்துக் கொண்டு வரவேண்டிவரும். ஆகையால் இது சேராதென்றால்—அது இல்லை; ஸீதையின் குமாரர்களென்று இங்குச் சொல்லாமையால் தன்புத்ரர்களென்று எங்ஙனே நிச்சயிக்கக்கூடும். ராமஸாத்ருச்யஞ் சொன்னாலும் அது மற்றை ராஜபுத்ரர்களுக்கு மிருக்கக்கூடுமாகையால் இங்ஙனம் நிச்சயிக்கப்போகாது. ஆகையால் இம்மூன்று ஸர்க்கங்களும் ராமாயணத்துக்கு முதலென்பதில் யாதொரு குற்றமுமில்லை.

வம்சத்திற் பிறந்த ஜயசீலர்களான அரசர்கட்கே உரிய தாயிருந்ததோ; யாதொரு வம்சத்திற்றோன்றியஸகரசக்ரவர்த்தியென்பவன் தனது பேரோங்கும்படி ஸாகரமென்று எங்கும் விளங்கிய கடலைத் தோண்டுவித்தும், தான் போர்புரியப் போகும்போது அறுபதினாயிரம் மக்கள்களால் இரண்டு பக்கத்திலும் சூழப்பட்டிருந்தும்மிகவும் கியாதிபெற்றனனோ; அப்படிப்பட்ட இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்து மஹாமகிமை பொருந்திய அரசர்களில் தலைவனாகிய ஸ்ரீராமபிரானைப்பற்றி ராமாயணமென்று எங்கும் விளங்கிப் பெருமை பொருந்திய இவ்விதிஹாஸமானது நான்முகக்கடவுளின் நற்கருத்தினால் இவ்வுலகிற் பிறந்தது. நான் நிமித்தமாயிருந்து இதை வெளியிடப் போகின்றேன். ஆகையால் நான்மொழிந்ததென்று இகழாமல் நான்முகக்கடவுளால் அருளப்பட்டதென்று நன்கு பக்தியுடன் தர்மார்த்த காமங்களைத்தரவல்ல இவ்விதிஹாஸத்தை ராமாவதாரம் முதலாக ஒரு குறையுமின்றி முழுதும் கேட்பீர்களாக.

ஸரயூநதியினது இருகரையும் பரந்து தனதான்யங்கள் நிறைந்து எப்பொழுதும் களிப்புற்று அளவற்றஜனங்களமைந்து மிகவும் விசாலமான கோஸலமென்று ஓர் தேசமுண்டு. அதில் அயோத்யையென்று எங்கும் புகழ்கொண்ட நகரமொன்றுண்டு. அது முன்பு மானிடர்க்கரசான மநுப்ரஜாபதியின் மனத்தினாற் படைக்கப்பட்டது. மேலும் அம்மாநகரம் பன்னிரண்டுயோஜனைதூரம் நீண்டு மூன்று யோஜனைதூரம் பரந்து மிகவுமொளி பொருந்தி விளங்கி நிற்கும். அதில் பல விடங்களுக்குப்போகும் வழியனைத்தும் நிழல் பரந்த மரங்கள் இரண்டு பக்கத்திலும் அமைக்கப்பட்டு நன்றாகப் பிரிந்திருக்கும். மூலை முடுக்கின்றி விசாலமாகி நீண்டு தனித்

தனியேபிறிக்து தினந்தோறும் தண்ணீர்தெளித்துமலர் தூவப்பெற்று விளங்கும். அம்மஹாதேசத்தை நீதிவழு வாமல் பாதுகாத்துவரும் தசரதசக்ரவர்த்தி அவ்வயோத்திமாநகரில் தேவேந்திரன் ஸ்வர்க்கத்தில் வஸிப்பது போல் வாஸஞ் செய்துகொண்டிருந்தனன். அந்நகரத்தில் கோட்டைவாசல்களெல்லாம் உயரமும் அழகும்வலிமையுமுள்ளகதவுகளமைந்திருக்கும். கடைகளும், இடையில்பரந்துபண்டங்கள் நிறைந்துநன்றாக அமைந்திருக்கும். உலகத்திலுள்ள ஸகல யந்த்ரங்களும் ஸமஸ்தமான ஆயுதங்களும் அங்குக் காணப்படும். அதில் அந்தந்த வேலைகளில் கைதேர்ந்த பல சிற்பிகளும வஸித்திருப்பர். அரசர்களைத் துதிசெய்யும் வந்திஜநங்களும அவர்களை விடியற்காலத்தில் எழுப்புகிற மாகதஜநங்களும் நிறைந்திருப்பர். தந தாந்யங்களால் குறைவற்ற அப்பட்டணத்தினழகு மேலோங்கி யிருக்கும். அதில் ஒவ்வொரு பொருளும் ஒப்பில்லாமல் ஒளிபெற்றிருக்கும். அங்கு மேல்மெத்தைகளும் அதின்மேலுள்ள த்வஜங்களும் ஆகாயத்தை யளாவியிருக்கும். மதிட்சுவர்க் கட்டடங்களில பீரங்கிகள் கணக்கின்றி யமைத்திருக்கும். அங்குப்பெண்களுக்கு நாட்டியங் கற்பிக்கவல்ல நட்டுவர்கூட்டம் எங்கும் சூழ்ந்திருக்கும். மாமரங்களுடனே மற்றுமுள்ள மரங்களும் பூங்கொடிகளும் நிறைந்து விளங்குந்தோட்டங்கள் பலவும் அங்குண்டு. உயர்ந்த மதிட்சுவர்களும், அகன்று ஆழ்ந்த அகழிகளும் அமைந்திருப்பதால் அந்நகரம் யாவருமணுகவொண்ணாதிருக்கும். பின்னும் அதில் மேலானகுதிரைகளும் உயர்ந்த யானைகளும் கொழுத்த எருதுகளும் ஒட்டகங்களும்கோவேறு கழுதைகளும் நிறைந்திருக்கும். கப்பங்கட்ட வந்திருக்கும்பக்கத்துதேசத்தரசர்களும், வெளிதேசத்திலின்று

வந்த பலவகைவர்த்தகர்களும் நிறைந்து விளங்குவது மன்றி, பலவித ரத்நங்களால் இழைக்கப்பட்ட அரசர் மாளிகைகளாலும், அத்தன்மையதாக விநோதத்தின் பொருட்டுச்செய்வித்த அழகானமலைகளாலும், ஆகாயத்தையளாவின மாளிகைகளின் மேற்கட்டடங்களாலும் செவ்விபெற்றுத் தேவேந்திரனது அமராவதிபோல் விளங்கும். மேலும் அது ராஜக்ருஹங்கள் பலவும் நின்றந்து பார்க்க விசித்ரமாகிச் சொக்கட்டான் பலகைபோல் காணப்படும். அழகானபெண்களநேகரங்குண்டு. அந்நகரம் பலவிதமான ரத்நங்கள் நிறைந்திருக்கும். பின்னும், அது ஏழுநிக்குமாளிகைகள் பலவுஞ்சூழ்ந்து அழகாயிருக்கும். குடும்பிகள் வஸிக்கும் வீடுகள் பலவும் நெருங்கி எங்கும் வெளியின்றி மிகவுமொழுங்காயிருக்கும். மேடுபள்ளமில்லாமல்சரியான பூமியில் அப்பட்டணம் அமைந்திருக்கும். அங்கு சம்பா முதலிய மேலான அரிசிகள் அளவற்றிருக்கும். ஜலம கருமபுரஸம்போல் மதுரமாயிருக்கும். பேரிவாத்யங்களும்மததளங்களும் வீணைகளும் உடுக்கைகளும் மற்றுமுள்ள வாதயங்கள் பலவும் முழங்கப்பெற்று மஹோத்சவமாயிருக்கும். இபபடி அப்பட்டணம் பூமியிலெங்கும ஈடினறி ஸித்தாகள் தவஞ்செய்து பெற்றவைகளும் ஆகாயத்தில் பறக்கின்றவைகளுமான விமானங்கள்போல் நான்கு பக்கத்திலும் நன்றாக அமைக்கப்பட்ட வீடுகள் நிறைந்து மிகவு மழகாயிருக்கும். மானிடரில் சிறந்த வித்வான்கள் பலரும் அங்குண்டு. அப்பட்டணத்தில் அஸ்த்ரவித்யையில் தேர்ச்சியடைந்த மஹாரதிகர்கள் பலருண்டு. அவர்கள் மிகுந்தஸாமர்த்யம உள்ளவர்களாயினும் ஸஹாயமின்றித் தனியாயிருப்பவர்களையும், தமக்குப் பெரியோர்களான தாய் தகப்பன் முதலானோரும் பின்புள்ள பிள்ளை முதலானோருமின்றி வம்சத்துக்கெல்லாம் தாமேயாயிருப்பவர்களை

யும், காதிற் படுஞ் சபதத்தைக்கொண்டு நேரிற் காணாமல் அடிக்க வேண்டியவற்றையும், எதிரில் நில்லாமல் ஓடிப் போகிறவர்களையும் பாணங்களாலுமடியார்கள். மேலும் அவர்கள் தமது தேசத்துவனங்களில் கொழுத்துக் கர்ஜனை செய்யும் ஸிம்ஹங்களையும், புலிகளையும், பன்றிகளையும் மனோபலத்துடனும் தேஹபலத்துடனும் கூர்மையான ஆயுதங்களால் அடிக்க வல்லவர்கள். இப்படி வீரர்களேயன்றி, ஔபாஸகஞ் செய்பவர்களும் நற்குணங்களெல்லா மமைந்தவர்களும் வேதவேதாங்கங்களின் கரையறிந்தவர்களும் ஆயிரமாயிரமாய்க் கொடுப்பவர்களும்ஸத்யத்தில் நிலைநின்றவர்களும் கேவல ரிஷிகளும் வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளோடொத்தவர்களும் மிகுந்தமகிமை யுள்ளவர்களுமாகிய ப்ராஹ்மணோத்தமர்களும் அங்கு விளங்குவர். இப்படிப்பட்ட லக்ஷணங்களமைந்துவிளங்கும் அவ்வயோத்திமாநகரைத் தசரத சக்ரவர்த்தி கைப்பற்றியாண்டு வந்தனன். ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதனையும் அவனது ப்ரஜைகளையும் வர்ணித்தல்.

அவ்வயோத்யா பட்டணத்தில் வாஸஞ் செய்யுந் தசரதனென்னும் அம்மன்னன் மிகுந்த பராக்ரமத்துடன் உலகத்தை யாண்டு வந்த வைவஸ்வதமநுவைபோலவே தானும் உலகத்தைப் பரிபாலித்து வந்தனன். அம்மன்னன் வேதப்பொருளனைத்துமறிந்தவன்; அன்றியே யெல்லா மறிந்தவன்; பணம் முதலியவைகளால் வீரர்களையும் வித்வான்களையும் வளையவைத்துக்கொண்டு போதுபோக்குந் தன்மையன்; வெகுநாளைக்குமேல் வருபவையெல்லாவற்றையுங் கண்டறியுந் திறமுடையவன்; யாவரும் அஞ்சும்படியான பராக்ரமமுடையவன். நாடு நகரங்களிலுள்ளவரனைவரும் அவனுக்கு ப்ரியராயிருப்

பர் அவனும் அவர்க்கு ப்ரியனாயிருப்பான. இக்ஷ்வாகு வம்சத்திற்பிறந்த அரசர்களில் இவன் மிகுந்த அதிரதனென்று பேர்பூண்டவன்; சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி பல யாகங்கள் செய்பவன்; தர்மத்தி லூற்றமுள்ளவன்; யாவரையுந் தனவசமாக்க வல்லவன்; தான ராஜரிஷியாயினும் மஹர்ஷி போன்றவன; மூவுலகங்களிலும் புகழ் பெற்றவன்; மிகுந்த சதுரங்க பலமுடையவன்; பகைவரையெல்லாம் பறந்தோடச் செய்பவன; தன குணங்களைக் கண்டு ஸந்தோஷித்து வநத நண்பாகள் பலரையு முடையவன; துாவிஷயஙகளில் மனஞ் செலுத்தாமலஜிதேந்த்ரியனு யிருபபவன்;பொன் மணி முத்து ஆடை யாபரணம முதலியவைகளால் மஹேந்திரனேடொத்தவன்; நிதிகளில் குபேரனைப போன்றவன. இங்ஙனங் குணம பொருநதி ஸத்யத்தில் மனஞ் சென்று தர்மார்த்த காமங்களை அடைவே அநுஸரித்த அம்மன்னவனுல் பரிபாலிக்கப்பட்டு இவவுலகில் மிகவும் மேன்மை பெற்ற அவ்வயோத்திமா நகர் இநதிரனுண்டுவரும் அமராவதிபோல் விளங்கிற்று. இவ்வாறு அம்மன்னவன் ஆண்டுவருங்காலத்தில், அந்நகரததிலுள்ளவர் யாவரும் ஸுகமாக வஸிந்திருக்க நேர்ந்து மிகவுங் களிப்புற்று வேறு சிநதையின்றித் தர்மத்தில் மனஞ்சென்று பலபெரியோரிடத்திலும பலநெறிகளுங்கேட்டு மனத்தேர்ச்சியடைநது தந்தம் பொருள்களைக்கொண்டு த்ருப்திபெற்று லோபமின்றித் தானங்களைச்செய்து உண்மையையுரைத்துவிளங்கி வநதனர்.நகரங்களிற் சிறந்த அந்நகரத்தில்பொருளற்பமுள்ளவனொருவனைக் காணவரிது. அப்படியே மாடு குதிரை தநதாக்யங்களில்லாமல் தர்மார்த்த காமங்கள் ஒன்றிலும் நிறைவின்றி யிருக்கு குடும்பி ஒருவனும்

காணவகப்படான். மேலும் கேவலம் காம மயக்க முள்ளவனும். மனைவி பிள்ளை தாய் தந்தை அண்ணன் தம்பிமுதலியவர்களையும் தன்னையும் போஷியாதலோபி யும், கொடுஞ்செயல் செய்பவனும், அந்நகரில் எங்குங் காணப்படான். கல்விப்பயிற்சி யில்லாதவனையும், தெய் வமில்லை யென்று நாஸ்திகவாதஞ் செய்பவனையும் அங் குக் காணமுடியாது. அதில் ஸ்த்ரீ புருஷர்கள் யாவரும் நல்லியற்கையோடும் நல்லொழுக்கத்தோடும் பிறந்து மஹர்ஷிகள்போல் மாசடையாமனததராக் தர்மஞ்செய் வதே கடத்தையாயிருபபார். அன்றியே காதிற்குண்டல மின்றியும் தலையிற்கிரீடமின்றியுங்கழுத்திற்பூமாலையின் றியுமிருப்பவன் ஒருவனும் அங்கில்லை. அற்பபோகமுள்ள வனும், எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ்செய்யாதவனும், சந்தநம் பூசாதவனும், குங்குமங் கஸ்தூரி முதலிய வாஸ னையணியாதவனும் இல்லை. அந்நமில்லாமையால் வயிறுஙா வுண்ணாதவனும், அந்நதாநஞ் செய்யாதவனும், தோள் வளை பூணாதவனும், மார்பில் ஹாரமணியாதவனும், கையிலாபரணமில்லாதவனும், மனத்தை வெல்லாதவ னுங் அகப்படான். இடைவிடாமல் அக்நிஹோத்ரஞ் செய்யாதவனும், யாகஞ்செய்யாதவனும், கல்வியும் ஐச் வர்யமும் அற்பமுள்ளவனும், திருட்டுத்தன முடையவனும், வர்ணஸங்கரஞ் செய்பவனும், அவ்வயோத்யையில் ஒரு வனு முண்டாகவில்லை. அந்நகரத்தில் அந்தணர் யா வரும் சாஸ்த்ரங்களிற் சொல்லிய தந்தமது கர்மங்களில் நிலை நின்று இந்த்ரிய ஜயம்பெற்றுக் கல்விதாநஞ்செய்து கொண்டு ஜபதபங்கள் தவிருமலும் தாநம் வாங்குவதில் மனஞ் செல்லாமலும் தந்தமுடைய தாரங்களில் த்ருப் தியுடன் வாழ்ந்திருந்தனர். இப்படி அந்தப்பட்டணத்தி லன்றியே அந்நாடு முழுவதிலும் நாஸ்திகனும், பொய்ய

னும், பற்பல சாஸ்த்ரங்களை யறியாதவனும் பொறுமையுள்ள வனும், இஹபரங்களைச் சாதிக்கச் சக்தியற்றவனும், கல்வியில் தேர்ச்சியில்லாதவனுங் காணப்படான். அன்றியும் வியாகரணம் முதலிய வேதாங்கங்கள் ஆறுமறியாதவனும், சாந்த்ராயணம் முதலியவ்ரதங்களைத் தவிர்ப்பவனும், பொன் முதலியவைகளைக் கணக்கின்றிக் கொடாதவனும், ஏதாவதொன்றி விளைத்தவனும், மனக்கலக்கமுள்ளவனும், வியாதி முதலியவைகளால் பீடிக்கப்பட்டவனும், ஒருவனுயினும் கிடைப்பதரிது. புருஷர்களிலும், ஸ்த்ரீகளிலும எவராயினுமொருவர் காந்தியின்றியும் அழகின்றியும் ராஜபக்தியின்றியு மிருப்பவராகப் புலப்படுவது மிகவு மரிதாயிருக்கும். ப்ராஹ்மணர் முதலிய நான்கு வர்ணத்திலுள்ளவர் யாவரும் தேவதைகளையும் அதிதிகளையும பூசித்துப் பிறர் செய்த உபகாரத்தில் சிறிதும் மறப்பின்றி ஸமயத்திலுபகரித்து மிகவும் தானசீலர்களும் சூரர்களுமாகிப பராக்ரமம் பொருந்தி யிருப்பர்கள். அப்பட்டணத்திலுள்ள மானிடர் யாவரும தர்மத்தையும் ஸத்யத்தையுந் தவிருமல் மிகவும் ஆயுள் வளரப்பெற்றுப் பிள்ளை பேரன்களோடும் பெண்டிர்களோடும் கூடி ஸுகமாயிருந்தனர். க்ஷத்ரியர்கள் ப்ராஹ்மணர்களைத் தமக்கு முக்யமாக வரித்து அவர்களாணைப்படி சரியாக நடந்து வந்தனர். வைச்யர் க்ஷத்ரியர்களை யநுஸரித்திருந்தனர். சூத்ரர்கள தந்தமது தர்மத்தைத் தவிருமல் மற்றை மூன்று வர்ணத்தவர்களுக்கும் ஸேவை செய்துகொண்டிருந்தனர். மானவர்க்கு மஹேந்த்ரனபோல மிகுந்த மதியுள்ள மநுப்ரஜாபதி முன்பு எபபடி யாண்டுவந்தனனே அப்படியே இக்ஷ்வாகு வம்சத்திற்குத் தலைவனாகிய அத்தசரத சக்ரவர்த்தியால் ஆளப்பட்ட அந்நகரம் இவ்விதமான ஸகலஸெளபாக்யங்களும் நிறைந்து

விளங்கி வந்தது. அஸ்த்ரவித்யை யெல்லா மறிந்து பிறர் அவமதித்தால் பொறுக்க முடியாத பராக்ரமம் பெற்று நல்லொழுக்கத்துடன்கூடி சௌர்யத்தின் மிகுதியால் நெருப்புபோல் நெருங்கக்கூடாத படைவீரர்களால் நிறைந்த அந்நகரம் சிங்கங்கள் சூழ்ந்த குகை போல் விளங்கிற்று. கம்போஜ தேசத்தில் பிறந்தவைகளும் பாஹ்லீகதேசத்தில் பிறந்தவைகளும் உச்சைச்ரவமெனகிற இந்திரன் குதிரையோடொத்தவைகளுமான சிறந்த குதிரைகள் அந்நகரத்திற் குணக்கற்றிருக்கும். மதம் பிடித்து விந்த்யமலையிற் பிறந்தவைகளும், அப்படியே மதத்துடன்கூடி ஹிமாலய மலையிலுண்டானவைகளும், ஐராவதம் மஹாபத்மம் அஞ்ஜநம வாமநம் என்கிற திக்கஜங்களின் குலத்திற் பிறந்தவைகளுமாகிமஹாபலம் பொருந்திப்பர்வதத்தோடொத்து விளங்கும யானைகளால் அந்நகரம் நிறைந்திருக்கும். மேலும் [1] பத்ரம் மந்த்ரம் மிருகம் என்கிற மூன்றுஜாதியிற பிறந்த யானைகளும், பத்ர மந்த்ர மிருகம் பத்ரமந்த்ரம் பத்ரம்ருகம் மிருக மந்த்ரம் என்கிற ஸங்கீர்ண ஜாதியிற் பிறந்த யானைகளும் எப்பொழுதும் மதித்துப் பெரிய மலைகள் நடப்பதுபோல் அங்கு என்றும் உலாவிக்கொண்டிருக்கும். இப்படி சதுரங்க பலமுள்ள அந்நகரம் தனக்குள் யாதொரு சத்ருவும் நுழையக்கூடாதபடி யிருக்கையன்றியே, தனக்கு வெளியிலும் இரண்டுயோஜனை தூரம்யாவருமணுகவொண்ணாதபடி

1 பத்ரம் மந்தரம் மிருகம் என்று யானை ஜாதிகள் மூன்று. 'ஹஂரோ மந்ஂரோ ம்ருஂஶ் சேதி விஜ்ஞேயாஸ் த்ரிவியா ஂஜாঃ' என்று ஹலாயுதநிகண்டுவிற் சொல்லப்பட்டது. அப்படியே பத்ரமந்த்ரம் பத்ரம்ருகம் ம்ருகமந்த்ரம் என்று இரண்டு ஸ்வபாவமும் பொருந்திய ஸங்க்ரஜாதிகள் மூன்று. பத்ரமந்த்ரம்ருகம் என்று மூன்று ஸ்வ

அயோத்யையென்று பொருள் பொருந்திய பேருடன் விளங்கிவந்தது. யாதொரு நகரில் தசரதனென்று பேர் பெற்ற அம்மஹீபாலன் வஸித்து உலகையாண்டு வந்தனன்; அந்நகரம் இவ்வாறு விளங்குவது அற்புதமோ? அம்மஹாராஜன் தனது மிகுந்த பராக்ரமத்தினால் பகைவரையெல்லாம் பறக்கச்செய்து அந்நகரத்தைச் சந்திரன் நக்ஷத்ர மண்டலத்தை ஆள்வதுபோல் ஆண்டுவந்தனன். இங்ஙனம் யதார்த்தநாமங்கொண்டு உரபயானகோட்டைவாசலில் உழல் தடிகளும் அமைந்து அழகான வீடுகள் நிறைந்து விளங்கப்பெற்று அநேகமாயிரம் ஜநங்களால் சூழப்பட்டு மங்களமான அவ்வயோத்யாநகரத்தை இந்திரன் போன்ற அம்மஹீபதி பரிபாலித்துக்கொண்டுவந்தனன். ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## மந்த்ரி புரோஹிதாதி வர்ணநம்.

இக்ஷ்வாகுவம்சத்தில் உதித்து மிகுந்த மதியுள்ள அம்மஹாராஜனுக்கு மந்த்ரிகள் எட்டுப்பேருண்டு. அவர்கள் ராஜகார்யங்களை ஆலோசிப்பதில் மிகுந்த வல்லமையுள்ளவர்கள்; முகமலர்த்தி முதலியவைகளால் பிறருடைய கருத்தை நன்றாக அறியுந்திறமுடையவர்கள்; தமக்கு ப்ரியனாகிய அவ்வரசனுக்கு எப்பொழுதும் ஹிதங்களைச்செய்துகொண்டு மந்த்ரிகளுக்கு வேண்டிய

பாவமும் பொருந்திய ஸங்கரஜாதி யொனறு. இவைகளின லக்ஷணங்கள வைஜயந்திக்கணுவிற் சொல்லப்பட்டது—'அங்கப்ரத்யங்கஸஹிதம் ஸங்க்ஷிப்தம் ஹிரலக்ஷணம்| பர்யாப்தவம் ஸிவயதாஸ்யௌள்ல் ம ஸங்க்ஷிப்தம் மந்திரலக்ஷணம்|| தநுப்ரதயங்கஹிரவயஸிசப்ராயே மந்தமாகஷேணோ மதஃ|ஹிரயந்தரோ ஹிரப்ரேமோ ஹிரமந்ரஹிமாரேமாபிச|| ப்ரமந்திராஷயோப்யேவமிதிஸங்கர ஜாதயஃ என்று.

குணங்களெல்லாம் அமைந்திருப்பவர்கள். த்ருஷ்டி யென்றும், ஜயந்தனென்றும், ஜயனென்றும், ஸித்தார்த்தனென்றும், அர்த்தஸாதகனென்றும், அசோகனென்றும், மந்த்ரபாலனென்றும் அவர்கள் வழங்கப்பட்டு வருவார்கள். எட்டாவது மந்த்ரி ஸுமந்த்ரனென்பவன். அவ்வெண்மர்களும் பெரும்புகழ் பெற்று வல்லனாகிய அம்மன்னவனுக்கு எவ்விதத்திலும் த்ரோஹம் செய்யாமல் தூயமனத்தராகி ராஜகார்யங்களை விருப்பத்துடன் நிறைவேற்றிக்கொண்டிருந்தனர். அவ்வரசனுக்கு வஸிஷ்டரென்றும் வாமதேவரென்றும் இரண்டு மஹர்ஷிகள் புரோஹிதரில் தலைவராயிருந்தனர். அப்படியே ஜாபாலிமுதலிய 1மற்றுஞ் சிலர் மந்த்ரிகளாகவும் புரோஹிதர்களாகவு மிருந்துவந்தனர்.

இவர்கள் அனைவரும் கல்விகளெல்லாம் கற்றறிந்து வணக்கத்துடன் கூடி தகாச் செயல்களில் மிகவும் வெட்கித்திருப்பர்கள். மேலும், அவர்கள் எல்லாவற்றிலும் வல்லமையுள்ளவர்கள்; ஐம்புலன்களையும் வென்று அவைகளை இஷ்டப்படி செலுத்துந் திறமுடையவர்கள்; செல்வம் நிறைந்தவர்கள்; மிகுந்த மதியுடையவர்கள்; விசேஷமாக அரசர்களுக்கு வேண்டிய நீதிநெறியெல்லாம் நன்றாகக் கற்றறிந்தவர்கள்; யாவராலும் அசைக்க முடியாத பராக்ரமம் பெற்று விளங்குந் தன்மையர்; ராஜகார்யங்களையாலோசிக்குந் திறமையில் மிகவும்புகழ் பெற்றவர்கள்; அவைகளில் எப்பொழுதுஞ் சோர்வின்றி ஊக்கத்துடனிருப்பவர்கள்; சொன்னபடி தவறாமற்செய்

1 (மற்றுஞ்சிலா) 'ஸுயஜ்ஞோப்யத ஜாபாலிः காஸ்யபோப்யத கௌதம꞉| மார்கண்டேயஸ்து தீர்காயுஸ் ததா காத்யாயனோ முனி꞉|| ஏதைர் ப்ரஹ்மர்ஷிபிர் நித்யம்ருத்விஜஸ்தஸ்ய பௌர்வகா꞉' என்று கண்டுகொள்வது.

யுக்தன்மையர்; யாவரையும் வசப்படுத்தவல்ல தேஜஸ்
ஸும் பொறுமையும் அமைந்து புகழ்பெற்றவர்கள்; எப்
பொழுதும் புன்னகையோடு அழகாகப்பேசுகின்றவர்கள்.
அவர்கள் கோபத்தைப்பற்றியும் காமத்தைப்பற்றியும்
பொருளைப்பற்றியும் என்றும் பொய்ம்மொழி பேசார்.
தமது தேசத்திலும் பிறருடைய தேசத்திலும் நடந்த
வையனைத்திலும், அப்படியே தற்காலம் நடப்பவை
களிலும், அன்றியே நடக்கப்போகின்றவையனைத்திலும்
சாரர்கள்மூலமாக அவர்களறியாதது ஒன்றுமில்லை.
அவர்கள் வ்யவஹாரங்களெல்லாவற்றிலும் வல்லமையுள்
ளவர்கள்; ஸ்நேஹத்தில் நன்றாகப் பரீக்ஷிக்கப்பட்டு நிலை
நின்றவர்கள்; ஒருவன் அபராதஞ் செய்தால் அவன் தமது
புதல்வனேயாயினுந் தண்டிக்கவேண்டிய காலம் நேர்ந்த
போது அவனைத் தண்டிக்கத் தவிரார்; பொக்கசங்களில்
பணத்தை நிறைப்பதிலும், பணம் முதலியவைகளால்
சதுரங்க பலங்களை மேன்மேலென வருத்தி செய்வதிலும்
ஜாகரூகர்களாயிருப்பவர்கள். தமக்குப் பகைவனாயிருப்
பினுங் குற்றமின்றி யிருப்பவனை வருத்தப்படுத்தார்.
மேலும், அவர்கள் பகைவரை யொழிக்கவல்ல வீரர்கள்;
வெல்லுவரென்று தோன்றும்படி ஒழியாத உத்ஸாஹமு
டையவர்கள்; நீதிநெறி தவறாது நடக்குந்தன்மையர்;
தம்தேசத்தில் வஸிக்கும் நல்லொழுக்கமுள்ள ஸாது
ஜநங்களைப் பாதுகாப்பவர்கள். அவர்கள் அந்தணர்களை
யும் அரசர்களையும் அபராதமின்றி வருந்தச் செய்யாமல்
எவனாயினும் குற்றஞ் செய்தால் அதனேற்றக் குறைவு
களை நன்றாக ஆராய்ந்து தேசத்தையுங் காலத்தையும்
வயதையும் அநுஸரித்துத் தக்கபடி மெதுவாகவும்
கடினமாகவுந் தண்டித்துப் பொக்கசத்தை நிறைத்து
வந்தனர். அம்மந்திரிகள் அனைவரும் நல்லொழுக்கத்

துடன் ஒரே புத்திகொண்டு ராஜ்யதந்த்ரங்களை விசாரித்து நடத்திவருகையில் அப்பட்டணத்திலும், அன்றியே அத்தேசம் முழுதிலும் பொய்யுரைப்பவனும் துஷ்டனும் பரதாரங்களில் விருப்பங்கொள்பவனும் ஒருவனாவது எங்கும் உண்டாகவில்லை. அப்பட்டணமும் அத்தேசமனைத்தும். யாதொரு வருத்தமுமின்றி நிர்மலமாயிருந்தன. (அதிலுள்ள ஜநங்கள் யாவரும் அந்யாயத்திலும் அதர்மத்திலும் பயந்து அவ்வழியிலணுகாமல் நல்லொழுக்கத்துடன் நடந்துவந்தனர்.) பினனும், அம்மந்த்ரிகள் அனைவரும் வெளுத்த வஸ்த்ரங்களையுடுத்தி நன்றாக அலங்கரித்துக்கொண்டு நல்லியற்கையுடனிருப்பவர்கள்; தமதுமன்னவனுக்கு நன்மை செய்யும்பொருட்டு எப்பொழுதும் நீதிநெறியென்னுங்கண்கொண்டு விழித்திருப்பவர்கள்; குணகுணங்களை யறியும் வல்லமையமைந்தவர்கள்; குருவினிடத்திலும் மன்னவனிடத்திலும் பெருமை பெற்றவர்கள்; பெரியோரிடத்தில் தோஷத்தைப் பாராட்டாமல் குணத்தையே காணுந்தன்மையர். அம்மந்த்ரிகள் பராக்ரமத்தாற் புகழ்கொண்டு எல்லாவற்றையும் நிச்சயிக்கவல்ல தமது புத்திவிசேஷத்தினால் தமது தேசமென்பதின்றிப் பிறர்தேசத்திலும் மிகவும் மேன்மைபெற்று விளங்கிவந்தனர். அவர்களுக்கு ஸந்தி விக்ரஹம முதலியராஜோபாய தத்வங்கள் அனைத்துந்தெரியும். அவர்கள் இயற்கையாகவே செலவமமைந்தவர்கள்; (ஆகையால் பொருளாசையைப்பற்றி ஒன்றை ஒன்றாகச் செய்பவரல்லர்.) இவ்வளவேயன்றி அம்மந்த்ரிகள் ராஜகார்யங்களை யாலோசித்து வெளியிடாது ரஹஸ்யமாக மறைத்து நடத்த வல்லவர்கள்; ஸூக்ஷ்ம விஷயங்களை விசாரிப்பதிலும் மிகுந்த புத்தியின் தோற்றமுடையவர்கள்; நீதிவழி தவறாமல் ப்ரஜைகளைப்

பாதுகாக்கும் முறைகளெல்லாம் நன்றாக அறிந்தவர்கள். அம்மந்த்ரிகள் அவ்வரசனுக்கு நன்மைகளை இனிதாக உரைத்துக்கொண்டிருந்தனர்.

இப்படிப்பட்ட குணங்களையுடைய மந்த்ரிகளோடு கூடி ராஜாவாகிய தசரதன் வருந்தமொன்றுமின்றிச் சாரர்களால் ஸகல வ்ருத்தாந்தங்களையுந் தெரிந்து கொண்டு ப்ரஜைகளைத் தர்மத்தினால் களிப்பித்து அவர்களுடைய அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைச் செய்து பரிபாலித்து அதர்மத்தை நீக்கித் தன்குணங்களால் மூவுலகிலும் புகழ்பெற்றுத் தாநசீலனாகி ஸத்யந்தவறாமல் தரணிமுழுவது மாண்டுகொண்டு அந்நகரத்தில் வஸித்திருந்தனன். அவன் தனக்கு மேலாகியும் ஒப்பாகியுமுள்ளபகைவனொருவனையுங் காணவில்லை. ஏனெனில் அவன் மிகுந்த நண்பர்களுடையவன். பக்கத்து தேசத்தரசர்கள் யாவரும அவனது காற்கடையில் வணங்கி நிற்பார்கள். ஆகையால் அவன் பராக்ரமத்தைக் கண்டு பகைவர் அனைவரும் பறந்தோடி யுருமாய்ந்தனர். அத்தன்மையனாகிய அம்மன்னனுக்கு ஒப்பும் மேலும் உண்டாவதெங்ஙனே? ஆகையால் அவ்வரசன் ஸ்வர்க்கத்தைத் தேவேந்திரன் ஆள்வதுபோல உலகம் முழுது மாண்டுவந்தனன். இப்படி தன்கார்யங்களை யாலோசித்து தனக்கு நன்மை செய்வதில் ஊக்கமுற்றுத் தன்னிடம் அன்பு கூர்ந்து அறிவுடையோர்களும் வல்லவர்களுமாகிய அம்மந்த்ரிகளால் சூழப்பெற்று, தேஜோமயமான கிரணங்களோடு உதித்தஸூர்யன்போல அம்மஹீபாலன் ஒளிபெற்று விளங்கினன். ஏழாவது ஸர்க்கம முற்றிற்று.

---

தசரதன் புத்ரகாமேஷ்டி செய்ய முயன்றது.

இங்ஙனம் மஹிமை பொருந்தி, தர்மங்களெல்லா மறிந்து, ஆழ்ந்தமனமுடைய அம்மன்னவன் தனக்குப் புத்திரனுண்டாகவேண்டி வெகுநாளாகத் தவஞ்செய்து கொண்டிருப்பினும் வம்சத்தை வ்ருத்தி செய்யும் புதல் வனுண்டாகவில்லை. அதற்கு அம்மஹாமதியான மன் னவன் சிந்தித்துக்கொண்டிருக்கையில் 'பிள்ளைபிறக்கும் பொருட்டு யான் ஏன் அச்வமேதயாகஞ் செய்யலாகாது' என்னும் ஓரெண்ணமுண்டாயிற்று. அவ்வளவில் மிகுந்த மதியும் சிறந்த தர்மமுமமைந்த அம்மஹீபதி மிகவும் புத்திசாலிகளான தனது மந்த்ரிகள் அனைவருடன் கல ந்து ஆலோசித்து 'யாகஞ் செய்யவேண்டும்' என்று நன் ருக மனத்தில் நிச்சயித்துக்கொண்டு மந்த்ரிகளில் தலைவ ஞகிய ஸுமந்திரனைப் பார்த்து 'மந்த்ரீ! நீ போய் எனது குருக்களையும் புரோஹிதர்கள் யாவரையும் கடுக அழைத்துக்கொண்டு வருவாய்' என்று மொழிந்தனன். பின்பு ஸுமந்திரன் உடனே வேகமாகச் சென்று வேதத் தின் கரையறிந்த ஸுயஜ்வர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், புரோஹிதராகிய வஸிஷ்டர், மற்றுமுள்ள உயர்ந்த அந்தணர்கள் ஆகிய அவர்கள் அனைவரையும் கூட்டி அரசன்மாளிகைக்கு அழைத்துக்கொண்டு வந்த னன். தர்மஸ்வபாவனுகிய அத்தசரத மஹாராஜன் அப் பொழுது அவர்களெல்லோரையும் பூஜித்து அவர்களைப் பார்த்து, 'பெரியீர்காள்! பிள்ளை பெறவேண்டி எவ் வளவும் புலம்புகின்ற எனக்குயாதொரு ஸுகமுமில்லை. அதைப்பற்றி அச்வமேதயாகஞ் செய்யவேண்டுமென்று எனக்கு ஓரெண்ணமுண்டா யிருக்கின்றது. ஆகையால் யான்சாஸ்த்ரப்படி யாகஞ்செய்ய விருப்பங்கொண்டிருக் கின்றேன். யான் விரும்புகிற இந்த யாகத்தை எப்படி

செய்து பெறலாம்? இவ்விஷயத்தில் உபாயஞ் சொல்ல வேண்டும்' என்று தர்மமும் அர்த்தமும் நிறைந்து இனிதுமான இம்மொழியைக் கூறினன். பிறகு வஸிஷ்டர் முதலிய அந்தணர்கள் யாவரும் அரசன் தானே மொழிந்த அவ்வசனத்தைக் கேட்டு 'நல்லது நல்லது' என்று ஸந்தோஷித்துத் தசரதனைப் பார்த்து மிகுந்த களிப்புடன் 'யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சேர்ப்பாயாக. பூமியைச் சுற்றும்பொருட்டு யாகக்குதிரையை விடுவாயாக. பிள்ளை பெறவேண்டியதற்காக உனக்கு இந்தத் தர்மபுத்தியுண்டானபடியால் எவ்விதத்திலும் நீ வேண்டின புதல்வர்களைப் பெறுவாய்' என்று மொழிந்தனர்.

அரசனும் அவ்வந்தணர்மொழியைக்கேட்டு மகிழ்ச்சிகொண்டு அம்மகிழ்ச்சியால் கண்கள் மலர்ந்து மந்திரிகளைப் பார்த்து 'எனது குருக்கள் சொன்ன சொற்படி ஸகல ஸம்பாரங்களையும் சேர்ப்பீர்களாக. காக்கத் தக்கவர்களைக் காவல் வைத்து அத்வர்யுமுதலிய உபாத்யாயர்களுடன் அச்வத்தை விடுவீர்களாக. ஸரயூநதிக்கு வடகரையில் யாகசாலையை யேற்படுத்துவீர்களாக. க்ரமம் தவறாமல் சாஸ்த்ரப்படி சாந்திகளையும் அதிகமாக வளர்த்துவீர்களாக. எல்லாவற்றிலும் மேலான இந்த யாகத்தில் வருத்தத்தை விளைவிப்பதான அபசாரம் ஏதும் நேரிடாதபக்ஷத்தில் இந்த யாகத்தை எல்லா அரசர்களும் செய்வார்கள். இந்த யாகத்தின் ஸ்வரூபத்தை யுணர்ந்த ப்ரஹ்மராக்ஷஸர்கள் இதில் கெடுதி செய்ய அவஸரந் தேடிக்கொண்டிருப்பர்களன்றோ? ஏதேனுங் கெடுதி நேரிட்டு அந்த ப்ரஹ்மராக்ஷஸர் புகுந்து யாகத்தையழிப்பார்களாயின், உடனே யஜமானன் நசித்துப்போவான். ஆகையால் யாகத்தை நடத்துவதில் வல்லமையுள்ள நீங்கள் இந்தயாகம் சாஸ்த்

ரந்தவறாது முடியும்படி யத்நஞ் செய்யவேண்டும்' என்ற
னன். மந்திரிகளெல்லோரும் அம்மஹாராஜன் மொழிந்த
சொல்லைக் கேட்டு 'தேவன் ஆணையிட்டபடி செய்கின்
ரேம்' என்று சொல்லி அரசன அவ்வாறு நினைவிட்ட
தைப்பற்றி மிகவும் ஸந்தோஷித்தனர். அவ்வரசனுக்கு
ஆசீர்வாதம் முதலியவைகளால் மங்கலாபிவ்ருத்தியைச்
செய்யுந் தர்ம ஸ்வபாவர்களாகிய அவ்வந்தணர்கள் யாவ
ரும் 'அப்படியே செய்கிரேம்' என்று சொல்லி அநுமதி
பெற்றுக்கொண்டு அவரவர்கள வந்தவழியேசென்றனர்.
ராஜன் ப்ராஹ்மணர்களை வீட்டிற்கு அனுப்பி மந்திரிக
ளைப் பார்த்து 'ஓ மந்த்ரிகளே! புரோஹிதர்கள் சொல்லி
யபடி வேண்டிய ஸம்பாரங்களைச் சேர்த்து இந்த யாகத்
தைச் சாஸ்த்ரந் தவறாது நடத்தவேண்டும். இந்தக் கார்
யங்களில் நீங்கள் வல்லவர்கள்' என்று இவ்வாறுரைத்து
அருகிலிருந்த மந்திரிகளை யனுப்பிவிட்டு அந்தக்களிப்
பினுல் உடம்பெல்லாம் மேனியிட்டு விளங்கித் தனது மா
ளிகையைச் சேர்ந்தனன். அப்படி அவ்வரசன் சென்று
மனத்திற்கு மிகவும் இனியராகிய கௌஸல்யை முதலிய
தன் பத்நிகளைப் பார்த்து 'நான பிள்ளையைப் பெற
வேண்டி யாகஞ் செய்யப்போகின்றேன். நீங்கள் தீக்ஷை
கொள்ளவேண்டும்' எனறுரைத்தனன். அரசன் ஸந்
தோஷத்துடன் உரைத்த அழகான அவவார்த்தை
யைக் கேட்டு இயற்கையாகவே ஒளிபெற்ற முகமுடைய
அம்மாதரது முகமெல்லாம் வஸந்தகாலத்தில் மலர்ந்த
தாமரை மலர்போல் மிகவும் ஒளிபெற்று விளங்கி நின்
றன. எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ருசயச்ருங்க மஹர்ஷியின் சரித்திரம்.

அரசன புதல்வனுக்காக அச்வமேதஞ் செய்ய வேண்டு மென்று இங்ஙன முரைத்த வார்த்தையைக் கேட்டு ஸாரதியாகிய ஸுமந்திரன் அவ்வரசனைப் பார்த்து ஏகாந்தத்தில இவ்வாறு மொழிந்தனன் 'மஹாராஜனே! இவவச்வமேதஞ் செய்வதைப் பற்றி வஸிஷ்டர் முதலாகிய ருத்விக்குகள் உனக்கு உபதேசித்தார்களன்றோ? நான் இதை இதிஹாஸமாக முன்னமே கேட்டிருக்கின்றேன். மகிமைகளெல்லாமமைந்த ஸநத்குமாரர் உனக்குப் பிள்ளைபிறக்கும் விதத்தைக்குறித்துநடக்கும் விருத்தாந்தங்களை ரிஷிகளின முன்னிலையில் முன்னமே சொல்லியிருந்தனர். அதைச் சொல்லுகிறேன, கேட்பாயாக. காச்யபருக்கு விபண்டகரென்று பேர்பெற்ற ஓர் புத்திரர் உண்டு. அவருக்கு ருச்யச்ருங்கரென்று எங்கும் ப்ரஸித்திபெற்ற புதல்வர் உண்டாகபபோகிறார். அவர் காட்டிலேயே நித்யமாகவளர்ந்து இடைவீடின்றிப் பிதாவுக்குப் பணிவிடை செய்துகொண்டு முநியாகி அக்கானகத்திலேயே திரிந்துகொண்டிருபபார். ஆகையால் அவ்வந்தணர்தலைவர் வநந்தவிர மற்றைக் கிராமங்களையும் கிராமத்திலுள்ளவர்களையும் அறியாதிருப்பார். பெருந்தனமையுடைய அம்முநி இவ்வண்ணஞ் செய்துகொண் டிருக்கையில், ப்ரஹ்மசர்யத்திற்குப் பங்கம் வந்து இல்லறத்திற்கு வருவார். [1]ஆகையால அவருடைய ப்ராஹ்மசர்யம் இரண்டு வகைப்பட் டிருக்கும்.

---

1 அதாவது-மான்தோலை உடுத்திக்கொண்டு பலாசதண்டந்தரித்து மாதுகரஞ்செய்து குருவின் நியமநப்படியிருந்து வேதமோதுவதும், இல்லறம் புகுந்தபின்னும் ருதுகாலங்களில் மனைவியிடம் சேர்ந்து மற்றைக்காலங்களில் சேராதிருப்பதுமென்று ஸ்மிருதிகர்த்தர்களாகிய அந்தணர்களால் சொல்லப்பட்டு. உலகில் வழங்கிவரும் இரண்டுவகைப்பட்ட ப்ரஹ்மசர்யமும் அம்முநியிடத்தில் விளங்கி வருமென்றறிக.

அவன் அக்கிஹோத்ரஞ் செய்துகொண்டு மிகவும், கீர்த்திபெற்ற தனது பிதாவின் சுச்ரூஷையில் ஊக்கத்துடன் முதல் சொல்லப்பட்ட ப்ரஹ்மசர்யத்தில் இருக்கையில் சிலகாலம் செல்லும். அவ்வண்ணம் அவன் இருந்து வருங்காலத்தில் பராக்ரமம் பொருந்தி மஹாபலமுள்ளவ ரோமபாத னென்பவன் அங்கதேசத்துக்கரசனாகிப் புகழ்பெற்று விளங்கிவரப்போகின்றன். அம்மன்னவன் நீதி நெறி தவறுதலால் வெகு காலம் நிலை நின்று மிகவுந்தாருணமாகி அவனது ராஜ்யமெங்கும் பரந்து ஸகல பூதங்களுக்கும் மிக்க பயங்கரமாகிய மழையின்மையாலுண்டாகுங் கருப்பு நேரிடும். அப்படி கருப்புண்டாகையில் மன்னவனும் மிக்கவருத்தங்கொண்டு சாஸ்தரங்களெல்லாங் கேட்டுத் தேறின ப்ராஹ்மணர்களை வரவழைத்துப் 'பெரியீர்காள்! நீங்கள் தர்மங்களெல்லாங் கேட்டறிந்தவர்கள்; உலகத்திலுள்ள நடத்தைகளெல்லாம் நன்றாக உணர்ந்தவர்கள். ஆகையால் உங்களை வேண்டிக்கேட்கின்றேன. மழையின்மையாகிய இக்கருப்புக்கு மூலமான எனது பாபத்திற்குச் சாந்தியுண்டாகும்படி அதற்கு வேண்டிய நியமங்களை எப்படி அநுஷ்டிக்க வேண்டுமோ, அதை எனக்குத் தெரிவிக்கவேண்டும்' என்று வினவப்போகின்றனன். வேதங்களின் கரையைக் கண்டவர்களாகிய அவ்வந்தணர்களும் அம்மன்னனைப் பார்த்து 'ஓ ராஜனே! விபண்டக முனியின் பிள்ளையாகிய ருச்யச்ருங்க மாமுனியை எவ்விதத்திலாவது இங்கு வரச்செய்வாயாக. வரவழைத்து அம்முனியை நன்றாகப் பூஜித்து உனது கன்னிகையாகிய சாந்தையை விசாரமின்றி விதிப்படி விவாகஞ் செய்துகொடுப்பாயாக' என்று மொழியப்போகின்றனர். அரசனும் அவர்களது மொழியைக் கேட்டு ப்ரஹ்மசர்யந் தவறாதிருக்கும் அம்முனியை

இங்கு வரவழைக்கும் வழி யேதோ வென்று சிந்தித்து மிகுந்த மதியுடையவனகையால் மந்திரிகளுடன் கலந்து 'ப்ராஹ்மணனே ப்ராஹ்மணனை யறிவான்' என்று நிச்சயித்துப் புரோஹிதர்களையும் மந்திரிகளையும் ஸத்கரித்து அங்கிருந்து ருச்யச்ருங்கரை யழைத்துக்கொண்டுவரும்படி அனுப்பப்போகின்றனன. அவர்களும் மன்னவன் வார்த்தையைக் கேட்டு மனத்தில் வருத்தமுற்றுத் தலைவணங்கிக்கொண்டு 'ராஜனே! விபண்டக ரிஷிக்கு நாங்கள் பயப்படுகின்றேம். ஆகையால் நாங்கள் போகமுடியாது. ஆயினும் அம்முனிவரை வரவழைக்கும் உபாயங்களை விசாரித்துச் சொல்லுகிறேம்' என்று அரசனுக்கு நல் வார்த்தை சொல்லுவர்.

பின்பு அவர்கள் அம்முனிவரை அழைத்துக்கொண்டு வரத் தக்க உபாயங்களை ஆலோசித்து 'மன்னனே! நாங்கள் இவ்வுபாயத்தால் அவ்வந்தணரை வரவழைப்போம். இதனால் அவரது ப்ரஹ்மசர்யத்திற்கு யாதொரு தோஷமும் உண்டாகாது. விபண்டகரைப்பற்றியும் யாதொரு பயமும் நேரிடாது. இம்மழையின்மையாலுண்டான கருப்பினின்று பயமும் நீங்கிப்போகும்' என்று அவ்வரசனுக்குச் சொல்லப் போகின்றனர். இப்படிக்கு ஸநத்குமாரர் மொழிந்தனர். அப்படியே அங்கராஜனும தாஸிகளைக்கொண்டு அந்த ரிஷி குமாரராகிய ருச்யச்ருங்கரை வரவழைக்க, மேகமும் மழையைப் பொழிந்தது. சாந்தையை அம்முனிவர்க்கு விவாகஞ்செய்து தந்தனன். உமது மறுமகனுகிய அந்த ருச்யச்ருங்கமாமுனிவர் உமக்குப் பிள்ளைபிறக்கச் செய்யப்போகின்றூர். யான் சொன்னதிவ்வளவும் ஸநத்குமாரர் சொன்னகதை' என்று மந்திரியாகிய ஸுமந்திரன் சொல்ல, தசரதன் மிகவும் ஆநந்தங்கொண்டு அவனைப் பார்த்து 'மந்திரீ! ருச்யச்ருங்கரை யழைத்துவந்த விதமெல்லாம் ஸவிஸ்தர

மாகச் சொல்லவேண்டும்' என்று வினவினன். ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ வாரஸ்த்ரீகள் ருச்யச்ருங்க முனியை வஞ்சித்து அழைத்துக்கொண்டு வந்தது. }

இங்ஙனம் மன்னவனால் வினவப்பட்ட ஸுமந்திரன் இவ்வண்ணம் சொல்லத் தொடங்கினன். 'ஓ தரணியாளனே! மந்திரிகளைக்கொண்டு அவவங்கதேசததரசன் ருச்யச்ருங்கரென்னும் அவ்வைதிகரை அழைத்துக் கொண்டு வந்தவிதங்கேளும். அதையெல்லாம் ஸவிஸ்தரமாகச் சொல்லுகின்றேன். புரோஹிதர் மந்திரிகளுடன் கலந்து ரோமபாதனைப்பார்தது இவ்வாறுமொழிந்தனர். 'ராஜனே! நாங்கள் அந்த ருச்யச்ருங்ரை யழைத்துக் கொண்டுவர அபாயமின்றிய ஒருபாயம் ஆலோசித்திருக்கின்றனம். ருச்யச்ருங்கர் எப்பொழுதுங் காட்டிலேயே திரிந்துகொண்டிருப்பவர்; எப்பொழுதும் தவஞ்செய்வதும, வேதமோதுவதுமே தொழிலாயிருக்குந்தன்மையர். ஆகையால் புராணங்களையும் இதிஹாஸங்களையுங்கூட அவர் கேட்டறியார். ஸ்த்ரீகளென்றால் அவர்கள் யாவரென்று நேரிலாயினும் புராணாதிமூலமாயினும் அவர் அறியாதிருப்பவர்; விஷயஸுகங்களில் ஒன்றையுமுணர்ந்திலர். ரூபம் ரஸம் முதலிய இந்த்ரியவிஷயங்கள் யாவர்க்கும் மிக்க இனியவையாகி மனிதர்களின் மனத்தைக் கலங்கச்செய்து இழுக்கவல்லவையன்றோ? இவ்விஷயங்களைக் கொண்டு அவ்வண்ணம் இருக்கும அவ்வைதிகரை வசப்படுத்தி இந்தநகம்பட்டணத்திற்கு அழைத்துக் கொண்டு வரவேண்டும். நாங்கள் சொல்லும் இவவுபாயத்தை நீ சீக்கிரமாக ஆலோசித்து நிச்சயஞ்செய்து கொண்டு சொல்லவேண்டும். நல்லழகுபொருந்தி நன்றாக அலங்கரித்துக்கொண்டு காண்போர் மனத்தை மயக்க

வல்ல வேசிமாதரை அந்த ருச்யச்ருங்கரிடம் அனுப்ப வேண்டும். அவர்கள் அங்கே சென்று அவரிடம் ஸத்கா ரம்பெற்றுப் பலவிதமான உபாயங்களால் வஞ்சித்து, அவ ரைக் கூடவே அழைத்துக் கொண்டுவர வல்லவர்கள்' என்றனர். இங்ஙனம் புரோஹிதர் சொல்ல, அரசனும் 'அப்படியே ஆகட்டும்' என்று அநுமதி கொடுத்தனன். புரோஹிதரும் மந்திரிகளுக்கு அப்படியே செய்யும்படி உத்தரமளித்தனர். மந்திரிகளும் அப்பொழுது புரோஹி தர் சொன்னபடி மிகவும் அழகுள்ள தாஸிகளை நன்றாக அலங்கரிக்கச் செய்து ருச்யச்ருங்கரிடம் போய் அவரை வசப்படுத்தி அழைத்துக்கொண்டு வரும்படி யனுப்பினார். தாஸிகளில் தலைவிகளாகி அழகாலும் ஆடையாபரணங் களாலும் மேன்மை பெற்ற அம்மாதரும் மந்திரிகள் சொல்லைக் கேட்டு அப்படியே செய்வதாக ருச்யச்ருங்க ரிருக்கும் அம்மஹாவநத்திற்குள்ளே நுழைந்தனர். இப் படி அவ்வநத்திற்குள் நுழைந்து அவருடைய ஆச்ரமத் திற்கருகில் இருந்து அவரைக் காணத்தக்க ப்ரயத்நங் களைச் செய்யக் கலந்து ஆலோசித்தனர். ஏனெனில், அவர் ரிஷிகுமாரராகிக் கானகத்திலேயே திரிந்து கொண்டிருப்பவராகையால் நகரத்தாருடைய சந்தமறி யார். ஐம்புலன்களையும் அடியுடன் வென்றவராகையால் எளிதில் வசப்படுத்தக் கூடியவரல்லர்; மேலும் எப்பொ ழுதும் ஆச்ரமத்திலேயே யிருப்பவராகையால் போய்ப் பார்க்கவும் நேரிடாது. அப்படிப்பட்டவரைத் தகுந்தபடி பார்ப்பது துர்லபமாகையால் அதற்குத் தக்க யத்நங் களை அவர்கள் ஆலோசிக்கவேண்டி வந்தது. அவரோ என்றால் எப்பொழுதும் பிதாவுக்குச் சுச்ருஷை செய்து கொண்டு அதனால் மிகவும் த்ருப்தியடைந்து மற்றொன் றையும் வேண்டாமல் ஆச்ரமத்தை விட்டு வெளியிற்

புறப்படாமல் இருந்தனர். இவ்வளவேயன்றி அவர் பிறந்தது முதலாகத் தவத்தில் மிகவும் ஊக்கமுற்றிருப்பவராகையால் ஸ்த்ரீகளையாவது புருஷர்களையாவது பார்த்தவரன்று; நகரங்களிலாவது கிராமங்களிலாவது உண்டாகும பதார்த்தங்களில் யாதொன்றையும் கண்டறியார். இப்படியிருக்க, சிலநாள் கழிந்தபின்பு ஒருகால் அந்த விபண்டகமுநிகுமாரராகிய ருச்யச்ருங்கர் தைவாதீநமாக அந்தத் தாஸிகளிருக்குமிடத்தில் வந்து அம்மாதரசிகளைப் பார்த்தனர். அற்புதமான வேஷம்பூண்ட அம்மதிமுக மடந்தையர்யாவரும் இனிதான குரலுடன் காநஞ்செய்துகொண்டு அந்தரிஷிகுமாரருகில் வந்து 'ஓ அந்தணரே! நீர் யார்?. ஜநஙகளின்றிப் பயங்கரமான இக்கானகத்தில் ஏன் இருக்கின்றீர். மேலும் தனியாக இங்கே திரிவதேன்?. இதை நாங்கள் அறிய விரும்புகின்றோம். இதை எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்று வினவினர். மிகவும் ஆசைப்படவேண்டி அருமையான ரூபமுடைய அம்மாதரைப்போன்ற உருவங்களை அவர் அக்கானகத்திலெங்குங் கண்டதில்லையாகையால் அவர்களிடத்தில் அவருக்கு ஸ்நேஹம் பிறந்து தனது தகப்பன்பேர் முதலியவைகளை அவர்களுக்குத் தெரிவிக்கவேண்டுமென்கிற எண்ண முண்டாயிற்று. ஆகையால் அவர் அம்மாதர்களைப் பார்த்து எனக்கு விபண்டகமுனிவர் தகப்பனர் அவருக்கு நான ஔரஸகுமாரன். எனக்கு ருச்யச்ருங்கனென்றுபேர் இக்கானகமெங்கும் விளங்கும். அப்படியே நான் தவஞ்செய்வதும் இங்கு யாவரும் அறிவார். ஓ அழகிய காட்சியுடையீர்களே! இக்கானகத்தில் அருகில்தானே எங்களாச்ரமம் இருக்கின்றது. உங்களுக்கு யாவர்க்கும் விதியின்படி பூஜை செய்வேன்; வாருங்கள்' என்று மொழிந்தனர்.

பின்பு அந்த ரிஷிகுமாரர்வார்த்தையைக் கேட்டு அவர்கள் அனைவர்க்கும் அவரது ஆச்ரமத்தைக் காண வேணுமென்று புத்தி பிறந்து யாவரும் அவரோடுகூடி அங்கே சென்றனர். அவரும் அங்கு வநத அம்மாதரனை வர்க்கும அர்க்ய பாத்யங்களைக் கொடுத்துக்காய்கிழங்கு களைத தந்து பூசிக்க; அவர்களும் அந்தப்பூசையையெல் லாம் அங்கிகரித்து அவருடன் கலநது பேசவேணுமென் று மனவிருப்பத்துடனிருந்தபோதிலும் விபண்டக ரிஷி யிடம் பயந்து கடுகப்போகவேணுமென்று எண்ணங் கொண்டு 'ஓ ப்ராம்ஹணோத்தமரே! நாங்கள் கொடுக்கும் இப்பழங்கள் மிகவும் மேலானவை. ஆகையால் இவை களை வாங்கிக் கொள்ளவேணும். உமக்குச் சுப முண் டாகும். ஆலஸ்யஞ் செய்யாமல் இவைகளைச் சாப்பிட் டருள்வீராக' என்றனர். இங்ஙனஞ் சொல்லிய பின்பு அவர்கள் யாவரும் அவரை அழுந்தக்கட்டி ஆலிங்கநஞ் செய்து மிகுந்த ஸந்தோஷத்துடன் அவருக்குக் குழக கட்டைகளையும் மற்றும் பலவகைப் பணடங்களையும் வெகுவாகத் தந்தனர். அப்படி தாஸிகள் ஆலிங்கநஞ் செய்யினும் மனக் கலக்கமற்ற மஹாதேஜஸ்வியான அவ் வைதிகர் எப்பொழுதுங் காட்டிலேயே வஸித்திருப்பவ ராகையால் எக்காளும் சாப்பிட்டுப் பார்த்தறியாத அப் பண்டங்களை வாங்கிக்கொண்டு சாப்பிட்டு 'இவை காட் டில் நித்யவாஸஞ் செய்பவர் ஒருகாளும் சாப்பிட்டறியாத பழங்கள்' என்று நினைத்தனர். அப்பொழுது அநத வாரஸ்திரீகள் யாவரும் அவரைப் பார்த்து 'எங்களுக்கு ஓர் வ்ரதம் செய்யவேண்டியிருக்கின்றது. ஆகையால் நாங்கள் போய்வருகின்றோம்' என்று ஓர் வ்யாஜம் சொ ல்லி அவருடைய பிதாவாகிய விபண்டக ரிஷிக்குப் பயந்து அவ்விடத்தை விட்டுச்சென்றனர். அவர்கள் எல்லோரும்

போனபின்பு காச்யபராகியவிபண்டக ரிஷியின் குமாரரான ருச்யச்ருங்கர் மனங் குதிரப்பெருமல் கலங்கி ஓரிடத்தில் நிலை கொள்ளாமல் திரிந்தலைந்து மற்றைநாள், நன்றாக அலங்காரஞ் செய்துகொண்டு மனத்துக்கினிய ரூபத்துடன் விளங்கிய அவ்வேசிமாதர்களை யாதோரிடத்தில் கண்டனரோ; அவ்விடத்தேறச் சென்றனர். அவர் ப்ரஹ்மசர்யந் தவருதிருப்பவராயினும் அவர்கள் மாயையில் அகப்பட்டு மனக்கலக்க முற்றனர். இப்படி அநத அந்தணராகிய ருச்யச்ருங்கர் வந்துகொண்டிருக்கையில் அத்தாஸிகள் யாவரும் பார்த்தவுடனே மனக்களிப்புற்று அவாருகே வநது 'ஓ நல்லியற்கையுடையவரே! எங்களுடைய ஆச்ரமத்திற்கு வரவேண்டும. அது எங்களுடைய ஸ்வதேசம. ஆகையால் அங்கும் இநத காய் கிழங்கு முதலிய ஸதகாரஞ் செய்வது இதைவிட மேலாகவே நடக்கும்' என்றனர். இப்படி அவர்க ளெல்லோருமொன்றாகச் சொன்ன அழகான வார்த்தையைக் கேட்டு அவரும அங்குப் போக எண்ணங் கொண்டனர். அவர்களும் அவரை அழைத்துக் கொண்டு போய் கங்கையிலிருநத ஓடத்திலேறி அதன் ப்ரவாஹத்தைக் கடந்து அங்கதேசம் போய்ச் சேர்ந்தனர். அவ்வநதணர் மிகவும் மகிமை பொருந்தியவராகையால் அவரை அங்கதேசத்திற்கு அழைத்துக் கொண்டுவரும்பொழுதே உலகமெஙகும் ஆநந்திக்கும்படி மேகங்கள கடுக மழை பொழிந்தன. ரோமபாத மஹாராஜனும் தன தேசத்திற்கு மழையுடன் கூடவே வந்து கொண்டிருக்கும் அந்த ப்ராஹ்மணோத்மரைக் கண்டு வணக்கத்துடன் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து மிக்கவூக்கத்துடன் சாஸ்த்ரந்தவருது அவருக்கு அர்க்யத்தையுங் கொடுத்துத் தாஸிகளைக் கொண்டு வா

வழைத்ததற்காக அவருக்குக் கோபமுண்டாகாமலிருக்கும்படிக்கும் பிள்ளையை வெளியில் அழைத்துக்கொண்டு போனதற்காக அவர் பிதாவுக்குக் கோபமுண்டாகாமலிருக்கும் படிக்கும் அவரிடத்தில் அநுக்ரஹத்தை வேண்டிக்கொண்டனன். பின்பு அந்த ரோமபாத மஹீபாலன் ருச்யச்ருங்கருடன் அந்தப்புரத்துக்குச் சென்று தன்பெண்ணாகிய சாந்தையை அவருக்கு விதிப்படி விவாஹஞ் செய்து கொடுத்து மனக்கவலை தீர்ந்து மிகவும் ஆநந்தமடைந்தனன். இவ்விதம் அவ்வந்தணர் தன்பத்நியாகிய சாந்தையுடன் கூடி மிகுந்த வொளிபெற்று அந்த ரோமபாதராஜனது அந்தபபுரத்தில் இஷ்டங்களெல்லாம் நிறையப் பூசிக்கப்பட்டு வஸித்திருந்தனர்.

பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ தசரதன் ருசயசருங்கரை அங்கதேசத்தினின்றும் அழைத்துக்கொண்டு வந்தது. }

தசரதமஹாராஜனே! தேவர்களில் மேலான அந்த ஸநத்குமாரர கதை சொல்லுங் க்ரமத்திலே இன்னமும் உமது நன்மையைப்பற்றி யுரைத்த சிலவற்றைச் சொல்லுகின்றேன், கேட்பாயாக. இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்து செல்வம் நிறைந்து ஸத்யத்தில் நிலைநின்ற தசரதனென்னும் ஓர் மன்னவன் தர்மத்திற் சிறந்திருக்கப்போகின்றனன். அவ்வரசனுக்கு அங்கராஜனோடு ஸ்நேஹம் உண்டாகும். அவ்வங்கராஜனுககு ரோமபாதனென்னும் ஓர் புதலவன உண்டாகப் போகின்றனன். அந்த ரோமபாதனுக்குச் சாநதையென்று மிகுந்த பாக்கியமுள்ள ஓர் பெண் உண்டாகும். சிறந்த கீர்த்தியுடைய தசரத மஹாராஜன் அவ்வங்கராஜன்ருகே

சென்று அவனைப் பார்த்து 'தர்மஸ்வபாவனே! நான் ஸந்தானமின்றி யிருக்கின்றேன். நீ அநுமதி கொடுத்தாயாயின் என் வம்சத்திற்கு ஸந்தானம் உண்டாகும்படி சாந்தையின் கணவராகிய ருக்யச்ருங்கமாமுனிவர் எனது யஜ்ஞத்தை நன்றாக நிறைவேற்றுவர்' என்று சொல்லப் போகின்றனன். ரோமபாதனும் அவ்வரசன் வார்த்தையைக் கேட்டு மிகுந்த மதியுள்ளவனாகையால் தானாகவே மனத்தில் ஆலோசித்து ருச்யச்ருங்கர் பிள்ளை பிறக்கச் செய்யவல்ல மகிமையுடையவராகையால் அவரைத் தசரதனுடன் அனுப்பப் போகின்றனன். அத்தசரத மன்னவனும் அவவந்தணரை யழைத்துக் கொண்டு மனக்கவலை தீர்ந்து மிக்க மனமகிழ்ச்சியுடன் அந்த யாகத்தை நடத்தப் போகின்றனன். அம்மன்னவன் தர்மங்களெல்லா மறிந்தவன். ஆகையால் அவன் ருச்யச்ருங்கரை வெறுமனே வேண்டினவனன்று. மேன் மேலும் கீர்த்திவளரவேண்டுமென்றெண்ணங்கொண்ட அம்மஹீபாலன் புத்ரகாமேஷ்டியென்னும் யாகத்தைச் செய்ய வேண்டியும், அதனால் புதல்வர்களைப் பெற வேண்டியும், தன் மூலமாக ஸ்வர்க்கமேறப் போக வேண்டியும், அந்த ப்ராஹ்மணோத்தமரான ருச்யச்ருங்க முனிவரை வணக்கத்துடன் கையைக் கூப்பி ப்ரார்த்தித்தழைத்துக்கொண்டு வரப்போகின்றனன். அங்ஙனம் அவ்வந்தணரை யழைத்துக்கொண்டு வந்து அவரால் தான் விரும்பின புத்ரகாமேஷ்டியை நிறைவேற்றப் போகின்றனன். இம்மன்னவன் மிகுந்த பராக்ரமம் பொருந்தி வம்சத்தை நிலைநிறுத்த வல்லவராகி உலக மெங்கும் கியாதிபெற்ற நான்கு புதல்வர்களையும் பெறப் போகின்றனன். இப்படி மகிமையெல்லாமமைந்து தேவர்களில் சிறந்த ஸநத்குமாரர் முன்பு கிருதயுகத்தில் இக்

கதையை மொழிந்தனர். ஓ நரோத்தமா! தசரதமஹா ராஜனே! நீ பிள்ளையைப் பெறவேண்டியிருப்பவன். ஆகையால் நான்குபக்கத்திலும் ஸேனைகளால் சூழப் பட்டு வாஹநத்தின்மேலேறிக்கொண்டு நீயே நேரில் போய் ஸத்கரிக்கத்தக்க அம்முனிவரை அழைத்துக் கொண்டுவரவேண்டும்' என்று ஸுமந்திரன் மொழிந்த னன். அதைக்கேட்ட தசரதனும் 'நங்குலத்திற்கு வஸி ஷ்டர் புரோஹிதர்; அவரை விட்டு ருச்யச்ருங்கரைப் புரோஹிதராக விரும்புவது நேரன்று. நாமாகச் செய்த தன்றியே ஸநத்குமாரர் சொன்ன விருத்தாந்தத்தைப் பற்றி அவரை வரித்தாலும வஸிஷ்டருக்குத் தெரி வித்து அவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு செய்வதே நலம்' என்று நன்கு மனத்தில் ஆலோசித்து வஸிஷ்ட ரிடத்தில் ஸுமந்திரனைக் கொண்டு அக்கதையைச் சொல்வித்து வஸிஷ்டருடன் தானுங்கேட்டு ருச்யசருங் கரைப் புரோஹிதராக வரிக்கும்பொருட்டு அவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டனன. பின்பு தான் மனப பூர்த்தியுடன் மணவாளராகிய ருச்யச்ருங்கரை உபலா லநஞ் செய்து சாந்தையுடன் கூட அழைத்துக்கொண்டு வருவதற்காகத் தனது அந்தப்புரஸ்த்ரீகளுடனும், மந் திரிமுதலான பரிவாரங்களுடனுங்கூடி அநத ருச்யச்ருங் கரிருக்கிற ரோமபாத ராஜனுடைய நகரத்திற்குச் சென றனன். இங்ஙனம் புறப்பட்டுத் தசரதன கானகங்களை யும நதிகளையும் அழகாயிருந்துள்ள இடங்கள்தோறும் மெள்ளமெள்ளப் பார்த்துக்கொண்டே தாண்டி அம் மாமுனிவரிருக்குந் தேசத்திற்குச் சென்று ரோமபாத னுக்கருகில் அக்நிபோல் விளங்கும் ரிஷிகுமாரராகிய அந்த ப்ராஹ்மணோத்தமரை முதலிற் கண்டனன்.

பின்பு ரோமபாதனும் தனக்குத் தசரதன் நண்பனானகையால் அவன் வந்ததைப்பற்றி மிகவும் மனமகிழ்ச்சி கொண்டு தகுந்தபடி ஸவிசேஷமாக அவனுக்கு ஸத்காரஞ்செய்து மிகுந்த மதியுள்ள ரிஷிகுமாரராகிய ருச்யச்ருங்கரைப் பார்த்து 'இத்தசரதமன்னவன் எனக்கு மிகுந்த நண்பன். இவ்வளவேயன்று. உமது பத்நியாகிய சாந்தைக்கு இவன் ஜநகபிதா. ஆகையால் உமக்கு இவனோடு ஸம்பந்தமுண்டு' என்று சொல்ல அந்த ருச்யச்ருங்கரும் அப்பொழுது தன் மாமனாகிய தசரதனை ஸத்கரித்தனர். இப்படி நரோத்தமனாகிய தசரத மஹா ராஜன் ரோமபாதனிடம் ஸத்காரம் பெற்று அவனோடு கூடவே ஏழெட்டு தினங்கள் வஸித்திருந்து அவ்வரசனைப் பார்த்து, 'ராஜோத்தமா! உன் பெண்ணாகிய சாந்தை பர்த்தாவுடன் கூடி எனது பட்டணத்திற்கு வரவேண்டும். அவர்களால் நடக்கவேண்டிய கார்யமொன்று பெரிதாக நேரிட்டிருக்கின்றது' என்று சொல்ல, அவனும் அப்படியே ஆகட்டுமென்று அந்த ருச்யச்ருங்கரை யனுப்ப உத்தேசித்தவனாகி அவரைப்பார்த்து 'நீர் பத்நியுடன கூடி தசரதன் பின்னே செல்லவேணும்' என்று மொழிந்தனன். அதைக் கேட்டு ரிஷிகுமாரரும் அப்படியே யாகட்டுமென்று ரோமபாத மன்னவனுக்குச் சொல்லி அவனிடம் அநுமதி பெற்றுக்கொண்டு தன் மனைவியுடன் கூடிப் புறப்பட்டனர்.

தசரதனும் ரோமபாதனும் ஒருவருக்கொருவர் நமஸ்கரித்து நேசத்தினால் ஆலிங்கநஞ் செய்து களித்தனர். பின்பு அந்த ரகுகுலதிலகனாகிய தசரதன், தனது நண்பனாகிய ரோமபாதனிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு, அயோத்தியிலுள்ள ஜநங்களுக்குத் தான் வருவது தெரியும்பொருட்டு, வேகமாகச் செல்ல வல்லர்

களாகிய தூதர்களை வரவழைத்து, 'நகரமெங்கும் வேகமாய் நன்றாக அலங்கரித்து மணங்கொண்ட தூபங்களிட்டு நாலுபக்கமும் தெளித்து நன்றாக விளக்கி த்வஜங்களும் தோரணங்களும் கட்டிச் சிங்காரிக்க வேண்டும்' என்று நகரத்திலுள்ள ஜநங்களுக்குக் கட்டளையிட்டு அனுப்பினான். பட்டணத்திலுள்ள ஜநங்கள் யாவரும் அரசன் வரவைக்கேட்டு மிகவும் ஆநந்தித்து அவன சொல்லி யனுப்பியபடியே எல்லாம் செய்வித்தனர். பின்பு அந்த மன்னவன் அவ்வந்தணரை முனனிட்டுக்கொண்டு சங்கதுந்துபிவாத்ய கோஷங்களுடன நன்றாக அலங்காரஞ் செய்யப்பெற்று விளங்கும் அயோத்திமாநகரத்தினுள் புகுந்தனன். இங்ஙனம பராக்ரமம் முதலிய வியாபாரங்களால் இந்திரனைப் போன்ற அம் மன்னவன் அவ்வந்தணர்சிகாமணியை மிகுந்த ஸத்காரத்துடன் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு வரக்கண்டு, அந்நகரத்திலுள்ளவர் யாவருமட மகிழ்ச்சியடைந்தனர். அரசனும் அவ்வந்தணரை அந்தப்புரத்திற்கு அழைத்துக்கொண்டு சென்று விதிப்படி பூசைகளைச் செய்து அவரை யழைத்துக்கொண்டு வந்து சேர்த்ததைப்பற்றித் தனது காரியமெல்லாம் நிறைவேறினதாக நினைத்தனன். அந்தபுர ஸ்த்ரீகள் அனைவரும் அவ்வாறு கணவராகிய ருச்யச்ருங்கருடன் கூடிவந்த கண்ணழகியான சாந்தையைக் கண்டு ப்ரீதியால் ஆநந்த மடைந்தனர். இப்படி சாந்தை அநதப்புர ஸ்த்ரீகளாலும் விசேஷித்து அவ்வரசனாலும் பூசை செய்யப்பெற்றுப் புரோஹிதராகிய தன் கணவருடன் சிலகாலம் ஸுகமாக வஸித்திருந்தனள். பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தசரத சக்ரவர்த்தி யாகஞ்செய்ய ஆரம்பித்தல்

இவ்விதம் ருச்யச்ருங்கரை அழைத்துக்கொண்டு வந்த பின்பு வெகுநாள் சென்றது. பிறகு மிகவும் அழகான ஓர் வஸந்தருது வர, அவ்வரசனுக்குத் தான் முன் செய்ய உத்தேசித்த யாகத்தை நடத்தவேண்டுமென்று எண்ண முண்டாயிற்று. பின்பு தேவன்போல் ஒளி பொருந்தி விளங்கும் அந்தணர்தலைவரான அந்த ருச்யச்ருங்கரை அம்மன்னவன் ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அநுக்ரஹம் வரச் செய்து தனவம்சம் விருத்தியாகும்படி ஸந்தானமுண்டாகும் பொருட்டு யாகஞ்செய்ய வரித்தனன். அவரும் ராஜனிடம ஸத்காரம் பெற்று அப்படியே யென்று ராஜனை நோக்கி 'யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சித்தப்படுத்துவாயாக. குதிரையையும் விடுவாயாக' எனறனர். ராஜனும் மந்திரிசிகாமணியாகிய ஸுமந்திரனைப் பார்தது 'ஸுமந்திரனே! வேதங்களெல்லாங் கற்றறிநத ஸுயஜ்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், புரோஹிதராகிய வஸிஷ்டர், மற்றுமுள்ள ப்ராஹ்மணர்கள ஆகிய ருத்விக்குகள் யாவரையுமவேகமாக அழைத்துக்கொண்டுவா' எனறு கட்டளையிட்டனன். பிறகு ஸுமந்திரனும் விரைந்தோடிச் சென்று வேதங்களின் கரையறிநத அவவநதணர்கள் அனைவரையும் அழைத்துக் கொண்டு வந்தனன். தரமாத்மாவாகிய தசரதன அவர்களைப் பூசித்துத் தர்மார்த்தங்கள் நிறைந்து மிகவுமினிதாகத் தகுந்தபடி அவர்களைப் பார்த்து 'யான் புதல்வனில்லாது மிகவும் வருந்திப் புலம்புகின்றமையால் எனக்கு ஸுகமேயில்லை. அதுபற்றி அச்வமேதயாகஞ் செய்ய வேண்டுமென்று எனக்கு எண்ண முண்டாயிருக்கின்றது. ஆதலால் சாஸ்த்ரங்களிற் சொன்ன க்ரமந் தவறாது யாகஞ் செய்ய விரும்புகின்றேன். ரிஷி குமாரராகிய இந்த

ருச்யச்ருங்க மாமுனிவர் மகிமையால் எனது இஷ்டங்க ளெல்லாம் நிறைவேறும்' என்றுரைத்தனன். பின்பு வஸிஷ்டர் முதலிய அந்தணர் யாவரும் அங்ஙனம் அரசன முகத்தினின்று வெளியான அம்மொழியைக் கேட்டு 'நல்லது' என்று புகழ்ந்தனர். அப்பொழுது ருச்யச்ருங்கர் முதலிய வேதியர்களும் 'யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சித்தப்படுத்துவாயாக. குதிரையை விடுவாயாக. பிள்ளையைப்பற்றி உனக்கு இந்த தர்மபுத்தி உண்டானபடியால் அளவற்ற பராக்ரமத்தை யுடைய நான்கு பிள்ளைகளை நீ எவ்விதத்திலும் அடையப் போகின்றாய்' என்று மன்னவனுக்குப பதிலுரைத்தனர். பின்பு தசரதமன்னனும் அவவந்தணர் மொழியைக் கேட்டுக் களிப்புற்று மந்திரிகளை நோக்கி மகிழ்ச்சியுடன் 'நமது பெரியோர்கள் வசநத்தின்படி யாகத்திற்கு வேண்டிய ஸகல ஸம்பாரங்களையும் சேர்த்துவைப்பீர்களாக. காக்கவலலர்களைக் காவல்வைத்துப் புரோஹிதர்களையும் பினதொடரச் செய்து குதிரையை விடுவீர்களாக. ஸரயூ நதியின வட கரையில யாகசாலையை ஏற்படுததுவீர்களாக. கரமம் தவறாமல் விதிப்படியே சாந்திகர்மங்கள் பலவும் நடத்துவீர்களாக. அநர்த்தத்தை விளைவிப்பவையான குறைகள் எவையும் நேரிடாமற் போகுமேயாயின இந்த உயர்ந்த யாகத்தை அரசர்கள் யாவருமஅநுஷ்டிப்பர்கள். இதைச் செய்தால் என்ன குறை நேரிடுமோ என்று அஞ்சியே இதை ஸாமாந்யமாக எவனும் செய்ய விரும்புகிறதில்லை. இநத யாகத்தின் முறையெல்லாமறிந்த ப்ரஹ்ம ராக்ஷஸர்கள் இதைக்கெடுக்க ஏதேனும் குறையைத தேடிக கொண்டிருபபர்கள். ஆகையால் இதை மிகவும் அவதாநத்துடன் நடத்த வேண்டும. அப்படியன்றி யாகத்திலேதாவது அபசாரம் நேரிட்டு ப்ரஹ்மராக்ஷஸர்கள்

நுழைந்து இதைக் கெடுப்பார்களேயாயின் தத்க்ஷண மே யஜமாநன் நசித்துப்போவான். ஆகையால் இந்த எனது யாகம் விதிப்படி முடியும்படி இதில் தேர்ந்தவர் கள் ப்ரயத்நஞ் செய்ய வேண்டும்' என்றனன். பின்பு மந்திரிகள் யாவரும் அப்படியே யென்று அவன வார்த் தையைப் புகழ்ந்து அக்கட்டளைப்படி யாகத்திற்கு வேண்டிய சடங்குகளையெல்லாம் க்ரமப்படி நிறைவேற் றினர். பின்பு அவ்வந்தணர்கள் யாவரும தர்மங்களெல் லாமறிந்த அம்மன்னவனைப் புகழ்ந்து, அவனிடம் அநு மதி பெற்று, மறுபடியும் தாம் வந்தவழியே சென்றனர். இப்படி ப்ராஹ்மணர்கள் சென்றபின்பு அந்த நராதிபன் மந்திரிகளையும் போகவிட்டுச் சந்தோஷத்தினால் மிகவு மொளிகொண்டு அந்தப்புரத்தைச் சேர்ந்தனன். பன்னி ரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

யஜ்ஞ ஸம்பாரங்களைச ஸித்தப்படுத்தல்.

[1] இப்படி முதல்வஸந்தருதுவில் சாந்திஹோமங்க ளைச் செய்துஂருத்விக்குகளை வரித்தபின்பு வல்லராகிய நா னூறு ராஜகுமாரர்களுடனும் அத்வர்யு முதலிய ருத்விக் குகளுடனும் யாகத்தின் அச்வம் பூமியை வலஞ்செய்து திரும்பிவர, ஓராண்டு நிறைந்து மீளவும் வஸந்தருது

1 யாதொரு வஸந்தருதுவில் ருச்யசருங்கர் முதலிய ருத்விக் குகளைத் தசரதமன்னவன் வரித்தான், அதுமுதலாக யாகஸம்பாரங் களைச்சேர்ப்பது யாகபூமி யேற்படுத்துவது, சாந்திகர்மத்தை முன் னிட்டுக்கொண்டு யாகக்குதிரையைப் பூமிவலஞ் செய்யவிட்டு அத்து டன்கூடவே ஸமர்த்தர்களாகிய ராஜபுத்ரர் முதலியவர்களால சூழப் பட்டு, உத்காதா அத்வர்யு ஹோதா ப்ரஹ்மா ஆகிய இவர்கள் பின் றொடர்ந்து ஸாவிதராதிகர்மங்களைச செய்துகொண்டுபோவது முதலிய வ்யாபாரங்களைசசெய்ய ஓராண்டு க்ரம்பி மீளவும் வஸந்தருது வந்த தென்று கருத்து.

வந்தது. வந்தவாறே வல்லனை தசரதமஹாராஜன் தனக்கு ஸந்தாந முண்டாவதைப்பற்றி ஆரம்பித்த அச்வமேதத்தை நடத்தும்பொருட்டு அத்வர்யுவாக வரிக்கப்பட்ட வஸிஷ்ட முனிவரிடஞ் சென்று தெண்டனிட்டு ந்யாயப்படி உபசாரங்களைச்செய்து கையைக்கூப்பிக்கொண்டு வணக்கத்துடன் 'ப்ராஹ்மணோத்தமரே! நான ஆரம்பித்த அச்வமேத யாகத்தை விதிப்படி நிறைவேற்றவேண்டும். அதன் அங்கங்களில் யாதொரு தடையும் வாராதபடியும் செய்யவேண்டும். எனககு நீர் ஓயாத நேசமுள்ள நண்பர். பின்னும் நீர் வாமதேவர் முதலியவர்களில் மேலாகி விளங்கும் குரு. எப்பொழுதும் என்மீது நல்லெண்ணங்கொள்பவர். ஆகையால் இப்பொழுது நான் ஆரம்பித்த யாகபாரத்தையெல்லாம் நீரே நிறைவேற்றவேண்டும்' என்றுரைத்தனன. அந்தணரில்சிறந்த அநதவஸிஷ்டமுனிவரும் ராஜனைப்பார்த்து, 'நீ வேண்டிக்கொண்டபடி எல்லாவற்றையும் தப்பாமற செய்கின்றேன்' என்று சொலலி, பின்பு அந்த யாகத்திற்காக வரிக்கப்பட்ட மற்றை அந்தணர்களையும் ஸகல ஸம்பாரங்களோடு வீடு முதலானவற்றை நிருமிக்கவல்ல சிற்பிகளையும், யாகபாத்ரம் முதலியவற்றைச் செய்யவல்ல தச்சர்களையும், கிணறுமுதலியவை தோண்டவல்ல பணிக்கர்களையும், பல கலைகளில் தேர்ந்து யாகவிதியறிந்தவர்களுமாகிய பெரியோர்களையும், சித்திரக்காரா நாடகமாட வல்லோர் கணக்கர் முதலிய மற்றும் வேண்டியவர்களையும் அழைத்து இங்ஙனம் மொழிந்தனர். 'ஓ முனிவர்களே! நீங்கள் யாவரும் அரசன் கட்டளைப்படி யாகத்திற்காக விருப்பத்துடன் முயலவேண்டும். மற்றுமுள்ள காரியஸ்தர்களே! புதிதாகக் கட்டடங்கள் கட்டுவதற்காக அநேகமாயிரஞ் செங்கற்களை வரவழைக்க வேண்

டும். வரும் அரசர்கள் வஸிக்கும்படி அகன்று நீண்டு மற்றுங் குணங்களெல்லாம் அமைந்து விளங்கும் ராஜ கிருகங்கள் பலவும் கட்டவேண்டும். ப்ராஹ்மணர் களுக்கும் வெகு அழகாயும் உறுதியாயு மிருக்கும்படி கிருகங்களைக் கட்டி அவற்றில் அநேக பக்ஷயங்களையும் அநநபாநங்களையும் அமைத்து வைக்க வேண்டும். அப் படியே நகரத்து ஜநங்களுக்கும் மிக விசாலமான வீடு களை யேற்படுத்திக் கொடுத்து அங்குப் பலவகைப் பண் யாரங்களையும் மற்றும் அவர்களுக்கு வேண்டிய பதார்த் தங்களையும் நிறைத்து வைக்கவேண்டும். அவ்வாறே நாட்டுப்புறத்து ஜநங்களுக்கும் மரியாதை செய்து நாட் டாரென்று அவர்களைப் பரிஹஸியாமல் விதிப்படி மிக வும் உயர்ந்த அந்நங் கொடுக்கவேண்டும். இவர்கள் அவர்கள் என்று பாராமல் ஸகல வர்ணத்தவர்களுக்கும் மிகுந்த ஸத்காரஞ் செய்து சந்தோஷிக்கச் செய்ய வேண்டும். ஸ்நேஹத்திலாவது கோபத்திலாவது பரி ஹாஸத்திலாவது ஒருவரையும் அவமதிக்கலாகாது.

இந்த யாககாரியங்களில் மனஞ் செலுத்தி ஊன்றி யிருப்பவர்களையும், அவரைப்போன்ற மற்றும் சிற்பி களையும் க்ரமந் தவறாமல் விசேஷப்படி பூஜிக்கவேண் டும். அவர்கள் போஜநத்திலும் தநத்திலும் மிகவும் திருப்தியடையவேண்டும். நீங்கள் யாவரும் மனக்க ளிப்புடன் இதில் யாதொரு குறையும் நேரிடாதபடியும் எல்லாம் நிறைவேறும்படியும் செய்யவேண்டும்' என் றனர். பின்பு எல்லாரும் ஒன்றுகூடி வஸிஷ்டரிடம் வந்து 'மாமுநியே! நீர் சொன்னவையெல்லாம் ஒன்றுங் குறையின்றி உமது சொற்படி செய்து முடித்தனம். மற்றுமுள்ள மேற்செய்ய வேண்டியவற்றையும் ஒரு குறையுமின்றி நடத்துவோம்' என்றனர். பின்பு வஸிஷ்டர் ஸுமந்திரனை வரவழைத்து அவனோடு 'பூமி யிலுள்ள தார்மிகர்களாகிய அரசர்கள் யாவரையும்

வரவழைக்க வேண்டும். எல்லாத் தேசங்களிலுமுள்ள ப்ராஹ்மணர்கள், க்ஷத்ரியர்கள், வைச்யர்கள், சூத்ரர்கள் ஆகிய நான்கு வர்ணத்து மனிதர்களையும் ஸத்கரித்து வரச் செய்வாயாக. பராக்ரமம் நிலைநிற்கப் பெற்று, சூரனுகி நூல்களெல்லா மாராய்ந் தறிந்து அப்படியே வேதங்களிலும் நிலைநின்று மஹா பாக்யசாலியுமாகி மிதிலாநகரத்திற்கு அரசனுகிய ஜநகமஹாராஜனை நீயே நேரில் போய் நன்கு ஸத்காரஞ் செய்து அழைத்துக்கொண்டுவரவேண்டும். அவன் நமது அரசனுக்குச் சிரகாலஸம்பந்தியென்றறிந்து அவனை முன்னமே வரவழைக்கும்படி உனக்குச் சொல்லுகிறேன். காசிராஜன் எப்பொழுதும் நம்மிடம் நேசங்கொண்டு இனிதாகப் பேசுந் தன்மையன்; நம்மரசனுக்கு மிகுந்த நண்பன்; ஆகையால் அவனையும் நேரில் போய் அழைத்து வரவேண்டும். அப்படியே தர்மங்களை யறிந்தவர்களில் சிறந்து பருவம் நிறைந்து நமதரசனுக்கு மாமனுமாகிய கேகயராஜனையும் நீயே போய்ப் புத்திரர்களுடன்கூட அழைததுக்கொண்டு வருவாயாக. மிகுந்த பாக்யசாலியும் நம்மன்னவனுக்கு நண்பனுமாகி எங்கும் புகழ் பெற்று விளங்கும் அங்கதேசத்தரசனுகிய ரோமபாதனையும் ஸத்காரஞ்செய்து அழைத்துக்கொண்டு வருவாயாக.

அன்றியும் வங்கம் கலிங்கம் முதலிய கீழ்நாட்டரசர்களையும், ஸிந்து ஸௌவீரம் முதலிய மேனுட்டரசர்களையும், சோளம் பாண்டியம் முதலிய தென்னுட்டரசர்களையும், குரு பாஞ்சாலம் முதலிய வடநாட்டரசர்களையும் தக்க தூதர்களைக் கொண்டு அழைப்பிக்க வேண்டும். மேலும் இப்புவநத்தில் நமக்கு நண்பர்களான மற்றுமுள்ள மன்னர்களையும் பந்துமித்ர வர்க்கத்துடனும் ஸகல பரிவாரங்களுடனும் கூடிய சீக்கிரத்தில் வரவழைப்பாயாக' என்றனர். இப்படி வஸிஷ்டமா

முனிவர் சொல்லக் கேட்ட ஸுமந்திரனும் த்வரையுடன் அரசர்களை யழைத்துக்கொண்டு வரும்படி அந்தரங்கராகிய புருஷர்களை அனுப்பி, அம்முனிவர் விசேஷித்துச் சொன்ன மன்னவர்களைத் தானே நேரில் போய் அழைத்து வருவதற்கு வேகமாகப் புறப்பட்டனன். முன் கட்டளை யிடப்பட்ட வேலைக்காரர் யாவரும் யாகத்திற்காகத் தாங்கள் செய்தவை யனைத்தையும் சிறந்த மதியுடைய வஸிஷ்டருக்குச் சொல்லினர் பிறகு அந்தணர்களில் தலைவராகிய அவ்வஸிஷ்ட மாமுனிவர் ஸந்தோஷமடைந்து அவர்கள் அனைவரையும் நோக்கி 'யாராவது ஏதாவது கேட்கில் அநாதரமாயாவது பரிஹாஸமாயாவது கொடுக்கலாகாது. ஆதரத்தோடும் மேன்மையோடும் கொடுக்கவேண்டும். அப்படியன்றி அநாதரமாகக் கொடுக்கும் தானம் [1]தாதாவைக் கெடுத்துவிடுமென்பதில் ஸந்தேகமில்லை' என்று மொழிந்தனர். பின்பு சிலநாள்களுக்குள்ளே அரசர்கள் தசரதனுக்கு உபஹாரமாக ரத்நம் முத்து பவழம் ஆடையாபரணம் முதலிய உயர்ந்த வஸ்துக்களைக் கொண்டு வந்து சேர்ந்தனர்.

பிறகு வஸிஷ்டரும் அவைகளை யெல்லாங் கண்டு களிப்புடன் தசரதனைப் பார்த்து 'ஓ உத்தம புருஷனே! உனது கட்டளைப்படி அரசர்கள் யாவரும் வந்து சேர்ந்தனர். நானும் அச்சிறந்த மன்னவரனைவர்க்கும் தக்கபடி மரியாதை செய்தனன். யாகத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களும் மிகுந்த ஊக்கத்துடன் அந்தந்தப் புருஷர்களால் சித்தஞ் செய்யப்பட்டிருக்கின்றன. யாகசாலையும் நான்கு பக்கங்களின் அருகிலும் சேர்க்கப்பட்ட ஸமஸ்த ஸம்பாரங்களுடன் நிறைந்திருக்கின்றது. ஆகையால் மனத்தினால் நிருமிக்கப்பட்

---

1 தாதாவை-கொடுப்பவனை.

டதோ என்னும்படி வெகு வேகமாக அமைக்கப்பட்ட யாகசாலையைப் பார்க்க வேண்டும். நீயும் யாகஞ்செய்யப் புறப்படலாம்' என்றனர். இபபடி வஸிஷ்டரும் ருச்யச்ருங்கருமாகச் சொல்ல, அம்மன்னவனும் சுபதினத்தில் சுப நக்ஷத்ரத்தில் யாகசாலைக்குப் புறப்பட்டுப் போயினன். பின்பு வஸிஷ்டர் முதலிய ப்ராஹ்மணோத்தமர்கள் யாவரும் யாகசாலையிற் சேர்ந்து ருச்யச்ருங்கரை முன்னிட்டுக்கொண்டு சாஸ்த்ரம் தவறாமல் க்ரமப்படி யாககாரியங்களைச் செய்யத் தொடங்கினர். பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரத மன்னவன் அசவமேதயாகஞ் செய்தல்.

இங்ஙனம் யாகஞ் செய்யவேண்டிக் குதிரையை விட்டு ஓராண்டு நிரம்பி அக்குதிரையும் திரும்பிவர ஸரயூநதியின வடகரையில் மனனவனது யாகம் நடந்தது. அப்பொழுது ப்ராஹ்மணோத்தமர்கள் யாவரும் ருச்யச்ருங்கரை முன்னிட்டுக்கொண்டு மஹாத்மாவான அம்மஹீபாலன் செய்யும் அச்வமேதமெனகிற மஹாயாகத்தில செய்ய வேண்டிய கருமங்களை ஆசரித்தனர். வேதத்தின பொருளை நனகுணர்ந்து யாகஞ் செய்விக்கும் அவ்வந்தணர்கள் அனைவரும் விதியிற் சொல்லியபடி யாககாரியங்களைச் செய்துகொண்டு வேதத்திலோதியபடியும், மீமாம்ஸாநுஸாரமாகவும், கல்பஸூத்ரங்களிற் சொல்லியபடியும் நடந்துகொண்டிருந்தனர். மேலும் அவவநதணர்கள் [1] ப்ரவாக்யமென்றும் உபஸதமென்றும் சொல்லப்படுகிற கருமங்களைச் சாஸ்த்ரந்தவறாமல் கட்

1 ப்ரவாக்யம்- 'தேவாவை ஸத்ரமாஸத' என்று இது முதலான ப்ரவர்க்ய ப்ராஹ்மணத்திற் சொல்லப்பட்ட கர்மவிசேஷம். உபஸதம்-அது ஓர் இஷ்டிவிசேஷம்.




100. தசரதன் அஸ்வமேதமும் புத்ரகாமேஷ்டியும் செய்தல்.

டளைப்படி செய்துவிட்டு மற்றும் நடத்தவேண்டிய நட வடிக்கைகளையும் நூல்வழி வழுவாது நடத்தி வந்தனர். பினபும அம்மஹாரிஷிகள் யாவரும் மிகுந்த களிப்புடன் அந்தந்த கருமங்களுக்குரிய தேவதைகளை நன்ருகப் பூஜை செய்து காலையிற் செய்யவேண்டிய ஹோமம் முதலியவைகளையும் விதிப்படி நடத்தினர். இதில் இந்திரனுக்குக் கொடுக்க வேண்டிய ஹவிர்ப்பாகமும் க்ரமம் தவருமல் கொடுக்கப்பட்டது. பாபமனைத்தும் போக்கவல்ல [1] ஸோமலதையை அந்தணர் யாவரும் புகழ்ந்தனர். மத்யாஹ்ந ஹோமமும் க்ரமப்படி நடந் தது. அப்படியே அவ்வந்தணர் அம்மஹாராஜனுக் காக ஸாயங்காலத்திற் செய்யவேண்டிய ஹோமத்தை யும் விதிப்படி யறிந்து செய்தனர். அந்த யாகத்தில் ஒன்று தப்பி ஒன்ருகச் செய்யப்பட்டதாவது, முதலே செய்யாமல் விட்டுப்போனதாவது ஒன்றும் நேரிட வில்லை. அன்றியே மந்த்ரத்திலாவது தந்த்ரத்திலாவது யாதொரு குறையும் நேரிடவில்லை. அவர்கள் எல்லா வற்றையும் நிர்விக்நமாகச் செய்ததனுல் அனைத்தும் மந்த்ரங்களுடனே காணப்பட்டது.

அந்த மஹாயாகம் நடந்த நாட்களில் வேலைசெய்து அலுத்தவனும் பசியால் வருந்தினவனும் காணப்பட வில்லை. கல்வியில்லாமலும் நூறு சீடர்கள் பின்ருெட ராமலுமிருக்கும் அந்தணன் ஒருவனும் அங்குக் காணப் படவில்லை. அந்த யாகத்தில் நாடோறும் இடைவீடின்றி முனிவர்களும் மற்றை யந்தணர்களும் தாஸாகளான சூத்ரர் முதலியவர்களும் தவத்தில் நிலைநின்ற மஹாரிஷிக ளும் ஸந்நியாஸிகளும் திகம்பரர்களும் வயது முதிர்ந்த வர்களும் நோயாளிகளும் பெண்களும் சிறியவர்களும் புசித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் இப்படி இடை வீடின்றிச் சாப்பிட்டபோதும் அந்நபாநத்தின் சுவை யினுல் திருப்தி உண்டாகவில்லை. அவர்கள் எவ்வளவு

1 ஸோமலதை-ஆட்லாங்கொடி.

புசிக்கினும் அரசனுக்குத் திருப்தி பிறக்க வில்லை. ஆகை யால் அவன் 'அந்நத்தைக் கொடுங்கள் கொடுங்கள். பலவிதமான ஆடைகளையும் கொடுங்கள்' என்று ஏவிக் கொண்டிருக்க, அப்படியே ராஜபுருஷர்கள் பலரும் நடத்தினர். மேலும் அங்கு அப்பொழுது ப்ரதிதிந மும் பாகசாஸ்த்ரப்படி சித்தஞ் செய்யப்பட்ட அந்ந ராசிகள் பலவும் மலைமலையாகத் தென்பட்டன. மஹாத்மாவாகிய அம்மன்னவனால் செய்யப்படும் அந்த யாகத் தில் பல தேசங்களிலிருந்து வந்த புருஷர்களும் ஸ்த் ரீகளும் கூட்டங் கூட்டமாக அந்நபாநங்களால் மிக வும் திருப்தியடைந்திருந்தனர். அங்கு வந்த ப்ராஹ் மணஸ்ரேஷ்டர்கள் யாவரும் நடந்த உபசாரங்களால் மிகவும் திருப்தி அடைந்து 'நீர் இட்ட அந்நமானது அறுசுவைகளும் அமைந்து அதற்கு மேல் அளவற்ற உபசாரமும் பொருந்தி யிருந்தது. எங்களுக்கு மிகவும் திருப்தியா யிருக்கின்றது. ராஜனே! உமக்கு மங்க ளம் உண்டாகவேணும்' என்றிவ்வாறு பலவகையாகப் புகழ்ந்தனர். ரகு குலத்திற் பிறந்த அந்தத் தசரத மஹாராஜனும் இதையெல்லாஞ் செவியுற்றனன். சிறந்த ஆடையாபரணங்கள் பூண்ட புருஷர்கள் பலர் ப்ராஹ் மணர்களுக்குப் பரிமாறினர். மற்றும் பலர் அழகான மணிகுண்டலங்களை யணிந்துகொண்டு அப்பரிமாற்றஞ் செய்யும புருஷர்களுக்கு அருகில் ஸஹாயமா யிருந் தனர். அங்கு ஹோமம் முடிந்த பின்பு இடையிலுள்ள பொழுதெல்லாம் கவிகளைக் கற்று நன்றாகப் பேசவல்ல ருத்விக்குகள் பலரும் ஒருவரை யொருவர் ஜயிக்கவே ணுமென்று எண்ணங் கொண்டு பல ஹேதுவாதங்களைச் செய்துகொண்டிருந்தனர். அந்த யாகத்தில் வல்லரான ருத்விக்குகள் யாவரும் பெரியோர்களால் ஏவப்பட்டு

காடோறும் செய்யவேண்டிய கருமங்களனைத்தையும் சாஸ்த்ரப்படி நடத்திக்கொண்டு வந்தனர். இந்த யாகத்திற்கு வந்த அந்தணர்களில் ஷடங்கமுணராதவனும் ப்ரஹ்மசர்யம் முதலிய வ்ரதாநுஷ்டானமின்றி யிருப்பவனும், பல நூல்களையும் கேட்டறியாதவனும், ஒருவனுவது தென்படவில்லை. அம்மஹாராஜனது ஸபையிலுள்ள ப்ராஹ்மணர்களில் வாதஞ்செய்ய வல்லமையில்லாதவேதியர் ஒருவரும் கிடையார்.

அந்த யாகத்தில் யூபஸ்தம்பங்கள் நிறுத்தும்போது வில்வமரத்தில் செய்யப்பட்டவை ஆறும், அத்துடன் சேர்ந்தாற்போலவே கருங்காலி மரத்திற் செய்யப்பட்டவை ஆறும், பலாச மரத்திற் செய்யபட்டவை ஆறும், நறுவிலி மரத்திற் செய்யப்பட்டதொன்றும், தேவதாரு மரத்திற் செய்யப்பட்டவை யிரண்டும் ஆக இருபத்தொரு யூபஸ்தம்பங்கள் நாட்டப்பட்டன. அவைகளை நடும்போது ஒவ்வொன்றுக்கும் நடுவில் ஒரு மார்பளவு இடம் வெளியா யிருக்கும்படி யேற்படுத்தினர். அவையனைத்தும் சாஸ்த்ரங்களை யுணர்ந்து யாகஞ்செய்விக்க வல்லமையுள்ள மிகுந்த அறிஞர்களால் ஏற்படுத்தப்பட்டவை; மற்றும் யாகசாலைக்கு அலங்காரமா யிருக்கும் பொருட்டுத் தங்கப்பட்டங்களால் சிங்காரிக்கப்பட்டிருந்தன. அந்த யூபங்கள் இருபத்தொன்றில் ஒவ்வொன்றும் இருபத்தொரு பிடியளவுடையது; பின்னும் ஒவ்வொரு வஸ்தரத்தினல் அலங்கரிக்கப்பட்டிருந்தது. யூபஸ்தம்பங்களெல்லாம் ஏற்றக் குறைவில்லாமல் தகுந்தபடி செய்பபபட்டு எட்டுப்பட்டைகள் தீர்க்கப்பெற்றுப் பொத்தல் பொள்ளலில்லாமல் மிகுந்த உரப்புடன் கூடி மழமழ வென்று தைலம் பூசப்பட்டு விதிப்படியே நாட்டப்பட்டன. மேலும் அவை ஆடைகளால் சுற்றப்பட்டுப்

புஷ்பங்களாலும் மணம் பொருந்திய சந்தநம் முதலிய வற்றாலும் அலங்காரஞ் செய்யப்பெற்று ஆகாயத்தில் ஸப்தரிஷிகள் மிக வொளியுடன விளங்குவதுபோல் விளங்கியிருநதன.

அந்த யாகசாலையில் யாககாரியங்களில் வல்லரான வேதியர்கள் நூல் தவறாமல் தகுநத அளவுடன் செய்யப் பட்ட செங்கற்களைக் கொண்டு யாகவேதிகையைக் கட் டிவைத்திருந்தனர். அவ்வக்நிவேதிகையானது வல்ல ரான தசரதனது ருத்விக்குகளால் நன்கு விதிபபடி கட்டப்பட்டிருந்தமையால் இறக்கைகளையும் வால்புறத் தையும் விரித்துக் கீழே பாரத்துக்கொண்டு கிழக்கு முகமாயிருக்கும் கருடனைப்போனற உருவம் பெற்றுப் [1] பொனனால் அமைக்கப்பட்ட இறக்கைகளும் பொருந்தி, [2] ஸாமாநயயாகங்களிற் சொல்லிய ஆறு ப்ரஸ்தாரங்க ளுக்குமேல் மூன்று பங்கு அதிகமாகி, ஆனதுபற்றியே பதினெட்டு ப்ரஸ்தாரங்களுடன் விளங்கிற்று. சாஸ்த் ரங்களிற் சொல்லப்பட்ட பசுக்களும், ஸர்ப்பங்களும், பக்ஷிகளும் அந்ததந்த தேவதைகளை யுத்தேசித்து விதிப்படி அநத யூபஸ்தம்பங்களில் கட்டப்பட்டன. அவ்வச்வமேதத்தில் பசுக்களை வதிக்கவேண்டிய ஸமயம்

---

1 உளளே ஸுவர்ணத்துணடுகளை வைததுக் கட்டப்பட்ட இறக்கைகளோடு கூடியதென்று பொருள். 'ஸஹஸ்ரம் ஹிரண்யசகலை: ப்ரதிநிதமதீ ஷிதப்ரோக்ஷதி' என்று இங்கு ப்ரமாணம்.

2 'ஷட்சிதயோ ஹவந்தி' என்று ஸாமாந்யமாக யாகங்களில அக் நிவேதிகை ஆறுப்ரஸ்தாரங்களுள்ளது; அந்த அக்நிவேதிகையே அச் வமேதயாகத்தில் 'த்ரிஸ்தாவோ ஷீக்ர்ஹவதித்யச்வமேதே விஜ் ஞாயதே' என்கிறபடியே அதைவிட மூன்றுமடங்கதிகமாக விதிக்கப் பட்டிருப்பது பற்றிப் பதினெட்டு ப்ரஸ்தாரங்களுடையதாயிருக்கும். இதைக் கருதியே (ஸாமாந்யயாகங்களுக்குச் சொல்லிய... ... பதி னெட்டு ப்ரஸ்தாரங்களுடன் விளங்கிற்று) என்று சொல்லப்பட்டது.

வருகையில் [1] குதிரையும் ஆமை முதலிய ஜலஜந்துக்களும் மற்றுமுள்ள பசுக்களும் ஆகிய இவைகளை ருத்விக்குகள் சாஸ்திரங்களிற் சொல்லிய கட்டளைப்படி கொண்டுவந்து கட்டினர். அந்த யூபஸ்தம்பங்களில் அப்பொழுது முந்நூறு பசுக்களும் தசரதனது சிறந்த குதிரை யொன்றும் கட்டப்பட்டிருந்தன.

[2] அரசனது பட்டமஹிஷியான கௌஸல்யாதேவி மற்றை ராஜபத்நிகளுடன அவ்விடம் வந்து அக்குதிரையை வலமுமிடமுமாக வந்து மிகுந்த ஸந்தோஷத்துடன் ஸ்வர்ணமயமான மூன்று கத்திகளால வெட்டுத் தெரியக்கிறினள். அப்படி செய்த பினபு தர்மஸித்தியை விரும்பின கௌஸல்யாதேவி இச்சவத்தைத் தீண்டவேண்டுமே யென்று மனவெறுப்பில்லாமல் அக்குதிரையோடுகூட ஓரிரவெல்லாம் வஸித்திருந்தனள். அப்பொழுது தசரத மஹாராஜன் [3] மஹிஷி, பரிவ்ருத்தி, வாவாதை, பாலாகலி என்னும் தனது நான்கு பத்நிகளை ப்ரஹ்மா,

---

1 இங்குக் கட்டமுடியாத பாம்பு முதலியவற்றைக் கட்டுகையாவது கூண்டிலடைத்து வைக்கையே. 'இந்த்ராய ராஜ்ஞே ஸூகரோ வருணாய ராஜ்ஞே க்ருஷ்ண:' இது முதலிய அநுவாகங்களில் அந்தந்த பசுக்களும் அந்தந்த தேவதைகளும் படிக்கப்பட்டிருக்கின்றன.

2 இங்கு—'கௌஸல்யா தம் ஹயம் தத்ர பரிசர்ய ஸமந்தத: | க்ருபாணைர்விஸஸாரைநம் த்ரிபி: பரமயா முதா ||' என்று மூலம். இதில் 'க்ருபாணை:' என்று சொல்லபபட்டது, க்ருபாணமென்றால் கத்தி. ஆகையால் (மூன்றுகத்திகளால்) என்று சொல்லப்பட்டது. ஆயினும் இங்குக் கத்தியென்றால ஸ்வர்ணமயமான ஊசியெனக்கொள்ளவேண்டும். இல்லாதபக்ஷத்தில் 'ஸௌவர்ணீபிஸ் ஸூசிபி: பத்நயோஸிவஸ்யாஸிபதாந் கல்பயந்தி' என்கிற ஸூத்ரத்தோடு விரோதம் வரும்.

3 'க்ருதாபிஷேகா மஹிஷீ பரிவ்ருத்தி ருபேக்ஷிதா | வாவாதா ஹோமிநீ பாத்ரப்ரஹா பாலாகலீ மதா' என்கிறபடியே பட்டாபிஷேகம் பெற்றவள் மஹிஷி யென்றும், அரசன் ஸம்போகித்து உபேக்ஷிக்கப்பெற்றவள் பரிவ்ருத்தியென்றும, ராஜஸேவையை வாவாதை

உத்காதா, ஹோதா, அத்வர்யு என்னும் நான்கு ருத்விக்குக்களுக்கும் அடைவே தக்ஷிணையாகக் கொடுக்க, அவர்களும் கைப்பற்றினர். பின்பு இந்திரியங்களையெல்லாம் வென்று யாகப்ரயோகங்களில் மிகவும் தேர்ந்த அத்வர்யு என்னும் ருத்விக்கு அக்குதிரையின் குடலையெடுத்து விதிப்படி அக்நியில் பசநம் செய்தனன். மன்னவனும் அக்குடலை, அக்நியில் ஹோமம் செய்யும்போது காலந் தவறாமல் விதிப்படியிருந்து தனது பாபங்கள் போகும்படி ஹோமகந்தத்தை மோந்தனன். ருத்விக்குக்களாக வரிக்கப்பட்ட பதினாறு ப்ராஹ்மணர்களும் அவ்வச்வத்தின அங்கங்களை யெல்லா மெடுத்து மந்த்ரங்களைச் சொல்லிக்கொண்டு விதிப்படி அக்நியில் ஹோமஞ் செய்தனர். 'மற்றைப் பசுக்களின் ஹவிஸ்ஸை இரலிக்கிளைகளால் செய்யப்பட்ட பாயிலிட்டுச் சுத்தஞ் செய்ய வேண்டும்; அச்வத்தின் ஹவிஸ்ஸை மாத்திரம் நீர்வஞ்சிக்கொடியால் செய்யப்பட்ட பாயிலிட்டுச் சுத்திசெய்ய வேண்டும்' என்னும் விதிப்படியே செய்து முடித்தனர்.

அச்வமேதஞ் செய்யவேண்டும் நாட்கள் அநேகமாயினும் கல்பஸூத்ரங்களிலும் அதற்கு மூலமான வேத ப்ராஹ்மண பாகங்களிலும் முக்கியமாக மூன்று தினங்கள் கணக்கிடப்பட்டிருக்கின்றன. அதில முதல் நாள் சதுஷ்டோமமென்றும், இரண்டாவதுநாள் உக்த்யமென்றும, மூன்றாவதுநாள் அதிராத்ரமென்றும் யாகங

யென்றும், ராஜாவுக்குப் பாத்ரங் கொடுப்பவள் பாலாகலியென்றும் அறிக. இந்நால்வரில்—மஹிஷியை ப்ரஹ்மாவுக்கும், பரிவ்ருத்தியை உத்காதாவுக்கும், வாவாதையை ஹோதாவுக்கும், பாலாகலியை அத்வர்யுவுக்கும அரசன் தக்ஷிணையாகக் கொடுக்கவேண்டும். இந்த க்ரமம் 'மஹிஷீ° ப்ரஹ்மணே ஊதாதி, வாவாதா° ஹோத்ரே, பரிவ்ருத்தி முத்காத்ரே, பாலாகலீ மத்வர்யவே' என்று ஸூத்ரத்தில் சொல்லப்பட்டது. பின்பு அந்த ருத்விக்குக்களும் அவர்களுக்குப் பதிலாக த்ரவ்யத்தைப் பெற்றுக்கொண்டு அவர்களைக் கொடுத்துவிடுவார்கள்.

களை நடத்துவதால் அந்தந்த யாகத்தின் பேரால் அந்தந்த திநங்களுக்கு வ்யவஹாரம நடந்து வருவதுண்டு. அப்படியே அம்மூன்று திநங்களிலும் அம்மூன்று யாகங்களை விதிபபடி நடத்தினர். அன்றியே இதர சாஸ்த்ரங்களில் இவ்வச்வமேதத்திற்கு மற்றுஞ் சில யாகங்களைச் செய்யவேண்டுவதாகச் சொல்லுகையாலே, அவைகளையுங் குறையறச் செய்வித்து நடத்தினர். அவை ஜ்யோதிஷ்டோமமொன்றும் ஆயுர்யாகமொன்றும் அதிராத்ரமிரண்டும் அபிஜித்தொனறும் விச்வஜித்தொன்று அப்தோர்யாமமென்கிற மஹாயஜ்ஞமொன்றும் ஆக ஏழு யாகங்கள். இப்படி அமமூன்று திநங்களொழிய மற்றைத் திநங்களில் இந்த யாகங்களையும் மேன் மேலும் நன்மையை விரும்பி அவ்வரசன் செய்வித்தனன்.

. தாநத்தில் மிகவும் புகழ்பெற்ற இக்ஷ்வாகு வமசத்திற் பிறநத அத்தசாத மஹாராஜன் தன்குலத்தின் புகழ் மேன்மேலும் வளரும்படி ஹோதாவுக்குக் கிழக்குதிசையையும், அத்வர்யுவுக்கு மேல் திசையையும், ப்ரஹ்மாவுக்குத் தென்திசையையும், உத்காதாவுக்கு வடதிசையையுமாக இப்படி தக்ஷிணை கொடுத்தனன. இத்தாநம் அம்மன்னவன் புதிதாகக் கற்பித்துச் செய்ததன்று. முன்பு தானே தோனறிய நான்முகக்கடவுள் செய்த அச்வமேதயாகத்தில் இங்ஙனம் தக்ஷிணை ஏற்படுத்தப்பட்டது. ஆகையால் மஹாபுருஷனுகிய அத்தசாத மன்னவனும க்ரமபபடி யாகத்தை நிறைவேற்றி அநத யாகம் பூர்த்தியாகுமபொருட்டுப் பூமியனைத்தையும ருத்விக்குக்களுக்குத் தாநஞ்செய்தனன். அவ்வநதணர்களனைவரும அங்ஙனந் தாநஞ்செய்து கல்மஷமொனறுமின்றி விளங்கும் அம்மன்னவனை நோக்கி, 'மஹாராஜனே! இப்பூமண்டலமனைத்தும் நீர் ஒருவரே ஆளத்தக்கவர்.

இப்பூமியால் எங்களைப்போல்வாருக்கு ப்ரயோஜநமென்? நாங்கள் இதைக் காக்க வல்லமையற்றிருக்கின்றனம். ஏனெனில், நாங்கள் எப்பொழுதும் வேதமோதுவதே தொழிலாகி எப்பொழுதும் அதில் ஊற்றங் கொண்டிருக்கின்றோமாகையல் நாங்கள் இப்பூமியை யாள அறியோம். உமக்கோ இது ஸஹஜமான தொழில். இப்பூமண்டலத்திற்குப் பதிலாக இதன் விலையைக் கொடுத்துவிடும். விலையற்ற இப்பூமண்டலத்திற்குப் பதிலாக விலை யெங்ஙனம் கொடுப்பதென்று சிந்திக்க வேண்டாம். நீர் ஏதாயினும் கொஞ்சம் கொடுத்திராயினும் போதும். நரோத்தமனே! மிகவும் மேலான ரத்நங்களையாவது நல்ல பொன்னையாவது பசுக்களையாவது மற்றும் உமக்குண்டான எதையாவது கொடுத்து விடுவீராக. இப்பூமியால எங்களுக்கு ப்ரயோஜந மில்லை' என்றனர். இங்ஙனம் வேதங்களின் கரை யறிந்த அவ்வந்தணாகள் சொல்லக் கேட்ட அம்மன்னவனும் அவர்களுக்குப பசுக்கள் பத்துலக்ஷமும் பொன் பத்துக்கோடியும அதற்குப பதருப்பங்கதிகமாக வெள்ளியும் தாநஞ்செயதனன்.

பினபு ருத்விக்குகள் அனைவரும் ஒன்றுகூடித் தங்களுக்கு மொத்தமாக வந்த அந்தப் பணத்தையெல்லாம் பங்கிடும்பொருட்டு ருச்யச்ருங்கமா முனிவரும், புத்திமைந்த வஸிஷ்டமாமுனிவருமாகிய இவவிருவரிடங் கொண்டு வந்து கொடுத்தனர். பிறகு அவாகள் யாவரும் அவவிருவர் மூலமாக க்ரமபபடி பங்கிட்டுக்கொண்டு மிகவும மனககளிபபுற்று மனனவனை நோக்கி 'எங்களுக்கு மிகுநத ஸநதோஷமாய்விட்டது. மற்றொன்றும வேண்டாம்' என்றுரைத்தனர். அப்பொழுது அம்மனனவன் யாகத்தைப் பார்க்க வந்த அந்தணரனைவர்க்கும் நனகு ஊக்கங்கொண்டு பொன்னைக் கோடி

கோடியாகக் கொடுத்தனன். பின்னும் பேதையாகிய ஓர் அந்தணன் உயர்ந்த கைவளை வேண்டு மென்று யாசிக்க, அவ்வரசன் தன்கைவளையை யீந்தனன்.

இப்படி யதேஷ்டமாக தக்ஷிணை யளிக்க ப்ராஹ்மணர்கள் யாவரும் களித்தனர். அந்தணர்விஷயத்தில் அளவற்ற அன்பு கொண்ட அம்மஹீபாலனும் ஸந்தோஷத்தினால் கண்கள் மலர்ந்து ஆநந்த நீர் சொரிந்து கொண்டு அவ்வந்தணர்க்கு நமஸ்காரஞ் செய்தனன். மிகவும் உதாரனாகி மானிடவர்களில் மஹாவீரனுமாகிய அத்தசரத மஹாராஜன் இவ்வாறு பூமியில் தலை சாய்த்து வணங்க, அவ்வந்தணரனைவரும் அவ்வரசனுக்கு விதிப்படி ஆசீர்வாதஞ் செய்தனர். இங்ஙனம் பாபங்களையெல்லாம் போக்க வல்லதும் விண்ணுலகை யளிக்குந் திறமுடையதும் மற்றை மேலான அரசர்களாலும் செய்ய முடியாததுமாகி யாகங்களனைத்திலும் சிறந்த அச்வமேதமென்னும் அம்மஹாயாகத்தைக் குறையறச் செய்து முடித்தமையால் அம்மன்னவன் மிக்க மனக்களிப்புற்றனன்.

பின்பு தசரதன் ருச்யச்ருங்கரைப் பார்த்து 'ஓ நல்லொழுக்கமுள்ள மாமுனிவரே! எனது வம்சம் விருத்தியாகும்படியான காரியத்தை நீர் செய்ய வேண்டும்' என்றனன. அவவேதியரும் அப்படியே யென்று அரசனை நோக்கி 'ராஜனே! உன் குலத்தை விருத்திசெய்ய வல்ல நான்கு புதல்வர்கள் உனக்கு உண்டாகப்போகின்றனர்' என்றுரைத்தனர். இப்படி அவ்வந்தணர் இனிதாகச் சொன்ன சொல் கேட்ட மஹாத்மாவாகிய அத்தசரத மன்னவன் அம்முனிவரை நமஸ்கரித்து மிகவும் களித்திருக்க, அவ்வந்தணர் மீளவும் அம்மன்னவனை நோக்கி இவ்வண்ணம் மொழிந்தனர். பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## தேவதைகள் விஷ்ணுவிடம் சென்று ராவணனுடைய துஷ்டத்தனத்தைச் சொல்லுதல்.

ருச்யச்ருங்க மாமுனிவர் மேதாவியும் அதர்வவேதங்களை நனகறிந்தவருமாயிருப்பவர். ஆகையால் அவர் அவ்வரசனுக்குப் புதல்வர் உண்டாவரென்று வாக்களித்த பின்பு 'இவனுக்குப் பிள்ளை பிறக்கும் பொருட்டுச் செய்யவேண்டிய கருமம் யாது' என்று சற்றுநேரம் தியானித்து மதியாளராகையால் அவ்வளவிலே தகுந்த உபாயத்தை நினைவுமூட்டிக்கொண்டு ராஜனைப் பார்த்து 'நான் உனக்குப் பிள்ளை யுண்டாகும்பொருட்டு சாஸ்த்ரங்களில் ஏற்பட்டதும் பிள்ளையைப் பிறப்பிக்க வல்லதும் அதர்வவேதத்தில் சொல்லப்பட்ட மந்த்ரங்களைக் கொண்டு செய்யவேண்டியதுமான ஓர் யாகத்தை விதிப்படி செய்யப்போகின்றேன்' என்று சொல்லினர். பின்பு அப்படியே பிள்ளையைத் தரவல்ல அந்த யாகத்தை அவ்வரசனுக்குப் பிள்ளையுண்டாகும்பொருட்டுச் செய்யத் தொடங்கி மந்த்ரங்களிற் சொல்லியபடி அக்நியில் ஹோமம் செய்தனர். பிறகு தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் நான்முகக்கடவுளும் மற்றும் மஹர்ஷிகளும் அந்த யாகத்தில் தங்கள் தங்கள் ஹவிர்ப்பாகம் வாங்கிக்கொள்வதற்காக ஒன்றாகக் கும்பல்கூடி வந்தனர்.

அங்ஙனம் வந்து சேர்ந்த தேவதைகள் யாவரும் அந்த யாகஸபையில் பிறர் காணாதபடி யிருந்து உலகத்தைப் படைக்கும் ப்ரஹ்மதேவனைப் பார்த்து இச்சிறந்த வார்த்தையை மொழிந்தனர். 'ஓ பகவானே! உமது அருள்பெற்று யாவராலுந் தடுக்க முடியாத பராக்ரமங்கொண்ட ராவணனென்னும் ராக்ஷஸன எங்களையனைவரையும் தொந்திரவு செய்து கொண்டிருக்கிறா

னன். நாங்கள் அவனை அடக்க வல்லமை யற்றிருக்கின்றனம். முன்பு நீர் அவனிடம் மிகுந்த ப்ரீதி கொண்டு எங்களால் எவ்விதத்திலும் சாவுண்டாகாமற்படி வரங்கொடுத்தீர். நீர் கொடுத்த வரத்தைப் பாராட்டிக்கொண்டு நாங்களும் அவன் செய்யுஞ் செயல்களை யெல்லாம் பொறுத்துக் கொண்டிருக்கின்றனம். அவ்வறிவுகேடன் மூன்று லோகங்களையும் நடுங்கச் செய்கின்றனன். உயர்ந்தவர்களாகிய திக்பாலர்களையும் பகைக்கின்றனன். இவர்களை அவர்களையென்று சொல்வி யென்? தேவர்களுக்கெல்லாம் அரசாகிய மஹேந்திரனையே பட்டத்தினின்றும் தொலைக்க விரும்புகின்றனன். அவன் நீர் கொடுத்த வரத்தினால் மதிமயங்கிக் கொழுத்து, எதிரிடக் கூடாத ரிஷிகளையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் ராகு முதலிய அஸுரர்களையும அந்தணர்களையும் அலக்ஷ்யஞ்செய்து வருத்துகின்றனன்.

அவன் க்ரீடாபர்வதம் முதலிய இடங்களில் திரிந்து கொண்டிருக்கும்பொழுது சுடும்படி சூரியன் வெய்யிற் காயமாட்டான். அவன் பூந்தோட்டங்களில் விளையாடிக்கொண்டிருக்கையில் வேகமாக வீசில் மேலே புஷ்பங்கள் விழுமோ வென்று பயந்து காற்றும் வேகமாக வீசுகின்றதில்லை. எப்பொழுதும் கரையில்வீசுகின்ற அலைகளை யுடைய ஸமுத்ரமும் அவனைக் கண்டால் கொஞ்சமும் அசையாமலிருக்கின்றது. கர்ப்பங்கலங்கும்படி மிகவும் பயங்கரமாகத் தோன்றுகின்ற அந்த ராக்ஷஸனிடத்தில் எங்களுக்கும் பயம் அதிகமாக உண்டாயிருக்கின்றது. ஆகையால் அவனைக் கொல்ல வேண்டிய உபாயத்தை நீர் ஆலோசித்துச்செய்யவேண்டும்' என்று வேண்டினார்கள்.

இப்படி தேவர்களனைவராலும் வேண்டிக்கொள்ளப்பட்ட நான்முகனும் சற்றுநேரம் ஆலோசித்து உடனே ஸந்தோஷமாக 'துராத்மாவாகிய அந்த ராவ

ணனைக் கொல்ல உபாயம் எனக்கு இங்ஙனம் தோற்றினது. அது யாதெனில், அவன் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் தேவர்களாலும் அஸுரர்களாலும் எனக்கு வதம் நேரிடக்கூடாதென்று வரங் கேட்டனன. நானும் அப்படியே யாகட்டுமென்று சொல்லிவிட்டனன். அவ்வரக்கன் அங்ஙனம் வரம் கேட்கும் போது மானிடர்களைப் பற்றிக் கேட்டால் தனக்கு அவமதியா யிருந்ததைப்பற்றி அவர்களால் தனக்கு வதம் நேரிடக் கூடாதென்று கேட்கவில்லை. ஆகையால் மானிடர்களைக் கொண்டே அவனைக் கொல்ல வேண்டும். இவனுக்கு வேறு ம்ருத்யு இல்லை' என்று மொழிந்தனன்.

இப்படி நான்முகன் உரைத்த இனிய அம்மொழியைக் கேட்டுத் தேவதைகளும் மஹர்ஷிகளும் மிகுந்த ஸந்தோஷங் கொண்டனர். இங்ஙனமிருக்கும் ஸமயத்தில் எபபொருள்களிலும் உள்ளும் புறமும ஒருங்க நெருங்கி வியாபித்திருக்குந் தன்மையனுகையால் இவையெல்லா மறிந்த ஸர்வேச்வரனுகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு தாம் சிலரை ரக்ஷிக்கும்படியான காலம் வாய்த்ததே யென்று ஸந்தோஷத்தினுல் திருமேனி யெங்கும் மிக்க ஒளி பெற்று ஆச்ரிதர்களைக் காக்குங் கருவிகளாகிய சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களை யேந்திக்கொண்டு பீதாம்பரம் விளங்கத் தான ஜகத்பதியாயினும் அப்பெருமையைப் பாராமல் அங்கே யெழுந்தருளி நானமுகக்கடவுளின் அருகே வந்து நின்றனன். இப்படி யெழுந்தருளின ஸர்வேச்வரன நான்முகனுடன் கலந்து ஆச்ரிதரக்ஷணத்திற்குரிய செயல்களை ஊக்கத்துடன் நினைவிட்டுக்கொண்டிருக்க, தேவர்கள் அனைவரும் எழுநது பணிந்து பலவகையாகப் புகழ்ந்து இங்ஙனம் மொழிந்தனர்.

ஓ மஹா விஷ்ணுவே! நீர் உலகங்களுக்கு நன்மை செய்யும் பொருட்டுத் தானுகவே ஸித்தமாயிருக்குங்

தன்மையர். அப்படிப்பட்ட உம்மை நாங்கள் லோகரக்ஷணத்தின்பொருட்டுத் தூண்டவேண்டியது ஒன்றும் இல்லையேயாயினும் அவ்விஷயத்தில் வீணாகவே ஏவுகின்றனம். ஏவுகிற காரியம் என்னவென்றால், ஸகலதர்மங்களையும் அறிந்து மிகவும் தாநசீலனாகி மஹர்ஷியைப்போல் விளங்கும அயோத்யாதிபதியாகி, அதோ யாகஞ்செய்துகொண்டிருக்கும் தசரத மஹாராஜனுக்கு நாணம செல்வம புகழ் என்பவகைளே வடிவங்கொண்டு பிறந்தாற்போல விளங்கும் மனைவிகள் மூவரிடத்திலும் நீர் உமமை நான்கு வகையாகப் பிரித்துக்கொண்டு நாலு பிள்ளைகளாகப் பிறக்கவேண்டும். அப்படி அவ்வரசன மனைவிகளிடத்தில் நீர் மனிதனாகப் பிறந்து வீர்யபலஙகளால் மேன்மேலும் வளர்ந்து உலகங்களுக்கெல்லாம் பகைவனாகி, தேவதைகளாலும கொல்ல முடியாத ராவணனை யுத்தத்தில் முடிக்கவேண்டும்.

மூர்க்கனாகிய அந்த ராவணனென்னும் அரக்கன் வீர்யத்தின மிகுதியால் அடக்கமுடியாத கர்வங்கொண்டு தேவர்களையும் கந்தர்வர்களையும் ஸித்தர்களையும் மஹர்ஷிகளையும் பிடித்துக்கொண்டிருக்கின்றனன். அவன பின்னும் ரிஷிகளையும் நந்தநவநத்தில் தம்பதிகளாகி விளையாடிக்கொண்டிருக்கிற கந்தர்வர்களையும் அப்ஸரஸ் ஸ்த்ரீகளையும் கிஞ்சித்தேனும் மனமிரக்க

1 நானகு வகையாகப் பிரித்துக்கொண்டு நாலுபிள்ளைகளாகப் பிறப்பது ஏதுக்கெனில், ராவணனையும், ராவணபுத்ரனாகிய இந்த்ரஜித்தையும, லவணாஸுரனையும், கந்தர்வர்களையும் வரிசையாகக் கொல்லுவதறகாக வென்று கோவிந்தராஜீயம். ஸாமாநயதர்மத்தையும், விசேஷதர்மத்தையும், விசேஷதரதர்மத்தையும, விசேஷதமதர்மத்தையும வெளியிடுவதற்காக வென்று முகவுரையிற் சொன்னதை யிங்குக் காரணமாக உணர்க.

மின்றி மிகவும் க்ரூரனாகி வருத்துகின்றனன். ஆகை யால் அவனை அவச்யம் கொல்ல வேண்டும். அவனை வதஞ்செய்யும்பொருட்டு யக்ஷ கந்தர்வ ஸித்தர்களும் முனிவர்களும் மற்றுமுள்ள தேவர்களுமாகிய நாங்கள் அனைவரும் உம்மிடம் வந்து உம்மையே சரணம் புகுந் தனம். ப்ரஹ்மதேவன் ருத்ரன் முதலியவர்களும் இருக்க, என்னையே சரணமடைவது ஏனென்று கேட்க வேண்டாம். தேவனே! நீரே யன்றோ எங்களனைவர்க்கும் மேலான கதி. எப்படிப்பட்ட சத்ருவும் புறங் கொடும்படியான பராக்ரமமுடைய உம்மை யன்றியே வேறொருவர் எங்களுக்கு உண்டோ? ஆகையால் நீர் உம்மையே சரணம் அடைந்த தேவதைகளின் சத்ருக் களாகிய ராக்ஷஸர்களை நிர்மூலமாகத் தொலைக்கும் பொருட்டு மநுஷ்ய லோகத்தில் அவதரிப்பதாகத் திரு வுள்ளங் கொண்டருள வேணும், என்றனர்.

தேவதைகள் இங்ஙனம் தன்னை ப்ரார்த்திக்க, தேவதைகளில் சிறந்து அத்தேவர்களுக்கும் பிரபுவாகி உலகமெல்லாம் அடி வணங்க நின்ற மஹாவிஷ்ணு, அவ்விடத்தில் கும்பல்கூடி வந்து தன்னைச் சரணம் புகுந்த நான்முகன முதலிய தேவர்கள் அனைவரை யும் நோக்கி, 'ஓ தேவர்களே! நீங்கள் பயப்படவேண் டாம். உங்களுக்கு நன்மை உண்டாகும். ஏனெனில், கெடுநினைவு கொண்டு தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பயத்தை விளைவிப்பவனாகி மிகக்கொடியவனுமாகிய ராவணனையும் அவன் பிள்ளைகளையும் பேரன்களையும் நண்பர்களையும் மந்த்ரிகளையும் ஜ்ஞாதிகளையும் மற்று முள்ள பந்துக்களையும் யுத்தத்தில் முடித்து தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு இப்பூமியனைத்தும் பரிபால

கஞ் செய்து கொண்டு பதினோராயிரமாண்டுகள் மனுஷ்யலோகத்தில் இருக்கப் போகிறேன், என்றனன்.

ஆக்குவது அழிப்பதாகி விளையாடல் கொண்டு ஸகலாத்மசேஷியாய் விளங்கும் அம்மஹா விஷ்ணுவுக்கு இது எவ்வளவு? இப்படி அம்மஹாநுபாவன் தேவதைகளுக்கு வரங்கொடுத்து அவர்கள் வேண்டிக் கொண்டபடி மநுஷ்யலோகத்தில் தான வந்து பிறக்கத்தக்க தோரிடத்தைத் ஆலோசித்தனன். அங்ஙனம் ஆலோசித்த பின்பு தாமரையிதழ்போல் மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரியவாய கண்களை யுடைய பெருந்தேவன் அப்பொழுது தனது சரீரத்தை நான்கு வகையாகச் செய்துகொண்டு தசரதமஹாராஜனைத் தகப்பனாக விரும்பினன். பின்பு கந்தர்வர்களும் பதினொரு ருத்ரர்களும் முப்பத்து முக்கோடி தேவதைகளும் அப்ஸரஸ் ஸ்த்ரீகளும் அம்மதுசூதனனாகிய மஹாபுருஷனை திவ்யாத்மஸ்வரூப விஷயமான துதிகளால் புகழ்ந்தனர்.

மேலும், அவ்வானவர்கள் அனைவரும் மீளவும் அம்மஹாவிஷ்ணுவைப் பார்த்து, 'தேவனே! அந்த ராவணன் பிறந்தது முதலாக மிகவும் கர்வங் கொண்டவன்; யாவரும் கேட்ட மாத்திரத்திலேயே நடுங்கும்படியான பராக்ரம முடையவன்; அதற்கு மேல் வரம் பெற்றதனால் மிகவும் கர்வம் மேலிட்டு தேவேந்திரனோடும் பகை செய்து உலகங்கள் அனைத்தையும் ஐயோ வென்று அழும்படி வருந்தச் செய்கின்றனன். இவை யெல்லாம் இருக்க, காட்டில் காய் கிழங்குகளைக் கொண்டு பக்ஷித்துத் தவஞ் செய்து போது போக்குந் தாபஸர்களையும் வீருத்தமுறச் செய்து தன்பேரைச் சொன்ன மாத்தி

ரத்தில் அவர்களைக் கடகடவென்று நடுங்கச் செய்கின்றா னென்றால், இன்னமும் அவனுடைய கொடுமையைச் சொல்லவேண்டுமோ? அவனை நீர் முடிக்காமலிருக்கத் தகாது. ஆகையால் முன்னே அவனுருவைத் தொலைக்க வேணும். ஓ தேவாதிதேவனே! மிகுந்த விக்ரமங் கொண்டு உலகங்களை யெல்லாந் துனபப்படுத்துகிற ராவண னென்னும் அவ்வரக்கனைப் படைகளோடும் சுற்றத்தாரோடும் யமனது வீட்டிற்கு அதிதியாகச் செய்து மனவருத்தம் தீர்ந்து ராகத்வேஷம் முதலிய தோஷங்களொன்று மின்றி எங்களைப்போன்றவர்க ளாலுமணுக வொண்ணாத உமது திவ்யலோகத்திற்கு எழுந்தருளவேணும்'என்று மொழிந்தனர். பதினைந்தா வது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ஸ்ரீமஹாவிஷ்ணு தேவர்கள் சொல்லியபடி மநுஷ்யனுகைப் பிறக்க எண்ணம் கொள்ளு தலும், தசரதனுடைய யஜ்ஞத்தில் திவ்ய புருஷனைபாய ஸஙகொண்டுவந்து கொடுத்தலும். }

உலகங்களுக் கெல்லாம் தான் ஆதாரமாகித் தானும் உலகத்திலெங்கும் பரந்து நிற்பவனும் ப்ரளய மஹாஜலத்தில் பள்ளிகொள்பவனும் யாவர்க்கும் மேலா கிப் படைப்பது காப்பது அழிப்பது என்னு மிப்படி களிலே விளையாடலுறுபவனும் ஸ்ரீமந்நாராயணனுமா கிய அம்மஹா புருஷன் இங்ஙனம் தேவர்களால் ப்ரார்த் திக்கப்பட்ட பினபு தானே எல்லா மறிந்தவனாயினும் தேவர்களைப பெருமை படுத்தும்பொருட்டு அவர்களைக் குறித்து மிகவுமழகாக 'ஓ தேவதைகளே! கெடுநினைவு கொண்டு ரிஷிகளுக்குப் பகைவனாகிய ராவணனென்

னும் அவ்வரக்கனை எவ்வுபாயத்தைக் கொண்டு முடிக்கலா மென்று வினவினன்.

அதற்கு தேவதைகள் அனைவரும் எப்பொழுதும் அழிவின்றி விளங்கும் அம்மஹாவிஷ்ணுவைப் பார்த்து 'தேவனே! மானிட வடிவங்கொண்டு யுத்தத்தில் ராவணனைக் கொல்லவேண்டும். மநுஷ்ய தேஹமே யெடுக்க வேண்டுவதேனெனில், பகைவரை வெல்லும் பரமபுருஷனே! அவன் வெகுகாலம் ப்ராஹ்மாவைக் குறித்து மிகவும் கடோரமான தவஞ் செய்தனன். உலகங்களுக்கெல்லாம் முன்னே பிறந்து அவ்வுலகங்களை யெல்லாம் படைத்த நான்முகக்கடவுள் எவ்வித வரங் கேட்கினும் கொடுக்க வல்லனாகையால் அத்தவத்திற்கு மிகவும் ஸந்தோஷங்கொண்டு மனிதர்களைத் தவிர மற்றைப் பல விதமான ப்ராணிகளிடத்திலிருந்து பயம் உண்டாகாதென்று அவ்வரக்கனுக்கு வரங் கொடுத்தனன். அப்படிக்கு நான்முகன் முன்னே வரங் கொடுக்கும்போது அவ்வரக்கன் மனிதர் எவ்வளவரென்று அவர்களைக் கொஞ்சமும் நினைக்கவேயில்லை. இப்படி ப்ரஹ்மதேவனிடம் வரம் பெற்று அவன் மிகுந்தகர்வத்துடன் மூவுலகங்களையும் பீடித்து, மேலும் முறைகடந்து பிறருடைய மாதர்களையும் இழுத்துக்கொண்டு போகின்றனன். ஆகையால் அவனுக்கு மனிதர்மூலமாகவே சாவுநேரிட வேண்டி யிருக்கிறது' என்றனர்.

இப்படி அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸர்வர்க்கும் அந்தராத்மாவாகிய அம்மஹாவிஷ்ணு மானிட உருவனாகித் தான் அவதரிக்கும் பொருட்டு தசரதமஹாராஜனைத் தகப்பனாக விரும்பினன். அப்பொழுது பகைவரை வென்று மிக ஒளி பொருந்தி

விளங்கும் அத்தசரதமன்னவன் ஸந்தானமின்றி யிருக்கையால் புதல்வனைப் பெறவிரும்பிப் பிள்ளையை யுண்டுபண்ணவல்ல புத்ரகாமேஷ்டி யென்னும் யாகத்தைத் தொடங்கிச் செய்தனன். இங்ஙனமிருக்க, ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் மநுஷ்யரூபங் கொண்டு அவதரிக்க வேண்டுமென்று நிச்சயஞ் செய்துகொண்டு தேவதைகளும் மஹரிஷிகளும் பூஜித்து நிற்க, நான்முகனை நோக்கி 'நல்லது அவ்வாறே செய்யலாம். யான் போய் வருகின்றேன்' என்று சொல்லி மறைந்துவிட்டனன்.

பின்பு யாகஞ் செய்து கொண்டிருக்கும் தசரதனது ஆஹவநீயாக்நிகுண்டத்தினின்று பெரும்பூதமொன்று காண்போர் கண்களெல்லாம் மின் மினுக்கும்படி மிகுந்த ஒளிபொருந்தி வெளியே கிளம்பிற்று. அது மிகுந்த வல்லமையும் சிறந்த வலிவும் பெற்று, கறுப்புஞ் சிவப்புங்கலந்த வஸ்த்ரந் தரித்து, சிவந்த முகத்துடன் தென்பட்டது. மேலும் அது துந்துபிவாத்யம் போன்ற வொலியை யொலித்து, உடம்பிலும் தலையிலும் மீசையிலும் சிங்கத்தின மயிர்போல் நிகுநிகென்று நெருங்கி விளங்குகிற மயிர்கள் அமைந்து, சுபலக்ஷணங்களனைத்தும் பொருந்தி, உயர்ந்த ஆபரணங்களால் அலங்காரம் பெற்று, பர்வத சிகரம்போல் உயர்ந்து, மதித்த புலிபோன்ற பராக்ரமமுடையதாகி ஸூர்யனை யொத்த உருவங்கொண்டு கொழுந்து விட்டெரியும் அக்நிஜ்வாலையை யெதிர்த்து, மிகவும் அற்புதமாகி விளங்கிற்று.

இவ்வளவன்றியே வெள்ளியினால் செய்த மூடி யிடப்பெற்று, திவ்யபாயஸத்தினால் நிறைந்து, புடமிட்ட பொன்னாலமைக்கப்பட்டு, 'மாயையோ?' என்னும்படி



119 ப்ராஜாபத்யபுருஷன் தசரதனுக்குப் பாயஸங் கொடுத்த

அற்புதமான ஓர் பாத்திரத்தை அனபுள்ள பத்நியைப் போல்இரண்டு கைகளாலும் அணைத்துக்கொண்டு மேற் கிளம்பித் தசரதனைப பாாத்து 'அரசனே! இஙகு வந் திருக்கும் என்னை ப்ரஜாபதியினிடமிருநது வநத புருஷ னாகத் தெரிந்துகொள்' என்றது. பினபு அப்பொழுது அம்மனனவன கையைக் கூப்பிக்கொண்டு 'பகவானே! உனக்கு நல்வரவு உண்டாகவேணும். நான உனக் குச் செயய வேண்டியதை அருளிச் செய்ய வேணும, என்றனன். பிறகு அந்த ப்ராஜாபத்ய புருஷன மீள வும் அரசனைப் பார்தது 'ராஜனே! நீ அச்வமேதஞ் செய்தும் புத்ரகாமேஷ்டி செய்தும் தேவர்களை ஆரா தித்தனையாகையால் உனக்கு இபபொழுது இந்தபபாய ஸம் கிடைத்தது மஹாராஜனே! இப்பாயஸம் தேவ னாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவால் நிருமிக்கப்பட்டது ஸந் தாநத்தை யுண்டுபண்ண வல்லது. பொருளைக் கொடுக் குந திறமுடையது. ஆரோக்கியத்தையும் விருததி செய்யவற்று. ஆகையால் இதைக் கைப்பற்றி உனக் குத் தக்கவர்களாகிய பத்நிகளுககுக் கொடுததுச் சாப்பிடச் சொல். அபபடி கொடுத்தாயாகில், நீ எதற் காக யாகஞ் செய்தனையோ, அப்புதல்வர்களை அபபத் நிகளிடத்தில் பெறுவாய்' என்று சொல்லிற்று.

அப்படியே யென்று அவ்வரசனும் மனக்களிப் புற்று, தேவர்களால் கொடுக்கப்பட்டு தேவாநநஸம் பூர்ணமான அந்த ஸுவாணபாத்ரததைத் தலையால் வாங்கிக்கொண்டு அற்புதமாகிப் பார்க்க அழகியது மான அப்பூதத்தை வணஙகி மிகுநத ஸந்தோஷத்து டன அதை வலம் வந்தனன். பின்பு தசரதன் தேவா களால் செய்யப்பட்ட அப்பாயஸததைப் பெறறு ஏழை

யாயிருக்கு மொருவன் பணத்தைப் பெற்றுக் களிப்பது போல் அளவற்ற ஆநந்த மடைந்தனன். உடனே அற்புதாகாரமாகி மிகுந்த ஒளிகொண்ட அப்பூதமும் பாயஸங் கொடுக்கிற காரியத்தை நிறைவேற்றி அந்த அக்நியிற்றானே மறைந்துவிட்டது. இங்ஙனம் புதல்வரை யுண்டாக்கவல்ல திவ்ய பாயஸம் பெற்ற அத்தராணியாளனுடைய அந்தப்புர மனைத்தும் அப்போது சந்தோஷத்தினால் பிறந்த ஒளியின் மிகுதி கொண்டு சரத்காலத்திலுதித்து மாசற்று அழகிய சந்திரனது கிரணங்களால் சூழ்ந்த ஆகாயம்போல் மிகவும் அழகிதாகி விளங்கிற்று.

அவ்வரசனும் அரண்மனையிற் சென்று கௌஸல்யையை நோக்கி 'உனக்குப் புதல்வனை யுண்டாக்க வல்லதாகிய இப்பாயஸத்தைப் பெற்றுக்கொள்' என்றுரைத்து அந்நராதிபன் பிள்ளை பிறக்கும்பொருட்டு அப்பாயஸத்தில் பாதியைக் கௌஸல்யைக்குக் கொடுத்தனன். மிகுந்த பாதியிலும் பாதியை ஸுமித்திரைக்குத் தந்தனன். ஸுமித்திரைக்குத் தந்து மிகுந்ததிற் பாதியைக் கைகேயிக்கு ஈந்தனன். அம்மன்னவன் மனத்தில் ஆலோசித்துக்கொண்டு அமிருதம்போன்ற அப்பாயஸத்தில் நின்ற பாகத்தை மறுபடியும் ஸுமித்திரைக்குக் கொடுத்தனன். இங்ஙனம் அரசன பாயஸத்தை வெவ்வேறாகப் பங்கிட்டுக் கொடுக்க, அவ்வரசன் மனைவிகள் அனைவரும் அதை வாங்கிக்கொண்டு மிகுந்த மனக்களிப்புடன் மன்னவன் தமக்குப் பரிசு கொடுத்ததாக நினைத்தனர். பின்பு மாதுசிரோமணிகளாகிய அம்மன்னவனது மனைவிகள் யாவரும் அங்ஙனம் பங்கிட்டுக் கொடுத்தபாயஸத்தை வேறு வேறாகப் புசித்து மிகுந்த ஒளியுடன் விளங்கிச் சிலகாலஞ் சென்றபின்பு



120. தசரதன் பத்நிகளுக்குப் பாயஸம் பங்கிட்டுக் கொடுத்தல்.

அக்நியையும் ஸூர்யனையும் போன்ற ப்ரகாசம் பொருந்திய கர்ப்பங்களைத் தரித்தனர். பிறகு அம்மன்னவன் தனது பத்நிகள் கர்ப்பம நிறைந்து விளங்குவதைக் கண்டு மனக்கவலை நீர்ந்து ஸ்வர்க்கத்தில் தேவேந்திரனும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் பூஜிக்கின்ற ஸ்ரீ மஹாவிஷ்ணுபோல் மனமகிழ்ந்தவனாகி வீற்றிருந்தனன். பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தேவதைகள் தந்தமம்சத்தை வாநராதிகளில் பிறப்பிக்கை.

இங்ஙனம் ஸ்ரீமஹாவிஷ்ணு கம்பீரஸ்வபாவனாகிய அம்மஹாராஜனுக்குப் பிள்ளையாக அவதரிக்க உத்தேசித்திருக்கையில் மேல்வருமாறு எல்லாமறிந்த ப்ரஹ்மதேவன் தேவதைகள் அனைவரையும் நோக்கி இங்ஙனம் மொழிந்தனன். 'ஸ்ரீமஹாவிஷ்ணு தான் மொழிந்த மொழி தவறாமல் மானிடனாக அவதாரஞ் செய்து நம்மவர்யாவர்க்கும் நன்மையைச் செய்யும் பொருட்டு உலகங்களுக் கெல்லாம் பகைவனாகிய ராவணனைத் தொலைக்கப் போகின்றனன். ஆகையால் அம்மஹாத்மாவுக்கு கிங்கரர்களாகி ஸஹாயமாயிருக்கைக்குத் தக்க மிகுந்த பலமுடையவர்களும் கபடிகளாகிய ராக்ஷஸர்களோடு போர் புரிகைக்கு உரியபடி காமரூபங் கொள்ளவல்லவர்களுமாயிருப்பவர்களை நீங்கள் ஸ்ருஷ்டிக்கவேண்டும். மேலும் அவர்கள் மாயை யறிந்தவர்களும், சூரர்களும், வாயுவோடொத்த வேக முடையவர்களும், நீதி யுணர்ந்தவர்களும், மிகுந்த மதி யுடையவர்களும், விஷ்ணுவோடொத்த பராக்ரம முடையவர்களும், பிறராலே வெல்ல முடியாதர்வகளும், நான்கு உபாயங்களையு முணர்ந்தவர்களும, உருவத்தில் ஸிம்ஹம்போல் விளங்குபவர்க

ளும், அஸ்த்ர சக்திகளெல்லாம் அமைந்தவர்களும், அம்ருதபானஞ் செய்து என்றுஞ் சாவின்றி நின்றவர் போலிருப்பவர்களு மாயிருக்க வேண்டும்.

[1] அழகான அப்ஸரஸ்ஸ்த்ரீகளிடத்திலும், கந்தர்வ யக்ஷ பந்நக ருக்ஷ வித்யாதர கிந்நர ஸ்த்ரீகளிடத்திலும், அன்றியே வாநரஸ்த்ரீகளிடத்திலும், வாநர உருவங்கொண்டு உங்களோடொத்த பராக்ரமமுடைய புதல்வர்களை நீங்கள் ஸ்ருஷ்டிக்கவேண்டும். முன்னமே நான் எனக்காகக் கரடிகளுக்குத் தலைவனாகிய ஜாம்பவானென்பவனை ஸ்ருஷ்டித்திருக்கின்றனன. நான் கொட்டாவி விடும்போது உடனே என்வாயிலிருந்து அவன் சடக்கெனப பிறந்தனன். இப்படி நான்முகன உரைத்த வார்த்தையைக் கேட்ட தேவதைகளும் அவனது கட்டளைப்படி ஒப்புக்கொண்டு வாநர உருவங் கொண்ட புதல்வர்களை யிங்ஙனம் பிறப்பித்தனர். ஆழ்ந்த மனமுடைய ரிஷிகளும, ஸித்தர்களும, வித்யாதரர்களும், உரகர்களும், சாரணர்களும, மிகுந்த வீரர்களாகிய வாநர குமாரர்களைப் பெற்றனர்.

இந்திரன் மஹேந்த்ரபர்வதம்போல் ஏதுக்கு மசையாது தைரியம் நிறைந்து விளங்கும் வாநரசக்ரவர்த்தி

1 தேவதைகளுககுப் பார்வதியின் சாபத்தினல் தந்தமது தாரங்களில் பிள்ளையைப் பிறப்பிக்க நேராது. ஆகையால் அப்ஸரஸ்ஸுக்கள் முதலியவர்களை யிங்கு க்ஷேத்ரமாகச சொல்லப்பட்டது. ராவணன் திக்விஜயகாலத்தில் கைலாஸஞ்சென்று அங்கு நந்தியைக் கண்டு குரங்கென்று பரிஹாஸஞ் செய்ய, 'என்னைப் போனற பலிஷ்டர்களாகிய குரங்குகள் கையினலேயே நீ நாசமடையப் போகின்றாய்' என்று அவன் சாபங் கொடுத்தானுகையால் அந்தச் சாபத்துக்கு அநுகுணமாகப் புத்ரர்களை வாநராகாரமாகப் படைக்கும்படி ப்ரஹ்மா நியமித்தன னென்று தெரிய வருகின்றது.

யாகிய வாலியென்பவனை யுண்டாக்கினன். ஸூர்ய னும் பகைவரை நீறு செய்ய வல்ல தனது பராக்ரமத் திற்கு உரியபடி ஸுக்ரீவனென்பவனைப் பிறப்பித்த னன். பிருஹஸ்பதியும் வாநரர்களிற் சிறந்தவர்களனை வரினும் ஒப்பின்றி மதியாளனாகிய தாரனென்னும் வாநரோத்தமனைப் படைத்தனன். குபேரனும் தன் னைப்போல் ஸகல ஐச்வர்யங்களும் பொருந்தின கந்த மாதநனென்னும் வாநரனை உண்டுபண்ணினன். அக் கினியை நிகர்த்த ஒளி பெற்று மிகுந்த அழகுடையவனு மான நீலனென்பவன் அக்கி பகவானுக்குப் புத்திரனா கப் பிறந்து பராக்ரமத்தினாலும் புகழினாலும் மிடுக்கினா லும் வாநரர்கள் அனைவரினும் மேலாயிருந்தனன். அழ கும் பலமும் அமைந்திருக்கினும் அழகில் புகழ்பெற்ற அச்விதேவதைகளிருவரும் மைந்தனென்றும த்விவித னென்றும் இருவரைத் தமது மனத்தினால் படைத்தனர்.

வருணன ஸுஷேணனென்னும் வாநரசிகாமணி யை யுண்டாக்கினன். பர்ஜந்யனுக்கு மிகுந்த பலமுடைய சரபனென்பவன் பிறந்தனன். ஸ்ரீமானாகி ஹநுமா னென்று எங்கும் விளங்கிய வாநரன வாயுவுக்குப புதல் வனாகத் தோன்றினன். அவனுடைய தேகம் வஜ்ரம் போன்றது. வேகத்தில் அவன் கருடனை யெதிர்க்க வல்லவன். (வாநரர்களிற் சிறந்தவர்கள யாவரினும் அவன் மிகுந்த புத்தியும் பலமுமுடையவன்.) தலைவ ரான இவ்வாநரர்களே யன்றி மேலும் அளவிடவொண் ணாத பல முடையவர்களும், வீரர்களும், விக்ரமமே ஒரு ருவங் கொண்டதுபோலிருப்பவர்களும், நினைத்தபடி வடிவங் கொள்ள வல்லவர்களுமாகிய வாநரர்கள் ராவ ணனைக் கொல்லுவதில் மிக விருப்பமுள்ளவர்களாகி

அநேகமாயிரம்பேர் படைக்கப்பட்டனர். மேலும் மேரு மந்தர மலைகள் போல் அசைக்க முடியாது மிகுந்த பல முடையவர்களும், உரத்த தேகம் பொருந்தியவர்களு மாகிய கரடிகளும் குரங்குகளும், முசுக்களும் சடக்கென மனத்தினால் பிறந்தனர். அந்தந்த தேவதைகளுக்குள்ள உருவங்களும் வேஷங்களும் பராக்ரமங்களும் அவரவர் புதல்வர்களுக்குச் சிறிதுங் குறையின்றி தனித்தனியே யுண்டாயிருந்தன. முகமொன்றுமே வாநரம் முதலியவை போன்றதாகிக் குறை சரீரமெல்லாம் அந்தந்த தேவதைகளைப் போலிருக்கப் பெற்ற அவ்வீரர்கள் அனைவரும் விளங்கினர். பராக்ரமத்தில் புகழ் பெற்ற சில வாநரர்கள் பெண் மலைமுசுக்களிடத்தில் பிறந்தனர். மற்றுஞ் சில வாநரர் பெண்கரடிகளிடத்திற் பிறந்தனர். பின்னுஞ் சிலர் கிந்நரஸ்த்ரீகளால் உண்டாயினர்.

இங்ஙனம் மிகுந்த புகழ் கொண்ட தேவதைகளும் கருடன் முதலியவர்களும் யக்ஷர்களும் திக்கஜங்களும் கிம்புருஷர்களும ஸித்தர்களும் வித்யாதரர்களும் வாஸுகி முதலிய நாகங்களும் மற்றுமுள்ளவரும் அப்ஸரஸ்ஸ்த்ரீகளிடத்திலும் வித்யாதரஸ்த்ரீகளிடத்திலும் நாககன்னிகைகளிடத்திலும் கந்தர்வப்பெண்களிடத்திலும் விஷ்ணு அவதாரஞ் செய்யுங்காலத்தில் ஆங்காங்கு வநங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு பருத்த உருவமுடைய வாநரர்கள் யாவரையும் உண்டாக்கினர். இவ்வாநரவீரர்கள் அனைவரும் நினைத்தபடிவடிவங்கொள்ள வல்லமையுள்ளவர்; மனம்போன வழியெல்லாம் தடையின்றித் திரியுந் தன்மையுடையவர்; வீர்யத்திலும் பலத்திலும் புலிகளோடும் சிங்கங்களோடும் ஒத்திருப்பவர்; கற்களையும் மரங்களையும் நகங்களையும் கோரைப்

பற்களையும் ஆயுதமாகக் கொண்டு போர் புரிய வல்லவர். ஆகிலும் தேவாம்சமாகப் பிறந்தவர்களாகையால் அஸ்த்ரப்ரயோகம் உபஸம்ஹாரம் முதலிய உபாயங்கள் யாவும் அவர்களுக்குத் தானே தோன்றியிருக்கும்.

பெரிய மலைகளையும் கைகளால் அசைக்கவிடுவர்; உயர்ந்த மரங்களையும் பிளக்கச் செய்வர்; நதிகள் வந்து வீழும் ஆழ்ந்த ஸமுத்ரத்தையும் தமது வேகத்தால் கலக்கி விடுவர்; இப்பூமியைத் தமது பாதங்களால் பிளக்க வலலவர்; பெருங்கடலையும் ஓர் வாய்க்காலைப் போல் கடந்து விடுவர்; ஆகாயத்திலும் போக வல்லமையுள்ளவர்; மேகங்களையும் பிடித்துக்கொள்வர்; மதம் பிடித்துக் காட்டில் திரியும் மஹாகஜங்களையும் பிடிப்பர்; ஆகாயத்தில் பறக்கும பறவைகளைத் தாம் கர்ஜித்த கர்ஜனையால் கீழே விழச் செய்வர். இங்ஙனம் காமரூபிகளாகி மஹாதீரர்களுமாகிய வலிவு பெற்ற வாநரஸேநாதிபதிகள் நூறு லக்ஷம பேர் பிறந்தனர். அதில் ஸுக்ரீவனைத் தொடங்கி ஸுஷேணனீறாக வுள்ளவர் யாவரும் தலைவராகி அவ்வாநரஸேநாபதிகளிலும் மேன்மை பெற்று, மேலும் மஹா வீரர்களாகிய வாநரர்களை யுண்டாக்கினர்.

மற்றவர்களில் சிலர் ருக்ஷவந்தனென்னும் மலையின் தாழ்வரைகளைப் பற்றி வஸித்திருந்தனர். மற்றுஞ் சிலர் பலவிதமான மலைகளையும் கானகங்களையும் குறித்துச் சென்றனர். சிறந்த அவ்வாநரர்கள் யாவரும் இந்திரபுத்ரனான வாலியும் ஸூர்யபுத்ரனான ஸுக்ரீவனுமாகிய ப்ராதாககள் இருவரையும் அரசனாகவும், இளவரசனாகவும், நலன் நீலன ஹநுமான் மற்றுமுள்ள வாநரப்படைமன்னர் ஆகிய இவர்களை மந்திரிகளாகவும்

ஏற்படுத்திக்கொண்டிருந்தனர். அவ்வீரர்கள் யாவரும் கருடனை யொத்த வலிமை பெற்று, போர் செய்வதில் மிகுந்த வல்லமை யமைந்து வீர்யங் கொண்டு சிங்கங்களையும் பெரும்புலிகளையும் மலைப் பாம்புகளையும் பிடித்து நசுக்கிக்கொண்டு திரிந்தனர்.

மஹாபுஜனும் மிகுந்த பராக்ரமமுடையவனுமாகிய வாலி தனது புஜபலத்தினால் கரடிகளும் முசுக்களும் குரங்குகளுமாகிய அவ்வீரர்கள் அனைவரையும் பரிபாலித்து வந்தனன். மேலும் அவர்கள் பலவிதமான உருவங்களும் வேறு வேறான அடையாளங்களுமுள்ளவர்களாகி இப்பூமியி லுள்ள மலைகளிலும் கானகங்களிலும் ஸமுத்ரங்களிலுள்ள தீவுகளிலும் பரந்து நிறைந்திருந்தனர். மிகவும் பருத்து வலித்துப் பயங்கரமாயிருக்கும் அவ்வானரவீரர்களுடைய வடிவங்களைக் கண்டால் கூட்டங்கூட்டமாகி மேகங்கள் உலாவுகின்றனபோலவும், ஓராகாரங்கொண்டு நடக்கும் பர்வத சிகரங்கள் போலவும் தோன்றும். அப்படிப்பட்ட மஹாபலவான்களாகிய வானரப்படைமன்னர் யாவரும் ராமனுக்கு ஸஹாயஞ் செய்வதற்காக இத்தரணி முழுவதும் பரந்து வஸித்திருந்தனர். பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமாவதாரம்.

ஸ்ரீ ராமாதிகளின் பிறப்பும் அவரது வித்யாப்யாஸமும், விச்வாமித்திரர் வருவதும்.

இங்ஙனம் மஹாத்மாவாகிய அத்தசரதமஹாராஜனுடைய அச்வமேதயாகம் புத்ரகாமேஷ்டியுடன் கூட நடந்து நிறைவேறிற்று. தேவர்களும் தந்தமுடைய

ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொண்டு வந்தவழியே திரும்பிப்போயினர். அரசனும் தீக்ஷையைப் பற்றிய நியமங்களையெல்லாம்தீர்த்துவிட்டு, தனது பத்நிகளுடன் கூடி வேலைக்காரர்களும ஸேனையும் வாஹநங்களுமாகச் சூழப் பெற்று நகரத்திற்குப் புறப்படத் தொடங்கினன். யாகத்திற்கு வந்த மன்னவர்கள் யாவரும் தசரதனால் தங்கள் தங்களுக்குத் தக்கபடி பூஜைகளைப் பெற்று ஸந்தோஷ மடைந்து முனிவர்களில் தலைவராகிய வஸிஷ்டரையும் ருச்யச்ருங்கரையும் நமஸ்கரித்துத் தந்தமுடைய நாட்டை நாடிச் சென்றனர். அவ்வயோத்யாநகரத்திலிருந்து தமது பட்டணத்திற்குச் செல்லுகின்ற செல்வம் நிறைந்த மன்னவரது ஸைந்யங்கள் அவ்வரசனால் கொடுக்கப்பட்ட விலையற்ற ஆடையாபரணங்களால் அலங்காரங் கொண்டு சுப்ரங்களாகி விளங்கின.

அப்படி மன்னவர்கள் யாவரும் விடை பெற்றுக்கொண்டு போகையில் அப்பொழுது ஸ்ரீமானாகிய தசரதனும் சிறந்த அந்தணர்களை முன்னிட்டுக் கொண்டு நகரத்தில் பிரவேசித்தனன். பின்பு அவ்வரசனால நன்கு பூஜிக்கப்பட்ட ருச்யச்ருங்க முனிவர் சாந்தையுடன கூடி மிகுந்த மதியுடைய ரோமபாத மஹாராஜனால தனது பரிவாரங்களுடன் பின் செல்லப்பட்டுப் பிரயாணஞ் செய்தனர். தசரதமன்னவன், இப்படி யாகத்திற்கு வந்தவர்கள் யாவரையும் அனுப்பிவிட்டு, தனது கருத்து ஈடேறப் பெற்று, பிள்ளைகள் பிறப்பதை எதிர் பார்த்துக்கொண்டு ஸுகமாக வாஸஞ்செய்தனன்.

பின்பு அச்வமேதயாகம் முடிந்து ஓராண்டு சென்றது. இப்படி ஓராண்டு சென்றபின், கௌஸல்யா

தேவி பாயஸம் புசித்தது முதலாகப் பனிரண்டாவது மாதமாகிய சித்திரைமாதத்தில், நவமிதிதியினன்று, புனர்வஸு நக்ஷத்ரத்தில், ஸூர்யன், அங்காரகன், சனி, பிருகஸ்பதி, சுக்ரன ஆகிய இவ்வைவரும் தந்த முடைய உச்சஸ்தாநங்களாகிய மேஷ மகர துலா கர்க் கடக மீநங்களில இருக்கையில், அதில் பிருகஸ்பதி சந்தி ரனேடு கலந்திருக்க, கர்க்கடக லக்நத்தில், ஸகல ஜகந் நாயனும் உலகங்கள் அனைத்தும் வணங்கத் தக்கவனும் ஸமஸ்த சுப லக்ஷணங்களும் பொருந்தியவனும மஹா பாக்யசாலியும விஷ்ணுவின் அர்த்தாம்சமுமாகி இக்ஷ வாகுவம்சத்திற்கு மேன்மேலும் பெருமையைப் படைக் கவல்லனுமாகிய ஸ்ரீராம னென்னும புதலவனைப் பெற்ற னள். அக்கௌஸல்யாதேவி மிகுந்த ஒளி பொருந்திக் கையில் வஜ்ரரேகை கொண்ட அப்புதல்வனைப் பெற்று வஜ்ராயுதத்தைக் கையில் தரித்த தேவேந்திரனைப் பெற்ற அதிதியைப்போல விளங்கினள்.

பினபு நிலைநின்ற பராக்ரம முடையனுகி ஸகல குணங் களும் நிறைந்து விஷ்ணுவினது நாலிலொன்றில் பாதி பாகமாகிய பரதனென்னும் புதல்வனைக் கைகேயி பெற் றனள். பின்பு ஸுமித்ராதேவி வீராகளும ஸகல அஸ்த்ரங்களையும் அறிநத வல்லர்களும் விஷ்ணுவினது நாலிலோர்பாகமும் எட்டிலோர்பாகமுமாகிய லக்ஷமண னென்றும் சத்ருக்ந னெனறும் இரண்டு புதல்வர்களைப் பெற்றனள். தெளிந்த மதியுடைய பரதன் புஷ்யநக்ஷத் ரத்தில் மீநலக்நத்தில் பிறந்தனன. ஸுமித்ரையின் புத் ரர்களாகிய லக்ஷமணனும் சத்ருக்நனும் ஆச்லேஷா நக்ஷத்ரத்தில் மத்யாஹ்நத்தில் கர்க்கடகலக்நத்தில் உதித்தனர்.

இப்படி அம்மஹாராஜனுக்கு அநுரூபர்களாகி நற்குணங்கள் அனைத்தும் நிறைந்து காந்தியில் பூரட்டாதிநக்ஷத்ரங்கள் நான்குபோல விளங்குபவர்களாகிக் கம்பீரஸ்வபாவமுடையவர்களுமாகிய நான்கு புதல்வர்கள் பிறந்தனர். அச்சமயத்தில் கந்தர்வர்கள் ஆகாயத்தில் மிக மதுரமாகப் பாடினர். அப்ஸரஸ்ஸ்த்ரீகளும் கூட்டங்கூடி ஆட்டமாடினர். தேவர்களும் துந்துபி வாத்யங்களைக் கணகணவென்று முழக்கினர். பின்னும் ஆகாயத்தினின்று பூமழை பெய்தனர். அயோத்தியிலும் ஜநங்கள் யாவரும் விரைந்தோடி ஸந்தோஷம் நிறைந்து மஹோத்ஸவங் கொண்டாடினர். நாலு பக்கத்து ஜநங்களும் நெருங்கி வர, நடர்களும் நர்த்தகர்களும் ரஸங்களும் பாவங்களும் நிறைந்து அழகாக ஓரிடத்தில் அபிநயிக்க, மற்றோரிடத்தில் பாடகர்கள் பாட, மற்றுமோரிடத்தில் வாத்யம் வாசிக்கிறவர்கள் பலவித வாத்யங்களை முழங்கச் செய்ய, மற்றுமோரிடத்தில் ஸூதர்களும் வந்திகளும் மாகதர்களும் கட்டியங்களைப் படிக்க, ராஜமார்க்கங்கள் எங்கும் ஜனங்கள் நெருங்கப் பெற்றன.

அரசனும் புராணம் படிக்கிற ஸூதர்களுக்கும், வம்சாவளி சொல்லும் மாகதர்களுக்கும், துதி செய்யும் வந்திகளுக்கும், தக்கபடி பரிசுகளைக் கொடுத்தனன். அந்தணர்களுக்குப் பசுக்களையும் பணங்களையும் ஆயிரமாயிரமாகத் தந்தனன். [1] பின்பு லக்ஷ்மணன் பிறந்து பதினொருநாள் செல்ல(அதாவது ராமன் பிறந்து

---

1 இங்கு மூலத்தில் 'அதீத்யைகாதஶாஹந்து' என்று சொல்லுகையால், பன்னிரண்டாவது தினத்தில் நாமகரணம் நடந்ததென்று தோற்றுகிறது. க்ஷத்ரியர்களுக்குப் பன்னிரண்டாவது நாள் வரையில் ஸூதக முண்டென்று ச்ருதியும் பதின் மூன்றாவது நாள் நாம

பன்னிரண்டு நாள்கள் சென்றபின்பு) பதினமூன்றாவது நாள் அம்மன்னவன புதல்வர்களுக்கு நாமகரணஞ் செய்யத் தொடங்கி, அதற்கு மிகுந்த ஸந்தோஷங் கொண்ட வஸிஷ்டமாமுனிவரைக் கொண்டு மஹாத்மாவாகிய மூத்தகுமாரனுக்கு ராமனென்றும், கைகேயியின புதல்வனுக்குப் பரதனென்றும், ஸுமித்ராதேவியின் புதல்வர்களில் ஒருவனுக்கு லக்ஷ்மணனென்றும், மற்றொருவனுக்குச் சத்ருக்நனென்றும் இங்ஙனம் நாமங்களை யிட்டனன. இப்படி பேரிட்ட அம்மன்னவன் நாடு நகரங்களிலுள்ள அந்தணர் அனைவர்க்கும் நன்குபோஜநம் போடுவித்து அவர்களுக்குக் கணக்கின்றி ரத்நங்களையும் அநேகமாகக் கொடுத்தனன. பின்பு புதல்வர்களுக்கு ஜாதகர்மம் முதலிய கருமங்களனைத்தும் அடைவே செய்வித்தனன. அக்குமாரர்களில் மூத்தவனாகிய ராமன த்வஜம்போலத் தனது வம்சத்தை விளங்கச் செய்து தகப்பனுக்கு மிகவும் ஆநந்தத்தை விளைவித்துக்கொண்டு பரஹ்மதேவனபோல் ஸகல ப்ராணிகளுக்கும் ப்ரியனாயிருந்தனன அக்குமாரர்கள் அனைவரும் வேதங்களைக் கற்று, தநுர்வேதத்திலும் வல்லமை பெற்று, சூரத்தன்மை பொருந்தி, உலகங்கட்கு நன்மையைச் செய்வதில் விருப்பங் கொண்டு, வேதத்தின பொ

---

கரணமென்று ஸ்ம்ருதியுஞ் சொல்லுகையால், பதினோராநாள் கடந்தபின் பன்னிரண்டாவது நாளில் நாமகரணஞ் செய்வது விருத்தமாகும். ஆகையால் இங்கு 'ஏகாதஸாஹம' (பதினோராவது நாள்) என்றால் லக்ஷ்மணன் பிறந்தது முதற்கொண்டு பதினோராவது திநமாகக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும். அப்படியாயின், ராமன முதனாள் பிறந்தவனாகையால் அவன் பிறந்த திநம் முதற்கொண்டு பன்னிரண்டாவது திநமாகும். அது கடந்தபின் பதின் மூன்றாவது திநத்தில் நாமகரணம் நடப்பது உபபந்நமாகும்.

ருளனைத்து மறிந்தமையால் ஞான மமைந்து, ஞானத்தினால் பிறக்கும் நற்குணங்கள் அனைத்தும் நிறைந்து விளங்கினர்.

அவர்களில் ராமன் மிகுந்த ஒளியுடன் விளங்கி நின்று என்றும் வழுவாத பராக்ரமமுடையனாகி நிர்மல னான பூர்ணசந்திரன்போல உலகங்களுக்கெல்லாம் ஆநந்தத்தை விளைவித்துக்கொண்டு மிகவும் ப்ரியனாயிருந்த னன். மேலும் அவன் ஆனையேற்றத்திலும் குதிரை யேற்றத்திலும் யுத்தங்களில் தக்கபடி தேரை நடத்துவதிலும் இவனைப்போல் ஒருவனுமில்லை யென்று யாவரும் புகழுமபடி வல்லமை யமைந்து வில்வித்தையில் மிகவும் தேர்ச்சி பெற்றுப் பிதாவினது சுச்ரூஷையில் மிக்க விருப்பங் கொண்டு விளங்கினன். லக்ஷ்மணனை ராமனுக்குப் பணிவிடை செய்கையாகிற செல்வத்தை மேன் மேலும் பெருகச் செய்து கொண்டிருந்தனன். அவன் தனக்கு மூத்தவனும், எல்லா உலகங்களுக்கும் ஆநந்தத்தை விளைவிப்பவனுமாகிய ஸ்ரீராமனிடத்தில் பால்யம் முதலாக எக்காலத்திலும் மிக்க நேசங் கொண்டிருந்த னன். மேலும் அச்செல்வம் நிறைந்த லக்ஷ்மணன் வாக்கு மனம் கருமம் என்றிவை மூன்றினாலும தனது சரீரத்தைப் பாராமலே ராமனுக்கு எவ்வித இஷ்டங்களையும் செய்து கொண்டிருக்குந்தன்மையன். பின்னும் சரீரத்திற்கு வெளியில் ஒருருவங்கொண்டு உலாவுகின்ற ராமனுடைய மற்றொரு ப்ராணனோ என்னும்படி யிருந் தனன்

புருஷோத்தமனாகிய அந்த ஸ்ரீராமனுக்கு ப்ராணன்போன்ற பின்பிறந்தவனாகிய லக்ஷ்மணனை யன்றி நித்ரையும் நேராது. தாய் உயர்ந்த ஆஹாரங் கொண்டுவந்து கொடுக்கினும் அதை ஸ்ரீராகவன் லக்ஷ்ம

ணனை யொழியத் தனியே புசியான். எப்போதாகிலும் ராமன குதிரையின்மீதேறி வேட்டையாடப் போவா ளுகில், அப்பொழுதே லக்ஷ்மணன் தானும் ஓர் வில்லைத் தரித்துக் கண்ணை இமை காப்பது போல அவன் பின்னை பாதுகாத்துச் செல்வான். இப்படி லக்ஷ்மண னுக்குப் பின்பிறந்த சத்ருக்நனும் அக்குணங்களெல்லா மமைந்து பரதனைப் பின்சென்றிருந்தனன். ஆனது பற்றி, பரதனுக்குச் சத்ருக்நன் ப்ராணனைக் காட்டி லும் மிக ப்ரியனுயிருந்தனன். அச்சத்ருக்னனிடத்தில் பரதனும் அப்படியே அளவற்ற ப்ரீதி யமைந்திருந்த னன்.

இங்ஙனம் மஹாபாக்யசாலிகளாகித் தனக்கு மிகவும் அன்பர்களாகிய புதல்வர் நால்வரையும் பெற்ற அத்தசரத சக்ரவர்த்தி நான்கு திக்பாலர்களைக்கொண் டு பிரபுவாகிய ப்ரஹ்மதேவன் ஆநந்தப்படுவதுபோல் மிக்க ஆநந்த மடைந்திருந்தனன். இப்படி தசரத னுக்கு அவர்களைப் பெற்றதினுல் பிறந்த ஸந்தோஷமே யன்று; அவர்கள் வயது வந்தபோது சாஸ்திரங்களெல் லாம் அறிந்து, ஸகல குணங்களும் நிறைந்து விளங்கி, தகாச்செய்கையில் மிக நாணங் கொண்டு, சிறந்த ஞாந முடையவர்களென்று எங்கும் புகழ் பெற்று, லௌகிக மான காரியங்களனைத்திலும் மிகுந்த மதியுற்று, வருப வற்றை யெல்லா மறிந்து அதற்கேற்றபடி நடக்குந் திறம் படைத்து, இங்ஙனம் மகிமை யெல்லா மமைந்து மிகுந்த ஒளியுடன் வளர்ந்து நிற்கக் கண்டு, அப்பொ ழுது அவனுக்கு ப்ரஹ்மலோகாதிபத்யம் நேர்ந்தது போல் அளவற்ற ஸந்தோஷம பிறந்தது.

அவர்கள் அப்படி தமது தகப்பன் தசரத சக்ர வர்த்தி ஸந்தோஷிப்பதைக் கண்டும் புருஷஸிம்ஹங்க

ளாகையால் கர்வங் கொள்ளாமல் ஆலஸ்ய மின்றி மிகுந்த அன்புடன் வேதங்களின் பொருள்களைத் தெளிய உரைக்க வல்ல ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் நியாயம் முதலியவற்றைக் கற்று, பிதாவினது சுச்ரூஷையில் ஜாகரூகர்களாகி மேலும் தநுர்வேதத்தில மிக விருப்பங் கொண்டு அதை நன்கு அப்யஸித்துத் தீர்ந்தனர். பின்பு தசரதனும் பிள்ளைகளுக்கு அந்தந்த காலங்களில் செய்யவேண்டிய செயல்களை யெல்லாம் அறிந்தவனாகை யால் அவர்களுக்கு விவாஹத்திற்குத் தக்க வயது வரக் கண்டு அவர்களுடைய விவாஹத்தைப் பற்றி, புரோஹிதருடனும் பந்துக்களுடனும் கூடி ஆலோசித்துக் கொண்டிருந்தனன்.

அப்படி அம்மஹாத்மாவாகிய தசரதன் மந்திரிகளினிடையில் புரோஹிதர் முதலியவர்களுடன் கலந்து ஆலோசித்துக்கொண்டிருக்கையில், சிறந்த தவ மகிமை பொருந்திய விச்வாமித்ர மாமுனிவர் அவ்வரசனைக் காணக் கருதி அவ்விடம் வந்து, வாசற்காப் பவர்களை நோக்கி, 'ஓ ஓ புருஷர்களே! குசிக வம்சத்திற் பிறந்து காதி யென்பவரது புதல்வனாகிய விச்வாமித்ரன் வந்தானென்று வேகமாகப் போய்ச் சொல்லுங்கள்' என்றனர். அவ்வாசற்காப்பவர் யாவரும அவ்வாக்யத்தைக் கேட்டு மனத்தில் பயமும் பரபரப்பும் நிறைய வுண்டவர்களாகி, அரசன் மாளிகைக்கு வேகமாகச் சென்று இக்ஷ்வாகுகுலதிலகனாகிய மஹாராஜனுக்கு விச்வாமித்ரர் வந்திருப்பதைத் தெரிவித்தனர். அதைக் கேட்டு அம்மன்னவனும் ஸந்தோஷங் கொண்டு, புரோஹிதரோடு கூடி தேவேந்திரன் ப்ரஹ்மதேவனை யெதிர்கொண்டு செல்வதுபோல அவ் விச்வாமித்ரரை யெதிர்கொண்டு சென்றனன்.

பிறகு அம்மஹாராஜன், மிகுந்த ஒளி பொருந்தியவரும் விரதங்கள் அனைத்தும் குறையின்றிச் செய்து முடித்தவரும் மிகத் தவமுடையவருமாகிய அவ்விச்வாமித்ர மாமுனிவரைக் கண்டு பெருத்த சந்தோஷத்தினால் முக மலர்ந்தி கொண்டு அம்மஹர்ஷிக்குத் தமது புரோஹிதராகிய வஸிஷ்ட மாமுனியால் அர்க்கியம கொடுப்பித்தனன். அவ்விச்வாமித்ரமாமுனியும் மன்னவனால் சாஸ்திரங்களிற் சொல்லிய விதிப்படி கொடுக்கப்பட்ட அர்க்கியத்தைப் பெற்று அவ்வரசனை நோக்கிக் குறையற க்ஷேமம் விசாரித்தனர். விச்வாமித்ரர் தர்மங்களை யெல்லாம் நன்கறிந்து அறிந்தபடி நடக்குந் தன்மையராகையால் ராஜாவினது நாடு நகரம் பந்துக்கள் நண்பர்கள் பொக்கசம் முதலிய அனைத்தையும் பற்றி அம்மன்னவனைப் பார்த்து 'அரசனே! க்ஷேமமா? நீ விரும்பினதெல்லாம் நிறைவேறிக் குறையற மேன்மேலும பெருகி வருகின்றதா? நீ தார்மிகனா யிருப்பது பற்றி உனது பட்டணமும் பொக்கசங்களும் மற்றுமுள்ள தேசங்களும் ஓர் குறையு மின்றி யிருக்கின்றனவல்லவா? உனது பந்துக்களும் மித்ரர்களும் க்ஷேமமாயிருக்கின்றனரா? பக்கத்து தேசத்தரசர் யாவரும் உனக்கு வணங்கி நடக்கின்றனரா? பகைவர் அனைவரையும வென்றாயன்றா? யாகம் முதலிய தேவகாரியங்களும், அதிதி ஸத்காரம் முதலிய மானுஷகாரியங்களும் சரியாகநடந்து வருகின்றனவன்றா?'' என்று கேட்டனர்.

பின்பு அம்மாமுனிவர் வஸிஷ்டரைக் கிட்டிச் சென்று அவரையும் மற்றுமுள்ள வாமதேவர் முதலிய மஹாபாக்யசாலிகளாகிய ரிஷிகளையும் நியாயப்படி க்ஷேமம் விசாரித்தனர். இப்படி விச்வாமித்ரர் கௌரவத்துடன் க்ஷேமம் விசாரிக்க, அவர்கள் யாவரும்

மனக் களிப்புற்று ராஜ ஸபையைச் சேர்ந்து அவரவர்க
ளுக்குத் தக்கபடி உட்கார்ந்தனர். பின்பு மஹோதார
னாகிய அம்மஹீபாலனும் மனக்களிப்புடன் அம்மாமுனி
வரைப் பூஜித்து உடம்பெங்கும் மயிர்க்கூச்செறிய
இங்ஙனம் உரைத்தனன். 'மாமுனிவரே! புதல்வர்களின்
விவாஹத்தைக் குறித்து நான் ஆலோசித்துக்கொண்
டிருக்கையில், நீர் தற்செயலாய் வந்தீர். உம்முடைய
இவ்வரவு அமிருதம் பெற்றது போலவும், நிர்ஜலமான
பூமியில் மழை பொழிந்தது போலவும், பிள்ளையில்லா
தவனுக்குத் தக்க மனைவிகளிடத்தில் பிள்ளை பிறந்தது
போலவும், தொலைந்த பெருநிதி மீளவும் அகப்பட்டது
போலவும், பெரிய உத்ஸவத்தி லுண்டாகும் ஸந்தோஷம்
போலவும், தோற்றுகின்றது. உமக்கு நல்வரவா?

பராஹ்மணோத்தமரே! உமக்குள்ள பெருங்கருத்து
யாது? சந்தோஷங் கொண்ட நான் உமக்குச் செய்ய
வேண்டுவதென்? அதை எப்படிச் செய்யவேண்டும்?
எனது தானத்திற்கு நீரே தகுந்தபாத்ரமாயிருக்கின்றீர்.
இப்படிப்பட்ட நீர் எனது பாக்கிய மகிமையால் இங்கு
வந்து சேர்ந்தீர். எனக்கு மிகவும் ஆநந்தமாயிருக்கின்
றது. எனது ஜன்மம் இப்பொழுதுதான் பயன் பெற்
றது. எனது ஜீவநம் இப்பொழுது ஸுஜீவநமாயிற்று.
நீர் முதலில் ராஜரிஷியாய் விளங்கி, பின்பு தவஞ்
செய்து மஹாதேஜஸ்ஸுடன் ப்ரகாசித்து ப்ரஹ்மரிஷி
யெனனும் பெயர் பெற்றீர். ஆகையால் ராஜரிஷியான
து பற்றியும் ப்ரஹ்மரிஷியானது பற்றியும் மற்றுமுள்ள
குண விசேஷங்களைப் பற்றியும் நீர் எனக்கு மிகவும்
பூஜிக்கத்தக்கவர். இப்படி நீர் வருவது மிகவும் அற்
புதம். இதை யொழிய என்னைப் பாவநமாக்க வல்லது
வேறொன்று மில்லை. நீர் வந்து எனக்கு தர்சநந்

கொடுத்தமையால் நானிருக்கு மிவ்விடம் புண்யக்ஷேத்ர மாயிற்று. நீர் எந்தப் பயனைக் குறித்து இங்கே வந்தீரோ, அதை மொழிந்தீராயின் அதை உமது அனுக்கிரகத்தினால் நிறைவேற்ற விரும்புகின்றனன.

உமது காரியங்களை நான செய்வேனோ மாட்டேனோ என்று நீர் ஸந்தேகிக்க வேண்டாம். எனக்கு நீர் தைவமன்றோ? நீர் விரும்பிய வற்றை யெல்லாம நான் செய்யக் கடவ னன்றோ? நீர் வநத வரவு எனக்கு நனமை யென்று சொல்லப்போகாது. பெரும நன்மை யென்று சொலலவேணும். நீர் வநததனால எல்லாவற்றிலும் சிறந்த தர்மங்கள் யாவும் எனக்குணடாய்விட்டன" என்றனன். இங்ஙனம் பொருள் நிறைந்து மனத்திற்கு ஆநந்தமாகவும் மெதுவான வார்த்தைகளால் செவிக்கினிதாகவும் மிகுந்த விநயத்துடன் மதிமானாகிய அம்மன்னவன மொழிநத வாக்கியங்களைக் கேட்டு, சிறநத குணங்கள் அமைந்து அக்குணங்களால் எங்கும் புகழ் பெறற விச்வாமித்ரமஹர்ஷி மிகக ஆநந்த மடைந்தனர். பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விச்வாமித்ரா ராமனை அனுப்பும்படி தசரதனைக் கேட்கை.

இங்ஙனம் அற்புதமாகவும் விஸ்தரமாகவும் அம்மன்னவன சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, சரீரமெங்கும் மயிர்க்கூச்சலிட்டு மஹாதேஜஸ்வியாகிய விச்வாமிதரர் இவ்வாறு மொழிந்தனர். 'ஓ தரணியாளனே! இவவுலகத்தில் பெரிய வம்சத்திற் பிறந்து வஸிஷ்டரைப் போன்றவர்களுடைய உபதேசம் பெற்று அவருங் குலாவும்படியான உன்னைப் போன்றவனுக்கே இது தகுமன்றி மற்றொருவனுக்கும் தகாது.

இது உண்மையாகச் சொல்லுகிறேனன்றி வேறொருபடி யன்று. நான் உனக்குச் சொல்லவேண்டுமென்று நெஞ் சில் நினைத்திருக்கிற காரிய மொன்றுண்டு. அதை நீ செய்வதாக ஒத்துக்கொள்ளவேண்டும். நீ சொன்ன சொல் தவறாதிருக்கவேண்டும். நான ஒரு பயனை உத் தேசித்து அதன்பொருட்டு யாகஞ் செய்யத்தொடங்கி தீக்ஷையி லிருக்கின்றனன். அதற்குக் காமரூபிகளாகிய ராக்ஷஸர்கள் இருவர் எப்பொழுதும் விக்நஞ் செயது கொண்டிருக்கின்றனர். எனது விரதம் வெகுதூரம் நடந்தேறிவிட்டது. இனி முடியவேண்டிய தருணத் தில் இருக்கின்றது.

அதைக் கெடுப்பதன்பொருட்டு மிகுந்த வீர்யம் பெற்று, கொடுஞ் செயல்களில் நன்கு தேறி வல்லமை பெற்ற ஸுபாஹு மாரீசர்களென்கிற ராக்ஷஸர்களிரு வரும் மாம்ஸங்கள் நிரம்பிய ரக்தவெள்ளத்தைக் கொண்டுவநது அந்த யாகவேதிக்கு நாற்புறத்திலும் பொழிந்தனர். இங்ஙனம பெரும்பாலும் நடந்தேறிவந்த எனது விரத ஸங்கல்பம் விக்ந மடைந்தபின் மிக வருத் தங்கொண்டு உத்ஸாஹங் கொலைந்து அங்கிருந்து வந்து விட்டனன். அரசனே! அவர்களை ஏன் சபிக்கக் கூடாதென்றால், அவர்கள்மீது கோபங் கொள்ளப் புத்தி பிறவாது. ஏனெனில், யாகஞ் செய்யும் அத் தருணத்தில கோபஞ் செய்யலாகாதென்பது உனக்குந் தெரிந்ததல்லவா? ஆகையாற்றான் அவர்களைச் சபி யாது விட்டுவிட்டனன.

அதில் 'நான் செய்யவேண்டுவதென்ன' என்றால், புலிபோல பராக்ரமம் பொருந்திய மஹாராஜனே! உனது மூத்த குமாரனாகிய ராமன் சிறுகுடுமி தரித்த சிறுபிள்ளையாயினும், உண்மையான பராக்ரமங்

கொண்டிருப்பவனாயிருப்பது பற்றி அவனை எனக்கு அவச்யமாகக் கொடுக்கவேண்டும். இவன் சிறு பிள்ளையாகையால் அவர்களை யெப்படி வெல்ல முடியுமென்னவேண்டாம். நான் காப்பாற்றிக்கொண்டு போக, இவன் தனது சிறந்த பராக்ரமத்தினால் அவர்களையே யன்றியாகத்திற்கு விக்நஞ்செய்யும் அரக்கர்களனைவரையும் வேரோடு நாசஞ்செய்ய வல்லவன். மேலும் நான் இவனுக்கு மூவுலகங்களிலும் கியாதி யுண்டாகும்படியான பலவகை நன்மைகளையும் செய்வேன். இதில் ஸந்தேக மில்லை. அம்மாரீச ஸுபாஹுக்களோவென்றால், ராமனுக்கு முன்னே நின்று போர் செய்யச் சிறிதும் வல்லரல்லர். ராமனை யொழிய மற்றொருவன் எவனாயினும் அவர்களை வெல்ல முடியாது.

மன்னவர்மணியே! அவ்விருவரும் வீர்யத்தின் மிகுதியால் கொழுத்திருப்பவர்களேயாயினும் பாவஞ்செய்வதே தொழிலாயிருப்பதால் காலனென்னுங் கயிற்றினால் கட்டுண்டிருக்கின்றனர். ஆகையால் மஹாத்மாவாகிய ராமனுக்கு அவர்கள் ஒரிலக்கேயன்று. ஓ அரசனே! ராமனிடத்தில் பிள்ளை யென்னும் ப்ரீதி பாராட்டலாகாது. நான் சொல்லும் இச்சொல்லை நம்ப வேண்டும். நான் உனக்கு உறுதியாகச் சொல்லுகிறேன். அவ்வரக்கர்கள் இருவரும் ஒழிந்தார்களென்றே நினைத்துக்கொள். இங்ஙனம் யான் எப்படி சொல்லுகிறேனெனில் [1] ராமனை மஹாத்மா வென்றும் உண்மையான பராக்ரம முடையவனென்றும் நான் அறிவேன்.

1 இங்கு—'அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்' வஸிஷ்டோபி மஹாதேஜா யே சேமே தபஸி ஸ்திதா:॥

இதற்கு விசேஷார்த்தம் முழுவதும் தனிச்லோகியல் கண்டு கொள்க.

நானே யன்று, மஹாநுபாவராகிய வஸிஷ்டரும் அறிவர். தவத்தில் நிலைசின்ற மற்றுமுள்ள இம்மஹர்ஷிகளும் அறிவார்கள். மஹாராஜனே! ஆயிரஞ் சொல்லியென? இப்பூமியில் மேன் மேலும் தர்மத்தின விருத்தியும் சிறந்த கீர்த்தியும் நிலைநிற்கவேண்டு மென்று விரும்பினயாகில், ராமனை யெனக்குக் கொடுக்க வேண்டும். வஸிஷ்டர் முதலிய உனது மந்த்ரிகள் அனைவரும் அநுமதி கொடுப்பர்களேயாகில், பின்பு ராமனை யனுப்பு. தாமரை யிதழ போன்ற கண்களை யுடையனுகி யாவர்க்கும் அன்பனுமாகிய ராமனை வெகுநாள் அனுபவிவிட்டு எப்படி யிருப்போமென்று நினைக்க வேண்டாம. வெகு நாளன்று. பத்து ராத்ரி வரையிலுமே ராமனை யெனக்குத் தரவேண்டும். ஆகையால் அதுவரையிலும எவ்வித சிநதையுமின்றி என்னுடன் அவனை யனுப்ப வேண்டும்.

ரகுகுலதிலகனே! எனது யாககாலம் மீறிப் போகாம்றபடி முன்னதாகவே ராமனை யனுப்புவாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகும். ஆகையால் மனத்தில் கொஞ்சமும சோகிக்க வேண்டாம், என்று மஹா தேஜஸ்வியான அவ்விச்வாமித்ர மாமுனிவர் தர்மாத்மாவாகையால் தர்மார்த்தங்கள் நிறைந்த இம்மொழிகளை யுரைத்து வெறுமனே யிருந்தனர். அத்தசரத மஹாராஜனும் இஙஙனம் விச்வாமித்ரா மொழிந்த அழகான வார்த்தையைக் கேட்டு 'நமது ராமனை விட்டு நாம் எப்படி பிரிவோம்' என்று மிகவும் வருந்தி பயந்து முகம் வாடி நின்றனன். இவவாறு மார்பையும் மனத்தையும் பிளக்கும்படி மிகவும் கடோரமான அம்முனிவரது மொழியைக் கேட்டு அப்பொழுதே அம்மன்னவின் மிக்க மனவருத்த முற்று ஸிம்ஹாஸநத்தினின்று

நடுங்கி மூர்ச்சித்தனன். பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தசரதன் ராமனை யனுப்புவதற்கு வருத்தமுறுதல்.

அம்மன்னவர்மணியாகிய தசரதன் அங்ஙனம் அவ் விச்வாமித்ரர் மொழிந்த மொழியைக் கேட்டு முகூர்த்தகாலம மூர்ச்சை யடைந்து பின்பு தெளிந்து இப்படி யுரைத்தனன். [1]முனீந்திரரே! தாமரை யிதழ்போல் விளங்கும் அழகான கண்களையுடைய ராமனுக்குப் [2] பதினாறு பிராயமும் நிரம்பவில்லை. இப்பொழுது பன்னிரண்டாவது பிராயம் நடக்கின்றது. இங்ஙனம் இளைஞனாகிய இவனுக்குப் போர் செய்யுந் தன்மை யெங்ஙனே நேருவது? எனது மடியை விடாதிருக்கு மிவன என்னை விட்டிருக்க வல்லனல்லன். இவ்வளவில் விளையாட லுற்றிருக்க வேண்டியவனே யன்றி யுத்தஞ் செய்யத் திறமுடையனாகத் தென்படவில்லை. மனித

---

1 இங்கு மூலவாக்யம்—

'ஊநஷோடஶவர்ஷோமே ராமோ ராஜீவலோசநः।
நயுத்தயோக்யதாமஸ்ய பஶ்யாமி ஸஹ ராக்ஷஸைः ॥'

என்று—இதற்கு விசேஷார்த்தம் தனிசசிலாகியில் காண்க.

2 பதினாறு வயதுள்ள க்ஷத்ரிய குமாரனே யுத்தஞ் செய்யத் தகக வனென்று சாஸ்த்ரஞ் சொல்லுகிறது. ராமன் ஊநஷோடஶவர்ஷः என்று பதினாறுவயதிற்குங் குறைந்த வயதுளளவனெனகையால் யுத்தஞ் செய்பததக்கவனல்லனென்ற கருத்து, மாரீசன் ராவணனுக்குச சொல்லும் பொழுது 'பாலோ த்வாதஶவர்ஷோயமக்ருதாஸ்த்ர ஶ்ச ராகவः' என்று விச்வாமித்ரனுடன் கூட வந்தபொழுது ராம னுக்கு பன்னிரணடு வயதென்று சொல்லினன். ஆகையால் ஊநஷோ டஶவர்ஷः' என்றது நாலுவயது குறையப் பதினாறுவயது. அதாவது- பன்னிரண்டு வயதுள்ளவனென்று பொருள்.

ரோடும் போராட மாட்டாத இவன் கொடியராகிய ராக்ஷஸர்களோடு போராட வல்லனென்று எனக்குத் தோற்றவில்லை. ஆகிலும நான் சொன்ன சொல்லுக்கு வேருகச் செய்யேன். இதோ எனது கட்டளையில் அடங்கி யான் பாதுகாத்துவரும் படைகள் அக்ஷௌஹிணிக் கணக்கி லிருக்கின்றன. இவைகளைக் கூட்டிக் கொண்டு வந்து நான் அவ்வரக்கர்களோடு யுத்தஞ் செய்கின்றேன். இதோ எனது படர்கள் அஸ்த்ரவித்யை களில் தேர்ச்சி யடைந்து சூரர்களென்று எங்கும்கியாதி பெற்றவர்களாகையால் இவ்வரக்கர்க ளிருவரே யன்றிக் கூட்டங் கூட்டமாய் வரும் அரக்கர்களோடும் போர் புரியச் சித்தமாய்க் காத்துக் கொண்டிருக்கின்றனர். ஆகையால் ராமனை யழைத்துக்கொண்டு போகவேண்டாம். நானே வில்லுங் கையுமாய் நின்று இப்படை களை யெல்லாம் பாதுகாப்பவனுகி முனனே யிருந்து எனது சரீரத்தில் ப்ராணனுள்ள வளவும் அவ்வரக்கர் களோடு போராடுகின்றனன்.

நான் அங்கே வந்து விக்நம் ஒன்றும் வாராதபடி அந்த விரதாநுஷ்டாநத்தை நன்ருகப் பாதுகாத்து முடித்து வைக்கின்றனன். ஆகையால் ராமனை யழைத் துக்கொண்டு போகவேண்டாம். மேலும் இவன் பாலன். ஆகையால் தநுர்வித்யையில் தேறினவனன்று. பின் னும் சத்ருக்களது பலாபலங்களை அறியான. அஸ்த் ரபலமும் பெற்றிலன. இனி யுததத்தில் ஆடித் தீர்ந்த வன் அன்றென்பது சொல்லவேண்டுமோ? ராக்ஷஸர் களோ வஞ்சனை கொண்டு யுத்தஞ் செய்ய வல்லமை பெற்றவர்கள். அப்படிப்பட்டவர்களோடு போர் புரிய இப்பாலகன் முதலே தகானென்பது நான் சொல்லவேண் டுமோ? ராமன் விஷயம் இங்ஙனே யிருக்க, மாமுனி

வரே! என் கதையைக் கொஞ்சம் கேட்கவேண்டும். ராமனை விட்டு ஒரு முகூர்த்தகாலமும் பிழைத்திருக்க மாட்டேன். இதைப் பற்றியே ராமனை யழைத்துக்கொண்டு போவது உமக்குத் தக்கதல்ல. விரதங்களையெல்லாம் நன்கநுஷ்டித்த அந்தணர்சிகாமணியாகிய முனிவரே! ரகுகுலத்திற்கு விளக்குப்போல் விளங்கும் இந்த ராமனையே அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று உமக்கு எண்ணமிருக்குமாயின் சதுரங்கஸேனையுடன் கூடிய என்னையும் அவனுடன்கூட அழைத்துக்கொண்டு போவீராக. மாமுனிவரே! யான் பிறந்து அறுபதினாயிரம் ஆண்டுகள் சென்ற பின்பு எவ்வளவோ விரதங்களையநுஷ்டித்து மிகவும் கஷ்டப்பட்டு இந்தராமனை அருமையாகப் பெற்றனன். இதை நினைத்தாயினும் நீர் இவனை அழைத்துக்கொண்டு போகத் தக்கதல்ல. மேலும் எனது புதல்வர்கள் நால்வரிலும் எனக்கு ராமனிடத்தில் அன்பு மிகவும் அளவற்றிருக்கின்றது. அவனே எனக்கு மூத்தகுமாரன்; மிகவும் தர்மசீலன். அப்படிப்பட்ட ராமனை அழைத்துக்கொண்டு போவது தக்கதல்ல.

மாமுனிவரே! உமது யாகத்திற்கு விக்னம் பண்ணுகிற அவ்வரக்கர்களது வல்லமை எப்படிப்பட்டது? அவர்கள் யாருடைய பிள்ளைகள்? அவர்களது பெயர் யாது? அவர்களது உருவமெப்படி யிருக்கும்? அவர்களைப் பாதுகாப்பவன் எவன்? கபடயுத்தஞ் செய்ய வல்லமை பெற்ற அவ்வரக்கர் மீது ராமனாவது, எனது படைகளாவது, யானாவது எவ்வித ஏற்பாட்டுடன் எதிர்த்துப் போகவேண்டும்? ராக்ஷஸர்கள் வீரயங் கொண்டு கர்வித்திருப்பவர்களாகையால் அப்படி துஷ்ட

ஸ்வபாவமுடைய அவர்களது யுத்தத்தில் நான் ஒருவனுகவே போர் செய்யத்தகுமா? மாமுனிவரே! இவையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும்' என்றனன்.

விச்வாமித்ரரும் அங்ஙனம் மன்னவன் மொழிந்தவற்றைக்கேட்டு 'அரசனே! புலஸ்திய மஹர்ஷியின் வம்சத்தில் பிறந்த ராவணனென்னும் ராக்ஷஸன் ஒருவன் இருக்கிறான். அவன் பிரமனிடம் வரம் பெற்று மிகுந்த பலமும் சிறந்த வீர்யமும் அமைந்து அநேக ராக்ஷஸர்களால் சூழப்பட்டவனுகி மூவுலகங்களையும் அளவின்றி வருத்துகின்றனன். அவன் குபேரனுக்கு நேரே பின் பிறந்தவன்; விச்ரவஸ்ஸென்னும் முனிவருடைய புதல்வன்; ராக்ஷஸர்களுக்கெல்லாம் அதிபதி; மஹாபராக்ரமசாலி. இங்ஙனம அவன ப்ரஸித்தனனதுபற்றி நீயும் அவனைக் கேட்டிருக்கலாம். அப்பெருமிடுக்கன தானே நேராக வந்து யாகத்திற்கு விக்நஞ் செய்ய நேராத காலங்களில் மிகவும் கொழுத்திருக்கிற மாரீச ஸுபாஹுக்களென்னும் ராக்ஷஸர்களிருவரையும் தூண்டிவிடுகின்றனன். அவர்கள் வந்து யாகத்தைக் கெடுக்கினறனர்' என்று மொழிந்தனர்.

இதைக் கேட்டு அப்பொழுது மன்னவன் 'மாமுனிவரே! அப்படி கொடுந்தன்மையனுகிய ராவணனேடு யுத்தத்தில் முன்னின்று போர்புரிய நான் வல்லனல்லன். நீர் தர்மங்களெல்லாமறிந்தவர். எனக்கு குருவும் தைவமும் நீரே. உமது ஆணைப்படி காரியஞ்செய்யப் பாக்கியமற்றிருக்கிற என்மீது கிருபை செய்தருளவேணும். தேவதாநவர்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் பதகர்கள் பந்நகர்கள் என்னு மிவர்களே ராவணனேடு முன்னின்று போர்புரிய வல்லமையற்றிருக்கிறார்கள் என்றால், மானி

டர்கள் எவ்வளவு? அவ்வரக்கனே மிகுந்தபலசாலி களான மஹாவீரர்களையும் யுத்தத்தில் வல்லமையற்ற வர்களாகச் செய்யுந்திறமையுடையவன். ஆகையால் நான் தனியேயாவது, படைகளோடு சூழ்ந்தாவது, எனது புத்ரர்களோடு சேர்ந்தாவது அவனோடு போர் புரிய வல்லமை யற்றிருக்கின்றேன். மாரீசன் முதலிய அவனது ஸைந்யங்களோடும் என்னால் சண்டைசெய்ய முடியாது.

அந்தணரில் சிறந்தவரே! யுத்ததந்திரங்க ளொன்று மறியாதவனும் பாலனும் புத்தென்கிற நரகத்தினின்று என்னைக் காப்பவனுமாகிய எனது புதல்வன் உமது அபிப்பிராயப்படி தேவர்களை நிகர்த்த வனாயிருந்தாலும் நான் அவனை உம்முடன் அனுப்ப ஸம்மதிக்கமாட்டேன். மேலும் உமது யாகத்தைக் கெடுக்கவந்த ஸுந்தோபஸுந்தர்களின் புத்ரர்களாகிய மாரீசஸுபாஹுக்களோ யுத்தத்தில் யமனையொத்து மஹாபயங்கரராயிருப்பவர்கள். ஆகையால் அவர்களோடு யுத்தஞ்செய்து யாகத்தைக் காக்க எனது குழந்தை யாகிய ராமனைக் கொடுக்க மாட்டேன். மாரீச ஸுபா ஹுக்கள் இருவரும் மிக்க வல்லமை பெற்று யுத்தத்தில் நன்றாகப் பயின்றவர்கள். நானும் எனது நண்பர்களும் ஒன்றாய்க் கூட்டங்கூடி எதிர்த்தாலும் அவ்விருவரில் ஒருவனோடாயினும் முன்னின்று போர்புரிய வல்லனோ?" என்று உரைத்தனன். இங்ஙனம் அம்மன்னவன முன் பின் ஓட்டாமல் அஸங்கதமாகச் சொன்ன சொற்களைக் கேட்டு அவ்விச்வாமித்ர மாமுனிவர் அளவற்ற கோபா வேசங்கொண்டு நெய்யைச் சேர்த்து நன்கு ஹோமஞ்




144. ராமனை அனுப்பும்படி விச்வாமித்திரர் கேட்க, தசரதன் முடியாதென்று மறுத்துரைத்தல்.

செய்யப்பெற்ற யாகத்தின அக்நி கொழுந்து விட்டெரி வதுபோலக் கோபாவேசத்தினுல் ஜ்வலித்தனர். இருபதாவது ஸர்க்கம் முற்றிறு.

---

{ வஸிஷ்டர் தசரதனுக்கு விச்வாமித்ரருடைய மகிமையை அறிவிப்பது. }

இப்படி அம்மன்னவன தனது புதல்வனிடத்தில் அனபினுல் எழுத்துக்கள் தெரியாமல் குழறிக்கொண்டு சொன்ன சொற்களைக் கேட்ட விச்வாமித்ரமாமுனிவர் கோபாவேசங்கொண்டு அவ்வரசனை நோக்கி இங்ஙனம் மொழிந்தனர். 'அரசனே! யான் விரும்பின காரியத்தைச் செய்வதாக முன்பு நீ உறுதிமொழி பண்ணிக் கொடுத்து, அதை நிறைவேற்ருது விட்டுவிட நினைக்கினறனை. தர்மத்திற் சிறநத ராகவர்களின இவ்வம்சத்தில் இப்படி சொன்னசொல் தவறுவது யுக்தமன்று. மன்னவனே! இப்படி சொனனசொல் தவறுவது உனக்குள அழகெனறு தோனறுமாயின சொல்லிவிடு. நான வநதவழியே திரும்பிப்போகினறனன். ஸத்யஸநதமாகிய காகுத்ஸ்த்த வம்சத்திற் பிறந்தவனுன நீ, வந்தவர்கட்கெல்லாம் இப்படியே பரதிஜ்ஞை செய்து பொய்யைப் பேசிக்கொண்டு பநதுக்களோடுகூட ஸுகமாக வாழ்ந்திரு' என்று படபடத்துக் கூறினர்.

மிகுநத மதியுடைய அவவிச்வாமித்ர மாமுனிவர் இங்ஙனம் அளவற்ற கோபாவேசங்கொள்ளும்போது, பூமி யெலலாம கிடுகிடுவென்று நடுங்கிற்று. 'இம்மாமுனிவர் எனன செய்வாரோ?' என்று தேவர்களும மிகப் பயமடைந்தனர். பின்பு நன்கு விரதாநுஷ்டானஞ் செய்து அறிஞராகிய வஸிஷ்டமஹர்ஷி உலகமெல்லாம் இப்படி பயந்து நடுங்குவதைக் கண்டு அரசனை நோக்கி இங்ங

னம் உரைத்தனர். 'மஹாராஜனே! நீ சொன்னசொல் தவறாத இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவன்; வேறொரு தர்மதேவதையோ எனனும்படி தர்மமே தொழிலாயி ருப்பவன்; நன்கு தைரியம் நிறைந்தவன்; விரதங்களைத் தவறாமல் அநுஷ்டிப்பதில் மிக்க ஊக்கமுடையவன; ஐச்வர்ய மெல்லாமமைந்திருப்பவன். இப்படிப்பட்ட நீ தாமத்தைத் தவறுவது யுக்தமன்று. ராகவனே! நீ தர் மாத்மா வென்று மூவுலகங்களிலும் மிகவும் கியாதிபெற் றவன். சொனன சொல் தவறாதிருப்பது உனக்கே உரிய தர்மம். அதை நீ அநுஷ்டிப்பாயாக. நீ அதர் மத்தை ஏறிட்டுக்கொளளலாகாது. இபபடி செய்கி றேனென்று ஒத்துக்கொண்டு, பின்பு அங்ஙனஞ் செய் யாதவன், தான் முனசெய்த அச்வமேதம் முதலிய பல வகை யாகங்களையும், குளம் கிணறு வெட்டுவித்தது ஸத்ரம் சாவடி கட்டுவித்தது முதலிய தர்மங்களையும் பயனற்றவைகளாகச் செய்துகொள்வான். ஆகையால் ராமனை ரிஷிக்குத் தருவாயாக.

ராமன் அஸ்த்ரங்களைக் கற்றிருந்தாலென்? கலலாதி ருந்தாலென்? குசிகாது புதல்வராகிய இவவிச்வாமித்ரர் அவனைப் பாதுகாத்துக்கொண்டிருக்கையில், அக்கியால் சூழ்ந்து காக்கப்பட்ட அமிருதத்தைப்போல அரக்கர் கள் அவனை வெல்லவல்லராக மாட்டார்கள் இவ்விச் வாமித்ரமாமுனிவர் தர்மமே ஒரு வடிவங்கொண்டாற் போலிருப்பவர். மூவுலகத்திலும் வீரியம் படைத்தவர் களில் இவர் மிகச் சிறந்தவா; தமது புத்தியின மிகுதி யால் உலகத்தில் யாவரையும் மீறி யிருப்பவர். இவர் தவங்களுக்கெல்லாம் இருப்பிடம். இவரைப்போல் தவஞ் செய்தவன் மற்றொருவனும் இல்லை. ஜங்கம ஸ்தாவரங் களடங்கிய இம்மூவுலகஙகளிலுமுள்ள பலவகைப்பட்ட

அஸ்த்ரங்களையெல்லாம் இவர் அறிந்தவர். இவரறிந்த அஸ்த்ரங்களை இதுவரையிலும் எவரும் தெரிந்துகொண்டிருக்கவில்லை. இனி மேலும் அவைகளை எவரும் அறியப்போகிறதில்லை. எவனாயினுமென்பதென்? தேவர்களும் ரிஷிகளும் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் கிந்நரர்களும உரகர்களும் மற்றுமுள்ள யாவரும் எவ்வளவு மகிமைபொருந்தியிருப்பவர்களாயினும் இவைகளை அறியார்.

அஸ்த்ரங்கள் எல்லாம் பரமதார்மிகராகிய க்ருசாச்வருடைய புத்ரர்கள். முன்பு இக்கௌசிகர் ராஜ்யமாளுங்காலத்தில் இவருக்கு க்ருசாச்வர் அவ்வஸ்த்ரங்களையெல்லாந் தந்தனர். க்ருசாச்வருக்கு தக்ஷப்ரஜாபதியின் பெண்களிருவரிடத்தில் அவ்வஸ்த்ரரூபங்களான பிள்ளைகள் பிறந்தனர். அவர்கள் காமரூபிகள்; மிகுந்த வீர்யமுடையவர்கள்; சிறந்த ஒளிபொருந்தி யிருப்பவர்கள்; தம்மைப்பற்றினவர்களுக்கு வெற்றியைத் தரவல்லவர்கள். தக்ஷப்ரஜாபதிக்கு ஜயையென்றும், ஸுப்ரபையென்றும் அழகான இடையுடைய பெண்கள் இருவருண்டு. அவ்விருவரும் மிகவும் ப்ரகாசமுள்ள அஸ்த்ரங்களையும், சஸ்த்ரங்களையும் பிள்ளைகளாகப்பெற்றனர். அவர்களில் மூத்தபெண்ணாகிய ஜயையென்பவள் அஸுரஸைன்யங்களை வதிக்கும்பொருட்டு அளவிடமுடியாத மகிமையுடையவர்களும், நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவர்களும், கண்ணுக்குப் புலப்படாதவர்களுமாகிய ஐம்பது புதல்வர்களைப் பெற்றனள். பின்பு ஸுப்ரபையும் எதிரிகளால் வருந்தியும் வெல்லமுடியாத வல்லமையுடையவர்களாகி, எங்கும் வெற்றிபெறுந்தன்மையர்களுமாகி, அளவற்ற பலமமைந்தவர்களுமாகிய ஸம்ஹாரங்களென்று பெயர்பெற்ற ஐம்பது புதல்வர்களைத் தானும்

படைத்தனள். அவ்வஸ்த்ரங்களை யெல்லாம் பரிபூர்ண மாகக் குறையின்றி இவ்விச்வாமித்ரமாமுனிவர் அறி வார்.

இப்படி ஸகல அஸ்த்ரங்களுமறிந்து தர்மங்களெல் லா முணர்ந்த இம்மாமுனிவர் கீழ்ச்சொன்னவைகளே யன்றித்தான இதுவரையில் கேட்டறியாத மற்றும புதிய வைகளான அஸ்த்ரங்களையும் அளவின்றி யுண்டுபண்ண வல்லமையுள்ளவர். மஹாதேஜஸ்வியாகி, அளவற்ற கீர்த்தியும அமைந்திருக்கிற இவவிச்வாமித்ர மாமுனி வரது வீரயம இப்படிப்பட்டது. ஆதலால் மன்னவ னே! ராமனை அனுப்ப நீ கிஞ்சித்தும் ஸந்தேகப்பட வேண்டியதில்லை. அவ்வரக்கர்கள அனைவரையும குசி கபுத்ரராகிய இவவிச்வாமித்ரர் ஒருவரே முடிக்க வல்ல வர். ஆயினும் உனது புதல்வனுககு நன்மை உண்டா கும்பொருட்டு உன்னிடம வந்து இப்படி கேட்டுக் கொளளுகின்றனர்' என்று கூறினர். இங்ஙனம் வஸிஷ் டமாமுனிவர் சொன்ன சொற்களைக் கேட்டு ரகுக்களிற சிறந்து நன்கு விளங்குந்தன்மையனாகிய அம்மன்னவன் மனக்கலக்கந் தீர்ந்து தெளிந்து ஸந்தோஷத்தினால் முக மலர்ந்திகொண்டு ராமன் போவதற்கு அங்கீகாரஞ் செய்து அவனை விச்வாமித்ரருக்குக் கொடுககு மனத் தில் எண்ணங்கொண்டனன். இருபத்தோராவது ஸர்க் கம் முற்றிறறு.

---

 விசுவாமித்ரர் ராம லக்ஷ்மணாகளை அழைத்துக்கொண்டு போவது. 

அப்படி வஸிஷ்ட மாமுனிவர் சொல்லுகையில், அதைக் கேட்ட தசரதமன்னவன் ஸந்தோஷத்தினால் முகமலர்ந்தி பெற்றுத் தனது புதல்வனாகிய ராமனை

லக்ஷ்மணனோடுகூட வரவழைத்தனன். பின்பு தாயாகிய கௌஸல்யையும், தந்தையாகிய தசரதமன்னவனும் ராமனுக்கு மங்களாசாரங்களை நடத்தினர். புரோஹிதராகிய வஸிஷ்டமாமுனியும்,மங்களமான மந்திரங்களால் அவனை மந்திரித்தனர். பிறகு அத்தசரத வேந்தன் தனக்கனபனுகிய புதல்வனை உச்சிமோந்து உள்ளங்குளிர நன்கு ஸந்தோஷத்துடன் விச்வாமித்ரருக்குத் தந்தனன்.

பின்பு தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ராமன் விச்வாமித்ரரைப் பின்றொடர்வதைக் கண்டு அப்பொழுது காற்றானது துகளின்றி ஸுகமாயிருக்குமாறு மெதுவாக வீசிற்று. அம்மஹாத்மாவாகிய ராமன் புறப்படும்போது தேவர்கள் துந்துபிவாத்ய கோஷத்துடன் புஷ்பவர்ஷங்களை அளவின்றிப் பொழிந்தனர். அயோத்திமாநகரிலும் அப்பொழுது சங்கவாத்தியங்களும் துந்துபிவாத்தியங்களும் முழங்கின. விச்வாமித்ரர் முன்னே நடந்தனர் அவர் பின்னே ராமன் வில்லுங்கையுமாகத் தொடர்ந்தனன். லக்ஷ்மணனும் காகபக்ஷங்கள் அசைய வில்லைக் கையிற் கொண்டு ராமனைப் பின்சென்றனன். அவ்விருவரும் வேறுவேறாக அம்பறாத்தூணிகளைத் தோளில் தரித்திருப்பதால் மூன்று தலைகளுள்ள இரண்டுஸர்ப்பங்கள்போல விளங்குபவர்களாகி, வில்லைக் கையிலூன்றியவர்களுமாகி, பத்துத்திசைகளையும் பளபளவென ஒளிபெறச் செய்பவர்களுமாகி, அழகு பராக்ரமம் முதலிய அளவற்ற வைபவங்களும் விளங்கப்பெற்று அச்விதேவதைகள் ப்ரஹ்மதேவனைப் பின்றொடர்வது போல் மஹாத்மாவாகிய விச்வாமித்ரரைப் பின்றொடர்ந்தனர்.

இங்ஙனம் வில்லைக் கையிலூன்றி திவ்யமான ஆபரணங்கள் பூண்டு உடும்புத்தோலைக் கைகளிலும் விரல்களிலும் கவசமாகக் கொண்டு உயர்ந்த கத்திகளைப் பிடித்து அளவற்ற ஒளிபரந்து அழகான மேனியுடன் விளங்குபவராகி, உடன் பிறந்தவர்களுமாகி, இளகுருமாரிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் விச்வாமித்ர முனிவரைப் பின்சென்று நெஞ்சினால் சிந்திக்க முடியாத மகிமையுடைய ருத்ரனைப் பின்சென்ற அக்நிகுமாரர்களாகிய [1]ஸ்கந்தவிசாகர்களைப்போல் மிகுந்த ப்ரகாசத்துடன் விளங்கினர். பின்பு அம்மூவரும் ஒன்றரையோஜனை தூரம் நடந்து ஸரயூநதியின் தென்கரைக்குப் போய்ச் சேர்ந்தனர். அப்பொழுது விச்வாமித்ரர், 'ராமா' என்று இனிய சொல்லுடன் அழைத்து, 'குழந்தாய்! ஜலத்தை யெடுத்து ஆசமநம் செய்; காலம் கடக்கலாகாது. பலமந்த்ரங்கள் நிறைந்த பலையென்றும் அதிபலையென்றும் இரண்டு வித்யைகளைப் பெற்றுக்கொள். அதைத் தெரிந்து கொள்வதால் உனக்கு யாதொரு ச்ரமமாவது வியாதியாவது நேரிடாது. உருவம் மாறாதிருக்கும். தூங்கியிருந்தாலும் அசைந்து மறந்திருந்தாலும் ராக்ஷஸர்கள் உன்னை எதிர்க்கமுடியாது. அவ்விரண்டு வித்யைகளை நீ ஜபித்துக்கொண்டிருப்பாயாயின் பாஹுபலத்தில் உனக்கு ஒருவனும் இப்பூமியில் ஒப்பானவன் அகப்படான். பாஹுபலத்திலென்பதேயன்றி எக்குணத்திலும் உனக்கு நிகரானவன் மூவுலகத்திலும் இரான்.

---

1 'ததோऽபவச்சதுர்மூர்த்தி: க்ஷணேந பகவாந் ப்ரபு: ஸ்கந்தோ விசாகச்ச ஶாகச்ச நைகமேஷச்ச ப்ருஷ்டத:' என்று ஸ்ரீமகாபாரதத்தில் குமரன் நான்கு ரூபங்களைத் தரித்ததாகச் சொல்லப்பட்டது. அவர்களில் ஸ்கந்த விசாகர்களிருவரை உபமாநமாகக் கொண்டு (ஸ்கந்த விசாகர்களைப்போல்) என்று இங்குச் சொல்லப்பட்டது

மேலும் பாபமற்றவனே! ஸௌந்தர்யத்திலும், ஸாமர்த்தியத்திலும், நுட்பமான பொருள்களைக் கண்டறிவதிலும், கார்யாகார்யங்களை நிச்சயிப்பதிலும், ப்ரச்நம் பண்ணுவதிலும், ப்ரத்யுத்தரஞ்சொல்லுவதிலும் உனக்குச் சரியாயிருப்பவன் உலகத்தில் ஒருவனும் இருக்கமாட்டான். பல சொல்லியென்?, இவ்விரண்டு வித்யைகளையும் கற்றாயாயின் உனக்கு ஒபபானவன் இப்பொழுதுமில்லை. இனி உண்டாகப் போகிறதுமில்லை. ஏனெனில் பலையெனறும் அதிபலையெனறும் சொல்லப்படுகிற இவ்விரண்டு வித்யைகள் எல்லா அறிவுக்கும் முதல் தாயாயிருப்பவை. இவ்விரண்டையும் ஜபித்துககொண்டு வழியில் நடந்தாயாகில் உனக்குப் பசிதாகங்கள் உண்டாகா.

இவைகளைக் கற்றாயாயின் உனக்கு இப்பூமியெங்கும் ஒப்பில்லாத புகழ் விளங்கும். ஏனெனில் இவை ப்ரஹ்மதேவனால் படைக்கப்பட்டவை. ஆகையால் சிறந்த மகிமை பொருநதியவை. நீ பெருமை பெற்ற காகுத்ஸத்த வம்சத்திற் பிறந்தவன். தாமங்களையெல்லாம் நனகறிந்து நடத்துந்தன்மையன். ஆகையால் இப்படிப்பட்ட வித்யைகளை அடைய நீயே தகுநத பாத்ரமாயிருக்கினறனை. உன்னைப் போனறவன் கிடைப்பதரிது. முன சொனன ஸௌபாக்யம் முதலிய பலவித குணங்களும் உன்னிடத்தில ஏற்கனவே அளவற்றவைகளா யிருககின்றன. இதில் ஐயமில்லை. ஆயினும் இவை மிகத் தவஞ்செய்து ஸம்பாதிக்கப்பட்டவையாதலால் இவைகளை உபதேசம பெற்றாயாயின் இவை உனக்கு வெகு பலங்களைக் கொடுக்க வல்லவை. நீயும் பரந்த இவ்வுலகத்தில் பலருக்கும் உபதேசித்துப் பரவச்செய்வாய்' என்று மொழிந்தனர்.

பின்பு ராமனும் ஜலத்தை எடுத்து ஆசமநஞ்செய்து பரிசுத்தனுகி, பரமாத்மத்யாநஞ் செய்து விளங்

கும் விச்வாமித்ரமஹர்ஷியினிடமிருந்து அவ்வித்யைக ளிரண்டையும் ஸந்தோஷத்தினால் முகமலர்த்தியுடன பெற்றுக் கொண்டனன். இப்படி ராமன் அவ்வித்யைகளி ரண்டையும் பெற்றுக்கொண்டு சரத்காலத்தில் ஆயிரங் கிரணங்களும் அடைவின்றி விளங்கும் மகிமையெல்லா மமைந்த ஸூர்யனைப்போல மஹாபராக்ரமசாலியாகி ப்ரகாசித்தனன். பின்பு குருவுக்குச் செய்யவேண்டிய காலைப்பிடிப்பது முதலிய உபசாரங்களனைத்தும் விச் வாமித்ர மாமுனிக்கு நன்கு நடத்தினன். அப்பால் ராம னும் லக்ஷ்மணனும் அம்மஹர்ஷியுமாகிய மூவரும் அவ் விரவெல்லாம் ஸரயூநதியின கரையில் மிக்க ஸுகத்து டன் வஸித்திருந்தனர். அங்ஙனம் அத்தசரத மஹா ராஜனது புதல்வர்களாகிய ராமலக்ஷ்மணர்கள் இருவ ரும தமக்குத் தகாத புற்படுக்கையில் ஒன்றாகப் படுத் துக் குசிகபுத்ரராகிய விச்வாமித்ரர்சொல்லிய சொற் களைக் கேட்டுக் களித்து, ஸுகமாயிருக்கையில் அவ் விரவு விடிந்தது. இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விச்வாமித்ரர் அங்கதேச விருத்தாந் தத்தைச் சொல்லுவது.

அவ்விரவு சென்று பொழுது விடியும்போது விச்வா மித்ரமாமுனிவர் [1]இலைகள் நிரம்பின படுக்கையில் சய னித்துக்கொண்டிருக்கும் காகுத்தர்களாகிய ராமலக்ஷ

---

1 முன்ஸர்க்கத்தில் (புற்படுக்கையில்) என்று சொல்லி, இங்கு (இலைகள் நிரம்பின) என்று சொல்வது ஒன்றுக்கொன்று விரோதிக் கையால், புற்களும் தளிர்களுங்கலந்து போடப்பட்ட படுக்கை யென்று கொள்ளவேண்டும்

மணர்கள் இருவரையும் நோக்கிக் [1]'கௌஸல்யையினது ஸத்புத்ரனே ! ராமா ! பொழுது விடிந்து ஸந்த்யாகால மாயிருக்கின்றது. புருஷோத்தமா ! எழுந்திரு. பகலில் செய்யவேண்டிய தேவதாராதநம் முதலிய நடவடிக்கை களை நடத்தவேண்டும்' எனறனர்.

இப்படி அம்மாமுனிவர் சொன்ன மிகவும் கம்பீர மான வார்த்தையைக் கேட்ட ராஜ்குமாரர்களிருவரும் எழுந்திருந்து நீராட்டம் முடித்து அர்க்யங்கொடுத்து விட்டு மந்த்ரங்களிற் சிறந்த காயத்ரியென்னும் மந்த்ரத் தை ஜபஞ் செய்தனர். இங்ஙனம் மஹாவீரர்களாகிய அவ்விருவரும் திகக்கடமை யாவும் செய்து முடித்து தவம் பொருந்திய விச்வாமித்ர மாமுனிவரைத் தண்ட னிட்டு மிக்க மனக்களிப்புடன் அங்கிருந்து விச்வாமித் ரர் புறப்படுவதை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். பின்பு விஶ்வாமித்ரமஹர்ஷியுடன் அங்கிருந்து புறப் பட்டு மிக்க வீரியம் பொருந்திய அவ்விருவரும் புண்ய மான் ஸரயூநதி வந்துசேருமிடத்தில் அழகான கங்கா நதியைக் கண்டனர்.

அங்கு அநேகமாயிரம் வருஷங்களாகப் பெருந்த வஞ்செய்துகொண்டிருக்கும் மிகுந்த மகிமையுள்ள ரிஷி களின் ஆச்ரமம் வாய்த்திருக்கும் ஓரிடத்தைக் கண்டு வெகு ஸந்தோஷத்துடன் மஹாத்மாவாகிய விச்வாமித் ரரைப் பார்த்து 'பகவானே! அழகான இவ்வாச்ரமம் யாருடையது? இதில் வாஸஞ்செய்யும் புருஷன் எவன்?

---

1 இவ்வாக்யத்திற்கு மூலம்—

கௌஸல்யா ஸுப்ரஜாராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே।

உத்திஷ்ட நரஶார்தூல கர்தவ்யம் தைவமாஹ்நிகம்'.

இதற்குள்ள அர்த்தவிசேஷமெல்லாம் தனிச்லோகியில் கண்டு கொள்க.

எங்களுக்கு இது மிகவும் குதூஹலத்தை விளைவிக்கின
றமையால் கேட்க விரும்புகின்றனம். இதைச் சொல்ல
வேணும்' என்று கேட்டனர். அம்மாமுனியும் அவர்கள்
சொன்னசொற்களைக் கேட்டுச் சிரித்து 'ராமா! இது
முன்பு யாருடைய ஆச்ரமமோ, அதைச் சொல்லுகின்
றேன்; கேள். கற்றவர்களால் காமனென்று சொல்லப்படு
கிற(கந்தர்ப்பன்)மந்மதன் முன்பு கண்ணுக்குப் புலப்படும்
படி உருவத்துடன் இருந்தனன். கெடுமதியனாகிய அம்
மந்மதன மஹாத்மாவாகிய சிவன் பார்வதியை மணம்
புரியும்படி செய்யவேண்டுமென்று தேவதைகள் கேட்டுக்
கொள்ள, அவரிடம் அநுமதி பெற்று அங்ஙனே நடத்
துவதாக உத்தேசங் கொண்டு இவ்வாச்ரமத்தில் நிக்க
நியமத்துடன் மனவூக்கங் கொண்டு தவஞ்செய்யும் சிவ
பெருமானுக்குக் காமத்தை விளைவிக்கும் பொருட்டுப்
புஷ்பபாணங்களை யேவ, அம்மஹாநுபாவனால நெற்றிக்
கண்ணைத் திறந்து நோக்கப்பட்டு 'ஹும்' என்று கிரா
கரிக்கப்பட்டு பஸ்மமாயினன்.

ரகுநந்தனா! இங்ஙனம் சிவபெருமானது நெற்றிக்
கண்ணினால் கொளுத்தப்பட்ட கெடுமதியனான மந்மத
னுடைய சரீரத்திலிருந்த அவயவங்களெல்லாம் சித
றிப்போயின. மஹாத்மாவாகிய சிவபிரான் இப்படி
பஸ்மமாகச்செய்ய, அம்மந்மதனுடைய சரீரம பாழாய்
விட்டது. இங்ஙனம் தேவர்களுக்குத் தலைவனாகிய
ருத்ரனால் மிகச் சினங்கொண்டு மந்மதன் சரீரமற்ற

---

(சிரித்து) வினவுதலினழகைக் கண்டு சிரித்தாரென்று கண்டு
கொள்வது. அல்லது—மநுஷ்யத்தன்மையை நடித்து ஒன்று மறியா
தவன்போல் வினவினதைக் கண்டு சிரித்தாரென்றுணர்க. (ராமா!)
என்று சொன்னது ராமனை முக்கியமாகக் கொண்டு சொன்னதை லக்ஷ்
மணனைக் குறித்துஞ் சொன்னதாகவேயுணர்க.

வனுகச் செய்யப்பட்டனன். ராகவனே! அதுமுதலாக மந்மதன் அங்கமற்றவனுனதுபற்றி அநங்கனென்று கியாதி பெற்றனன். அம்மந்மதன யாதோரிடத்தில் அங்கத்தை விட்டனனே, அத்தேசம் அங்கமென்று வழங்கிவருகின்றது. புண்யமான இவ்வாச்ரமம் அச்சிவபெருமானுடையது. இங்கிருக்கும் இம்முனிவர்கள் அக்காலந்தொடங்கி வம்சபரம்பரையாக அச்சிவபெருமானுடைய சிஷ்யர்களாயிருக்கின்றனர். ஆகையால இவர்கள் எப்போதும் தர்மத்தில் மனஞ்சென்று பாவமேதுமின்றி விளங்குபவர்கள். பார்க்கப் பதினயிரம் கணகள் வேண்டும்படி அழகான ராமனே! இன்றிரவு அங்கதேசத்தில் இப்புண்ய நதிகளினிடையில் வஸிதிருந்து நாளையதினம் நாம் கங்கையைத் தாண்டிபபோவோம். இனி நாம் ஸ்நாநம் செய்து ஜபங்களை நடத்தி ஹோமங்களை முடித்துப் பரிசுத்தர்களாகிப் புண்யமான ரிஷிகளினுச்ரமத்திற்கு அனைவருமாகப் போவோம்' என்று இங்ஙனே சொல்லிக்கொண்டிருந்தனர்.

இப்படியிருக்கையில் ரிஷிகள்யாவரும் தமது தபோமகிமையால் வெகுதூரமறியவல்ல நெஞ்சென்னு முட்கண் கொண்டு அவர்களையும் அவர்கள் வருங்காரணத்தையும் அறிந்து சரீரமெங்கும் மயிர்க்கூச்செறிய மிகுந்த ஸந்தோஷம் அடைந்து விச்வாமித்ரருக்கு அர்க்யபாத்யங்களும் ஆசமநீயமும் கொடுத்துக் காய் கிழங்கு முதலியவைகளால் அதிதி ஸத்காரமும் செய்து பின்பு ராம லக்ஷ்மணர்களுக்கும் அதிதிபூஜையை நடத்தினர்; விச்வாமித்ரரும் அவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்தனர். அம்முனிவர்களும் ஸத்காரத்தைப் பெற்று, தமக்கு அதிதிகளாகிய ராம லக்ஷ்மண விச்வா

மித்ரர் மூவரையும் பலவித கதைகளைச் சொல்லி மனங் களிக்கச் செய்துகொண்டிருந்தனர். பின்பு ஸூர்யன் அஸ்தமிக்க, விச்வாமித்ரர் முதலிய மஹர்ஷிகளும் ராம லக்ஷ்மணர்களும் மனஊக்கங்கொண்டு தங்கள் தங்களுக் குரியபடி ஸந்த்யாவந்தனஞ் செய்து காயத்ரி ஜபஞ்செய் தனர். பின்பு விரதாநுஷ்டானங்கள் நன்கமைந்த அங்கு வாஸஞ் செய்யும் தாபஸர்கள் தம்மையழைத்துக் கொண்டு போக, அம்மூவரும் அங்கு சிவன் காமனைக் கொளுத்தினபடியால் "காமாச்ரமமென்று" பெயர் கொண்ட அவ்வாச்ரமத்திற் சென்று அங்கு ஸுகமாக வஸித்திருந்தனர். தர்மாத்மாவாகிய அவ்விச்வாமித்ர மாமுனிவர் அவ்வாச்ரமத்தின் மகிமையைக் குறித்த மதுரமான கதைகளைச்சொல்லி அழகான ராஜகுமாரர் களைச் சந்தோஷப்படுத்திக் கொண்டிருந்தனர். இரு பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விச்வாமித்ரர் ஸரயூநதி மலதகரூச தேசங்கள் ஆகிய இவற்றின் வரலாற்றைக் கூறியது.

பின்பு பொழுது விடிந்து ஸூர்யோதயமாகையில் பகைவரை அடக்குந் தன்மையராகிய ராமலக்ஷ்மணர் களிருவரும் அக்காலத்திற் செய்யவேண்டுபவற்றைச் செய்து முடித்து, விச்வாமித்ரமாமுனியை முன்னிட்டுக் கொண்டு கங்காநதியின் கரைக்கு வந்து சேர்ந்தனர். பின்பு விரதங்களையெல்லாம் நன்கநுஷ்டித்த மஹாத் மாக்களாகிய அவ்வாச்ரமத்திலுள்ள முனிவர்கள் அனை வரும் அழகிய ஒரு ஓடத்தை அருகிற்கொண்டுவந்து நிறுத்தி விச்வாமித்ரமாமுனியை நோக்கி 'மாமுனியே! ராஜபுத்ரர்களை யழைத்துக்கொண்டு இவ்வோடத்திலே

றிச் சுபமாக வழியைக் கடந்துபோம். காலவிளம்பம் வேண்டாம்' என்றனர். விச்வாமித்ரரும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லி, அந்த ரிஷிகளைப் பூஜித்து ராஜபுத்ரர்களோடு, கடலை நோக்கிச்செல்லுகிற அக் கங்காநதியைத் தாண்டத் தொடங்கி ப்ரவாஹத்தி னிடையே போகையில் அலைகள் வேகத்துடன் ஒன்றோ டொன்று அடித்துக்கொள்வதனால் மேன்மேலும் அதி கப்படுகின்ற ஓரொலியை ராமலக்ஷ்மணர்களிருவரும் செவியுற்றனர்.

அப்பொழுது ராமன் விச்வாமித்ரமாமுனியைப் பார்த்து 'மாமுனியே! இவ்வாற்றின் நடுவில் ஜலம் ஒன்றோடொன்று கிளம்புகிற இப்பெரியகோஷம் எதனா லுண்டாகிறது' என்று கேட்க, அதற்கு தர்மாத்மாவா கிய விச்வாமித்ரமுனிவரும் குதூஹலத்துடன் அவ்வொ லிக்குக் காரணம் இதுவென்று நிச்சயித்துச் சொல்லத் தொடங்கினர். 'புருஷோத்தமனாகிய ராமனே! கைலா ஸபர்வதத்தில் ப்ரஹ்மதேவன் தனது மனத்தினால் ஒரு ஸரஸ்ஸை நிருமித்தனன். ஆகையால் அது மாநஸ மென்று சொல்லப்படும். அந்த ஸரஸ்ஸினின்றும் பெரு கின ஸரயூநதி அயோத்யாபட்டணத்தைச் [1] சுற்றிக் கொண்டு வருகின்றது. பிரமனது மனத்தினால் நிருமிக்

1 இந்த ஸரயூநதி ப்ரஹ்மாவினாற் படைக்கப்பட்ட மாநஸஸரஸ் ஸினின்றும் பெருகி அயோத்யாநகரத்திற்கு மேற்குத்திசையிலாரம் பித்து அப்பட்டணத்திற்கு வடக்குத்திசையின் வழியாக அந்நகரத்திற் குக் கிழக்கே வந்து அங்கதேசத்தில் பெருகிப்போகின்ற கங்காநதி யோடு கலக்கின்றது. அவ்விரண்டுநதிகளுங் கலக்குமிடத்தில் ஸ்தாணு வின் ஆச்ரமம் இருக்கின்றது. (ஸ்தாணு-உருத்திரன்) ஆகையால் ஸரயூநதியுடன் கலந்த கங்காநதியைத் தாண்டும்பொழுது ஸரயூநதி மேட்டிலிருந்து பள்ளத்தில் விழுந்து வருகையால் அந்தப்ரவாஹத்தில்

கப்பட்ட மாநஸமென்று பெயர் பெற்ற அக்கைலாஸ ஸரஸ்ஸினின்றும் பெருகிவருகையால் புண்யமான இந்நதிக்கு ஸரயூவென்று பேர் விளங்குகின்றது. அந்த ஸரயூநதி மிக்க வேகத்துடன் இக்கங்காப்ரவாஹத்தில் வந்து விழுவதுபற்றி ஜலம் ஒன்றோடொன்று மோதிக்கொள்ள, இப்பெருங் கோஷம் அவ்வேகத்தினால் உண்டாகின்றது. ஆகையால் மனஊக்கத்துடன் இந்நதிகளுக்கு நமஸ்காரஞ்செய்' என்றுரைத்தனர்.

தாமங்களை மிக்க அன்புடன அநுஷ்டிக்குந் தன்மையராகி, மிக்க பராக்ரமசாலிகளுமாகிய அவ்விருவரும் அப்படியே அந்நதிகளுக்கு நமஸ்காரஞ்செய்து கங்கா நதியின் தென்கரைக்குச் சென்று வேகமாக நடந்தனர். அங்ஙனஞ் சென்று இக்ஷ்வாகு வம்சத்திற்கு அலங்காரமான தசரதமஹாராஜனது புத்ரனாகிய ராமன ஜநஸஞ்சாரமில்லாமல் பயங்கரமாயிருக்கின்ற ஓர் கானகத்தைக் கண்டு, விச்வாமித்ரமாமுநியை நோக்கி 'ஓ முநிகளுக்கரசே! இக்கானகம் வருநதியும் உள்ளே புகக்கூடாததாயிருக்கின்றது. இதில் சுவர்க்கோழி யென்று சொல்லப்படும் சில்வண்டுகள் கூட்டங்கூட்டமாகி எங்கும் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. பின்னும், இதில் பயங்கரங்களான கொடிய மிருகங்களும் எங்கும் திரிந்துகொண்டிருக்கின்றன. கள்ளிககாக்கைகளும் மற்றும் பலவகைப் பறவைகளும இங்கு எங்கும் நிறைந்து பயங்கரமாகக் கூச்சலிட்டுக்கொண்டிருக்கின்றன. சிங்கங்களும், புலி

---

த்வநி உண்டாகின்றதென்றுணர்க. இவ்வொலியேதென்று ராமன் வினவ, இது மேட்டிலிருந்து பள்ளத்தில் விழுந்து பாயும ஸரயூநதியின ப்ரவாஹத்தில் உண்டானதென்று சொல்லவேண்டியிருக்க, அந்நதியின் பிறப்பைச் சொன்னது அங்கு நமஸ்காரஞ் செய்கைக்காக வென்று கண்டுகொள்வது.

களும், பன்றிகளும், யானைகளும் இங்கு நிறைந்திருக்கின்றன. வெள்வேலமரங்களும், ஆச்சாமரங்களும், மருதமரங்களும், வில்வமரங்களும், திந்துகமரங்களும், பாதிரிமரங்களும், இலந்தைமரங்களும் இதில் எங்கும் சூழ்ந்திருக்கின்றன. இங்ஙனம் பயத்தை விளைவிப்பதான இக்கானகத்தின் பெயர் யாது' என்று வினவினன்.

அப்பொழுது மகிமையெல்லா மமைந்த விச்வாமித்ர மாமுனிவர் ராமனை நோக்கி 'குழந்தாய்! காகுத்தனே! புருஷோத்தமா! பயங்கரமான இக்கானகம் யாருடையதோ, அதைச சொல்லுகிறேன்; கேள். முன்பு இதுதேவர்களால் நிருமிக்கப்பட்டு தேவலோகத்தோடொத்து மலதமென்றும் கரூசமென்றும் பெயர்கொண்ட இரண்டு தேசங்களாயிருந்தது. முன்னே இந்திரன் விருத்ராஸுரனை வதிக்க, உடனே ஆயிரங்கண்ணனாகிய தேவேந்திரனை ப்ரஹ்மஹத்யை யாவேசிக்க, அதனால் அவனுக்கு அசுசியும் (பாவமும்) பசியும் வெகுவாய்ச் சூழ்ந்துகொண்டன. அப்பொழுது தேவதைகளும் தபோதனாகளாகிய ரிஷிகளும் அவ்விந்திரனுக்குக் கங்கைமுதலிய புண்யதீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்வித்துப், பின்பு மந்த்ரபரிசுத்தங்களான கலச ஜலங்களால் ஸ்நாநம் பண்ணுவித்து, அவ்வசுசியையும் பசியையும் போக்குவித்து, அவ்விந்திரனது சரீரத்தினின்றுங் கழிந்த மலமென்றும் கரூசமென்றும் சொல்லப்பட்ட பாவத்தையும் பசியையும் இத்தேசத்தில் ஒழியும்படி செய்து, பின்பு ஸந்தோஷமடைந்தனர். இந்திரனும் தனது மல கரூசங்களை விட்டுத் தான் பரிசுத்தனானதற்கு மிகவும் ஆநந்தித்து அத்தேசங்களைக்குறித்து 'எனது சரீரமலங்களையும், கரூசங்களையும் வாங்கிக் கொண்டமையால் இத்தேசங்கள் தநதாந்யங்களால்

சிறந்து, எனது சரீரமலத்தைக் கண்டித்தமையால் மல தங்களென்றும், கருசத்தை வாங்கிக்கொண்டமையால் கருசங்களென்றும், உலகத்தில் கியாதி அடையப் போகின்றன' என்று இச்சிறந்தவரத்தைக் கொடுத்தனன. மிகுந்தமதியுடைய தேவேந்திரன் அங்ஙனம் அந்தேசத்துக்குத் தந்த வெகுமதியைக் கண்டு தேவர்கள் ஸந்தோஷித்து 'நல்லது நல்லது' என்று அவ்விந்திரனைப் புகழ்ந்துகொண்டனர். இங்ஙனம் தேவேந்திரனது வரமகிமையால் இம்மலதகருசதேசங்கள் வெகு காலமாகத் தந்தாந்யங்கள் நிறைந்து களிப்புற்றிருந்தன.

பிறகு இங்ஙனே சிலகாலஞ்செல்ல, தாடகையென்று பெயர்கொண்ட ஓர் யக்ஷகன்னிகை உண்டாயினள். அவள் பிறந்ததுமுதல் ஆயிரம்யானை பலமுடையளாகி நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவளுமாயிருந்தனள். அவளால் உனக்கு யாதொருபயமும உண்டாகாமலிருக்கவேண்டும். அவளை மதிமானாகிய ஸுந்தனென்பவன் மணம்புரிந்தனன். அவளுக்குப் பராக்ரமத்தில் இந்திரனைப்போன்ற மாரீசனென்னும் ராக்ஷஸனொருவன் பிறந்தனன். அவன திரண்டுருண்டு நீண்ட புஜ தண்டங்களும், யாவருமெதிரிட வொண்ணாத சிறந்த வீர்யமும் அமைந்து பரந்த முகத்தோடும் பருத்த சரீரத்தோடுங்கூடி, பயங்கரமான உருவங்கொண்டு எப்பொழுதும் ப்ரஜைகள் அனைவர்க்கும பயத்தை விளைவித்துக்கொண்டிருக்கின்றனன.

ரகுகுலதிலகனே! கெடுநடத்தையுள்ள அத்தாடகை இம் மலத கருச தேசங்களை எப்பொழுதும் பாழடையச் செய்கின்றனள். அவள் தான் ஒன்றரை யோஜனை தூரத்தில் வழியைத் தகைந்துகொண்டு வாஸஞ்

செய்கின்றனள். அத்தாடகை வஸிக்கும் வநம் யாதோ ரிடத்திலிருக்கின்றதோ, அவ்வழியாகவே நாம் போக வேண்டும். நீ உனது புஜபலத்தைக் கொண்டு இக் கொடுந் தொழிலுடையளாகிய தாடகையை எனது சொற்படி முடிக்கவேண்டும். அப்படி முடித்தநயாயின் முன்போலவே இத்தேசங்கள் யாதொரு உபத்திரவமு மின்றி ஸுகமாயிருக்கும். இத்தேசம் இப்படி புண்ய க்ஷேத்ரமாயிருந்தும் யாவராலும் வெல்லமுடியாத வல் லமை கொண்டு மிக்க பயங்கரையான அத்தாடகை யென்னும் யக்ஷபெண்ணினால் பீடிக்கபட்டிருப்ப தால் ஒருவரும் இங்கு காடமுடியாமலிருக்கின்றது. ஆக இவ்வநம் எப்படி பயங்கரமாயிற்றோ; எப்படி ஜந ஸஞ்சாரமற்றதாயிற்றோ; எப்படி இப்பொழுதும் அந்த யக்ஷப்பெண்ணான தாடகையினுபத்ரவம் சிறிதும் நீங் கப்பெறாமல் அப்படியே நடந்துவருகின்றதோ; அப் படியே அக்கதை யெல்லாவற்றையும் ஸவிஸ்தாரமாக உனக்குச் சொன்னேன்; ராகவா!" என்று மொழிந்த னர். இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தாடகா விருத்தாந்தம்.

பின்பு அளவற்ற மகிமையுடைய அவ்விச்வாமித்ர முனிவர் இங்ஙனம் அழகாக உரைத்த மொழியைக் கேட்ட புருஷோத்தமனாகிய ராமன் விச்வாமித்ரரைப் பார்த்து 'மாமுநியே! யக்ஷர்கள் பலத்தில் மிகவும் குறைந்தவர்களென்று கேட்டிருக்கின்றனம். அப்படிப் பட்டவர்களில் ஒரு பெண்பிள்ளை ஆயிரம் யானைபல முடையவளா யிருப்பது எப்படி?' என்றிங்ஙனம் இனி தான ஒரு சொல்லைச் சொல்ல, அதைக் கேட்டு விச்வா

மித்ரர் இங்ஙனமுரைத்தனர். 'ராமா! ஓர் பெண்பிள்ளையாகிய தாடகைக்கு இப்படி சிறந்த பலமுண்டாயிருப்பதற்குக் காரணஞ் சொல்லுகிறேன், கேளாய். அவளுக்கு வரதானத்தினால் பிறந்த பலமுண்டு. ஆனதுபற்றி அத்தாடகை இயற்கையாகவே பலமற்றிருக்கும் பெண் பிள்ளையாகப் பிறந்தவளாயினும் இப்படிக்குச் சிறந்த பலமுடையளாயிருக்கின்றனள்.

முன்னொருகால் மிகுந்த பராக்ரமங்கொண்டு ஸுகேதுவெனனும் பெயர் பெற்று யக்ஷர்களிற் சிறந்தவன் ஒருவன் இருந்தனன். அவன் நல்லொழுக்கமுடையவனாயிருந்தும் ஸந்தானமற்றிருந்தமையால் புதல்வனைப் பெறவேண்டிப் பெருந்தவஞ்செய்தனன். அப்பொழுது பிதாமஹன் மிகவும் ப்ரீதியடைந்து அந்த யக்ஷாதிபதிக்குத் தாடகையென்னும் ஓர் பெண்மணி யுண்டாகும்படி வரங்கொடுத்தனன். அத்தாடகை யென்னுங் கன்னிகைக்கு ஆயிரம் யானை வலிமையும் தந்தனன. ஆனால் அப்பெரும்புகழ் பெற்ற நான்முகக்கடவுள் அந்த ஸுகேதுவென்னும் யக்ஷனுக்கு ஒரு புதல்வன் உண்டாகும்படி அருள் புரியாதொழிந்தனன். இங்ஙனம் அத்தாடகையென்னும் பெண்மணி பிறந்து, நாளொரு மேனியும் பொழுதொருவர்ணமுமாக வளர்ந்து பருவம் நிரம்பியிருக்கையில், அவளது தந்தையாகிய ஸுகேது ஜர்ஜனென்பவனுடைய புதல்வனான ஸுந்தனென்பவனுக்கு அவளைக் கொடுத்து விவாஹஞ் செய்வித்தனன். பின்பு சில காலஞ்செல்ல, அந்த யக்ஷன்மனைவியாகிய தாடகை மாரீசனென்னும் பெயர் பெற்று யாவராலும் எதிரிடவொண்ணாதபடி வல்லவனான ஓர் புதல்வனைப் பெற்றனள். அம்மாரீசன் சாபத்தினால் ராக்ஷஸனாய் விட்டனன்.

ராமா! அந்தச் சாபத்திற்குக் காரணஞ் சொல்லு கின்றேன்; கேள். ஸுந்தன் அகஸ்தியரால் முடிந்து போகையில் அத்தாடகை தனது பிள்ளையைக் கூட்டிக் கொண்டு அம்மாமுனியை வென்று முடிக்க நினைத்துப் பெரியபரபரப்புடன் கர்ஜித்துக்கொண்டு அம்மாமுனி யைப்பக்ஷிக்கும்பொருட்டுஎதிர்த்தோடினாள். அங்ஙனம் அவள் ஓடிவருவதைக் கண்ட அவ்வகஸ்திய மாமுனியும் மிகச்சினங்கொண்டு, மாரீசனை 'நீ ராக்ஷஸனாகக் கட வாய்' என்று சபித்தனர். அப்படி சபித்தும் அக்கோ பம் தீராமல் தாடகையையும் 'நீ இவ்வுருவம் மாறிப் போய் விகாரமான உருவங் கொண்டு பார்க்க வழங்கா தபடி கோரமான முகத்துடன்கூடி மனிதரைப் பிடுங் கித்தின்னுந் தன்மையளாயிருப்பாயாக' என்று சபித்து விட்டனர். அங்ஙனம் சாபம்பெற்ற இத்தாடகை அம் மாமுனிவரது சாபம் அப்படியே பலிக்க, மிகக்கோபா வேசங்கொண்டு, அப்பொழுது அகஸ்தியமாமுனி ஸஞ் சரித்துக்கொண்டிருந்த இவ்வழகான தேசத்தை ஜனங் கள் நடையாடாதபடி பீடித்துப் பாழடையச் செய்கின் றனள். ரகுகுலாலங்காரனே! ராமா ! உலகமனைத்தும் வருத்தும்படி யக்ஷப்பெண்ணாகிய இத்தாடகை மிகவும் கோரமான வடிவங்கொண்டு பொல்லாத பராக்ரமத்து டன் கொடிய நடவடிக்கைகள் மேலிட்டுத் திரிகின்றமை யால் பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் நன்மையுண் டாகும் பொருட்டு இவளை நீவதஞ்செய்யவேண்டும். சாபம் பெற்ற இத்தாடகையை மூவுலகங்களிலும் உன் னையொழிய மற்றொரு புருஷனும் முடிக்க வல்லனன்று. ரகுகுலத்திற்பிறந்த நீயொருவனே இவளை வெல்ல வல்ல வன். புருஷோத்தமனே! ஸ்த்ரீவதஞ் செய்யவேண்டு மோ வென்று நீ அருவருப்பு கொள்ளத்தகாது. நீ ராஜ

குமாரனாகப் பிறந்தவன்; ராஜபுத்ரனாயிருப்பவன் நான்கு ஜாதிகளுக்கும் நன்மையை விளைவிக்க வல்ல காரியங்களைச் செய்யவேண்டுமன்றோ? ப்ரஜைகளின் நன்மைக்குரிய காரியமொன்று கொடியதாயினும், நல்லதாயினும், பாவத்தை விளைவிப்பதாயினும், அபவாதத்தைக் கொடுப்பதாயினும், உலகத்தைக் காக்க வல்லவனாகிய ஸத்புருஷன் அதைக் கட்டாயமாகச் செய்யவேண்டும்.

காகுத்தனே! அரசாள இழிந்தவர்களுக்கு இது எப்பொழுதுந் தவறாமற் செய்யவேண்டியதொரு தர்மம். மேலும், இத்தாடகை அதர்மஞ் செய்யுந் தன்மையளாகையால் இவளை நீ முடிக்கவேண்டும். இவளிடத்தில் தர்மமென்பது சிறிதுங் காணவரிது. ஆகையால் இவளை நீ கொல்லத்தகும். ஸ்த்ரீகளாயினும் கொடிய நடவடிக்கையுடையவர்களாயின் அவர்களை வதஞ்செய்வது பெரியோர்கள் நடத்தும் ஒழுக்கமேயன்றி நான் உண்டாக்கிச் சொல்வதொன்றன்று. முன்ன பூமியையெல்லாம் பாழுடையச் செய்யவேண்டுமென்றெண்ணங் கொண்ட விரோசந புத்திரியாகிய மந்தரையென்பவளை இந்திரன் முடித்தானென்பது யாவருங்கேட்டிருக்கிறோமல்லவா? ராமனே! இன்னமும் சுக்ரனுக்குத் தாயாகி பிருகுமஹார்ஷியின் பத்நியுமாகிய ஒருபெண்பிள்ளை முன்பு உலகத்தில் இந்திரனை யில்லாமல் தொலைக்க வேண்டுமென்று நினைவுகொண்டு யாதொரு தடையுமின்றிக் கடுமையான விரதஞ் செய்யத் தொடங்க, அவளை விஷ்ணு வதித்தாரென்பதும் உலகில் எங்கும் ப்ரஸித்தம். ராஜகுமாரனே! இவர்களேயன்றி மற்றும் பல மஹாத்மாக்களாகிய ஸத்புருஷர்களும் அதர்மத்தில் மனஞ்சென்ற ஸ்த்ரீகளை முடித்திருக்கின்றனர்.

என்று மொழிந்தனர். இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் தாடகையை ஸம்ஹாரஞ் செய்தல்.

இப்படி விச்வாமித்ரமாமுனிவர் பெரும்பொருளுடன்கூடியதாகி தைரியத்துடன் உரைத்த அம்மொழியைக் கேட்டு, தசரதமஹாராராஜனது குமாரனாகிய ராகவன் பெரியோர்கள் சொற்படி நடக்கவேண்டுகையாகிற விரதாநுஷ்டாநத்தில் நிலைநின்று மனஉறுதிகொண்டு நிற்குந் தன்மையனாகையாலே, 'விச்வாமித்ர மாமுனிவர் சொற்படி நடவாயென்று தந்தை எனக்களித்த ஆணையாலேயும், அவ்வாணையில் எனக்குண்டான கௌரவத்தினாலும் மகிமைபொருந்திய விச்வாமித்ரமாமுனிவர் மொழிவதினாலும், யாதொரு ஸந்தேஹமுமின்றி இதை நான்செய்ய வேண்டியதே' யென்று தனக்குள் ஆலோசித்துக் கொண்டு, அம்மஹர்ஷியை நோக்கிக் கையைக் கூப்பிக் கொண்டு இங்ஙனமுரைத்தனன். 'முனிகுலதிலகரே! அயோத்திமாநகரில் குருக்களின் நடுவில் மஹாத்மாவாகி எனக்குத் தகப்பனுமாகிய தசரதமஹாராஜன் 'விச்வாமித்ர மாமுனிவரது சொற்படி நீ நடக்க வேண்டியது' என்று எனக்குக் கட்டளையிட்டனன். எனக்கு அம்மொழி அணுமாத்ரமும் தடுக்கப்பேகாதன்றோ? அங்ஙனம் தகப்பனாரது வார்த்தையைக் கேட்டிருக்கின்ற யான் வேதங்களை யோதி மிகவும் அறிவிற்சிறந்த உமது கட்டளைப்படி யாவர்க்கும் நன்மையை விளைவிப்பதாகிய இத்தாடகாவதத்தைச் செய்கின்றனன். இதற்குச் சந்தேகமில்லை. பின்னும் பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் நன்மையுண்டாகும்பொருட்

டும், இத்தேசத்தினது ஸுகத்தின் பொருட்டும் அள விட முடியாத மகிமையுடைய உமது சொற்படிக்குச் செய்ய ஸித்தனாயிருக்கின்றேன்' என்றனன்.

சத்ருக்களைத் தபிக்கச் செய்யவல்லனாகிய ஸ்ரீராக வன் இவ்வாறு மொழிந்து வில்லினடுவை உறுதியாகப் பிடித்துத் திசைகளிலெங்கும் கடுங்கோஷ முண்டாகும் படி நாணையேற்றிட்டு வலிவுடன் டங்காரஞ்செய்து ஒலிப் பித்தனன. அந்நாணொலியைக் கேட்டுத் தாடகையின் வநத்தில் வஸிப்பவர் யாவரும் பயந்து நடுங்கினர். அதைக் கேட்டுத் தாடகையும் இயற்கையாகவே கடுஞ் சின முடையளாகையால் அப்பொழுது அளவற்ற கோபங் கொண்டு ஒன்றுஞ் செய்யத்தோற்றாமல் தட்டுத் தடுமாறி அந்த த்வநியைத்தானே ஊக்கத்துடன் ஆலோசித்துப் பின்னும் கோபம் மேலிட்டு மூர்ச்சையடைந்து அவ் வொலி எந்தத்திசையினின்று முண்டாகின்றதென்று நிதானித்துக் கேட்டு அத்திசையை நோக்கி வேகத்து டன் எதிர்த்தோடினள். மிக்க விகாரங்கொண்ட உருவ மும் முகமும் பெற்று அளவுக்கு விஞ்சிப் பருத்து வளர்ந் திருக்கின்ற அத்தாடகையென்னும் ராக்ஷஸி கடுங்கோ பத்துடன் எதிர்த்தோடி வருவதைக் கண்டு, ராமன் தம்பியை நோக்கி, 'லக்ஷ்மணா! மிக்க விகாரங்கொண்டு பார்ப்பவர்களுக்குப் பயத்தை அளவின்றி விளைவிக்குந் தன்மையளாகிய இத்தாடகையினது வடிவத்தைப்பார் இவளை ஸாதாரணமாகப் பயப்படுந்தன்மையர் காண்பர் களாயின், அவரது ஹ்ருதயம் அப்பொழுதே பிளந்து விடும். இவள் யாவராலும் வெல்லமுடியாதவள். மேலும் இவள் மாயாபலமுள்ளவள். இவளை இப்பொழுது காதையும் நுனிமூக்கையும் அறுத்துத் துறத்தி விடு கின்றனன். இவ்வளவிற்றானே குருக்களின் வசநமும்

நடத்தப்பட்டதாகும். இவள் ஸ்த்ரீயானதுபற்றி இவளைக் கொல்ல என்மனம் துணியவில்லை. ஆகையால் கைகளையும் கால்களையும் முறித்து வலிவையும் ஸஞ்சரிப்பதையும் ஒழித்து விட்டுவிடலாமென்று எனக்குத் தோற்றுகின்றது' என்றனன்.

இப்படி ராமன் சொல்லிக்கொண்டிருக்கையில், அத்தாடகை மிக்க கோபங்கொண்டு கைகளிரண்டையும் உயரவெடுத்துக் கர்ஜித்துக்கொண்டே லக்ஷ்மணனை விட்டு ராமனையே எதிர்த்தோடிவந்தனள். அதைக்கண்ட ப்ரஹ்மர்ஷியாகிய விச்வாமித்ரரும் தாம் ராமனுக்குள்ள அமாநுஷசக்தியை அறிந்தவராயினும் அவ்வரக்கியினது கொடுந்தன்மையைக் கண்டு மனக்கலக்கமுற்று, அவளை 'ஹூம்' என்று அதட்டிவிட்டு 'ராமலக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமும், ஜயமும் உண்டாக வேணும்' என்று மொழிந்தனர். இப்படியிருக்க, அத்தாடகையும் புழுதியை வாரி அதிகோரமாக எங்கும இறைத்து, அப்புழுதியால் திசைகளொன்றுந் தெரியாமல் யாவரும் மனமயங்கும்படி பேரிருளை விளைவித்து ஒரு முஹூர்த்தகாலம் அந்த ராமலக்ஷ்மணர்களிருவரையும ஒன்றுந்தெரியாமல் மனமயங்கச்செய்து, பின்பு மாயையைக் கொண்டு கண்ணுக்குப் புலப்படாதபடி நின்று ரகுகுல குமாரர்களாகிய அவ்விருவர்மீதும் கற்களை அளவில்லாதபடி மழை பெய்வதுபோல் பொழிந்தனள். ஸ்ரீராமனும் மிகச்சினங்கொண்டு பாணங்களை ஓயாமற்பொழிந்து அத்தாடகை கொண்டெறியுங் கற்களையெல்லாம் ஆங்காங்குத் தடுத்துப் பொடிபொடியாக அடித்து, மேலும் தன்மீது கற்களைப்பொழிய வொட்டாதபடி, இங்குமங்கும் ஓடிக்கொண்டிருக்கிற அவ்வரக்கியினது கைகளை அறுத்துத்தள்ளி விட்டனன்.

பின்பு அவள் கைகளறுப்புண்டு களைத்து அருகில் ஓயாது கர்ஜித்துக்கொண்டிருக்கையில் ஸுமித்ரா தேவியின் புதல்வனாகிய லக்ஷ்மணன் அதைக் கண்டு அளவற்றகோபம் மேலிட்டு அவளது காதுகளையும் மூக்குநுனியையும் அறுத்துவிடக, தத்க்ஷணமே யக்ஷப் பெண்ணாகிய அத்தாடகை நினைத்தபடி வடிவங் கொள்ளவல்லவளாகையால் பலவிதமான வடிவங்களைக் கொண்டு மாயையினால் அந்தர்த்தாநமடைந்து மிக்க பயங்கரமாயிருக்கும்படி கல்மழையைப் பொழிந்து மன மயங்கச்செய்பவள்போலத் திரிந்து கொண்டிருந்தனள். பின்பு அங்ஙனம் அத்தாடகையால் மழை பெய்வது போல் பொழியப்பட்ட கற்களால் நான்கு புறத்திலும் சூழப்பட்டிருக்கும் அந்த ராமலக்ஷ்மணர்களைக் கண்ட விச்வாமித்ர மாமுனிவர் அப்பொழுது ராமன இத்தா டகையை முடிக்க நேரிட்டதேயென்று களித்து, அக் களிப்பு வடிவில் தோன்றும்படி மிகவும் ஒளிபெற்று, ராமனை நோக்கி 'ராமா! இவ்வரக்கியின்மீது இதுவரை யில் நீ தயைசெய்தது போதும். ஸ்த்ரீயெனறோ நீ இவளை நினைக்கின்றாய்? ஸ்த்ரீயாயிருந்தபோதிலும் இவள் பாபிஷ்டையும் கொடுந்தொழிலுடையவளுமனை றோ? அப்பா! மேலும், இவள் யாகங்களை யழிக்குந தன்மையள். இனி தயை செய்து வெறுமனே இருந்தா யாயின், மாயைகொண்டு வளர்ந்து கொழுத்து விடு வாள். ராமா! ஸந்த்யாகாலம் இதோ வரப்போகின் றது. இவளை இப்பொழுதே முடித்துவிடுவாயாக. ராக்ஷஸர்கள் ஸந்திவேளையில் யாவராலு மெதிர்க்க வொண்ணாத வல்லமை பெறுவார்கள். அப்பொழுது அவர்களை முடிப்பது எப்படிப்பட்ட சூரர்களுக்கும் முடி யாது; ஆகையால் ஸந்த்யாகாலத்திற்கு முன்னமே



169 தாடகை எதிர்தோடிவர, ராமன் அவளை [illegible]ஹாரஞ் செய்தல்




169 தாடகை அம்புண்டு கீழே விழுதல்

இவளை முடித்து விடுவாயாக?" என்றிவ்வாறு மொழிந்தனர்.

இப்படி மொழிய, ராமனும் கண்ணுக்குத் தோற்றுதபடி நின்று ஓயாமல் கற்களைக் கொண்டு நாற்புறத்திலும் பெய்கின்ற யக்ஷப்பெண்ணான அத்தாடகையின் சப்தத்தினால் அவளிருக்குந்திக்கை யறிந்து அடிக்கும்படியான தனது வல்லமையைக் காட்டிக்கொண்டு பாணங்களைப் பொழிந்து எங்கும் போகவொட்டாமல் அவ்விடத்திலேயே தடுத்து விட்டனன். அத்தாடகையும் தான் மாயாபலங்கொண்டு கண்ணுக்குப் புலப்படாதபடி நின்றும், அது பயனற்று, ராமபாணங்களால் தடுக்கப்பட்டுச் செய்வதறியாமல் கண்ணுக்குப் புலப்பட்டுக் கடுமையாகக் கர்ஜித்துக்கொண்டு ராமனையும் லக்ஷ்மணனையும் நோக்கி எதிர்த்தோடி வந்தனள்.

இங்ஙனம் மிக்க பராக்ரமத்துடன் இடியிடிப்பது போல் இரைத்துகொண்டு ஓடிவருகின்ற அத்தாடகையினது மார்பில் ஓர்பாணத்தைத் தொடுத்து நாட்ட, அவ்வளவிலே அவள் கீழே விழுந்துமாண்டனள். அப்பொழுது அங்ஙனம் அதிகோரமான வடிவங்கொண்டிருக்கும் அத்தாடகை ராமனாலடியுண்டு மாண்டது கண்டு, தேவேந்திரனும் தேவர்களும் 'நல்லது நல்லது' என்று ராமனைப் புகழ்ந்தனர். பகைவருடைய நகரங்களைப் பாழடையச் செய்யவல்லனாகிய தேவேந்திரன் தனது ஆயிரங்கண்களும் குளிரும்படி அத்தாடகாவதத்தைக் கண்டு மிகவும் களிப்புற்றனன். அங்ஙனங் களிப்புற்ற இந்திரன் தேவர்களோடு விச்வாமித்ரரைப் பார்த்து 'மாமுனியே! குசிககுலாலங்காரரே! உமக்குச் சுபம் உண்டாக வேண்டும். நாங்கள் அனைவரும் உமது காரியத்தைக் கண்டு மிகவும் களிப்

புற்றவராயினம். ராகவனிடத்தில் உமக்குள்ள நேசத்தை நீர் இப்போது வெளியிடவேண்டும். பராஜாபதியாகிய பிருசாச்வரிடம் பிறந்து நிலைநின்ற பராக்ரமும் பொருந்திய அஸ்த்ரங்களை நீர் தவமகிமையால் பெற்றீர். அவ்வஸ்த்ரவித்யையை நீர் ராமனுக்குக் கற்பிக்க வேண்டும். ஏனெனில், ப்ராஹ்மணோத்தமா! இந்த ராகவன் நியமத்துடன் உம்மைப் பின்றொடர்ந்து உமக்குச் சுச்ரூஷைகள் நடத்துவதில் நன்கு நிலைநின்றிருப்பது பற்றி இவ்வஸ்த்ரங்களை உபயோகிக்கத் தக்க பாத்ரமாயிருக்கின்றனன். மேலும் இந்த ராஜகுமாரனாகிய ராமன் தேவர்களுக்காக ஓர் பெரிய காரியத்தைச் செய்ய வேண்டியதாயிருக்கின்றது' என்றனன். இங்ஙனஞ் சொல்லி, தேவர்களனைவரும் விச்வாமித்ரரைப் பூஜித்து மிகுந்த ஸந்தோஷத்துடன் தாங்கள் வந்தவழியே போய்ச்சேர்ந்தனர். பின்பு, ஸூர்யன் அஸ்தமிக்க, ஸந்தியாகாலம் வந்தது. அப்போது விச்வாமித்ரமாமுனிவர் தாடகையைக் கொன்றது பற்றி மிகவும் ஸந்தோஷம் அடைந்து ப்ரீதி மேலிட்டு ஸ்ரீராமனை உச்சிமோந்து 'ராமா! பார்க்கப்பதினாயிரங்கண்கள் வேண்டும்படி மிகவும் அழகாகத் தோன்றுபவனே! இன்றிரவு இங்குத்தானே வஸித்திருப்போம். நாளையதினம் காலையில் எனது ஆச்ரமத்திற்குப் போவோம்' என்று மொழிந்தனர்.

தசரதகுமாரனாகிய ராமனும் அம்மொழியைக் கேட்டுக் களிப்புற்று அன்றிரவெல்லாம் அத்தாடகாவனத்திற்றானே ஸுகமாக வஸித்திருந்தனன். அன்றைத்தினத்தில் அப்பொழுதே அவ்வநம் உபத்ரவங்களெல்லாமொழியப் பெற்றுச்சைத்ரரதமென்றுபெயர்பெற்ற குபேரனது உத்யானவனம்போல் மிகவும் அழகாகி விளங்

கிற்று. அப்படி யக்ஷப்பெண்ணுகிய தாடகையை வதஞ் செய்து அவ்வநத்தை விளங்கச் செய்த ராமன் தேவர்களாலும், ஸித்தர்களாலும் கூட்டங்கூட்டமாகி நின்று புகழப் பட்டவனுகி, அவ்வநத்தில் விச்வாமித்ரமாமுனிவரோடுகூட ஸௌக்யமாக வஸித்திருந்தனன். பொழுது விடிந்தவுடனே விச்வாமித்ர மாமுனிவரும ராமனை யெழுப்பினர். இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அஸ்த்ரங்களை விச்வாமித்ரர் ராமனுக்குக் கொடுப்பது.

பெரும்புகழ் பெற்ற விச்வாமித்ரமாமுனிவர் அங்ஙனம் அன்றிரவெல்லாம் அவ்வநத்திலே வஸித்திருந்து பொழுது விடிந்து உதயமானவுடன் புனசிரிப்புடன் ராகவனை நோக்கி இங்ஙனம் இனிதாக ஓர் மொழியுரைத்தனர். 'ராஜகுமாரனே! யான் மிக்க ஸந்தோஷமடைந்தனன். உனக்கு க்ஷேமம் உண்டாகவேணும். இங்ஙனம் பெரும்புகழ்பெற்ற உனக்கு நான் எனக்குண்டான ப்ரீதிக்குப் போக்குவீடாக நான் கற்ற அஸ்த்ரங்களை யெல்லாம் உபதேசிக்க விரும்புகின்றனன். யுத்தத்தில் தேவர்களின் கூட்டமாயினும், அஸுரர்களின் கூட்டமாயினும், அவர்களே கந்தர்வர்களோடும் உரகர்களோடும் கூடி எதிர்ப்பார்களாயினும், மற்றும் எப்படிப்பட்ட சத்ருக்களாயினும் அவர்களைப் பலாத்கரித்து வென்று வசப்படுத்தி உனக்கு வெற்றியைக் கொடுக்க வல்ல திவ்யாஸ்த்ரங்களனைத்தையும் நான் உனக்குக் கொடுக்கின்றனன். உனக்கு மங்களம் உண்டாக வேணும்.

'ராகவா! மஹாவீரனே! மகிமைபொருந்தி மேன்

மைபெற்ற திவ்யமான தண்டசக்ரத்தைக் கொடுக்கின்றனன். அப்படியே, தர்மசக்ரம், காலசக்ரம், மிகவும் உக்ரமாகிய விஷ்ணுசக்ரம் என்னும் அஸ்த்ரங்களையும் உனக்குத் தருகின்றனன். புருஷர்களிற் சிறந்த ராமனே! பருத்து அழகான உனது புஜங்களுக்குத் தக்க ஐந்த்ராஸ்த்ரம், வஜ்ராஸ்த்ரம், சூலங்களிற் சிறந்த சைவசூலம், ப்ரஹ்மசிரஸ்ஸென்னும் அஸ்த்ரம் ஐஷீகாஸ்த்ரம், நிகரின்றி நின்ற ப்ரம்ஹாஸ்த்ரம் ஆகிய இவைகளையும் உனக்குக் கொடுக்கின்றனன். ராஜபுத்ரனே! புருஷோத்தமா! காகுத்தனே! இவ்வளவேயன்று. மோதகியென்றும், சிகரியென்றும் இரண்டு கதைகள் மிகுந்த ஒளிபொருந்தியவைகள் என்னிடத்தில் இருக்கின்றன. அவ்விரண்டையும் கொடுக்கின்றனன். ராமா! இன்னமும் தர்மபாசம், காலபாசம், அப்படியே வருணபாசம் ஆகிய பாசாயுதங்கள் மூன்றும், நிகரற்ற வாருஸ்ணாத்ரமும் தருகின்றனன்.

ரகுகுலத்தைக்களிக்கச்செய்யும் மஹா நுபாவனே! பாபமற்றவனே! சுஷ்காசநி, ஆர்த்ராசநி, பைநாகாஸ்த்ரம், நாராயணாஸ்த்ரம், அக்நிதேவனுக்கு மிகவும் ப்ரியமான சிகரமென்னும் பெயர்பெற்ற ஆக்நேயாஸ்த்ரம், ப்ரதநமென்று ப்ரஸித்தமான வாயவ்யாஸ்த்ரம், ஹயசிரஸ்ஸென்னும் அஸ்த்ரம், க்ரௌஞ்சாஸ்த்ரம், விஷ்ணுசக்தி ருத்ரசக்தியென்கிற இரண்டு சக்தியாயுதங்கள், மேலும் அஸுரர்கள் தரிக்கத்தக்க பயங்கரமான கங்காலம், காபாலம், கங்கணம் முதலிய முஸலங்கள், ராஜகுமாரனே! திரண்டுருண்டு நீண்ட உனது பாஹுதண்டங்களுக்கு ஏற்று வித்யாதரர்களை தேவதையாகப் பெற்று அஸ்த்ரங்களிற் சிறந்த நந்தநமென்கிற உயர்ந்த கத்தி, ராகவனே! கந்தர்வர்களுக்கு ப்ரிய



173 ராமனுக்கு விச்வாமித்தர் அஸ்த்ரங்களைக் கொடுத்தல்.

மாகி மாநவமென்றும், ப்ரஸ்வாபநமென்றும், ப்ரசமந மென்றும் பெயர்பெற்ற கந்தர்வாஸ்த்ரங்கள், ஸௌராஸ்த்ரம் ஆகிய இவைகளெல்லாவற்றையும் உனக்குத் தருகின்றனன்; பெற்றுக்கொள்வாய்.

'பெரும்புகழ் பெற்ற புருஷோத்தமா! ராஜகுமாரனே! அப்படியே தர்ப்பணம், சோஷணம், ஸந்தாபநம், விலாபநம் என்னும் அஸ்த்ரங்களையும், மந்மதனுக்கு ப்ரியமாகி எதிரிடவொண்ணாத மதநாஸ்த்ரத்தையும், பிசாசங்களுக்கு ப்ரியமாகி அவைகளையே தேவதையாக வுடையவையான மோஹநாஸ்த்ரங்களையுங் கொடுக்கின்றனன; பெற்றுக்கொள். இவ்வளவேயன்றி, தாமஸம், ஸௌமநம். ஸம்வர்த்தம, ஒருவிதத்திலும் பகைவரால் பரிஹரிக்கப்போகாத மௌஸலம், ஸத்யம், மாயாதரம், பகைவரது பராக்ரமத்தைத் தொலைக்கவல்லதாகி, மிகவும் பயங்கரமான தேஜப்ரபம், சிசிரமென்கிற ஸௌமயாஸ்த்ரம், சீதேஷுவென்னும் பெயர்பெற்றுப் பயங்கரமான பதாகாஸ்த்ரம்,மாநவம் முதலியமிகவும்கம்பீரங்களான இவ்வஸ்த்ரங்களைக் கடுகப் பெற்றுக்கொள்வாயாக. இவையெல்லாம் காமரூபங்கொள்ள வல்லவை. மஹாபலமுடையவை.

மஹாபாஹுசாலியாகி ராஜகுமாரனுமாகிய உனக்கு இவையெல்லாம் தக்கவை' என்று இங்ஙனமுரைத்து, அம்மாமுனிவர் பரிசுத்தராகிக் கிழக்குமுகமாக நின்று அப்பொழுது ப்ரீதியோடு மிகவும் சிறந்த அவ்வஸ்த்ர மந்த்ரங்களனைத்தையும் ஸ்ரீராமனுக்கு உபதேசித்தனா. அவ்வஸ்த்ரங்களை யெல்லா மறிவது தேவர்களுக்கு தரமன்று. அப்படிப்பட்டவைகளாகிய அவ்வஸ்த்ரங்களை அந்தணர்களில் சிறந்த அவ்விச்வாமித்ரர் ராமனுக்குக் கற்பித்தனர்.

இப்படி அஸ்த்ரங்களைத் தந்து மந்த்ர தேவதைகளை ராமனுக்கு வசப்படுத்த உத்தேசித்து தீரராகிய அவ்விச்வாமித்ரமாமுனிவர் அவைகளை நினைத்து ஜபஞ் செய்ய அவரது கட்டளைப்படி சிறந்த மஹாஸ்த்ர தேவதைகள் யாவும் அப்பொழுது திவ்யமயமான சரீரங்களோடு பளபளவென்று விச்வாமித்ரருக்கருகே வந்து நின்று ராமனை நோக்கி நமக்குத் தக்கதோராச்ரயம் கிடைத்ததேயென்று மிகுந்த ஸந்தோஷங் கொண்டு, 'ரகுகுலதிலகனே; மிகவும் மகிமை பொருந்திய நாங்கள் உனக்குக் கிங்கரர்களாயினம்' என்றுரைத்தன. காகுத்தனாகிய ராமனும் 'அப்படியே ஆகட்டும்' என்று அங்கீகரித்து அவைகளைக் கையினால் தடவிக் கொடுத்து 'யான் மனத்தில் நினைக்கும்போது நீங்கள் வந்து உதவவேண்டும்' என்று அவைகளுக்குக் கட்டளையிட்டனன். பின்பு ராமன் மிகுந்த ஒளிபெற்று விளங்கி அளவற்ற ப்ரீதியோடு விச்வாமித்ரமஹர்ஷிக்கு நமஸ்காரஞ் செய்து புறப்படத் தொடங்கினன். இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விச்வாமித்ரர் ராமனுக்கு உபஸம்ஹார மந்த்ரங்களை யுபதேசித்தல்.

பின்பு ராமன் அஸ்த்ரங்களைப் பெற்றுப் பரிசுத்தனாகி ஸந்தோஷத்தினால் முகமலர்த்தியடைந்து புறப்படத்தொடங்கி விச்வாமித்ரரை நோக்கி 'மாமுனியே! தேவரீரிடமிருந்துயான் அஸ்த்ரங்களை யெல்லாம்பெற்று, தேவர்களாலும் வெல்லமுடியாதவனாயினன். அஸ்த்ரங்களின் ப்ரயோகத்தைமாத்திரம் உபதேசித்தீர். இப்பொழுது அவைகளின் உபஸம்ஹாரங்களையும் உபதே

சிக்கும்படி விரும்புகின்றேன்' என்றுரைக்க, நல்லொழுக்கமுள்ள அம்முனிவரும் ப்ரீதியடைந்து சித்தராகி ராமனுக்கு உபஸம்ஹார மந்த்ரங்களை உபதேசிக்கத் தொடங்கி, 'ராமா! [1]ஸத்யவானென்றும், ஸத்யகீர்த்தியென்றும், த்ருஷ்டமென்றும், ரபஸமென்றும், ப்ரதிஹாரதரமென்றும், பராங்முகமென்றும், அவாங்முகமென்றும், லக்ஷாக்ஷமென்றும், விஷமமென்றும், த்ருடநாபமென்றும், ஸுநாபமென்றும், தசாக்ஷமென்றும், சதவக்த்ரமென்றும், தசசீர்ஷமென்றும், சதோதரமென்றும் பத்மநாபமென்றும், மஹாநாபமென்றும், துந்துநாபமென்றும், [2]ஸுநாபமென்றும், ஜ்யோதிஷமென்றும், க்ருசநமென்றும், நைராச்யமென்றும், விமலமென்றும், யோகந்தரமென்றும், ஹரித்ரமென்றும், தைத்யமென்றும், ப்ரசமநமென்றும் (சுசியென்றும், பாஹுவென்றும், மஹாபாஹுவென்றும், நிஷ்குலியென்றும், விருசியென்றும்,) ஸார்ச்சிர்மாலியென்றும், [3]த்ருதியென்றும், மாலியென்றும், வ்ருத்திமானென்றும், ருசிரமென்றும்

1 'ஸத்யவத்' என்று சிலர் எழுதுகிறார்கள்.

2 'ஊர்ணநாஹஸுநாஹெள' என்றும், 'துந்துநாஹ ஸுநாஹெள' என்றும் மூலத்தில் இரண்டிடத்தில் ஸுநாபகசப்தம் படிக்கப்பட்டிருக்கின்றது. மொழிபெயர்க்க முயன்றவர்பலரும் ஸ்வார்த்தத்தில் கப்ரத்யயமெனக்கருதி ஸுநாபமென்றே யெழுதியிருக்கிறார்கள். ஒருவர் முதலில் ஸுநாபமென்றும் மற்றோரிடத்தில் ஸுநாபகமென்றும் எழுதுகிறார். 'ராமார்ஜுநௌ' 'ராமக்ருஷ்ணௌ' என்கிறபடியே பெயர் ஒன்றாயிருப்பினும், காரியம் முதலியவைகளால் பேதங்கொள்ளவேணு மென்று தோற்றுகிறது.

3 இங்கு, 'ஸார்சிர்மாலிர்த்ருதிர்மாலி' என்று மூலம். த்ருதி, மாலி என்று இரண்டு பெயராகக் கருதி இவ்விடத்தில் (த்ருதியென்றும், மாலியென்றும்) என்று சொல்லப்பட்டது. சிலர் த்ருதிர்மாலீ யென்று ஒரே பெயராக அபிப்ராயப்படுகிறார்கள்.

பித்ருஸௌமநஸமென்றும், விதூதமென்றும், மகரமென்றும் கரவீரகரமென்றும், தநமென்றும், தாநயமென்றும், காமரூபமென்றும், காமருசியென்றும் மோஹநமென்றும், மாரணமென்றும், ஜ்ரும்பகமென்றும், ஸர்வநாபமென்றும், ஸந்தாநமென்றும், வரணமென்றும், பெயர்பெற்று, காமரூபிகளும், மிக்க ஒளிபெற்றவைகளும், பிருசாச்வருடைய குமாரர்களுமாகிய உபஸம்ஹாரங்களை என்னிடமிருந்து பெற்றுக்கொள்வாய். உனக்கு மங்களமுண்டாகவேணும். நான்கற்றவைகளை உபதேசிகைத்தகுந்த பாத்ரமாக நீ அகப்பட்டனை' என்றனர். அப்படியேயென்று ராமனும் மிக்க மனக்களிப்புற்று அம்மந்த்ரங்களை யெல்லாம் பெற்றுக்கொண்டனன்.

அம்மந்த்ரதேவதைகளும் ராமனைக்கிட்டினின்றன. அவைகள் யாவும் பளபளவென்று விளங்கி மிகவு மூரத்த திவ்யதேஹங்களைத் தரித்துக் களிப்பை விளைவிப்பவைகளாயிருந்தன. அவைகளிற் சில நெருப்பை நிகர்த்தவைகளாயும், சில புகையைப் போன்றவைகளாயும், சில ஸூர்யசந்த்ரர்களோடொத்தவைகளாயும் வணக்கத்துடன் கையைக் கூப்பிக்கொண்டு எதிரில் தென்பட்டன. அவ்வுபஸம்ஹாரமந்த்ரதேவதைகள் யாவும் இங்ஙனங் கையைக் கூப்பிக்கொண்டு ராமனைப் பார்த்து 'புருஷோத்தமா! இதோ நாங்கள் காத்துக்கொண்டிருக்கின்றனம். உனக்கு நாங்கள் என்ன செய்ய வேண்டுமோ அதைக் கட்டளையிடவேண்டும்,' என்று மிகவு மினிதாக மொழிந்தன. அதைக் கேட்டு ரகுநந்தநன் அவ்வுபஸம்ஹார மந்த்ர தேவதைகளை நோக்கி, 'காரியம் நேரிடுகிற ஸமயத்தில் யான் மனத்தில் நினைத்தமாத்திரத்தில் நீங்கள் வந்து எனக்கு

உதவி செய்யவேண்டும். இப்பொழுது நீங்கள் இஷ்டப்படி போய்வரலாம்' என்று சொல்லுற்றனன.

பின்பு அம்மந்த்ர தேவதைகளும் அப்படியேயாகட்டுமென்று ராமனை நோக்கி உரைத்து அவனைப் பிரதக்ஷிணஞ்செய்து போய்வருகின்றனமென்று விடைபெற்றுககொண்டு வந்தவழியே போய்ச் சேர்ந்தன. (பின்பு ஒளியுடன் விளங்குகின்ற அக்காகுத்தன் ப்ரஹ்மவாதியான விச்வாமித்ரமாமுநியி னுஜ்ஞைப்படி லக்ஷ்மணனுக்கும் அவ்வஸ்த்ரங்களனைத்தையும ப்ரயோகம் உபஸம்ஹாரம் ஆகிய இவ்விரண்டுடன மிகுநத ப்ரீதியோடு கற்பித்தனன்.) இபபடி ராகவன் அவவுபஸம்ஹாரமநத்ரஙகளை யெல்லாமறிநது அவ்விடத்தினின்றும் புறப்பட்டு சின்று கொண்டு விச்வாமித்ரமாமுனிவரைப் பார்த்து இங்ஙனம் அழகான ஓர் இன்சொல்லைச் சொல்லினன்.

'இதோ மலையினருகில் இடைவெளியின்றிநெருங்கி, மேகங்களை நிகர்த்த மரககூட்டம் விளங்குகின்றதே, இதென்ன? பின்னும், இது அழகாய்க்கூவும் நாநாவித பக்ஷிகளும் மிருகங்களும் நிறைந்து, கண்வாங்காமற் பார்க்கும்படியான செவ்வி பெற்று, மனத்திற்கு மிகவும் ஆநந்தத்தை விளைப்பதாகித் தோற்றுகின்றது. ஆகையால் இதைக் கேட்கவேண்டுமெனறு எனக்கு ஆவல் அதிகமாயிருக்கின்றது. பயத்தை விளைவித்து மயிர்க்கூச்சுண்டாகும்படி தாருணமான அத்தாடகாவநங் கடந்து வந்துவிட்டோமன்றோ? இத்தேசம் அப்படி பயத்தையுண்டாக்காமல் மிக்க ஸுகமா யிருக்கையாலே இது ஒரு ஆச்ரமமாயிருக்க வேண்டுமென்பது மாத்திரந் தோற்றுகின்றது; ஆனல் இது யாருடையதோ?

தெரியவில்லை. ஆகையால் இதையெல்லாம் எனக்குத் தெரியச் சொல்லிவேண்டும். மாமுனிவரே! கொடிய செய்கை கொண்டு அந்தணர்களை வருந்தச்செய்யும் துராத்மாக்களாகிய அந்த ராக்ஷஸப்பாவிகள் உமது யாகத்திற்கு விக்நஞ்செய்ய எங்கு வருகின்றார்களோ; நீர் செய்கிற யஜ்ஞகாரியங்களைக் காக்க வேண்டிய இடம் எதுவோ; நான் அந்த அரக்கர்களை எவ்விடத்திற் கொல்லவேண்டுமோ; அவ்வாச்ரமம் எங்கேயிருக்கின்றதோ; இதையெல்லாங் கேட்க விரும்புகின்றனன். வல்லமையெல்லா மமைந்தமாமுனிவரே! நீர் இதைச் சொல்ல வேண்டும்.' இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ வாமநமூர்த்திவிருத்தாந்தமும், விச்வாமித்ரர் யாகதீக்ஷைக்குத் தொடங்குவதும். }

அந்த ராமன் அளவற்ற மகிமைபொருந்தியவீரனயினும், மனிதனாக அவதரித்திருப்பதுபற்றித் தனதுபூர்விகவிருத்தாந்தங்களை யறியாதவன்போல அவ்வநத்தைக் குறித்து இங்ஙனம் பலவிதமாகக்கேட்க, மஹாதேஜஸ்வியாகிய அம்முநிசிகாமணியும் அதை விவரித்துச் சொல்லத்தொடங்கினர்.

மஹாபாஹோ! தேவதைகளனைவரினுஞ் சிறந்து உலகங்கட்கெல்லாம் ப்ரபுவுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு உலகத்தில் தவத்தை நடத்துவதற்காகத் தான் தவஞ்செய்யும் பொருட்டும், யோகத்தை யநுஷ்டிக்கும் பொருட்டும், பலநூறுவருஷங்களும், பலநூறு யுகங்களுமாக இவ்வநத்தில் மிகப்பெருந்தவம்புரிந்து வாஸஞ்செய்து

கொண்டிருந்தனன். இங்ஙனம் இது முன்னே மஹாத்மாவாகிய வாமநதேவன் தவம்புரிந்திருந்த ஆச்ரமம். இங்கு மிகத் தவம்பொருந்திய காச்யபமாமுனி ஸித்தி பெற்றனர். ஆனதுபற்றி இது 'ஸித்தாச்ரமம்' என்று யதார்த்தமாகிய பேருடன் கியாதி பெற்றது. இப்படி அந்த ஸ்ரீமஹாவிஷ்ணு பலவருஷங்களாக இங்குத் தவம் புரிந்திருக்குங் காலத்தில்தானே விரோசனனுடைய பிள்ளையாகிய பலியென்னும்[1] அஸுரர்களுக்கரசன வாயுகணங்களோடுகூடியதேவதைகள் அனைவரையும் இந்திரனுட்பட ஜயித்து மூவுலகங்களிலும் புகழ்பெற்று, அத்தேவராஜ்யத்தை மந்த்ரிகளைக் கொண்டு பரிபாலிக்கச் செய்து வந்தனன். அப்பலிசக்ரவாத்தி கடவுளின் ஆராதநமாகிய ஒருயாகத்தைத் தொடங்கி நடத்திக்கொண்டிருந்தனன். அப்பொழுது தேவதைகள் அனைவரும் அதற்குப் பயந்து அக்நிதேவனை முன்னிட்டுக்கொண்டு தாங்களே கூட்டமாகக் கூடிவந்து இவ்வாச்ரமத்தில் வஸித்திருந்த விஷ்ணுவை நோக்கி 'தேவா! மஹாவிஷ்ணுவே! விரோசநன்பிள்ளை பலியென்பவன் சிறந்ததோர் வேள்வி செய்கின்றனன்; அது முடிவதற்கு முன்னமே நங்காரியத்தைத் தீர்த்துக்கொள்ள

---

1 அஸுரர்களுக்கதிபதியாகிய பலி 'யாகஞ் செய்வதெப்படி கூடும்? எனெனில்—யாகமென்பது தேவதையைக் குறித்து அக்நியில் ஹவிஸ்ஸைக் கொடுத்தல். 'யஸ்யை தேவதாயை ஹவிர் க்ருஹீதம் ஸ்யாத்தாம் த்யாயேத் வஷட்கரிஷ்யந் ஸாக்ஷாதேவ தாம் ப்ரீணாதி' யென்று எந்ததேவதைக்கு ஹவிஸ்ஸைக் கொடுக்கவேணடுமோ, அந்தத்தேவதையை மனத்தில் நன்கு த்யானிக்கவேண்டும். இவனோ தேவர்களுக்கு விரோதி. ஆகையால் இவன் யாகஞ்செய்தானென்பது எப்படி சேருமெனில். இப்பலி செய்யும் யாகம் இந்த்ராதிதேவதைகளைக் குறித்துச் செய்யும் யாகம் அன்று. இது பகவா

வேண்டும். இங்குழங்குமிருந்து எவராயினும் அவனிடம் வந்து எதையாயினும் எவ்வளவு கேட்டபோதிலும் அவ்வளவும் கௌரவத்துடன அவர்களுக்கெல்லாங் கொடுத்துக்கொண்டிருக்கின்றனன. ஆனதுபற்றி நீ தேவர்களின் நன்மையை விரும்பி உனது மாயாசக்தியைக் கொண்டு உனது மேன்மையை மறையச் செய்து வாமநரூபத்தை யடைந்து எங்களுக்கு மேலான க்ஷேமத்தைச் செயயவேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

ராமா! இதற்குள் [1] காச்யபமஹர்ஷி தமது பத்நியாகிய அதிதியோடுகூடி, ஸ்வாஹாதேவியோடு கலந்து விளங்குகின்ற அக்நிதேவனை நிகர்த்து நின்று தேஜஸ்ஸினால் ஜ்வலித்துக்கொண்டு விளங்கி தேவமாநத்தினால் ஆயிரம் வருஷங்களாக விஷ்ணுவைக் குறித்துத் தான் நடத்திக்கொண்டு வந்த விரதத்தை முடியச்செய்து, அப்பொழுது தனக்கு வரங்கொடுப்பதற்காக ப்ரத்யக்ஷ

னைக் குறித்துச் செய்யும் யாகம். ஆனதுபற்றியே (கடவுளின ஆராதநமாகிய' என்று சொல்லப்பட்டதென்று கண்டு கொள்வது.

1 இவ்விடத்தில் இங்ஙனம் க்ரமங் கண்டுகொள்வது. எப்படியெனில்—'லோகாயமத லஹு ஸ்யாம ப்ரஜாயேயேதி। ஸத போதப்யத' என்கிற சுருதியின்படியே விஷ்ணு ஜகத்ரக்ஷணை சிந்தையிலாழ்ந்து, இத்தேசத்தில் வெகுகாலம கண்ணுக்குப புலப்படாமல் வஸித்திருந்தனன. காசயபமஹாஷி இதை யறிந்து இத்தேவனையே புத்திரனுகப்பெற விரும்பி, தேவமாநத்தால் ஆயிரம் வருஷங்களிற் செய்து முடிக்கத்தக்கதும அவ்விஷ்ணுவின் ஆராதநரூபமுமாகிய ஓர் விரதத்தைத் தனது பதநியுடன் கூடி அனுஷ்டித்து அதை முடிக்கும்பொழுது தனக்கு வரங்கொடுக்கும் பொருட்டு ப்ரத்யக்ஷமாகிய விஷ்ணுதேவனைத் துதிசெய்தனர், அச்சமயத்திற்றுனே தேவதைகள் அவ்விடம்வந்து அவ்விஷ்ணுவை வேண்டிக்கொண்டனரென்று கண்டு கொள்வது.

மாய் வந்து ஸேவைஸாதிக்கிற அம்மஹானுபாவனு கிய ஸ்ரீமந்நாராயணனைத் தமது பக்தியுந்தாமுமாக இங்ஙனம் துதிசெய்தனர். 'தேவனே! நீ தபோமயன்; தபோராசி; விஜ்ஞாநஸ்வரூபன். தவமே உனக்கு இயற் கை. நீ புருஷோத்தமன். அப்படிப்பட்ட உன்னை மற்றொரு ப்ரயோஜநமுமின்றி ஸாங்கமாக அநுஷ்டித்த எனது தபோபலத்தினால் ப்ரத்யக்ஷமாகக் காண்கின்ற னன். ப்ரபுவே! பின்னும்[1] ஜங்கமஸ்தாவர ரூபமான இவ்வுலகத்தை யெல்லாம் உனது சரீரத்திற் காண்கின்ற னன். ஆதியந்தமின்றி இப்படியப்படி யென்று குறிக்க வொண்ணாதபடி விளங்குகின்றனை. அப்படிப்பட்ட உன்னை நான் சரணமடைந்தனன்.'

இப்படி தன்னை ஸாக்ஷாத்கரித்துப் பாபங்களெல் லாம் பறந்தோடி நிர்மலராய் விளங்குகின்ற அம்மஹர் ஷியை நோக்கி ஸ்ரீமஹா விஷ்ணு ஸந்தோஷித்து 'வர மேதாயினும் விரும்புவாயாக. உனக்கு நன்மை யுண் டாகுக. நான் வரங்கொடுக்க நீயே தகுந்தவனென்று நினைக்கின்றனன்' என்று மொழிய, அம்மொழியைக் கேட்டு மரீசியின் குமாரராகிய அக்காச்யபமாமுநி 'வர தா! ஆச்ரிதர்களை ரக்ஷிக்கையே உனக்குச் சிறந்த விரதம். ஆகையால் உன்னை வேண்டிக்கொள்கின்ற அதிதிக்கும், தேவதைகளுக்கும், எனக்கும் நீ மிகுந்த ஸந்தோஷத்துடன் வரங்கொடுக்க வேண்டியவனாயிருக் கின்றனை. அது என்னெனில், ராக்ஷஸர்களை யடக்கும்

1 'பஶ்யாமி தே³வாம்ஸ்தவ தே³வ தே³ஹே' என்று அர்ஜுந னுக்குத் தோற்றினாற்போல் தோற்றினனென்றுணர்க. அல்லது 'ஜக³ த்ஸர்வம் ஶரீரந்தே' என்று சொல்லுகிறபடியே 'ஜகத்தை யெல்லாம் உனக்குச் சரீரமாகக் காண்கின்றேன்' என்று கருத்து கொள்ள வேணும்.

பொருட்டு நீ அதிதிக்கும் எனக்கும் புத்ரனும் இந்திர னுக்குத் தம்பியுமாகப் பிறந்து வருந்துகின்ற தேவேந்த களுக்கு ஸஹாயஞ் செய்யவேண்டும். உனது அனுக் கிரகத்தினால் எனது விரதகாரியம் ஸுபூலூாக ஸித்தி யடைந்ததுபற்றி இத்தேசமானது ஸித்தாச்ரமமென்று க்யாதி பெறவேண்டும். இங்கிருந்து நீ அவதாரஞ் செய்யும் பொருட்டு எழுந்திரு' என்றனர்.

பின்பு மஹாதேஜஸ்வியாகிய அவ்விஷ்ணுதேவ னும் அதிதியினிடத்தில் அவதாரஞ்செய்து வாமநரூபத் தைக் கைப்பற்றி, பலியினிடஞ் சென்று, தான் ஸ்ரீமஹா விஷ்ணு வென்றும், ஸ்ரீமந்நாராயணனென்னும் க்யாதி பெற்று யாவர்க்கும் இஷ்டங்களைக் கொடுப்பவனுகி, தனக்கொன்றுவேண்டும்படியின்றி ஸர்வாபீஷ்டங்களும் நிறையப் பெற்றிருந்தும் யாசிக்கின்றோமே யென்னும் அவமாநத்தை விட்டு உலகங்களுக்கெல்லாம் நன்மை செய்யும் பொருட்டு மூன்றடிகளைக் கேட்டுப் பெற்றுக் கொண்டு, உலகங்களையெல்லாம் சரீரமாகவுடைய அம் மஹாநுபாவன் அவ்வுலகங்களை யெல்லாம் பரந்து வளர் ந்ததோர் வடிவங்கொண்டு இரண்டிகளாலே உலகங் களையெல்லாமளந்து மூன்றுமடி கொடுக்காமைக்காகத் தனது தேஜஸ்ஸினால் அந்தப்பலிசக்ரவர்த்தியைப் பந்த நஞ்செய்து, அவ்வுலகங்களை யெல்லாம் மறுபடியும் இந் திரன் வசமாகச் செய்துவிட்டனன்.

அங்ஙனம் வாமநனாய் அவதரித்து, பலியை யாசித் து, த்ரிவிக்ரமரூபங்கொண்டு, தனது மெல்லடிகளாலே காடுமேடெல்லாமளந்து, உலகங்களுக்கு நன்மையைச் செய்த அந்த மஹாநுபாவனுகிய ஸ்ரீமந்நாராயணன் ஸம் ஸாரச்ரமங்களை யெல்லாம் போக்கும்படியான இவ்

வாச்ரமத்தில் முன்பு வஸித்திருந்தனன். நானும் அவ்வாமநரூபியான பகவானிடத்தில் பரமபக்தியைச்செய்து வாமனன் மண்ணிது' வென்று இம்மண்ணை மோந்து கொண்டு ஆவலுடையதான இவ்வாச்ரமத்தில் குடியிருக்கின்றனன். யாகத்திற்கு விக்நஞ்செய்யும் ராக்ஷஸர்கள் இவ்வாச்ரமத்திற்கே வருவார்கள். மஹாவீரனே! ராமா! கொடிய செய்கையுள்ள அவ்வரக்கர்களை இவ்விடத்திலேதான் கொல்லவேண்டும். ஆகையால் இப்பொழுதே புறப்பட்டு அந்தஸித்தாச்ரமத்திற்குப் போவோம். குழந்தாய்! [1] அத்தகைய இவ்வாச்ரமம் எனக்கு எப்படியோ அப்படியே உனக்கும் அதீனம் (என்று சொல்லிக் கொண்டு மிக்க ஸந்தோஷத்துடன் அவ்விருவரோடுங் கூடவே) அவ்வாச்ரமத்திற்குச் செல்லும் போது பனிநீங்கிப் புனர்வஸூநக்ஷத்ரங்களோடு சேர்ந்த சந்திரன்போல் ப்ரகாசித்தனர்.

அப்பொழுது அந்த ஸித்தாச்ரமத்தில் வாஸஞ்செய்யும முனிவர்கள் அனைவரும் அவ்விச்வாமித்ரமாமுனிவர் வந்தது கண்டு, ஸந்தோஷம் மேலிட்டு, உடம்பு தெரியாமல் உயர எழும்பிக் குதித்துக்குதித்தோடி வந்து மிகுந்த மதியுள்ள அம்மாமுனிவருக்குத் தக்கபடி பூஜை செய்து, அப்படியே ராஜகுமாரர்களாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவர்க்கும் அதிதிஸத்காரஞ்செய்தனர். பின்பு அந்த ரகுகுலகுமாரர்கள் அங்கு

---

1 இவ்வாசரமத்தைத் தவஞ்செய்கைக்காக நான் கைக்கொண்டேனுகையால் இது எனக்குச் சொந்தமாயிற்று. நீ விஷ்ணுவாகவும் வாமநனுகவும் அவதரித்தகாலத்தில் இதைக் கைக்கொண்டிருந்தாயாகையால் இது உனக்கும் சொந்தமேயென்று உட்கருத்தாகக் கண்டுகொள்வது.

ஒருமுகூர்த்தகாலும் இளைப்பாறிப் பகைவரையடக்கவல்ல ஆண்சிங்கங்களாகையால் வெறுமனிருக்கப் போகாமல் அம்மாமுனிவரை நோக்கிக் கையைக் கூப்பிக்கொண்டு 'முனிவேந்தரே! இன்றையதினமே தீக்ஷை பெற்றுக் கொள்ளவேண்டும். உமக்கு மங்களம் உண்டாகவேண்டும். உமது யாகம் ஸித்தி பெறுவது பற்றி இந்த ஸித்தாச்ரமம் உண்மையான பெயர் பெற்று ஸித்தியடைய வேண்டும். இங்குத்தான் கொடிய செய்கையுள்ள அவ்வரக்கர்களைக் கொல்லவேண்டுமென்ற உமது வார்த்தை உண்மையாகவேண்டும்' என்றனர்.

அவ்விருவராலும் இங்ஙனம் உரைக்கப் பெற்ற மஹாதேஜஸ்வியாகிய அவ்விச்வாமித்ரமாமுனிவர் ஐம்புலன்களையு மடக்கிக்கொண்டு அப்பொழுதே யாகஞ் செய்ய தீக்ஷித்துக் கொண்டனர். அந்த ராஜகுமாரர்களும் அன்றிரவு முழுதும் மிக்க ஊக்கங்கொண்டு வஸித்திருந்து விடியற்காலத்தில் எழுந்திருந்து காலை ஸந்தியை வணங்கி அர்க்கியங் கொடுத்துப் பரிசுத்தர்களாகவே நியமத்துடன் காயத்ரீ ஜபஞ்செய்து முடித்துக்கொண்டு அக்நிகார்யங்களை நிறைவேற்றி உட்கார்ந்துகொண்டிருக்கிற விச்வாமித்ரமாமுனிவர்க்கு நமஸ்காரஞ் செய்தனர். இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

---

ராமன் மாரீசனை ஸமுத்திரத்தில் தள்ளி ஸுபாஹுவைக் கொல்லுதல்.

ராமலக்ஷ்மணர்கள் தேசகாலங்களை யறிந்து பேசுவதற்குரிய ஸாமர்த்தியமும் பகைவரை முடியச்செய்யும்

படியான வல்லமையும் அமைந்தவர்கள். ஆனது பற்றி அம்மஹர்ஷிகளின் பகைவரை யடக்க தத்தக்க உத்தேசத்துடன் அக்காலத்திற்கும் அத்தேசத்திற்கும் உரிய மொழிகளை இங்ஙன முரைத்தனர். 'மகிமையெல்லா மமைந்த மாமுனியே! யாகத்தைக் காக்கும் பொருட்டு மாரீச ஸுபாஹு க்க ளென்னும் அந்த அரக்கர்களை எப்பொழுது நாங்கள் தடுக்கவேண்டுமோ, அதைக் கேட்க விரும்புகின்றனம். அச்சமயத்தில் ஒரு க்ஷணமாயினும் தப்பிப்போகலாகாதல்லவா' என்று சொல்லிக்கொண்டு போர்புரிய வேண்டு மென்னும் விருப்பம் மேலெழ மிக்க உத்ஸாஹத்துடன் பரபரப்புற்று விளங்குகின்ற அந்த ராஜகுமாரர்களை நோக்கி அங்குள்ள முனிவர்கள் அனைவரும் புகழ்ந்து'ரகுகுலத்திற் பிறந்த வீரர்களே! இன்றுமுதல் ஆறிரவுகள் நீங்களிருவரும் காத்துக்கொண்டிருக்க வேண்டும். இம்மாமுனிவர் தீக்ஷித்துகொண்டு அதற்குரிய மௌநவ்ரதத்துடனிருப்பது பற்றி மொழியாதிருப்பர். ஆகையால் அவர்க்குப் பதிலாக நாங்கள் உரைக்கின்றனம்' என்றனர்.

பெருங்கீர்த்தி பெற்ற அந்த ராஜகுமாரர்களிருவரும் அம்மொழியைக் கேட்டு மிக்க ஊக்கங்கொண்டு நித்ரையின்றி ஆறு அஹோராத்ரங்கள் அத்தபோவநத்திற்கு ரக்ஷையாகக் கையில் பெரியவில்லொன்றேந்திப் பகைவரை யடக்குகைக்குரிய ஸந்நாஹத்துடன் கூடி அவ்விச்வாமித்ரமாமுனியைக் காத்துக்கொண்டு வஸித்திருந்தனர். இப்படி ஐந்து தினங்கள் கடந்து ஆறுவது தினம் வரும்போது ராமன் லக்ஷ்மணனை நோக்கி ஊக்கத்துடன் ஸந்நாஹங் கொண்டிருக்கவேண்டு மென்று மொழிந்து போர்புரிய வேண்டுமென்ற ஆவலுடன் பரப

ரப்புற்றிருக்கையில, உபாத்யாயராகிய விச்வாமித்ர ரோடும் மற்றுமுள்ள புரோஹிதர்களோடும் கூடின யஜ்ஞவேதியானது தர்ப்பம், சமஸம், ஸ்ருக்கு, ஸமித்து, குஸுமம் ஆகிய இந்த யாகஸாமக்ரியுடனே திடீரென்று [1] எரிந்தது. பின்பு அந்த யாகமானது மந்த்ர வத்தாக விதிப்படி நடக்கத்தொடங்கிற்று.

ஆகாயத்தில் அப்பொழுது பயங்கரமாகப் பெரிய ஒலியொன்று உண்டாயிற்று. மாரீச ஸுபாஹுக்க ளென்னும் அவ்வரக்கர்களிருவரும் மாயையைப் பல விதமாகச் செய்துகொண்டு ஆகாயமெங்கும் பரந்து, வர்ஷாகாலத்தில் கிளம்புகிற மேகம்போல எதிர் நோக்கி ஓடிவந்தனர். அவவிருவரும் அவரைப் பின் சென்றவர்களும் பயங்கரமாக வந்து ரக்தப்ரவாஹத்தைப் பொழிந்தனர். புஷ்பம் முதலியவைகளால் விளங்குகின்ற அந்த யாகவேதிகையும் அப்படி ரக்தவெள்ளத்தினால் நிறைந்து எரிந்துகொண்டிருந்தது. (அவ்வேதிகை அவ்வண்ணமாயிருக்கக்கண்டு ராமன் கொடிய கோபாவேசங்கொண்டு) வேகமாக எதிரே ஓடிச் சென்று அவ்வரக்கர்களை ஆகாயத்திற் கண்டணன். அப்பொழுது தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ராமன் அந்த ஸுபாஹுமாரீசர்களிருவரும் தன்மேலெதிர்த்தோடி வருவதைக் கண்டு லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! இதோ பார்; பெருங்காற்றானது மேகங்களைப் பறக்கடிப்பதுபோல இருக்குமிடந் தெரியாமல் இம்மாநவாஸ்த்ரமானது மாம்ஸபக்ஷணஞ்

---

1 யாகவேதி பற்றிக்கொண்டு எரிவது உத்பாதமாகையால் ராக்ஷஸர்கள் வருவதைத் தெரிவிக்கின்றது. (சமஸ) மென்பது பாநபாத்ரம் (ஸ்ருக்) கென்பது ஹோமபாத்ரம். (ஸமித்து) விறகு (குஸுமம்) புஷ்பம்.



187 ஸுபாஹுமாரீசர்கள் யாகவேதிகையில் ரக்தவர்ஷங்களைப் பொழிதலும், ராமன அவர்களை யடித்தலும்.

செய்து கொடுந்தொழிலாளராகிய அரக்கர்களைப் பறக் கடிக்கப்போகின்றது' எனறுரைத்துக் கோபம மேலிட்டு, மிகவும் சிறந்து நெருப்புப் பொறி பறக்கும்படி விளங் குகின்ற மாநவாஸ்த்ரத்தைத் தொடுத்து மாரீசனது மார்பிலெய்தனன.

அம்மஹாஸ்த்ரம் பட்டமாத்ரத்திலே அமமாரீசன் ஸமுத்ரஜலப்ரவாஹத்தில் சரியாக நூறுயோஜனை தூரத்திற்கப்பால் தள்ளுண்டு விழுந்தனன். அப்படி தள்ளுண்டு விழுந்து ப்ரஜ்ஞையில்லாமல் சுழனறு துவ ளும்படி சீதேஷுவெனனும் அம்மாநவாஸ்தரத்தால் அடியுண்ட மாரீசனைப் பார்த்த ராமன் தம்பியாகிய லக்ஷ்மணனை நோக்கி ('லக்ஷ்மணா! தர்மத்துடன் கூடிய சீதேஷுவென்னும் இம்மாநவாஸ்த்ரத்தின மகிமை யைக் கண்டாயல்லவா? இது அவனை மோஹிக்கச்செய் து[illegible]டு போயிற்றேயன்றி, ப்ராணனைப் போக்க வில்லை.) கருணையென்பது சிறிதுமின்றிக் கொடிய செய்கையைச் செய்யுந் தன்மைபெற்றுப் பாபகர்மங் களைப் பற்றி யாகங்கட்கு இடையூறு செய்து, ரக்தத் தைக் குடித்துக்கொண்டு திரியும் இவ்வரக்கர்களையும் முடித்துவிடுகிறேன்' என்றுரைத்து மிகவும் ஆச்சரிய கரமாகி, திவ்யமுமாகி விளங்குகின்ற தனது ஆக்நே யாஸ்த்ரத்தை யெடுத்துத் தொடுத்து ஸுபாஹுவின் மார்பில் நாட்டினன். அது பட்ட மாத்ரத்தில் அவன் அடியுண்டு கீழே விழுந்தனன்.

மற்றுமுள்ள அரக்கர்களையும் வாயவ்யாஸ்த்ரமெடுத் துத்தொடுத்து முடித்து, மஹாயசஸ்வியும பரமோதா ரனுமாகிய அந்த ராகவன் அங்குள்ள முனிவர் அனை வர்க்கும் ஆநந்தத்தைப் பெருகச்செய்தனன். அந்த

ரிஷிகள் யாவரும் முன்பு அஸுரர்களை ஜயித்தபோது இந்திரனைப் பூஜித்ததுபோலவே யாகத்திற்கு விக்னஞ் செய்பவர்களாகிய அவ்வரக்கர்கள் அனைவரையும் முடியச்செய்த ராமனைப் பூஜித்தனர். பின்பு யாகம் நிறைவேற நடத்தி நான்கு திசைகளும் யாதொரு உபத்ரவமுமின்றி ஸுகமாயிருப்பது கண்டு, அவ்விச்வாமித்ரமாமுனிவர் ராமனை நோக்கி 'ராமா! உனது பருத்த புஜங்களின் பலத்தினால் நான் காரியம் நிறைவேறிப் பயன் பெற்றவனாயினன். நீயும் பிதாவினது வசனத்தைப் பரிபாலித்தனை. எனது யாகத்தை ஸித்திபெறச் செய்து இவ்வாச்ரமத்தினது ஸித்தாச்ரமமென்னும் பெயரை உண்மையாகச் செய்து பெருங்கீர்த்தியும் பெற்றனை.' முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விச்வாமித்ரர் ராம லக்ஷ்மணர்களோடு மிதிலைக்குச் செல்லுதல்.

பின்பு வீரர்களாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும் அம்மாமுனியின காரியத்தை முடித்து ஸந்தோஷத்தினால் மிகவும் மனங் குளிர்ந்து, அன்றிரவெல்லாம் அங்கே வஸித்திருந்தனர். அன்றிரவு சென்று விடிந்தவுடன் அக்காலத்தில் செய்யவேண்டிய கடமைகளைத் தீர்த்து இருவருங்கூடி விச்வாமித்ரர் முதலிய மஹர்ஷிகளிடஞ் சென்று, அக்நிபோல் அளவற்ற ஒளிபெற்று விளங்குகின்ற அவ்விச்வாமித்ரமாமுநிக்கு நமஸ்காரஞ் செய்து 'மாமுநியே! நீர் கட்டளையிட்டபடியெல்லாம் செய்து உமக்குக் கிங்கரர்களாகிய நாங்கள் இதோ வந்திருக்கின்றனம். இன்னமும் உமதிஷ்டப்படி கட்டளையிடவேண்டும். இன்னமும் நாங்கள் செய்யவேண்டி

யது யாதுண்டோ, அதையும் கட்டளையிட வேண்டும்' என்று இயற்கையாகவே மதுரபாஷிகளானது பற்றி மதுரமாகவும் கம்பீரமாகவும் மொழிந்தனர்.

அவர்கள் இங்ஙனம் மொழியக்கேட்டு, அங்குள்ள மஹர்ஷிகள் யாவரும் விச்வாமித்ரமாமுனியின் அநுமதி பெற்றுக்கொண்டு ராமனை நோக்கி, "புருஷோத்தமனே! ராமா! மிதிலாநகரத்திற் கரசனாகிய ஜநகமஹாராஜன் மிக்க தர்மத்துடன் கூடின ஓர் யாகம் நடத்தப் போகின்றனன். அதற்கு நாங்கள் அனைவரும் போகப் போகின்றனம். நரோத்தமனே! நீயும் எங்களுடன்கூட வந்து அங்கு மிகவும் ஆச்சரியகரமாக பரவித்திபெற்றிருக்கிற ஒருயர்ந்தவில்லையும், ஸீதையெனனும் பெண்மணியையும் பார்க்கவேண்டும். அளவிடவொண்ணாத வலிவுபெற்றுப் பயங்கரமாகி மிகவும் ப்ரகாசிக்கின்ற அவ்வில்லானது [1] முன்பொருகாலத்தில் இந்த ஜனகராஜனது வம்சத்திற் பிறந்த தேவராதனென்னும் ஓரரசன் யாகஞ்செய்ய, அந்த யாகத்தில் நடந்த ஸதஸ்ஸில் [2] தேவதைகளால் கொடுக்கப்பட்டது. தேவதைகளாயினும், கந்தர்வர்களாயினும், அஸுரர்களாயினும்,

---

1 முன்பு சிவன இந்த வில்லைக் கொண்டு தக்ஷப்ரஜாபதியின் யாகத்தை அழித்தனன், தேவர்கள் சிவனை மனந்தெளியச் செய்து அந்தவில்லைப் பெற்றனர். தேவராதனென்னும் பெயர் கொண்டு முன்பள்ள ஒரு ஜநகமஹாராஜன் யஜ்ஞத்தினால் தேவர்களைக் களிக்கச் செய்து அததேவர்களிடமிருந்து அவ்வில்லைப் பெற்றனன். ஆகையால் சிவபிரானுடைய அவவில்லானது வம்சக்ரமமாக ஜநகமஹாராஜனிடத்தில் இருக்கின்றதென்று கருத்து.

2 (தேவதைகளால் கொடுக்கப்பட்டது) இதற்கு 'த்தம் ஸதஸி தைவதை:' என்று மூலம், இதற்கு ஸகலதேவர்களோடுங் கூடிவந்து சிவபெருமான்தானே கொடுத்ததாக மஹேச்வரதீர்த்தவ்யாக்யாநம்.

அரக்கர்களாயினும் அவ்வில்லை நாணேறிடவல்லரல்லர். இனி மனிதர்கள் எவ்விதப்ரயத்தினத்திலும் அதை நாணேறிட வல்லரல்லரென்பது சொல்லவேண்டுமோ?

மஹாபலசாலிகளாகிய பல ராஜர்களும ராஜபுத்ரர்களும் அவவில்லினுடைய ஸாரத்தை யறியக் கோலி, அங்கே வநது கடைசியில் அதை நாணேறிடவும் சக்தியின்றி வநதவழியே திரும்பிபோயினர். காகுத்ஸ்த குலத்திலவதரித்தவனே! புருஷோத்தமா! ராமா! நீ வந்தாயாயின் அவ்விடத்தில் மஹாநுபாவனுகிய ஜநகமஹாராஜனையும், மிகவும் அற்புதமாகத் தோன்றும் அவவில்லையும், அந்த யாகத்தையும் பார்க்கலாம். ஸீதையென்னும் அழகான ஓர் பெண்மணியையும் பெறக்கூடும். புலியோடொத்த பராக்ரமம பொருந்திய மஹாவீரனே! ராமா! முனபு தேவராதனெனனும் பெயர்கொண்ட ஜநகராஜன தனதுயாகத்தில் மிகவும் களிப்புற்ற தேவதைகள் அனைவரையும நோக்கித தான செய்த யாகத்திற்குப பலனாக அழகியபிடியையுடைய அம்மேலான வில்லைக் கொடுக்கும்படி வேண்டிக்கொள்ள அவர்களும அப்படியே அவ்வில்லைக்கொடுத்தனர். அதுவும் அமமஹாராஜனது மாளிகையில் நடக்கும் தநுர்மஹோத்ஸவததில் வில்லுகள் அனைத்திலும் ப்ரதாநமாக வைத்து நிறுத்தப்பட்டு ஆயாகூமெனனும் பெயர் பெற்று அகிற்புகை முதலிய பலவகைத் தூபங்களாலும், சந்தநம் முதலிய பலவித கந்தங்களாலும் பூஜிக்கப்பட்டு வருகினறது' என்று மொழிந்தனர்.

---

இங்கு 'ப்ரீதஸ்ச ஸமவாரீமஸ்த்ரிலிலீ நீலலோஹிதஃ| ப்ரதெள ஸத்ருநாஸார்ய ஜநகாயாதிஸயதயநஃ' என்று கூர்மபுராண வசநமும் ப்ரமாணமாக எழுதப்பட்டிருக்கின்றது.



191 ராம லக்ஷ்மணர்கள் விச்வாமித்ரர்களைப் பார்த்து 'நாஙகள் உமக்கு அடிமை' என்று சொல்லுதல்

இங்ஙனம் மொழிந்தபின்பு அவ்விச்வாமித்ரமா முனிவர் ரிஷிஸமூஹத்துடனும் ராமலக்ஷ்மணர்களுடனும் அவ்வாச்ரமத்திலிருந்து புறப்பட்டு அங்குள்ள வந தேவதைகளைநோக்கி, 'ஓ வநதேவதைகளே! உங்களுக்கு மங்களம் உண்டாகவேண்டும். நான ஸித்திபெற்றேனாகையால் இந்த ஸித்தாச்ரமத்தினின்றும் புறப்பட்டு கங்காநதிக்கு வடகரையிலிருக்கிற ஹிமாலயமென்னும் மலையிலுள்ள எனது ஆச்ரமத்திற்குப் போகின்றேன்' என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு பின்பு ஆச்ரமங்களில்சிறந்த அந்த ஸித்தாச்ரமத்தை ப்ரதக்ஷிணஞ்செய்து, வடதிசை நோக்கி ப்ரயாணஞ்செய்ய தொடங்கினர். அங்ஙனம் புறப்பட்டுப்போகின்ற அவவிச்வாமித்ரமாமுநியைப் பின்தொடர்ந்து அங்குள்ள முனிவர்களனைவரும் தந்தமது அக்நிஹோத்ரஸம்பாரம் முதலியவைகளை ஏறக்குறைய நூறுவண்டிகளில் ஏற்றிக்கொண்டு சென்றனர். அப்பொழுது அந்த ஸித்தாச்ரமத்திலுள்ள மிருகங்களும் பக்ஷிகளும் கூட்டங்கூட்டமாக மிகுந்த பக்தியுடன மகாத்மாவாகிய அவ்விச்வாமித்ர மாமுனியைப் பின்றொடர்ந்து வர, அம்மாமுனிவரும் அப்பக்ஷிகளையும் மிருகங்களையும் திரும்பச்செய்தனர். இங்ஙனம் விச்வாமித்ரர் முதலிய மஹர்ஷிகளனைவரும் புறப்பட்டு வெகுதூரம் நடந்து சென்று ஸூர்யன் அஸ்தமிக்கும் வேளையாகையில் அனைவரும் ஒன்றுகூடிச் சோணநதத்தின் கரையில் வஸித்திருந்து, ஸூர்யன் அஸ்தமிக்கக் கண்டு ஸ்நாநஞ்செய்து அக்நிஹோத்ரம் முதலியவைகளை நிறைவேற்றி மிக ஒளி பொருந்திய விச்வாமித்ரமாமுனியை முன்னிட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

அப்பொழுது ராமன் லக்ஷ்மணனும் தானுமாக

அம்மாமுனிகளுக்கு நமஸ்காரஞ் செய்து சிறந்தமதியுடைய விச்வாமித்ரமாமுனியி னருகிற் சென்று உட்கார்ந்து மஹாதேஜஸ்வியாகிய ராமன அம்மாமுனியை நோக்கி, கௌதூஹலம மேலிட்டு 'மஹாநுபாவரே! இந்தச்சோணநதத்தின கரையில் செழித்த வனங்களால் அழகாய் விளங்குகிற இத்தேசம் யாருடையது? இதைக் கேட்கவேண்டுமென்று விரும்புகின்றனன். ஆகையால் 'இதை யுள்ளபடி எனக்குச் சொல்லவேண்டும். உமக்கு மங்களமுண்டாகுக' என்று வினவினன. இங்ஙனம் மொழிந்த ராமனது வசனங்களால் ஏவுண்டு மிகத்தவம் பொருந்தி நனகு வரதாநுஷ்டானம் செய்து விளங்கிய விச்வாமித்ரமாமுனிவர் ரிஷிகளினிடையில் அத் தேசத்தைக் குறித்த விருத்தாநதங்களனைத்தையும பின் வருமாறு கூறினர். முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## குச குசநாபர்களின் விருத்தாந்தம்.

ப்ரஹ்மாவின் மாநஸபுத்ரனும் ஞானம் சௌர்யம் முதலிய குணங்களால் ப்ரஹ்மபுத்ரர்கள் அனைவரினும் சிறந்தவனுமாகிய குசனென்னும் பெயர்பெற்ற மஹா தபஸ்வி யொருவன் இருந்தனன். அவன் இடைவீடின்றி நோன்புகளை யெல்லாங் குறைவறச் செய்துகொண்டு தர்மங்கள் முழுதும் அறிந்து பெரியோர்களைப் பூசித்து அவர்களால தானும் புகழப்பட்டு விளங்கினன். அம் மஹாநுபாவன் நற்குலத்திற் பிறந்து நாணம் முதலிய ஸ்த்ரீகுணங்களனைத்தும் பொருந்தித் தனக்கு அநுரூபையுமான வைதர்ப்பி யென்னும் பத்நியினிடத்தில் நற்குணங்கள் நிறைந்த தன்னேடொத்து விளங்கிய குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தரஜஸஸ், வஸு என்னும்

நான்கு புதல்வர்களைப் பெற்றனன். [1] குசனும் க்ஷத்ரிய தர்மமாகிய ப்ரஜாபரிபாலநத்தைச் செய்ய விரும்பி மிக ஒளிபொருந்தி மிக்க உத்ஸாஹ மமைந்து தர்மத்தில் நிலைநின்று ஸத்யத்தையே பேசுபவர்களாகிய அப்புதல்வர்களை நோக்கிப 'புத்ரர்களே! நீங்கள் ப்ரஜாபரிபாலநஞ் செய்யுங்கள். அதனால் தர்மம் நிரம்பப் பெறுவீர்கள்' என்று மொழிந்தனன்.

அதைக் கேட்டு உலகத்திலெங்கும் புகழ்பெற்ற மானிடவீரர்களாகிய அந்நால்வரும் நகரங்களை வாய்ப்பாக நிருமித்தனர். அவர்களில் மஹாதேஜஸ்வியாகி விளங்கும் குசாம்பனென்பவன் கௌசாம்பி யென்னும் பட்டணத்தை யுண்டாக்கினன். தர்மாத்மாவாகிய குசநாபனென்பவன் மஹோதயமென்னும் பட்டணத்தை ஏற்படுத்தினன். [2] ஆதூர்த்தரஜஸ்ஸென்பவன் தர்மாரண்ய மென்னும் பட்டணத்தைக் கற்பித்தனன். ஜநங்களை ஆநந்திக்கச் செய்ய வல்லனாகிய வஸு வெனபவன் கிரிவ்ரஜமென்னும் பட்டணத்தைப் படைததனன்.

ராமா! இச்சோணநதத்தின் கரையிலுள்ள பூமியானது மஹாத்மாவாகிய வஸுவென்னும் அவ்வரசனுடையது. இப்பூமியைச் சுற்றி நான்கு பக்கத்திலும் ஐந்து பெரும்பர்வதங்கள் இதோ விளங்குகின்றன. ஆனதுபற்றி இந்நகரம் கிரிவ்ரஜ மென்று வழங்கிவரு

---

1 (கௌ ஶேதே இதி குஶ:) பூமியிலிருப்பவனாகையால் குசனென்று பெயர் பூண்டவன். ப்ரஹ்மலோகத்தை விட்டு ப்ரஜாபாலநத்தில் மிகவும் மனஞ்சென்று பூலோகத்திலே யிருப்பவன். ஆகையால் குசனென்று பெயர்பெற்றனன்

2 இவ்விடத்தில் 'அஸூர்த்தரஜஸ்ஸு' என்று மஹேச்வரதீர்த்தவ்யாக்யாநம். (நவித்யதே ஸூர்த்தம் ப்ரஸ்ருதம் ரஜோ யஸ்ய தம்) என்று அதற்கு விக்ரஹமும் கூறப்பட்டிருக்கின்றது.

கின்றது. இச்சோணநதம் மகததேசத்தின் வழியாகப் பெருகிவருவது பற்றி மாகதீநதி யெனனும் புகழ்பெற்று இவ்வைந்து மலைகளினிடையில் பூமாலைபோல் விளங்குகின்றது. ராமா! அங்ஙனம் மாகதியென்று பெயர்பெற்று விளங்கும் இச்சோணநதி மஹாநுபாவனாகிய வஸுவெனனும் அவ்வரசனைச் சேர்ந்தது. இந்நதி கிழக்கிலிருந்து மேற்குமுகமாகப் பெருகிவருகின்றது. இந்நதியினிரண்டு பக்கத்திலும் செழித்தபயிர்கள் நிறைந்து அழகிய கழனிகள் வெகுவாய் விளங்குகின்றன.

ரகுநந்தனு! தார்மிகர்களிற் சிறந்த ராஜர்ஷியுமாகிய குசநாபனெனபவன் கிருதாசியென்னும் அப்ஸரஸ்ஸ்த்ரீயினிடத்தில் எல்லாக் குணங்களிலும் ஒப்பின்றி விளங்கிய நூறுபெண்களைப் பெற்றனன். ராமா! நனகு யௌவநம் வரப்பெற்று மிகவும் அழகுபொருந்தி விளங்குகின்ற அக்கன்னிகைகள் புஷ்பங்களைச் சூடி நற்சந்தநங்களைப் பூசி நெற்றியில் அழகிய திலகமணிந்து லீலாவிலாஸங்கள் அமைந்து மேலான ஆபரணங்களால் அலங்காரஞ் செய்துகொண்டு பார்க்கப் பதினுயிரங்கண்கள் வேண்டும்படி அழகு மீறி மழைக்காலத்து மின்னற் கொடிகளைப்போல் தோற்றிக்கொண்டு உத்யாநத்திற்கு வந்து அங்குப் பலவிதமாக ஆடுவது பாடுவது வீணை முதலிய வாத்யங்களை வாசிப்பது ஆகிய விளையாடல்களைச் செய்துகொண்டு மஹாநந்தஸாகரத்தில் மூழ்கிக் கிடந்தனர்.

இப்படி ஸகலாவயவங்களிலும் அழகு பொருந்திப் பூமியிலெங்குமொப்பற்றஉருவம் பெற்ற அப்பெண்மணிகள் யாவரும் குவியல் குவியலாய்க், கறுத்துச் செழித்த விருக்ஷங்கள் நிறைந்த அவ்வுத்யாநத்தின் இடையிற் சென்று நீருண்ட கார்மேகங்களின்நடுவில் ப்ரகாசிக்

கின்ற நக்ஷத்ரங்களைப்போல் விளங்கினர். இங்ஙனம் எல்லாக்குணங்களும் பொருந்தி யெளவநம் நிறைந்து நல்ல அழகும் அமைந்து சிறந்த உருவத்துடன் விளங்குகின்ற அம்மாதரசுகளை எங்கும் பரந்து நிற்கும் வாயுதேவன் கண்டு மோஹங் கொண்டு 'மாதுசிரோமணிகளே! எனக்கு உங்கள் அனைவரிடத்திலும் அளவற்ற மோஹம் உண்டாயிருக்கின்றது. ஆகையால் நீங்கள் எனக்குப் பத்நிகளாகவேண்டும். மனிதர்களுக்குத் தேவதைகளோடு ஸம்பந்தம் எப்படி நேருமென்று சங்கிக்க வேண்டியதில்லை. நீங்கள் மநுஷ்யத்தனமையை விட்டு ஆயுள் நிரம்பப் பெறுவீர்கள். யெளவநம் என்றும நிலையற்றது. மனிதர்களுக்கோ அது மிகவும் நிலையற்றிருக்கும். ஆகையால் என்னை மணம் புரிவீர்களாயின் அழிவில்லாத யெளவநம் பெற்று தேவஸ்த்ரீகளைப் போல் விளங்கி வாழ்வீர்கள்' என்று மொழிந்தனன.

நினைத்த காரியங்களைத் தடையின்றி நடத்த வல்ல வன்மையுடைய அவ்வாயுதேவனது வசநங்களைக் கேட்டு அப் பெண்மணிகள் நூறுபெயர்களும் பரிஹஸித்து 'தேவோத்தம! நீ ஸகலப்ராணிகளிடத்திலும் ப்ராணரூபியாகி நின்று ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவன். உனக்குள்ள இப்ரபாவத்தை நாங்கள் அறிந்தவர்களேயன்றி வேறு விதமாயிருப்பவர்களன்று. இப்படிப்பட்ட எங்களை நீ ஏன அவமதிக்கின்றனை? தேவர்களிற்றலைவனே! நாங்கள் அனைவரும் குசநாபனுடைய பெண்கள். நாங்கள் உனையும், உனக்கு ப்ரபுவாகிய இந்திரனையும் உங்களுக்குள்ள அதிகாரத்தினின்று தொலைக்கவல்லோம். ஆயினும் சபிக்கில் தவம் அழிந்துவிடு மென்பதைப் பற்றி அத்தவத்தைக் காத்துக்கொண்டு வெறுமனே யிருக்கின்றனம். நீ தேவர்களிற்றலைவனாயிருந்தும்

உனக்கு இந்த மதிகேடு ஏன் உண்டாயிற்றோ? இதை எங்கள தகப்பனாராகிய குசநாபர் அறிவாராயின், உனக்குஅவர் மிருத்யுவாகக்கூடுமே. அவர் அப்படியாகா திருக்கவேண்டும். ஆகையால் ஸத்யத்தையே பேசுந் தனமையுள்ள அம்மஹாநுபாவரை அவமதிக்கவேண் டாம். உலகத்தில் பெண்களைத் தகப்பன் உத்தேசித்துக் கொடுப்பதன்றோ தர்மம். அப்படியே தகப்பனாகிய குச நாபர் எங்களை எவனுக்குக் கொடுப்பரோ, அப்படிப் பட்ட வரனையே நாங்கள் எதிர்பார்த்துகொண்டிருக் கின்றனம். (ஸத்யவாதியாகிய தகப்பனை யவமதித்து எங் களிஷ்டப்படி பர்த்தாவைத் தேடிக் கைக்கொள்ளுங் காலம் உண்டாக வேண்டாம்). எங்களுக்கு இப்பொழுது தகப்பனேயன்றோ ப்ரபு. அவனே எங்களுக்கு மேலான தைவம். ஆனதுபற்றி அவன் எவனுக்கு எங்களைக் கொடுப்பனோ, அவனே எங்களுக்குப் பர்த்தாவாக வேண்டும்' என்றனர்.

வாயுதேவனும் அம்மொழிகளைக் கேட்டுக் கோபம் மேலிட்டு வல்லனாகையால் அவர்களுடைய சரீர மெங்கும் புகுந்து முறித்துக் கூனிகளாகச் செய்துவிட் டனன். (அவர்களும் ஒரு முழமுயரமுள்ள உருவம் அடைந்து உத்ஸாஹங் குறைந்து பயந்து மனக்கலக்க முற்றனர்.) இங்ஙனம் வாயுதேவனால் கூனிகளாகச் செய்யப்பட்ட அக்கன்னிகைகளும் தங்கள் தகப்பனாகிய மஹீபதியின மாளிகைக்குச் சென்று சரீரவிகாரத்தைப் பற்றி மிகவும் வெட்கித்துக் கண்ணுங் கண்ணீருமாகி நின்று பரபரப்புடன் கீழே விழுந்தனர். அப்பொழுது குசநாபனும் முன்பு மிகவுங் காந்தி கொழுந்து விட்டு விளங்கித் தனக்கு மிகவும் ப்ரியமாயிருந்த அப்பெண்கள் அவ்விதமாகச் சரீரபங்கமுற்று வருந்துவதைக் கண்டு

மனக்கொதிப்புடன் அவர்களை நோக்கிப் 'பெண்களே! இதென்ன? சொல்லுங்கள். தர்மத்தைத் தவறி இப்படி நடந்தவன் எவன்? உங்களனைவரையும் இங்ஙனங் கூனிகளாகச் செய்தவன் எவன்? ஏன் இப்படி கீழே விழுந்து சுழன்றுகொண்டு பேசமுடியாமல் இருக்கின்றீர்கள்?'' என்று வினவி மனவருத்தமுற்றுப் பெருமூச்சு விட்டுப் பின்பு அவர்கள் சொல்வதைக் கேட்க ஊக்கத்துடன் இருந்தனன். முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

ப்ரஹ்மதத்தன் விருத்தாந்தமும்,
அவன் குசநாபன் பெண்களை
மணம்புரிவதும்.

அறிஞனாகிய அக்குசநாபன் மொழிந்த அம்மொழியைக் கேட்ட அவனது புத்ரிகளாகிய அப்பெண்கள் நூறுபெயர்களும் அவனது கால்களில் தமது சிரங்கள் பட நமஸ்காரஞ்செய்து இங்ஙனமுரைத்தனர். 'ராஜனே! ஸர்வர்க்கும் உள்ளே புகுந்து ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற வாயுதேவன் எங்களை யவமதிக்க நினைத்தனன். பலாத்காரஞ் செய்வது கெட்ட வழி யென்று நினையாமல் பலாத்காரஞ்செய்ய உத்யோகித்து, தர்மத்தைச் சிறிதும் ஆலோசிக்காமற் போயினன். அப்பொழுது நாங்கள் அத்தேவனை நோக்கி 'எங்களுக்குத் தகப்பன் இருக்கின்றனன். ஆகையால் பர்த்தாவை நாங்களே வரிக்கும்படியான ஸ்வாதந்த்ரியத்தில் இருப்பவர்களன்று. நீ எங்கள் தகப்பனிடஞ் சென்று வேண்டிக் கொள்வாயாக. அவனும் எங்களை உனக்குக் கொடுப்பனாயின் நாங்கள் உன்னுடைய ஸொத்தாகின்றனம். உனக்குச் சுபம் உண்டாகவேண்டும்' என்று அனைவருமாகச்

சொல்லினம. அதை அவ்வாயுபகவன் சிறிதும் ஏற்றுக் கொள்ளாமல் தீயவழியே தொடர்ந்து சென்று எங்களை மிகவுங் கொலைத்துவிட்டனன்' என்றனர்.

இவர்கள் பொறுமையைக் கேட்ட ராஜனும் தான் மஹாதேஜஸ்வியாயினும் பரமதார்மிகனுதலாது பற்றி வாயுவினிடத்தில் சிறிதுங் கோபங் கொள்ளாமல் தன்னைப் போலவே கோபமின்றி வெறுமனே திரும்பிவந்தமையால் பொறுமையில் ஒப்பில்லாதிருக்கின்ற தன்புதல்விகளைப் பார்த்து 'குழந்தைகளே! பொறுமையுள்ளவர்கள் தமக்கு எவரேனுங் கெடுதி செய்யும்பொழுது தாங்கள் பதிலாகச் செய்யவேண்டிய காரியம் பொறுமையேயொழிய வேறில்லை. நீங்களும் இப்பொழுது அப்படியே பொறுமையைப் பாராட்டிப் பெருங் காரியம் நிறைவேற்றினீர்கள். தேவதையாயிருப்பானொருவன் வேண்டிக் கொள்ளும்போது மனமயக்கமற்றிருப்பதும், அவன் கோபித்துப பங்கஞ் செய்யினும் கோபங் கொள்ளாதிருப்பதுமாகிய இது பெருங்காரியமன்றோ? பின்னும், நீங்களெல்லோரும் ஒரே எண்ணத்துடன் கூடியிருந்து நங்குலத்தையாலோசித்து அதற்குத் தக்கபடி மேலான காரியஞ் செய்தீர்கள்.

பெண்களுக்காயினும் புருஷர்களுக்காயினும் பொறுமையன்றோ பூஷணமாய் விளங்குவது. அங்ஙனம பொறுமை கொள்வதுதான் அரிதாயிருக்கும். அதிலும் ஞைசுவர்யங்களிற் சிறந்தவராகிய தேவதைகள்மீது விருப்பங்கொள்ளாமற் பொறுத்திருப்பது பின்னும் அரிது. அதைப் பார்க்கிலும் நீங்கள் எல்லோரும் ஒருமித்துப் பொறுத்திருந்தது மிகவுமரிது. புதல்விகளே! தானத்திலும், யஜ்ஞத்திலும், ஸத்யத்திலும், கீர்த்தி

யிலும், தர்மத்திலும் உண்டாகும் பயனெல்லாம் பொறுமையிலும் உண்டாகத் தடையில்லை. ஆகையால் பொறுமையே தானமும், யஜ்ஞமும், ஸத்யமும், கீர்த்தியும், தர்மமுமென்று சொல்லப்படும் பூமிக்குள்ள பொறுமையாலேதான் ஸ்தாவரஜங்கமரூபமான ஜகத்தும் அதில் நிலைபெற்றிருக்கின்றது' என்று மொழிந்தனன்.

பராக்ரமத்தில் தேவர்களோடொத்திருக்கின்ற அவ்வரசன இங்ஙனம் மொழிந்து அப்புதல்விகளுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டுக் காரியங்களை ஆலோசிப்பதில் வல்லனானதுபற்றி அப்பெண்களை விவாஹஞ்செய்து கொடுப்பதற்குத் தக்க தேசகாலங்களையும் தகுந்த புருஷனையும் தேடவேண்டியதற்காக மந்திரிகளோடுகூடி ஆலோசனை செய்யத் தொடங்கினன். இக்காலத்தில்தானே ப்ரஹ்மசாரியாகி நல்ல ஆசாரமுடையவருமான சூளியென்னும் ஓர் மாமுனிவர் வேதங்களிற் சொல்லியபடி தவஞ்செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது ஊர்மிளையென்னும் அப்ஸரஸ்ஸ்த்ரீயின் பெண்ணாகிய ஸோமதையென்னும் ஒரு கந்தருவப்பெண் அவ்விடம வந்து தவஞ் செய்யும் அம்மாமுனிக்குச் சுச்ரூஷை செய்து கொண்டிருந்தனள்.

ராமா! உனக்குச் சுபம் உண்டாகவேண்டும். தர்மிஷ்டையாகிய அந்த ஸோமதையென்பவள வணக்கத்துடன் அம்மாமுனிக்கு ஸமயம் அறிந்து சுச்ரூஷை செய்துகொண்டு அங்கே வஸித்திருநதனள். பினபு சில காலஞ் செல்ல, அமமாமுனி அந்த ஸோமதையின் சுச்ரூஷைக்கு ஸந்தோஷம் அடைந்தனர். ரகுநந்தனா! அவளுடைய சுச்ரூஷை பரிபக்வமாகுங்காலம் வர, அம்முனி அவளை நோக்கி 'நான் உனது சுச்ரூஷையால் ஸந்தோஷம் அடைந்தனன். உனக்கு மங்களம் உண்

டாகவேண்டும். உனக்கு நான் செய்யவேண்டும் ப்ரியம் யாது? சொல்' என்றனர்.

அதைக் கேட்டு அக்கந்தருவப்பெண் அம்மாமுனி ஸந்தோஷமடைந்திருப்பதைக் கண்டு தானும் மிகவும் ஆநந்தமடைந்து பேசுவதில் வல்லராகிய அம்மாமுனியை நோக்கிப் பேசுவதில், தனக்குள்ள வல்லமை விளங்கும்படி மதுரஸ்வரத்துடன் 'தார்மிகசிரோமணீ! நீர் ப்ராஹ்மதேஜஸ்ஸினால் யாவரையும் அதிசயித்து நிற்பவர்; ப்ராஹ்மதேவனோடொத்தவர்; மிகத் தவம் பொருந்தி விளங்குபவர். இப்படிப்பட்டவராகையாயல் ப்ராஹ்ம தவத்துடன் கூடிய புதல்வனை எனக்குத் தரவேண்டுமென்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். நான் பதியில்லாதவள். உமக்குச் சுபம் உண்டாகுக என்னை விதவையென்று நினைக்கவேண்டாம். ஏனெனில், இது வரையிலும் எனக்குப் புருஷன் இல்லை இப்போதும் நானொருவனுக்குப் பாரியையாயிருக்கவில்லை. ஆனால் நான் நிஷ்டையுடன் ப்ரஹ்மசர்யங் கொண்டிருப்பவள். இப்படிப்பட்ட நான் உம்மைச் சரணம் அடைந்தனன். ஆகையால் உமது தபோமகிமையைக் கொண்டு எனக்கு ஓர் புதல்வனைத் தரவேண்டும்' என்றனள்.

அந்த ப்ரஹ்மரிஷியும் அவளிடத்தில் அநுக்கிரகஞ் செய்து தன் மனத்தினின்றும் பிறந்த ப்ரஹ்மதத்தனென்னும் ஓர் உயர்ந்த புதல்வனை அவளுக்குத் தந்தனர். அந்தக் கந்தருவியும் க்ஷத்ரிய ஜாதியானதுபற்றி அவள் பிள்ளையாகிய அந்த ப்ரஹ்மதத்தனும் ராஜனாயினன். குசநாபன் தனது பெண்களின் விவாஹத்தைக் குறித்து ஆலோசனை செய்கிற அச்சமயத்தில் ஸோமதையின் புதல்வனாகிய ப்ரஹ்மதத்தனென்னும் அவ்வரசன் ஸ்வர்க்கத்தில் இந்திரன்போல் காம்பில்யா

நகரத்தில் வஸித்திருந்தனன். காகுத்ஸ்த்த வம்சத்திற்பிறந்த மஹாநுபாவனே! அப்பொழுது தார்மிகனுகிய குசநாபன் ப்ரஹ்மதத்தனுக்குத் தனது புதல்விகள் நூறுபெயரையும் கொடுக்க நிச்சயித்து மனக்கவலையற்று மிகவும் ஒளிவிளங்கப் பெற்று அந்த ப்ரஹ்மதத்தனை வரவழைத்து அளவற்ற ஆநந்தத்துடன் பெண்கள் நூறு பெயரையும் அவனுக்கு விவாஹஞ்செய்து கொடுத்தனன்.

தேவேந்திரனைப்போல் விளங்குகிற அந்தப்ரஹ்மதத்த மஹீபாலனும் அம்மாதர்களனைவரையும் க்ரமத்துடன் பாணிக்ரஹணஞ் செய்து கொண்டனன். அம்மஹாநுபாவன் அவர்களைக் கையிற்பிடிக்கும்பொழுதே கூனிகளாயிருப்பது நீங்கி மனவருத்தமுந் தொலைந்து அக்கன்னிகைகள் நூறு பெயர்களுங் காந்திவெள்ளங் கொண்டு மிகவும் ப்ரகாசித்தனர். குசநாபனும் வாயுவினல் விடுபட்டவர்களாகிய அப்பெண்களைப் பார்த்து அநுரூபவரன் கிடைத்ததைப் பற்றி மிகவும் ப்ரீதிமீறி அவர்கள் கூனிகளாயிருந்தது நீங்கி விளங்குவதற்கு மேன்மேலும் ஆநந்தஸாகரத்தில் அமிழ்ந்து கிடந்தனன். இபபடி விவாஹஞ் செய்து கொண்ட ப்ரஹ்மதத்தனைக் குசநாபமஹீபதி அப்போது அவனுடைய பத்நிகளோடும் புரோஹிதர்களோடும் காம்பிலயாநகரத்திற்கு அனுப்பினன. ஸோமதையும் ஸந்தோஷம் மேலெழ அம்மாதரசிகளைக் கைக்கொண்டு அடிக்கடி தடவிக்கொடுத்துக் குசநாபனைக் கொண்டாடித் தன் புதல்வனுக்கு அநுரூபமாகிய விவாஹத்தையும் தனது மருட்டுப் பெண்களையும் தக்கபடி அபிநந்தநஞ் செய்தனள். முப்பத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விச்வாமித்ரர் கௌசிகீநதி ஆகிய இவர்களின் விருத்தாந்தம்.

ராகவனே! அந்த ப்ரஹ்மதத்தன் அங்ஙனம் மணம் புரிந்து தன் பட்டணத்திற்குச் செல்ல, குசநாபன் பிள்ளையில்லாமையால் பிள்ளையைப் பெறுதற்காகப் புத்ரகாமேஷ்டியென்னும் யாகத்தைச் செய்தனன். அக்குசநாபன் யாகம் செய்துகொண்டிருக்கும் ஸமயத்தில் ப்ரஹ்மகுமாரனும் மஹோதாரனும் அவனது பிதாவுமாகிய குசனென்பவன் தனது புதல்வனை நோக்கி 'புத்ரனே! மிகவும் தார்மிகனாகி குணங்களில் உன்னைப் போன்றவனுமாகிய புதல்வன் உனக்குப் பிறக்கப் போகின்றனன். அவனே காதியெனப்படுவான். அவனைப் பெற்று நீ உலகத்தில் ஓயாப்புகழ் பெறுவாய்' என்று மொழிந்து அக்குசன் குசநாபனிடம் அநுமதி பெற்று ஆகாச மார்க்கத்தினால் சாச்வதமாகிய ப்ரஹ்மலோகத்திற்குச் சென்றனன்.

பின்பு சில காலம் செல்ல, மிகுந்த மதியுள்ள அக்குசநாபனுக்கு அவனது தகப்பன குசன் சொல்லியபடி காதியெனனும் பெயர்பெற்ற ஓர் குமாரன் பரமதார்மிகனாகி கிருதாசி யென்னும் அப்ஸரஸ்ஸ்த்ரீயினிடத்தில் ஜனிததனன. ககுத்ஸ்தகுலாலங்காரனே! ராமா! பரமதார்மிகனாகிய அக்காதியே எனக்குத் தகப்பனார். குசவம்சத்திற் பிறநதேனாகையால் எனனைக் கௌசிகனென்பர்கள். ராமா! என்னுடன பிறநதவள் ஸத்யவதியென்னும் ஒருத்தி உண்டு. அவள் எனக்கு முன் பிறந்தவள். மேலும் அவள் நன்கு விரதங்களை அநுஷ்டித்துப் பெயர்பெற்றவள். அவள் ரிசீகரென்னும் மாமுனியை மணம்புரிநதனள். அந்த ஸத்யவதியும் தனது பர்த்தாவாகிய ரிசீகமாமுனியை நன்கு அநுவர்த்தநஞ்

செய்து மிக்க வைபவம் பொருந்தி அவ்வைபவத்தினால் சரீரத்துடனே ஸ்வர்க்கமேறச் சென்றனள்.

இவ்வளவே யன்றி யாவரையும் அதிசயித்த அம்மஹாநுபாவை இப்பூமியில் கௌசிகி யென்னும் ஓர் மஹாநதியாய்த் திரியவுந் தோன்றினள். அவள் உலகங்களுக் கெல்லாம் ஐஹிகாமுஷ்மிகபலன்களைப் புடைக்க உத்தேசித்துப் பரிசுத்தமான ஜல ப்ரவாஹத்துடன மிகவும் அழகான ஓர் திவ்யநதியாகி ஸ்வர்க்கத்திலிருந்து ஹிமாலயமென்னும் மலையினருகில் பெருகிவருகின்றனள். அக்கௌசிகி ஹிமாலயத்தினருகிற் பெருக நானும் கூடப்பிறந்தமையா லுண்டாகும் நேசத்தினால் அம்மலைச்சாரலில்தானே எப்போதும் ஸுகமாக வஸித்திருக்கின்றனன். அந்த ஸத்யவதி மிகவும் பரிசுத்தையாயிருப்பவள்; தன்பெயருக்குரியபடி ஸத்தியத்திலும் நிலைநின்றிருப்பவள்; கணவனைக் கைவிடாதிருப்பவள்; மஹாபாக்யமுடையவள். அந்த ஸத்யவதியே இப்பொழுது கௌசிகியென்னும் பெயர்பெற்று நதிகளிற் சிறந்து விளங்குகின்றனள். நான் யாக நியமத்தினான்றி அக்கௌசிகிநதியை விட்டு ஸித்தாச்ரமத்திற்கு வந்து அதில் உனது தேஜஸ்ஸினால் காரிய ஸித்தியை யடைந்தவனாயினன்.

மஹாபாஹோ! ப்ரஸக்தி நேரிட்டது பற்றி இங்ஙனம் எனது பிறப்பையும் எனது வம்சோற்பத்தியையும் தெரிவித்தனன். நீ என்னைக் கேட்ட இத்தேசத்தினது விபவத்தையும் மொழிந்தனன். காகுத்தனே! நான் இப்படி கதையைச் சொல்லிக்கொண்டிருக்க ராத்ரியில் சிலபொழுது கடந்தது. கண்வளரவேண்டிய பொழுது வந்தமையால் இனிக் கண்வளருவாயாக.

உனக்கு மங்களம் உண்டாகவேண்டும். விழித்துக் கொண்டிருந்தோமாயின் இங்கு வழி நடக்கைக்கு விரோதம் நேரிடும். விருக்ஷங்களெல்லாம் பக்ஷிஸஞ்சாரமில்லாமையைப் பற்றிச் சலனமின்றியிருக்கின்றன. மிருகங்களும் பக்ஷிகளும் தந்தமிடங்களில் அடங்கி நித்திரைபோகின்றன; திசைகளெல்லாம் இரவிலுண்டாகுமிருள் நிரம்பப் பெற்றிருக்கின்றன. மாலைச் சந்தியும் மெல்லமெல்லக் கடந்து செல்கின்றது. ஆகாயமும் அச்விநி முதலிய நக்ஷத்ரங்களாலும் மற்றுமுள்ள நக்ஷத்ரங்களாலும் நெருங்கப்பெற்றுத் தேஜோமயமான கண்களால் எங்கும் சூழப்பட்டதுபோல் ப்ரகாசிக்கின்றது. சந்திரனும் குளிர்ந்த கிரணங்களை வீசி உலகத்திலுள்ள இருளை யோடச்செய்து தனது நிலவினால் ஸமஸ்த ப்ராணிகளுடைய உள்ளத்தையும் உல்லாஸப்படுத்திக்கொண்டு உதிக்கின்றனன. இரவில் திரியுந்தன்மையுடைய கோட்டான் முதலிய ஜந்துக்கள் இங்குமங்கும் நடமாடிக்கொண்டிருக்கின்றன. மாம்ஸத்தைப் புசிப்பவர்களும் பயமுறுத்துந்தன்மையருமாகிய யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் ஆங்காங்கு ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றனர்' என்று மொழிந்தனர்.

மஹா தேஜஸ்வியாகிய அம்முனி மன்னிவர் இங்ஙனம் மொழிந்து [1] விரமிக்க, முனிவர்கள் அனைவரும் 'மேல் மேல்' என்று கொண்டாடினர். மீளவும் அவர்கள் 'குசிகர்களின் இவ்வம்சமானது மிகவும் பெருமை பொருந்தியது. அது எப்பொழுதும் தர்மத்தில் நிலை நின்று விளங்குவது. குசவம்சத்திற் பிறந்தவர் யாவரும் மிக்கமகிமை பொருந்தி மானிடவரில் ஒப்பின்றி

1. விரமிக்க—முடித்து வெறுமனே யிருக்க.

நின்று ப்ரஹ்மதேவனேடொத்தவரா யிருப்பவர்கள். அவர்களில் மிகப்புகழ் பொருந்திய விச்வாமித்ரரெனப் படுகிற நீரே விசேஷித்து மஹாநுபாவராயிருப்பவர். நதிகளிற் சிறந்த இக்கௌசிகியும் உமது குலத்தை விளங்கச்செய்கின்றனள்' என்று ப்ரசம்ஸிக்க, அக்கௌ சிகருமு ஸந்தோஷவெள்ளத்தில் மூழ்கி விளங்கிக் கொண்டு அஸ்தமித்த ஸூர்யன் போல நித்ரை செய் தனர். ராமனும் லக்ஷ்மணனும் மிகவும் அற்புதத்தை விளைவிப்பதாகிய அவ்விருத்தாந்தத்தைக் கேட்டும் நித்ரைக்குட்பட்டுக் கொஞ்சமாகவே ஆச்சரியமடைந்து அம்மாமுனியைக் கொண்டாடி வழி நடந்துவந்த ச்ரமத் தினால் நன்கு நித்ரை போயினர். முப்பத்துநாலாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## கங்கா பார்வதிகளின் ஜந்ம விருத்தாந்தம்.

விச்வாமித்ரமாமுனிவர் சென்றதுபோக மிகுந்த அன்றிரவெல்லாம் சோண நதிக்கரையில் மற்றுமுள்ள மஹர்ஷிகளோடுகூடப் படுத்திருந்து பொழுது விடிந்த வுடன் ராமனை நோக்கி 'ராமா! பொழுது நன்கு விடிந்து விட்டது. காலைச்சந்தி நடக்கின்றது; எழுந்திரு. உனக்கு மங்களம் உண்டாகுக. ப்ரயாணஞ்செய்ய முயல்வாயாக' என்றனர். அவ்வார்த்தையைக் கேட்டு ராமனும் எழுந் திருந்து விடியற்காலத்திற் செய்யவேண்டியவைகளை நிறைவேற்றி ப்ரயாணஞ்செய்ய விருப்பங்கொண்டு அம்மாமுனியை நோக்கி 'அந்தணர்களிற் சிறந்த மாமுனியே! பரிசுத்தஜலமுடைய இச்சோணநதி இப் பொழுது ஜலப்ரவாஹங் குறுகி ஆழமுமின்றி மணற் குன்றுகளால் அழகும் பொருந்தி விளங்குகின்றது. ஆனதுபற்றி ஓடமின்றியே இதைத் தாண்டக்கூடும்.

ஆயினும் எந்தவழியாக நாம் இதைத் தாண்டவேண்டும்?' என்று மொழிந்தனன். அதைக் கேட்டு விச்வாமித்ரரும் 'இவ்வழியால் இதைத் தாண்டலா' மென்று நான் உத்தேசங்கொண்டிருக்கின்றனன் இவ்வழியாகத்தான் மஹர்ஷிகளும் தாண்டுகின்றனர்' என்றுரைத்தனர்.

இங்ஙனம் மிகுந்த மதியுள்ள விச்வாமித்ரமஹாமுனியால் உரைக்கபபட்ட ராமலக்ஷ்மணர்களும் மஹர்ஷிகளும் புறப்பட்டு வழியில் பலவிதமானவனங்களைப் பார்த்துக்கொண்டே சென்றனர. அம்மஹர்ஷிகள் வெகுதூரஞ் சென்று பகலில் பாதிகடந்து மத்யாஹ்நமாகும் பொழுது ரிஷிகளால் அடையப்பெற்று நதிகளிற் சிறந்துவிளங்குங் கங்கையைக் கண்டனர். பவித்ரமான ஜலப்ரவாஹத்துடனகூடி ஹம்ஸம் ஸாரஸம் முதலிய ஜலபக்ஷிகளால் சூழப்பட்டு அழகாயிருக்கின்ற அந்நதியைக் கண்டு முனிவர்கள் அனைவரும் ராமலக்ஷ்மணர்களும ஸந்தோஷமடைந்தனர். பின்புயாவரும் அக்கங்கையின் கரையில் தங்குவதற்கு ஓரிடம் ஏற்படுத்திக்கொண்டு ஸ்நாநஞ் செய்து க்ரமப்படி அகமர்ஷண ஸூக்தம முதலிய மந்த்ரங்களை ஜபித்து தேவர்களுக்கும், பித்ருதேவதைகளுக்கும், ரிஷிகளுக்கும் தர்ப்பணஞ் செய்து அக்நியில் ஹோமஞ் செய்யவேண்டிய பஞ்சமஹாயஜ்ஞங்களென்று சொல்லப்படுகிற சில செயல்களையும் நிறைவேற்றி அந்த ஹோமத்தில் மிகுந்தது பற்றி அமிர்தம்போன்ற ஹவிஸ்ஸென்கிற அந்நத்தைப் புசித்து மிக்க மனக்களிப்புற்று நிர்மலமாகிய அக்கங்கையின் கரையில் மஹாத்மாவாகிய விச்வாமித்ரமாமுனியைச் சுற்றிலுஞ் சூழ்ந்து உட்கார்ந்திருந்தனர்.

அம்முனிவர்கள் அனைவரும் அங்ஙனம் உட்கார்ந்தபின்பு அப்பொழுது ராமனும் அவ்விடஞ் சென்று

உட்கார்ந்து விச்வாமித்ரரை நோக்கி 'மஹாநுபாவரே! கங்காநதி மூன்று மார்க்கங்கொண்டு ப்ரவஹித்தவிருத்தாந்தத்தைக் கேட்க விரும்புகின்றனன். அது மூவுலகங்களையும் ஆக்ரமித்து நதநதீபதியாகிய ஸமுத்ரத்தை எப்படியடைந்ததோ, அதைச் சொல்லவேண்டும்' என்று கேட்கலாயினன். விச்வாமித்ரரும் அங்ஙனம் ராமனது சொற்களால் ஏவுண்டு கங்காநதி பிறந்த விதத்தையும், அது மூன்று லோகங்களையும் ஆவரித்துக் கொண்டு வளர்ந்த ப்ரகாரத்தையும் இங்ஙனம் சொல்லத் தொடங்கினர். இரும்பு செம்பு முதலிய தாதுக்களுக்கு நிதியாகி ஹிமாலயமென்று சொல்லப்படுகிற பர்வதராஜன் ஒருவன் உண்டு. அவனுக்கு உலகத்தில் ஒப்பற்ற அழகு பொருந்திய கன்னிகைகள் இருவர் உண்டு. மேருபர்வதத்தின் பெண்ணும் ஹிமாலயமலைக்குப் பத்நியும் நுண்ணிடையுடையவளும் அழகெல்லாமமைந்தவளுமாகிய மநோரமையென்பவள் அவ்விரு பெண்களுக்குந் தாய். அம்மநோரமை யெனபவளிடத்தில் ஹிமவானுக்குக் கங்கையென்பவள் மூத்தபெண்ணாகப் பிறந்தவள். அவனுக்கே இரண்டாவது பெண் உமையென்பவள் உண்டாயினள். தேவதைகள் அனைவரும் தமக்குள்ள ஓர் கார்யத்தை நிறைவேற்றும்பொருட்டு ஹிமவானிடம் சென்று த்ரிபதகையென்னும் பெயர்பெற்ற கங்கையைக் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டனர். பர்வதராஜனாகிய ஹிமவானும் யாசகர்கள் கேட்டதை மறுக்கவொண்ணாதென்று தர்மத்தில் மனஞ்செலுத்தி மூவுலகங்களுக்கும் நன்மையைச் செய்ய விரும்பித் தனது புதல்வியாகிய கங்கையைத் தேவர்களுக்குத் தந்தனன்.

அவள் உலகங்களனைத்தையும் பரிசுத்தமாக்குந்

தன்மையள். தான் நினைத்தபடி எவ்வழியிலும் ப்ரவாஹங்கொள்ள வல்லவள். தேவதைகளும் உலகங்களுக்கெல்லாம் நன்மையைச் செய்யும்பொருட்டு அக்கங்கையை வாங்கி அழைத்துக்கொண்டு தமது இஷ்டம் நிறைவேறி மனக்களிப்புடன் சென்றனர். ரகுநந்தனு! அந்த ஹிமவானுடைய மற்றொருபெண்ணாகிய உமையென்னுங் கன்னிகை கடும்விரதத்தைக் கைக்கொண்டு தவமே தனமென்று நினைத்துச் சிவனைக்குறித்துத் தவஞ்செய்துகொண்டிருந்தனள். அங்ஙனங் கடுந்தவம் புரிந்து உலகமனைத்தும் வணங்கும்படி விளங்கிய தன்பெண்ணான உமாதேவியை அப்பர்வதராஜனாகிய ஹிமவான் அநுரூபனாகி அருள்புரிந்து வந்த ருத்ரனுக்கு மனைவியாகக் கொடுத்தனன்.

ராகவனே! நதிகளிற் சிறந்த கங்கையும் உமாதேவியும் ஆகிய இவ்விவரும் உலகங்களில் மிகப்பெருமை பெற்றவர்கள்; பர்வதராஜனாகிய ஹிமவானுடைய பெண்கள். மிகவும் அழகான நடையுள்ளவர்களிற் சிறந்த ராமனே! இங்ஙனம் இக்கங்காநதி பிறந்தவிதமெல்லாம் மொழிந்தனன். இந்நதி மூன்றுமார்க்கங்களைப் பெற்ற விதத்தைச் சொல்லுகிறேன். இக்கங்கை, முதலில் ஆகாயமார்க்கத்தில் சென்றனள். பின்பு பாபமின்றி அழகாய் விளங்கி வற்றாத வெள்ளங் கொண்ட பர்வதராஜன் மகளாகிய இந்நதியே தேவலோகத்திற் சென்று தேவநதியென்னும் பெயர் பெற்றனள். முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

பார்வதி விருத்தாந்தம்.

அவ்விச்வாமித்ரமாமுனிவர் இங்ஙனம் உரைத்து விரமிக்க, அதைக் கேட்டு வீரர்களாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும் அக்கதையைக் கொண்டாடி அம்மாமுனியை நோக்கி "அந்தணரிற் சிறந்த முனிமன்னரே! பர்வதராஜனுகிய ஹிமவானுடைய மூத்தபெண்ணுகிய கங்காதேவியின் விருத்தாந்தம் தர்மம் பொருந்திமிகவுஞ் சிறப்புற்றது அதை இவ்வளவுமாத்ரமே மொழிந்தீர். நீர் ஸமஸ்த கதைகளேயும் பரக்க அறிந்தவர். ஆகையால் ஸ்வர்க்கத்திலும் பூமியிலும்நடந்த அக்கங்கையின் விருத்தாந்தங்கள் அனைத்தையும் ஸவிஸ்தாரமாகச் சொல்லவேண்டும். உலகங்களை யெல்லாம் பாவநமாக்குந் தன்மையுள்ள அக்கங்காநதி மூன்று மார்க்கங்களாகப் பெருகுவதற்குக் காரணம் என்ன? த்ரிபதகையென்னும் இந்நதி எப்படி எக்காரியஞ் செய்து நதிகளிற் சிறந்ததென்னும் க்யாதி யடைந்தது?" என்று வினவினர். அதைக் கேட்டு அந்தத் தபோதநர் தேவலோகத்திலும் மநுஷ்யலோகத்திலும் நடந்த அக்கங்கையின் விருத்தாந்தங்கள் அனைத்தையும் ஸவிஸ்தாரமாக இப்படி யென்று ரிஷிக்கூட்டத்தினிடையில் மொழிந்தனர்.

"குத்ஸ்த்த வம்சத்திற் பிறந்த கருமாணிக்கமே! ராமா! முன்பு மிகத் தவம் பொருந்திய சிவன், பார்வதியை மணம் புரிந்து அப்பார்வதீதேவியைப் பார்த்து, தபோநிஷ்டனுயிருந்தும் மந்மத பாணங்களால் அடியுண்டு மனமயங்கி அவளோடு ரதிகேளிக்குத் தொடங்கினன். பகைவரைத் தபிக்கச்செய்யும் பராக்ரமசாலியே! ராமா! இப்படி மந்மதக்ரீடையில் தேவமாநத்தினுல் நூறுண்டுகள் கடந்து சென்றும் அச்சிவபிரானுக்கு அப்பார்வதியினிடத்தில் ஒரு புதல்வன் உண்

டாகவில்லை. பின்பு நான்முகன் முதலிய வானவர் அனைவரும் இப்பார்வதியினிடத்தில் பிறக்கும் புதல்வனைப் பொறுக்க வல்லவன எவனென்று ஆலோசித்து அதற்கு எப்படியாவது தடைசெய்ய வேண்டுமென்று உத்தேசங் கொண்டு அனைவரும் சிவபிரானிடம் வந்து தலைவணங்கி நமஸ்காரஞ் செய்து 'வானவர்க்கரசே! மஹாதேவா! நீர் உலகங்களுக்கு ஹிதத்தையே செய்யுந் தன்மையுடையவர். ஆகையால் உமது பாதாரவிந்தத்தில் விழுந்து வேண்டிக்கொள்கிற இத்தேவர்கள்மீது நீர் அருள்புரிந்து ரக்ஷிக்கவேண்டும். தேவாதிநாதனே! உமது வீர்யத்தினால பிறக்கும் புதல்வனை உலகங்கள் தரிக்கமாட்டா. ஆகையால் நீர் இச்செயலை விட்டு வேதங்களிற் சொல்லியபடி யோகத்தில் முயன்று பார்வதிதேவியுடன் கூடித் தவம் புரிவீராக. மூவுலகங்கட்கும் நன்மையுண்டாகும்பொருட்டு உமது வீரியத்தை உமது தேஜோமயமான சரீரத்திலேயே அடக்கிக்கொள்ளவேண்டும்; வெளிவிடவேண்டாம். இவ்வுலகங்களனைத்தையும் காப்பீராக. உலகங்களையெல்லாம ஒழிக்கமுயல்வது உமக்குத் தகாச்செயலல்லவா?' என்று மொழிந்தனர்.

தேவதைகளின் அம்மொழியைக் கேட்டு உலகங்கட்கெல்லாம் தனியாளனாகிய அச்சிவபெருமானும அப்படியே யென்று அத்தேவதைகளை நோக்கி 'எனது வீர்யத்தை நான் எனது சரீரத்திலேயே அடக்கிக்கொள்கின்றனன். பார்வதியும் அப்படியே தனது சோணிதத்தைத் தன்சரீரத்திலேயே நிறுத்திக்கொள்கின்றனள். தேவதைகளே! உலகங்களெல்லாம் ஸுகத்துடன் வாழ்க. வானவர்களே! நான் என்னுடைய ரேதஸ்ஸை உள்ளேயே அடக்கிக்கொள்வேன். ஆனால் அதில்

சிறிதுபாகம் ஸ்தாநத்தினின்றுஞ் சலித்து வெளிநோக்கி விட்டது. ஆகையால் அங்ஙனம் நழுவின பாகத்தை மாத்திரம் விட்டுவிட வேண்டியதாயிருக்கின்றது. இப்பொழுது எனது ரேதஸ்ஸில் யாதொருபாகம் ஸ்தாநத்தினின்றும் நழுவியிருக்கின்றதோ, அது மிகவும் தேஜோமயமாகையால் யாவராலும் பரிக்கமுடியாதது. சிறப்புற்ற தேவர்களே! அப்படிப்பட்ட எனது ரேதஸ்ஸைப் பரிக்கவல்லவன் யாவன்? அதை எனக்குச் சொல்ல வேண்டும்' என்று மொழிந்தனன்.

தேவதைகளனைவரும் அவ்வெருத்துக் கொடியுடையானை நோக்கி 'தேவா! இப்போது உமது சரீரத்தினின்றும் வெளியான ரேதோபாகத்தை இப்பூமி தரிக்கவல்லது' என்று உத்தரமுரைத்தனர். பின்பு உருத்திரனும் தேவர்களால் இங்ஙனம் சொல்லப்பட்டுத் தனது வீர்யத்தைப் பூமியில் விட்டனன். அவ்வீர்யமானது மலைகளுங் காடுகளுமாகிய பூமியெங்கும் நிரம்பிவிட்டது. பிறகு தேவதைகள் அத்தேஜஸ்ஸு பூமியிலெங்கும் பரந்து வருவதைக் கண்டு பயந்து அக்நிதேவனைப் பார்த்து அவன் முதலில் பயப்பட்டபோதிலும் நிலைப்படுத்தி 'நீ வாயுவுடன் கூடி இந்தச் சிவரேதஸ்ஸுக்குள் புகுரவேண்டும்' என்றுரைக்க, அக்நியும் அந்த ரேதஸ்ஸில் நுழைந்து வியாபித்திருக்கையில் அது வெள்ளிமலையாயிற்று.

பின்பு காலவசத்தினால் அது நாணற்காடாகவும் தோன்றி அக்நியையும் ஆதித்யனையும் நிகர்த்த ஒளி பெற்றிருந்தது. அந்த நாணற்காட்டில்தான் கிருத்திகாதேவிகளின் ஸ்தந்யபானஞ் செய்தமையால் கார்த்திகேயனென்றும், அக்நி தரித்திருந்ததுபற்றி அக்நிஸம்

பவனென்றுஞ் சொல்லப்பட்ட ஆறுமுகன் பிறந்தனன். இப்படி உருத்திரன் ரதிகேளியினின்றும் கைவாங்கி வெளிவந்த வீரியத்தைப் பூமியில் விட, அதை அக்நியும் வாயுவுமாக உள்நுழைந்து வியாபித்து நிற்கக் கண்டு, தேவர்களும் ரிஷிகளும் கூட்டங்கூட்டமாக மிகவும் ஸந்தோஷங் கொண்டு பார்வதிக்கும் பரமேச்வரனுக்கும் ரதிகேளிஸுகத்தைக் கெடுத்தமையால் கோபம் உண்டாகுமே யென்று நினைத்து அது உண்டாகாமைக்காகவும் அவன் பண்ணின உபகாரத்தைப் பற்றியும் அவ்விருவர்களையும் அளவற்றபடி பூஜித்தனர்.

பின்பு பார்வதி அவ்வானவர்களனைவரையும் நோக்கி 'எனக்குப் பர்த்தாவுடன் ஸம்போகத்தைத் தடுத்த இவ்வநிஷ்டத்திற்கு ப்ரதிபலனை அநுபவியுங்கள்' என்று சொல்லிக்கொண்டே கோபாவேசத்தினால் ஸூர்யன் போல் எரிவீசி விளங்கிநின்று கையில் ஜலமெடுத்துக் கோபத்தின் மிகுதியால் கண்களிரண்டிலும் சிவப்பு மீற, 'புதல்வனைப் பெற விரும்பி முயன்ற எனக்குப் பர்த்தாவுடன் நடந்த ஸம்போகத்தைத் தடுத்தீர்களாகையால் உங்களுக்கும் உங்கள் பாரியைகளிடத்தில் ஸந்தாநம் உண்டாகாமற் போகக்கடவது. இன்று முதல் உங்கள் மனைவிகள் மலடிகளாகக்கடவர்' என்று இங்ஙனம் சாபத்தைக் கொடுத்தனள்.

இப்படி தேவர்களனைவரையும் சபித்துப பூமியைப் பார்த்து 'அவநியே! நீ ஒருருவத்துடன் நிலைபெறுமல் களர் முதலிய பலவித உருவங்கொண்டு பல அரசர்களுக்குப் பத்தினியுமாயிருப்பாயாக. நீ மிகவும் கொடிய மதியுடையவள். ஆனதுபற்றியே நீ யெனக்குப் புதல்வன் உண்டாக ஸம்மதிக்காமற்போயினை. ஆகையால் என்னிடமிருந்து நீ சாபம் பெற்று இயற்கை மாறிப் புதல்

வனுலுண்டாகும் ஆநந்தத்தை அடையாதிருப்பாயாக' என்று சபித்தனள்.

சபிக்கப்பட்ட தேவர்களனைவரும் வெட்கங்கொண்டு தலையிரக்கமுற்றிருப்பது கண்டு, வானவரேறாகிய சிவன் தனக்குள் 'பார்வதி யிட்ட சாபத்தை மறுக்கப் போகாது; நமது அநுசரர்களாகிய தேவர்கள் படுந் துயரத்தையுங் காணலாகாது' என்று நினைத்து அப்பொழுதே வருணன் பாதுகாக்கும் மேற்றிசையை நோக்கிச்செல்லத் தொடங்கினன். பின்பு அப்படியே அம்மஹாதேவன் ஹிமாலயபர்வதத்தினது வடபக்கத்திலுள்ள ஓர் சிகரத்தில் தனது பத்நியாகிய பார்வதியுடன்கூடி எப்பொழுதும் தவஞ்செய்யும்படி ஸங்கல்பித்திருந்தனன். ராமா! பர்வதத்தின் புதல்வியாகிய பார்வதியின் வரலாற்றையெல்லாம் இங்ஙனம் ஸவிஸ்தாரமாக உனக்கு மொழிந்தனன். இனிக் கங்காநதியின் ப்ரபாவத்தைச் சொல்லுகிறேன். நீ லக்ஷ்மணனுடன் கூடிக் கேட்பாயாக. முப்பத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

குமரன் பிறந்த விருத்தாந்தம்.

முன்பு சிவன் அவ்வாறு தவம் புரிந்திருக்கையில், வானவர்கள் தமக்கு ஒரு ஸேநாபதி வேண்டுமெனக் கருதி, ரிஷிகணங்களோடுகூடி ப்ரஹ்மதேவனிடம் வந்து சேர்ந்தனர். ராமா! பின்பு அக்நிமுதலிய தேவர்களனைவரும் இந்திரனுடன்கூடி மஹாத்மாவாகிய நான்முகனை நமஸ்காரஞ் செய்து 'தேவனே! முன்பு நீர் எங்களுக்கு ஸேநாபதியாக ஏற்படுத்தின சிவபகவானானவன பகைவரையடக்க வல்லனாயினும இப்பொழுது எங்களுக்கு ஸேநாபதியாக நிற்கவில்லை. எங்களுக்குத்

தகப்பனைப்போல நன்மையைச் செய்யவல்ல அச்சிவ பெருமான் இப்பொழுது ஹிமாலயத்தின் சிகரத்தில் பெருந்தவம் புரியக் கருதிப் பார்வதியுடன்கூடி அதை நடத்திக்கொண்டிருக்கின்றனன். இனி உலகங்களுக்கு ஹிதமுண்டாகும் பொருட்டுச் செய்யவேண்டிய கார்யம் எதுவோ, அதை நீர் செய்யவேண்டும். நீர் எல்லாவற்றையும் நேர்மைபபடுத்தும் வழியை அறிந்தவர். நீரே எங்களுக்கு மேலான கதி' என்று உரைத்தனர்.

இங்ஙனம் தேவர்கள் மொழிந்த மொழியைக் கேட்டு உலகங்கட்கெல்லாம் பிதாமஹனாகிய திசைமுகக் கடவுள் தேவர்களை நோக்கி 'சிவன் கடுந்தவம் புரிந்திருக்கின்றனன். அவனைத் திருப்பத் தரமில்லை; ஆகையால் அதில் முயல்வது வீண்' என்று இனிய மொழிகளால் ஸமாதானஞ் சொல்லி இங்ஙனம் உரைத்தனர். 'பார்வதீதேவி, தேவதைகளுக்குத் தங்கள் மனைவிகளிடத்தில் ஸந்தானம் உண்டாகாதென்று சாபங் கொடுத்ததுபற்றி நீங்கள் உங்களுடையகொண்டபெண்டிர்களிடத்தில் மக்களைப்பெற வல்லராலலர். அத்தேவியினது சாபம் அமோகமாயிருக்கவற்று. இது உண்மையே. இதிற் சந்தேகம் வேண்டாம். ஆனல் இனிக் கதி யெப்படியென்பீர்களாயின, இதோ இவ்வாகாசகங்கையினிடத்தில் அக்நிதேவன் ஓர் புதல்வனை உண்டாகச் செய்வான். அவன் பகைவரை யெல்லாம் அடக்கவல்ல மஹாபராக்ரமம் பொருந்தி விளங்கித் தேவதைகளனைவர்க்கும் ஸேநாபதியாகி நிற்பான். 'கங்கை இதற்கு எப்படி சம்மதிப்பாள்? பார்வதியும் எப்படி கோபியாதிருப்பாள்? என்று ஸந்தேகிக்கவேண்டாம். கங்கை ஹிமவானுடைய மூத்தபெண்ணன்றோ? அக்கங்காதேவி அக்நிதேவனால் புதல்வனைப் பெற ஸம்மதிப்பாள். தனது தமக்

கையினிடம் ப்ரீதி கொண்டு பார்வதியும் அப்புதல் வனைக் கைக்கொண்டு ஸம்மதி யடைவாள். இதற்குச் சந்தேகமில்லை' என்றனர்.

ரகுநந்தனு! தேவதைகளனைவரும் அவ்வயன் மொழியைக் கேட்டுத் தமது கருத்து நிறைவேறிற் றென்று மனத்தில் எண்ணங்கொண்டு அந்நான்முகக் கடவுளை நன்கு பூசித்து நமஸ்காரஞ் செய்து ஸமஸ்த மான தேவர்களும் பலவகைப்பட்ட லோஹதாதுக்களால் அலங்காரம் பெற்று விளங்கிய உருத்திரனுடைய வீர்யத் தினுட்புகுந்து அதைக் கொளுத்தி நின்ற அக்நிதேவ னிருப்பிடமாகிய கைலாஸபர்வதத்திற்குச் சென்று ஸேநாபதியாக வல்ல ஒரு புதல்வனை உண்டாக்கும் பொருட்டு அங்குச் சிவனது வீரியத்தினுட்புகுந்து வேறொரு சரீரங் கொண்டிருக்கிற அவ்வக்நிதேவனைப் பார்த்து 'ஓ அக்நியே! தேவர்களின் காரியம் இது; நீ நிறைவேற்றவேண்டும். அது வென்னெனில், நீ மஹா தேஜஸ்வியாகையால் பர்வதத்தின் மகளாகிய கங்கா தேவியினிடத்தில் உன்னிடமிருக்கும் உருத்திரவீரியத் தை விடுவாயாக' என்று நியோகித்தனர்.

அவனும் அப்படியே யாகட்டுமென்று தேவர் களுக்கு உறுதி மொழி சொல்லி விட்டுக் கங்காதேவி யிடம் வந்து 'தேவீ! நீ சிவனது வீரியத்தை வாங்கிக் கொண்டு கர்ப்பந் தரிக்கவேண்டும். ஏனெனில், இது தேவர்களுக்கு மிகவும் ப்ரியமாயிருக்கின்றது' என்று உரைக்க, அதைக் கேட்ட அக்கங்கையம்மனும் ஓர் அழகான திவ்யஸ்த்ரீவேஷந் தரித்து எதிரே வந்து நின்றனள். அக்நிதேவனும் அவளுடைய ஸௌந்தர்யா திசயத்தைக் கண்டு மிகவும் மோகித்துத் தனது அவய

வங்களனைத்திலும் இருந்த அவ்வீரியத்தைப் பொழிந்து அத்தேவியினது அங்கங்களிலெங்கும் பரம்பும்படி அதை யெல்லாஞ் சொரிந்தனன்.

ரகுநந்தனு! பின்பு அவ்வீரியமானது அக்கங்கா தேவியினது அவயவங்களெங்கும் நிறைந்து நின்றது. அங்ஙனந் தரிக்கப்பட்ட அக்நியினுடையதேஜஸ்ஸானது கங்கையை யெரிக்கவே, அவள் அதைப் பொறுக்கமாட்டாமல் மிகவும் மனந்தத்தளித்துத் தேவர்களுக்கெல்லாம் புரோஹிதனுகிய அவ்வக்நிதேவனை நோக்கித், 'தேவனே! என்னிடத்தில் நீ சொரிந்த சிவபிரானுடைய வீரியமானது எனது அவயங்களெங்கும் பரந்து என்னை யெரிக்கின்றது. ஆகையால் நான அதைத் தரிக்க வல்லளல்லேன்' என்றுரைத்தனள். அதைக் கேட்டு, யாகங்களில் தேவதைகளைக் குறித்து ஹோமஞ் செய்யும் ஹவிஸ்ஸை அவர்க்கு முகமாய் நின்றுட்கொள்ளுந் தன்மையுடைய அவ்வக்நிதேவன கங்காதேவியைப் பார்த்து 'இதோ இந்த ஹிமவத் பர்வதத்தினுடைய அருகிலிருக்கின்ற இச்சிறிய மலையில் இந்தக் கர்ப்பத்தை விட்டு விடு' என்றனன். பாபமற்று விளங்கும் பரமோதாரனே! ராமா! அம்மொழியைக் கேட்ட கங்காதேவியும் சோதிவெள்ளங் கொண்டு விளங்குகின்ற அந்தக் கர்ப்பத்தைத் தனது ஸர்வாவயவங்களினின்றும் வாங்கி அப்படியே அம்மலையில் விட்டுவிட்டனள்.

இங்ஙனம் கங்கையினிடத்தினின்றும வெளியாய்ப் பூமியிற் சென்று உருக்கிக்கொட்டின உயர்ந்த பொன் குழம்புபோல் நிர்மலமாகி விளங்குகின்ற அச்சுக்லசோணிதங்களே சிறந்த தங்கமாகவும், மேலான வெள்ளியாகவுந் தோன்றி விளங்கி நின்றன. அதிலுள்ள க்ஷார பாகமானது தாம்ரமும் இரும்பும் ஆயிற்று. அதன்

அழுக்குபாகமானது தகரமும் ஈயமும் ஆயிற்று. இவ்வாறு கங்கையினிடமிருந்து வெளியான சிவபிரானது வீரியம் பூமியில் வீழ்ந்து பலவித லோஹங்களாகத் தோன்றலுற்று வளர்ந்தது. கங்காதேவி அந்தக் கர்ப்பத்தை அங்ஙனம் விட்டவுடனே அவ்வெள்ளிமலையில் முளைத்திருந்த நாணற்காடனைத்தும் அவ்வீரியத்தினுடைய சோதிவெள்ளத்திலாழ்ந்து ஸ்வர்ணமாய் விட்டது.

புருஷர்களிற் சிறந்த ராமனே! ஸ்வர்ணம் அப்பொழுதுண்டானபடியால், அதுமுதலாக அக்நிபோல் நிகுநிகென்று ஒளிகொண்டு விளங்குகின்ற அம்மேலான ஸுவர்ணமானது ஜாதரூப மென்னும் பேர்கொண்டதாயிற்று. (ஜாதரூபம் - உண்டானரூபத்தையுடையது) அவ்வநத்திலுள்ள புல் மரம் கொடி புதர் முதலியவையனைத்தும ஸுவர்ணமயமாயிற்று. கங்கை ரேதஸ்ஸை விட்டபின்பு குமரன் பிறந்தனன். உடனே இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் கிருத்திகாதேவிகளைப் பார்த்து 'நீங்கள் பாலைக் கொடுத்து இக்குழந்தையை வளர்ப்பீர்களாக' என்று கட்டளையிட்டனர். அத்தேவிகளும் தேவர்களுக்கெதிரில் 'இக்குழந்தை நம்மனைவர்க்கும் புத்திரனாகட்டும்' என்று தீர்மானித்து மேலான ஏற்பாடு செய்துகொண்டு அப்பொழுது பிறந்த அச்சிறுவனுக்குப் பால் கொடுக்கத் தொடங்கினர்.

பின்பு தேவர்கள் அனைவரும் 'இக்குமரன் கார்த்திகேயனென்று மூவுலகங்களிலும் கியாதி பெறப்போகின்றனன். இதற்குச் சந்தேகமில்லை' என்றுரைக்க, அவ்வுரைகளைக் கேட்டு அக்கிருத்திகாதேவிகளும அங்ஙனம் அங்கீகரித்து, அக்நியைப்போல் மிகுந்தசோதி

வீசும்படி விளங்கிக் கர்ப்பஜலத்தில் விழுந்து கிடக்கிற அக்குமாரனை எடுத்துக்கொண்டு அவ்வழுக்கெல்லாம் போகும்படி ஸ்நாநஞ் செய்வித்தனர். ககுத்ஸ்த்தவம் சத்திற் பிறந்த மஹாவீரனே! ராமா! அப்பொழுது மஹாபாக்யசாலியாகி அக்நியைப் நிகாத்து விளங்கும் அக்கார்த்திகேயனென்னும் குமாரனைக் கங்காதேவியின் உதரத்தில் நிலைபெறாமல் கீழே நழுவி விழுந்ததுபற்றி [1] 'ஸ்கந்தன்' என்று தேவதைகள் பேரிட்டழைத்தனர். அக்குழந்தையை ஸ்நாநஞ் செய்வித்த பின்பு அக்கிருத்திகாதேவிகளுக்கு ஸ்தந்யஞ் சுரந்து அதிகமாயுண்டாக, அப்பொழுது அந்த ஸ்கந்தனும் அவ்வறுவர்களுடைய ஸ்தந்யங்களையும் ஆறுமுகங்களைத் தரித்துக்கொண்டு பாநஞ்செய்தனன்.

அக்குழந்தை ஒரு பகல்மாத்திரம் முலைப்பால் குடித்துப் பின்பு க்ரமமாக வளர்ந்துவந்து மிக்க மிருதுவான சரீரமுடையனாயிருந்தும சிவனது வீரியத்தில் பிறந்தவனானதுபற்றி யாவராலும் தடுக்கவொண்ணாதிருக்கும் தனது பராக்ரமத்தினால் அஸுரப்படைகளைக் கூட்டங்கூட்டமாக வென்று விட்டனன். பிறகு அக்நி முதலிய தேவர்களெல்லோரும் ஒன்றுகூடி ஆலோசித்து ஒப்பில்லாத ஒளியுடன் விளங்குகின்ற அவ்வாறுமுகக் குமாரனைத் தமது படைகளுக்கெல்லாம அதிபதியாயிருக்கும்படி அபிஷேகஞ் செய்தனர். ராமா! நீ என்னைத் தேவலோகத்தில் நடந்த கங்காதேவியின விருத்தாந்த

---

1 (ஸ்கந்தன 'ஸ்கந்திர் கதிஶோஷணயோ:' என்கிற தாதுவின் மேல் இப்பதம் உண்டாயிருக்கின்றது. அந்த தாது கதியைச் சொல்லுமாகையால் இங்குக் கதியாவது கங்கையின் வயிற்றில் நிலை பெறாமல் கீழே விழுகையே யென்று கொண்டு ஸ்கந்தனென்று பேரிட்டனரென்றுணர்க.

மனைத்தும் ஸவிஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று வினவினை. இக்குமரனது உற்பத்தியே அக்கதையின விஸ்தாரம். இதை உனக்கு மொழிந்தனன். காகுத்த னே! ராமா! இது பாபத்தைப் போக்கவல்லது. அப்படி யே மிகுந்த செல்வத்தையும் தரக்கூடியது. ராமா! இப்பூமியில் எவன் இக்கார்த்திகேயனிடத்தில் பக் தியைச் செய்கின்றனோ, அம்மனிதன் ஆயுள் நிரம் பப்பெற்றுப் பிள்ளை பேரன் முதலிய பந்துவர்க்கத்துடன் கூடிச் செல்வத்துடன் ஸுகமாக வாழ்ந்திருந்து கடைசி யில் அந்த ஸ்கந்தனுடைய லோகத்தைச் சென்று சேரு வான்' என்று மொழிந்தனர். முப்பத்தேழாவது ஸர்க் கம் முற்றிற்று.

---

## ஸகர சக்ரவர்த்தியின் விருத்தாந்தம்.

இங்ஙனம் விச்வாமித்ரமாமுனிவர் கருத்ஸ்த்தவம் சத்திற் பிறந்த ஸ்ரீராமனுக்கு அக்கங்கையின் கதையெல் லாம் இனிதாகச் சொல்லி முடித்து மீளவும் மற்றொரு வார்த்தை இங்ஙனம் மொழிந்தனர் 'ராமா! முன்பு அயோத்யாநகரில் ஸகரனென்னும் ஓர் அரசன் இருந் தனன். அவன் தர்மத்தில் விருப்பங்கொண்டு பகைவரை யடக்கும் வல்லமையமைந்து மஹாவீரனாகி விளக்கமுற் றிருந்தனன். அவன் பிள்ளையில்லாமலிருந்தது பற்றிப் பிள்ளையைப் பெறவேண்டுமென்று விருப்பங்கொண்ட னன் அம்மன்னவனுக்கு இரண்டு மனைவிகள் இருந் தனர். அவர்களில் ஒருத்தி விதர்ப்பதேசத்தரசன் மகளாகிக் கேசினியென்னும் பேர் கொண்டு மிகவும் க்யாதிபெற்றவள்; தர்மத்தில் நிலைநின்றவள்; ஸத்யந் தவறாதிருப்பவள்; அவளே ஸகரனென்னும் அம்மஹா ராஜனது பாரியைகளிருவரிலும் மூத்தவள். மற்றொரு

ருத்தி அரிஷ்டநேமியென்று சொல்லப்படுகிற காச்யப மஹர்ஷியின் புதல்வி; ஸுமதியென்னும் பேர்கொண்டவள்; அழகில் இப்பூமியிலெங்கும் ஒப்பற்றிருப்பவள். அவள் ஸகரமஹாராஜனுக்கு இளையபாரியையாக வாழ்க்கைப்பட்டிருந்தனள். அவ்வாறாக அம்மடந்தையரிருவரோடுங்கூடி பிருகுமஹர்ஷி ஸ்நாநஞ் செய்துவருவது பற்றிப் பிருகுப்ரஸ்ரவணமென்னும் பேர்பெற்ற ஹிமாலயத்தின் அருகிலிருக்கிற ஓர் சிறிய பர்வதத்தை யடைந்து அங்குத் தவஞ்செய்துகொண்டிருந்தனன்.

இங்ஙனம அம்மன்னவன் தவஞ்செய்துகொண்டிருக்கையில் நூறுவருஷங்கள் நிரம்பிச்சென்றன. பின்பு ஸத்யவான்களில் மேன்மையடைந்திருக்கின்ற பிருகுமஹர்ஷி அவர்களுடைய தவத்தினால் நன்கு ஆராதிக்கபபட்டு ஸந்தோஷம் அடைந்து அம்மன்னவன் எதிரில் வந்துதித்து அவனைப் பார்த்துப் 'பாபமற்றவனே! உனக்கு வேண்டியவரையில் அளவின்றிப் புத்ரர்கள் உண்டாவாாகள். ஆண்சிங்கமே! அவர்களால் உனது கீர்த்தி ஒப்பின்றி உலகமெங்கும் பரவப்போகின்றது. உன்மனைவிகளில் ஒருத்தி வம்சத்திற்கு விருத்தி செய்ய வல்ல ஓர் புதல்வனைப் பெறுவாள். மற்றொருத்தி அறுபதினாயிரம் புதல்வர்களைப பெறுவாள்' என்றிங்ஙனம் வரமளித்தனர்.

இங்ஙனம் மொழிந்த அம்மஹாத்மாவாகிய பிருகு மஹர்ஷியை அபபொழுது ஸகரனது மனைவிகளிருவரும் ஆராதித்து மிகுந்த ஸந்தோஷத்துடன கைகளைக் கூப்பிக் கொண்டு அம்மாமுனியை நோக்கி 'ப்ராஹ்மணோத்தமரே! எவள் ஒருவனைப பெறுவாள். பலபேர் எவளுக்குப் பிறப்பர். இதை யாம் கேட்க விரும்புகின்றனம். நீர் யாருக்கு எதைச் சொல்லுகின்றீரோ, அது அப்படி

யே தப்பாமல் நடக்கவேண்டும்' என்று வேண்டிக்கேட்டனர். அம்மொழிகளைக் கேட்டுத் தார்மிகராகிய அம்மாமுனிவர் அவ்விருவரையும் நோக்கி 'உங்களிருவருக்குள் ஒருத்தி ஒரு புதல்வனை விரும்பினால் வம்சத்தை விருத்திசெய்யவல்ல ஒரு புதல்வனே யுண்டாவான். மற்றொருத்தி பலரை விரும்பினால் மிகுந்த பலமுடையவர்களும், சிறந்த கீர்த்தியமைந்தவர்களும், பரந்த உத்ஸாஹம்படைத்தவர்களுமாகிய புதல்வர்கள் பலர் உண்டாவார்கள். எவளுக்கு எந்த வரம் வேண்டும்? இது விஷயத்தில் உங்களபிப்ராயத்தை நீங்களே தெரியச்சொல்லுங்கள்' என்று இங்ஙனம் மேலான ஓர் மொழியையுரைத்தனர்.

ரகுகுலகுமாரனே! அம்மாமுனிவர் இங்ஙனம் மொழிய, அதைக் கேட்டுக் கேசினியென்னும் [1] மத்தகாசினி, மஹாராஜன்முன்னிலையில் வம்சத்திற்கு மேன்மையை விளக்கும் புதல்வனொருவன் வேண்டுமென்று விரும்பினள். அப்பொழுது கருடனுடன் பிறந்தவளாகிய ஸுமதியென்பவள் சிறந்த கீர்த்தியும் உயர்ந்த உத்ஸாஹமுமுடைய அறுபதினாயிரம் புதல்வர்களை ஆசைப்பட்டனள். ரகுகுலத்திற்கு மஹாநந்தத்தை விளக்குந்திறமுடைய மஹாநுபாவனே! ராமா! பின்பு அவ்வரசனும் மனைவிகளோடுகூட அம்மாமுனியை வலம்வந்து தலையை வணக்கி நமஸ்காரஞ்செய்து தனது நகரத்திற்குச் சென்றனன்.

பின்பு சிலநாள் செல்ல முதற்பத்தினியாகிய கேசினியென்பவள் ஸகரனிடத்தினின்று அஸமஞ்சனென்னும்

---

1 மத்தகாசினி உயர்ந்த பெண்மணி, 'மத்தகாஸிநீ யுத்தமா வரவர்ணிநீ' என்று நிகண்டுவில் சொல்லப்பட்டது.

பிள்ளையைப் பெற்றனள். புருஷோத்தமனே! ராமா! இரண்டாம் பத்தினியாகிய ஸுமதியானவள் சுரைக்காயைப்போல் குண்டாயிருக்கிற ஓர் கர்ப்பப்பிண்டத்தைப் பெற்றனள். பின்பு அப்பிண்டம் வெடித்துடைய அதினின்று அறுபதினாயிரம பிள்ளைகள் வெளியாயினர். செவிலித் தாய்கள் அப்பிள்ளைகளை நெய்க்குடத்திலிட்டு வளர்த்துவந்தனர். பின்பு வெகுகாலம் செல்லவே, அப்புதல்வர்கள் அனைவரும் யௌவநப்பருவமடைந்தனர். அப்படி வெகுகாலஞ் சென்ற பின்பு, ஸகரமஹாராஜனது அவ்வறுபதினாயிரம் பிள்ளைகளும் யௌவநம் பெற்று அழகு பொருந்தி நன்கு விளங்கினர்.

மானவரேறே! ராகவா! ஸகரனது மூத்தகுமாரனாகிய அவ்வஸமஞ்சனென்பவன் தினந்தோறும் ஊரிலுள்ள பிள்ளைகளையெல்லாங் கொண்டு ஸரயூநதியின் வெள்ளத்தில் போகட்டு அப்பிள்ளைகள் நீரில் மூழ்கிப் பரிதபிப்பது கண்டு சிரித்துக்கொண்டிருந்தனன. இவ்வாறு கொடிய செயல்களைச் செய்துகொண்டு பெரியோர்களை வருத்தமுறச்செய்து நகரத்திலுள்ளோர்க்கெல்லாம் தீங்கை விளைவிப்பதுபற்றி அப்புதல்வனை அவ்வரசன் பட்டணத்திலிருக்கவொட்டாமல் துரத்திவிட்டனன். அவ்வஸமஞ்சனுடைய பிள்ளை அம்சுமானென்பவன் மிகுந்த வீரியம் பொருந்தி உலகமனைத்தும் விரும்பும்படி நற்செய்கை கொண்டு யாவர்க்கும் இன்சொல்லுரைப்பவனுமாயிருந்தனன. ஆண் சிங்கமே! ராமா! பின்பு வெகுகாலம் கடக்கையில் அந்த ஸகரமஹாராஜனுக்கு யாகஞ் செய்ய வேண்டுமென்று நிச்சயத்துடன் ஓரெண்ணம் பிறந்தது. அப்பொழுது வேதங்களையறிந்த அம்மன்னவன் அப்படியே நிச்சயங்கொண்டு புரோஹிதர்களுடன்கூடி யாகஞ் செய்யத் தொடங்கினன். முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஸகரசக்ரவர்த்தி அச்வமேதஞ் செய்தல்.

ஸ்ரீரகுகுலகுமாரனாகிய ராமன் இவ்வாறு விச்வாமித்ரமாமுனிவர் மொழிந்த கதையைக் கேட்டு, அதற்குக் கடைசியில் ஸகரசக்ரவர்த்தி யாகஞ் செய்யத் தொடங்கினனென்ற இம்மாத்திரத்தில் அளவற்ற ஆநந்தம் அடைந்து, அக்நியைப்போல் விளங்குகின்ற அம்மாமுனியை நோக்கி 'ப்ராஹ்மணோத்தமரே! உமக்குச் சுபம் உண்டாகவேண்டும். இந்த யாகவிருத்தாந்தத்தை ஸவிஸ்தரமாகக் கேட்க விரும்புகின்றனன். எங்களது வம்சத்திற்குக் கூடஸ்தராகிய அச்சகரமஹாராஜர் எப்படியாகஞ் செய்தனர்? இதைச் சொல்லவேண்டும்' என்றனன். அதைக் கேட்டு விச்வாமித்ரமாமுனியும் தன் மனத்தில்தானே 'நான் எதைச் சொல்ல நினைத்தேனோ அதையே கேட்கின்றனன். எல்லாவற்றையும் அறிந்தவன் அதை அறிந்தும் அறியாதவனபோல் கேட்கின்றனன. லோகத்தார்களுக்குப்போல் ராமனுக்கும் தனது வம்சத்திற் பிறந்த பூர்விகரிடத்தில் எவ்வளவு கௌரவபுத்தி! அதைக் கேட்பதில் எவ்வளவு கௌதூஹலம்!' என்று நினைத்துச் சிரிப்பவர் போல மிகவும் முகமலர்த்திகொண்டு ராமனை நோக்கி, இங்ஙனம் உரைத்தனர்.

'ராமா! மஹாத்மாவாகிய ஸகரசக்ரவர்த்தியினது விருத்தாந்தத்தை விஸ்தரித்துச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. சிவபிரானுக்கு மாமனாராகிய ஹிமாலய பர்வதமும் பர்வதராஜனாகிய விந்த்ய பர்வதமும் ஒன்றுக்கொன்று நெருங்கியிருப்பது பற்றியும், அவவிரண்டிற்கும் இடையில் வேறொரு பர்வதம் மறைவாயிராததுபற்றியும், மிகவும் உயர்ந்திருப்பதுபற்றியும் ஒன்றுக்கொன்று பார்த்துக்கொண்டிருப்பதுபோல் விளங்குகின்றன. அவ்விரண்டு பர்வதங்களுக்கும் இடையிலிருக்குந் தேச

மானது யாகஞ் செய்வதற்குப் [1] புண்யபூமியானதுபற்றி மிகவும் சிறந்தது. ஆகையால் அம்மத்யதேசத்தி லேயே ஸகரனது யாகம் நடந்தது.

குழந்தாய்! காகுத்தனே! ராமா! மஹாரதனென்று பெயர்பெற்று விளங்கிய அம்சுமானென்பவன் ஸகரனது இஷ்டத்தில் நிலைநின்று அப்பொழுதுவலியதோர் வில்லைக் கையில் தரித்துக்கொண்டு அவனது யாகத்தில் பூப்ர தக்ஷிணஞ் செய்யத்தொடங்கிய குதிரையைக் காத்துக் கொண்டு பினசென்றனன். இங்ஙனம் ஸகரசக்ரவர்த்தி அந்த யாகத்தை நடத்திக் கொண்டிருக்கும் பொழுது இந்திரன ராக்ஷஸர்களுக்கு உரிய மாயையைக் கைக் கொண்டு யாவருமறியாது வேறொரு சரீரம் பூண்டு உத்யம் நடத்தவேண்டிய திநத்தின்று அவனது யாகக்குதிரையை அபஹரித்துக்கொண்டு போய்விட்ட னன்.

இங்ஙனம் அம்மஹாத்மாவாகிய ஸகரசக்ரவர்த்தி யினது யாகக்குதிரை அபஹரிக்கப்பட்டிருக்கும்பொழுது புரோஹிதர்கள் அனைவரும் யஜமானனாகிய அம்மஹா ராஜனைப் பார்த்து 'ககுத்ஸ்த்த வம்சத்திற் பிறந்த ஸகர மன்னவனே! உத்யதிநத்தின்று உனது யாகத்தைக் கெடுக்கும் பொருட்டு யாகக்குதிரையை எவனோ வேக மாக அபஹரித்துக்கொண்டு போய்விட்டனன. இக் குதிரையைக் கொண்டுபோகிறவனைக் கொன்று குதிரை யைத் திருப்பிக் கொண்டுவரச் செய்வாயாக. யஜ்ஞத் திற்கு நேர்ந்த இவ்விக்நமானது நமக்கு யாவர்க்கும் அமங்களத்தை விளைவிக்கும். ஆகையால், ஸகரமஹா

---

1 'ஆர்யாவர்த்த: புண்யபூமிர்மத்யம் விந்த்யஹிமாலயோ:' என்று சொல்லப்பட்டது.

ராஜனே! இந்த யாகம் எப்படி கெடுதி நீங்கிக் கிரமப்படி நிறைவேறுமோ, அப்படி செய்வாயாக' என்றனர்.

அவ்வரசனும் அங்ஙனம் புரோஹிதர்கள் மொழிந்த மொழியைக் கேட்டு அந்த ஸபையில் தனது புதல்வர்கள் அறுபதினாயிரம் பேரையும் பார்த்துப் 'புருஷர்களில் சிறந்த புத்ரர்களே! இம்மஹாயஜ்ஞமானது மந்த்ரங்களையெல்லாம் அறிந்து மிகவும் பரிசுத்தர்களும் மிகுந்த மகிமையெல்லாமமைந்தவர்களுமாகிய இம்மஹானுபாவர்களால் நடத்தப்படுகின்றதுபற்றி ராக்ஷஸர் வந்து குதிரையை அபஹரித்துக்கொண்டு போகும் வழி ஒன்றுந் தோற்றவில்லை. ஆகையால் நீங்கள் போய்த் தேடுங்கள். குழந்தைகளே! உங்களுக்கு க்ஷேமம உண்டாக வேண்டும. கடல் சூழ்ந்த இப்பூமியெல்லாந் திரிந்து தேடிப்பாருங்கள். பூமியோ மிகவும் பரந்து கிடக்கின்றது. ஆகையால் நீங்கள் ஒவ்வொருவனும் ஒவ்வொரு யோஜனைதூரம விழுக்காடாக இப்பூமியெங்குந் திரிந்து தேடுங்கள். பிள்ளைகளே! எனது கட்டளை தவறாத படி குதிரையைக் கொண்டுபோனவனைத் தேடிக் கொண்டு சென்று அவன பூமியிலெங்கும் அகப்படாது போவானாயின், பின் திரும்பாமலே சென்று அக்குதிரை அகப்படும்வரையில் பூமியைக் கொத்திப் பாருங்கள். நான் யாகதீக்ஷையில் முயன்றிருக்கிறேனாகையால் இங்கிருந்து வெளிக்கிளம்புவது யுக்தமன்று. ஆனது பற்றி நான பேரன்களோடும் ரித்விஜர்களோடுங்கூடி மீளவும் குதிரையைப் பார்க்கும் வரையில் தீக்ஷை கொண்டு இவ்விடத்திலேயே இருக்கவேண்டியவன். உங்களுக்கு நன்மை யுண்டாகவேண்டும்' என்றனன்.

இங்ஙனம் உரைக்கப்பட்ட மஹாபலங்கொண்ட ராஜபுத்ரர்கள் அனைவரும் மிகுந்த மனமகிழ்ச்சி பெற்

றுத் தகப்பணது கட்டளைக்குட்பட்டுப் பூமியெங்குந் தேடத்தொடங்கினர். ஆண்சிங்கமே! ராமா! இங்ஙனந் தேடச்சென்ற மன்னவனது புதல்வர்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு யோஜனைதூரம் அகலமும்நீளமுமுள்ள பூமிவிழுக்காட்டிற் பங்கிட்டுக்கொண்டு, கீழேபடும்பொழுது வஜ்ராயுதத்தை நிகர்த்திருக்கின்ற தமது நகங்களால் பூமியை யெங்கும் கொத்தியெறிந்தனர். ரகுநந்தனு! இங்ஙனம் நகங்களாலும் வஜ்ராயுதம்போன்ற சூலாயுதங்களாலும் மிகவும் பயங்கரமான கலப்பைகளாலும் பூமியானது பிளக்கப்பட்டு மிகுந்த சப்தஞ் செய்தது. அப்பொழுது ஸர்ப்பங்களும் பாதாளவாஸிகளான அஸுரர்களும் ராக்ஷஸர்களும் மற்றுமுள்ள ஜந்துக்களும் ஹிம்ஸிக்கபபட்டுக் கூச்சலிடவே ஸஹிக்க முடியாத ஓர் கோஷம் கிளம்பிற்று. ராகவனே! இங்ஙனம் அவ்வீரர்கள் அறுபதினாயிரம் யோஜனை தூரம் பூமியைப் பாதாளம் வெளித்தோற்றும்படி தோண்டி விட்டனர்.

ஆண்சிங்கமே! ராமா! இவவாறு அம்மன்னவனது புதல்வர்கள் யாவரும் பர்வதங்கள் நெருங்கிய ஜம்பூத்வீபத்தை முழுதும் தோண்டி நான்கு பக்கங்களிலும் திரிந்தனர். பினபு தேவர்களும் அஸுரர்களும் உரகர்களும் ஆகிய அனைவரும் மிகவும் பயந்து மனந் தத்தளித்து ப்ரஹ்மாவினிடஞ் சென்று பலவிதங்களில் துதிசெய்து மனத்தில் பயம்மீறி முகத்தில் வருத்தந் தோற்ற வணங்கி நின்று 'மஹாநுபாவரே! ஸகரசக்ரவர்த்தியின் புதல்வர்கள் பூமியனைத்துங் கொத்திக் குளம் பறிக்கின்றனர். பாதாளவாஸிகளான மஹாத்மாக்கள் பலரும் ஹிம்ஸிக்கப்படுகின்றனர். 'இவனே எமது யாகத்தைக் கெடுத்தனன். இவனே எமது குதிரையைக் கொண்டு

போயினன்' என்று சொல்லிக்கொண்டு ஸமஸ்தப்ராணி களையுங் கொன்று விடுகின்றனர்' என்று மொழிந்தனர். முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸகரகுமாரர்கள் கபிலமுனியால் நீறுகுதல்.

மகிமை யெல்லாமமைந்த ப்ரஹ்மதேவன் இங்ஙனம் தேவதைகளின மொழியைக் கேட்டு, ஜநங்களை யெல்லாம் [1] வதித்துக்கொண்டு வருகிற ஸகரபுத்ரர்களின் பலத்தைக் கண்டு மோகித்து அவ்வானவரனைவரும் மிகவும் பயமடைந்திருப்பது கண்டு, அவர்களை நோக்கி இத்தரணி முழுதும் மஹாத்மாவாகி [2] ஸமஸ்தப்தார்த்

---

1. (வதிததுக்கொண்டு) வதஞ் செய்துகொண்டு, அதாவது ஹிம்ஸை செய்து கொண்டென்க.

2 'ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதிவை யதஃ। ததஸ் ஸவாஸுதேவேதி வித்வத்பிஃ பரிபட்யதே' என்று வாஸுதேவசப்தத்திற்கு நிருக்தி. நிருக்தியாவது-ஒரு பதத்தின் பொருளை விடுத்துச்சொல்லுதல். அதில் (ஆதாரமாயிருநதும்) என்றிதுவரையில் வாஸுசப்தார்த்தம். அதற்குமேல் தேவசபதார்த்தம். (வஸதி ஸர்வத்ரேதிவாஸுஃ) (வஸதி ஸமஸ்தமஸ்மிந்நிதி வாஸுஃ) எல்லாவற்றிலும் இவன் நிரம்பியிருப்பதனாலும் எல்லாமிவனிடததில் இருப்பதனாலும் (வாஸு) என்று சொல்லபபடுகின்றனன். முதலாத்தத்தில் (காத்தரி உண் ப்ரத்யய ஔணாதிகஃ) இரண்டாமர்த்தத்தில் (அயிகரணேஸ ஏவப்ரத்யயஃ) (தீவ்யதீதி தேவஃ கர்த்தரிபசாத்யச்). திவு க்ரீடாவிஜிகீஷாவ்யவஹாரஸ்துதிமோதமதஸ்வப்நகாந்திகதிஷு) ஒளிபெறறிருபபவனுகையால் தேவனென்று செல்லபபடுகின்றனன். (வாஸுஸ்சாஸௌ தேவஸ்சேதி வாஸுதேவ இதி விக்ரஹஃ।) இவை யெல்லாம் மனத்திற் கருதி (ஸமஸ்தபதார்த்தங்களிலும் உள்ளும் புறமும் பரந்து வஸித்திருந்தும், தானவற்றிற்காதாரமாயிருந்தும இவைகளில் பற்றற்று விளங்கி நின்றமையால் வாஸுதேவனென்னும் பெயர் கொண்டு) என்று கூறப்பட்டது. பற்றற்று, ஸம்பந்தமின்றி.

தங்களிலும் உள்ளும் புறமும் பரந்து வஸித்திருந்தும் தான் அவற்றிற்காதாரமாயிருந்தும் அவைகளில் பற்றற்று விளங்கின்றமையால் வாஸுதேவனென்னும் பெயர் கொண்டு மிகுந்த அறிவுடைய ஸ்ரீமஹாவிஷ்ணு தேவனுக்கு அதீநமாயிருக்கின்றது. அம்மஹானுபாவன கபிலாவதாரஞ் செய்து எப்பொழுதும் இப்பூமிசக்ரத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றனன். ஆகையால் ஸகரமஹாராஜனுடைய குமாரர்கள் பூமியைக் கொத்திக்கொண்டு உள்ளே புகுவார்களாயின் அப்பூமிக்கு [1] நேரேயுடையவனும் பர்த்தாவுமாகிய அக்கபில மஹாதேவனுடைய கோபாக்நியால் கொளுத்தப்பட்டு [2] நீறுகப்போகின்றனர். மேலும், இப்பூமியானது கல்பந்தோறும் இங்ஙனமே தோண்டப்பட்டு வருகின்றது. இது அநாதியாக நிர்ணயிக்கப்பட்ட விஷயமே. இவ்வளவேயன்றி இச்சகரபுத்ரர்கள் வெகுகாலம் பிழைத்திராமல் சீக்கிரத்திலே மாளப்போகின்றனரென்பதும் முன்னமே நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது' என்று மொழிந்தனன.

பகைவரைத் தபிக்கச் செய்யும் பராக்ரம சாலியே! ராமா! இங்ஙனம் ப்ரஹ்மதேவனது வார்த்தையைக் கேட்டு முப்பத்துமூன்று கோடி தேவர்களும் மற்றுமுள்ள கந்தருவர் முதலியவர்களும் மிகுந்த ஸந்தோஷ

1 (நேரே உடையவனும்) 'தமீஸ்வராணும பரமம் மஹேஸ்வரம்' இது முதலாகிய பலவேதப்ரமாணங்களால் ஸ்ரீமஹாவிஷ்ணுவே ஸர்வத்திற்கும் மேலான உடையவனுகையால் இப்பூமிக்கு அவன்தான் நேரே உடையவனுனதுபற்றி இங்ஙனஞ் சொல்லப்படுகின்றது.

2 ஆகையால் இதைப்பற்றி வருந்தப்பட வேண்டாமென்று கருத்து.

மடைந்து மீளவும் தாம் வந்தவழியே போய்ச் சேர்ந்தனர். அப்பொழுது அளவற்ற தைரியம் பொருந்திய அந்த ஸகர புத்ரர்களனைவரும் முன்போலவே பூமியைப் பிளந்து கொண்டுபோகையில், அவர்களுக்கே நேரிடப்போகிற கெடுதியைத் தெரிவிக்கும் பொருட்டு ஓரிடி யிடிப்பதுபோன்ற ஒரு பெரிய சப்தம் உண்டாயிற்று. பின்பு அந்த ஸகர குமாரர்கள் பூமியைப் பிளந்து அங்கு முழுதுஞ் சுற்றித் திரிந்துங் குதிரையைக் காணுமல் அனைவருங் கூடிக்கொண்டு தகப்பனிடஞ் சென்று 'நாங்கள் பூமியெல்லாஞ் சுற்றித் திரிந்தனம். மிகுந்த பலமுள்ள தேவர்களையும் தானவர்களையும் ராக்ஷஸர்களையும் பிசாசர்களையும் உரகர்களையும் கிந்நரர்களையும் ஆகப் பலரையும் ஹிம்ஸித்தனம். இப்படிச் செய்தும் அக்குதிரையாயினும் அதைத் திருடிக்கொண்டு போனவனாயினும் எங்களுக்குப் புலப்படவில்லை. இன்னமும் என்ன செய்யவேண்டும்? உமக்குச் சுபம் உண்டாகவேணும். இவ்விஷயத்தில் உபாயத்தை ஆலோசித்துச் சொல்லவேண்டும்' என்றனர்.

அரசர்களிற் சிறந்த ரகுநந்தனு! ராமா! ஸகரசக்ரவர்த்தியானவன் இங்ஙனந் தன் குமாரர்கள் மொழிந்த மொழியைக் கேட்டுக் குதிரை அகப்படாமைக்கு மிகவுங் கோபித்துக்கொண்டு புத்ரர்களைப் பார்த்து 'உங்களுக்கு நன்மை உண்டாகவேண்டும். மீளவும் போய்ப் பூமியைப் பிளந்து வெட்டுங்கள். குதிரையைக் கொண்டு போனவனைக் கண்டுபிடித்துக் காரியம் முடித்துக் கொண்டு நீங்கள் திரும்பி வரவேண்டும்' என்று கட்டளையிட்டனன். பின்பு கம்பீரமான மனமுடைய தங்கள் பிதாவாகிய ஸகரமஹாராஜன் கட்டளைப்படிக்கு அவ்வறுபதினுயிரம் பெயர்களும் பாதாள

லோகத்தை நோக்கி வேகமாகச் சென்று மீளவும் பூமியைத் தோண்டிக் கொண்டிருக்கும் பொழுது அங்குப் பர்வதம் போன்ற வடிவங் கொண்டு பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கிற விரூபாக்ஷமென்னும் திக்கஜத்தைக் கண்டனர். ரகுகுலதிலகனே! ராமா! யானைகளிற் சிறந்த அவ்விரூபாக்ஷமென்னும் திக்கஜமானது பர்வதங்களுங் காடுகளும் நிரம்பின இப்பூமண்டலம் முழுதும் தன் தலையினால் தரித்துக்கொண்டிருந்தது. அம் மஹாகஜமானது மிகுந்த இப்பூபாரத்தை ஓயாமல் தரித்துக்கொண்டிருப்பதனாலுண்டான ச்ரமத்தைச் சிறிதுநேரம் ஆற்றும்பொருட்டு எந்த க்ஷணத்தில் தலையை அசைக்கின்றதோ, அப்பொழுது பூகம்பம் உண்டாகும். அவர்கள் அத்திசையைப் பரிபாலித்து வருகிற அம்மஹாகஜத்தை ப்ரதக்ஷிணஞ் செய்து மேன்மைப்படுத்திப் பாதாளலோகத்தைப் பிளந்துகொண்டே சென்றனர். அங்ஙனங் கிழக்குத்திசையைப் பிளந்தபின்பு மறுபடியும் தெற்குத்திசையைப் பிளக்கச்சென்றனர். அத்திசையிலும் பெரிய மலையோடொத்து மிகுந்த மகிமை பொருந்தி விளங்கிய மஹாபத்மமென்னும் பெயர் கொண்ட திக்கஜத்தைக் கண்டு அது பூமண்டலத்தை யெல்லாம் தரித்துகொண்டிருப்பதற்கு மிகவும் ஆச்சரியமடைந்தனர். பின்பு மஹாத்மாவாகிய ஸகரன்புத்ரர்களாகிய அவ்வறுபதினாயிரம் பெயர்களும் அக்கஜத்தை ப்ரதக்ஷிணஞ் செய்துவிட்டு மேற்குத்திசையைப் பிளந்தனர். அம்மேற்குத்திசையிலும் மஹாபலிஷ்டர்களாகிய அந்த ஸகரபுத்ரர்கள் பெரியமலையோடொத்து நின்ற ஸௌமநஸமென்னும் பெரிய திக்கஜத்தைக் கண்டனர். அவர்கள் அதை வலஞ்செய்து க்ஷேமம் விசாரித்து விடைபெற்றுக்



231 ஸகரபுத்ரர்கள் கபிலமஹர்ஷியினருகில் யாகக் குதிரையைக் காணுதல்.

கொண்டு, பூமியைத் தோண்டிக்கொண்டே ஹிமவத்பர்வதத்தினால் அலங்காரம் பெற்று விளங்குகின்ற வட திசைக்குச் செல்லத்தொடங்கினர்.

ரகுகுலத்திற் பிறந்த மன்னவர்களிற் சிறந்த ராமனே! அந்த ஸகரகுமாரர்கள் அவ்வட திசையிலும் பனி போல் வெளுத்துப் பருத்து அழகான தேஹத்தினால் இத்தரணி முழுதுந் தரித்துக்கொண்டிருக்கிற பத்ர மென்னும் பெயர் கொண்ட திக்கஜத்தைப் பார்த்து, அவ்வறுபதினாயிரம் பெயர்களும் அத்திசைவேழத்தைத் தட்டிக்கொடுத்து ப்ரதக்ஷிணஞ் செய்து மேலும் பூமியைப் பிளந்துகொண்டே சென்றனர். பின்பு அந்த ஸகரபுத்ரர்களெல்லோரும் குதிரை அகப்படத்தக்க வடகிழக்குத் திக்கை நோக்கிச்சென்று சினம் மிகுந்து பூமியைப் பயங்கரமான வேகத்துடன் பிளந்தெறிந்து கொண்டே போயினர். பெரிய சரீரம் பெற்று மிக்க வலிவு கொண்டு யாவரையும் பயமுறுத்தும்படி ஓடித் திரிகிற ஸகரகுமாரர்கள் அனைவரும் அங்கு அநாதியாகக் கபிலாவதாரஞ் செய்து விளங்கிநிற்கிற வாஸுதேவனையும், அத்தேவனருகில் புற்களை மேய்ந்துகொண்டிருக்கிற தங்கள் குதிரையையும் கண்டனர்.

அங்ஙனங் கண்டு அனைவரும் மிகுந்த ஸந்தோஷமடைந்து அவ்வாஸுதேவனையே குதிரையைத் திருடிக்கொண்டு போனவனாக நினைத்துக் கோபத்தினால் கண்கள் சிவந்து மண்வெட்டிகளையும் கலப்பைகளையும் மற்றும் பலவித விருக்ஷங்களையுங் கற்களையும் எடுத்துக் கொண்டு அவரை அடிக்க எதிர்த்தோடிவந்து 'நில் நில்' என்று அதட்டி 'அடே! எங்கள் யாகக்குதிரையை நீயன்றோ அபஹரித்துக்கொண்டு போனவன். அடா! அறிவு கெட்டவனே! இதோ ஸகரகுமாரர்களாகிய

நாங்கள் வந்தோமென்று தெரிந்துகொள்வாயாக' என்று உரைத்தனர். காகுத்தனே! ரகுநந்தனு! ராமா! இங்ஙனம் அவர்களுடைய வார்த்தையைக் கேட்டு அக்கபில தேவனும் அளவற்ற கோபங் கொண்டு அப்பொழுது ஒரு ஹூங்காரஞ் செய்ய, அளவிடவொண்ணாத மகிமையெல்லா மமைந்து ஆழ்ந்தமன்முடைய அம்மஹா நுபாவனுல் அந்த ஸகரகுமாரர்கள் அனைவரும் பஸ்மராசியாகக் குவிந்தனர். நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அம்சுமான் ஸகரனது யாகாசவத்தைக் கொண்டு வந்தது.

ரகுகுலகுமாரனே! ராமா! பின்பு ஸகரமஹாராஜன் தன் குமாரர்கள் குதிரையைத் தேடப்போய வெகுகாலமாகியும் திரும்பிவராததைக் கண்டறிந்து தன ஒளியினுல் ப்ரகாசிக்கின்ற தன் பேரனைப் பார்த்துக் 'குழந்தாய்! நீ வல்லமையெலலாம் அமைந்திருககின்றனே. மேலும் சஸ்த்ரவித்யைகளிலும் அஸ்த்ரவித்யைகளிலும் மற்றுமுள்ள பல கல்விகளிலும் தேர்ச்சியடைந்திருக்கின்றனே. பராக்ரமத்தில் நீ முனபுள்ள அரசர்களோடொத்து விளங்குகின்றனே. ஆனதுபற்றி நீ உன் சிறிய தந்தைகள் போனவழியையும் குதிரையைக் கொண்டுபோனவனையும் தேடிப்பிடிப்பாயாக. பூமிக்குள்ளிருக்கும் ஜந்துக்கள் மிக்க வலிமை கொண்டு மிகவும் பெருமை பெற்று விளங்கி நிற்பவை. அப்படிப்பட்ட ஜந்துக்களைக் கொல்லுவதற்காக வாளையும் வில்லையுந் தரித்துக்கொண்டு புறப்பட்டுச் சென்று அங்குள்ள மகிமைபொருந்திய வணங்கத்தக்க மஹாநுபாவர்களை வணங்கிமேன்மைப்படுத்தி இடையூறு செய்கின்றவர்களை

வதித்துப் போனகாரியத்தை நிறை வேற்றிக்கொண்டு திரும்பிவந்து என யாகத்தைக் கடைத்தேற்றுவாயாக' என்றனன்.

இங்ஙனம் மஹாத்மாவாகிய ஸகரசக்ரவர்த்தியினால் நன்கு சொல்லப்பட்ட அம்சுமானும் அப்படியே செய்ய முயன்று தநுஸ்ஸையும் கத்தியையுந் தரித்துக்கொண்டு வெகுவேகமாகப் புறப்பட்டனன். அங்ஙனம் ஸகரன் கட்டளைப்படி புறப்பட்ட அம்சுமான் மஹாதீரர்களாகிய தன் சிறிய தந்தைகளால் பூமிக்குள் தோண்டப்பட்ட வழியாகச் சென்று அவ்விடத்தில் திதிபுத்ரர்களாகிய அஸுரர்களாலும் ராக்ஷஸர்களாலும் பிசாசர்களாலும் பதகர்களாலும் உரகர்களாலும் பூஜிக்கப்பட்டு மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற ஒரு திக்கஜத்தைக் கண்டனன். அவன் அதை ப்ரதக்ஷிணஞ் செய்து க்ஷேமம் விசாரித்துக் தன் தந்தைகள் போனவிதத்தையும், குதிரையைத் திருடிக்கொண்டு போனவன் எவனென்பதையும் விசாரித்தனன். அத்திசைவேழமும் அவ்வம்சுமான் கேட்ட வார்த்தைகளைச் செவியுற்று 'ஓ அஸமஞ்சகுமாரனே! நீ குதிரையைக் குறித்து வந்த காரியம் நிறைவேறிச் சீக்கிரத்தில திரும்பிவருவாய்' என்று மொழிந்தது.

அதைக் கேட்டு அவ்வம்சுமான் திக்கஜங்கள் எல்லாவற்றையும் க்ரமமாகவே நியாயப்படி வணக்கத்துடன் பேசுவதில் தனக்குள்ள வல்லமையெல்லாம் விளங்கும்படி கேட்க, அத்திசை வேழங்களும் பிறர் மொழிந்த வார்த்தைகளின் அபிப்ராயங்களை யறிவது மாத்ரமே யன்றித் தாங்களும் அழகாகப் பேச வல்லமையுள்ளவைகளாகையால் அங்ஙனம் வினவிய அவ்வம்சுமானைப் பூஜித்துக்

'குதிரையுடன் கூடவே நீ திரும்பிச் செல்லப்போகின் றனை' என்று உத்ஸாஹப்படுத்தியுரைத்தன. அவனும் அதைக் கேட்டு மிகவும் வேகத்துடன் நடந்து சென்று தன் சிறிய தந்தைகளாகிய ஸகரகுமாரர்கள் நீறாய்க் குவிந்திருக்கிற இடத்திற்குப் போய்ச்சேர்ந்தனன். முன் பே அவர்கள் அகப்படாமைக்கு மிகவும் வருத்தமுற்றி ருந்த அஸமஞ்சகுமாரனாகிய அவ்வம்சுமான அப்பொ ழுது அவர்களனைவரும் செற்றுச்சாம்பலாய்க் கிடப்பது கண்டு மனவருத்தம் மேலெழ மிகவும் துக்கத்துடன் அழுதுகொண்டே அங்கு அருகில் மேய்ந்துகொண்டி ருக்கிற யாகக்குதிரையையும கண்டு தான் ஆண்சிங்க மாய் மஹாதீரனாயிருந்தும் அப்பொழுதுண்டான துக்கத் தை யடக்க முடியாமல மிகவும சோகித்தனன். பின்பு மஹாதேஜஸ்வியாகிய அவ்வம்சுமான் தன சிறியதந்தை களாகிய ராஜகுமாரர்களுக்குத் தாப்பணஞ் செய்ய விரும்பி ஜலம் வேண்டித் தேடிப்பார்க்கையில் ஜலமுள்ள இடம் ஒன்றும் அகபபடவில்லை.

ராமா! இஙஙனம் வெகுதூரம் சென்றறியவல்லவை களாகிய தன் கண்களை விட்டு உற்றுப்பாாத்தும ஜலம அகப்படும்படியான இடமொன்று மகப்படாமலிருக்கப பின்பு வாயுவோடொத்த வேகம் பொருந்திய பக்ஷிகளில் தலைவனும் தன் சிறிய தநதைகளுக்கு மாமனுமாகிய கருடனைக் கண்டனன். மஹாபலமுள்ள அவ்வைநதேய னும் அம்சுமானைப பார்த்துப் 'புருஷஸிம்ஹமே! உன் சிறிய தநதைகளுக்கு நேரிட்ட இவவதமானது உலகங் களுக்கெல்லாம் நனமையை விளைவிக்கவற்றாயிருக்கின் றது ஆகையால் நீ இதைப்பற்றிச் சோகிக்க வேண்டிய நிமித்தமில்லை. அளவிடவொண்ணாத மகிமையுடைய கபிலமாமுனிவரால் இம்மஹாபலிஷ்டர்கள் கொளுத்தப்

பட்டனர். அக்கபிலர்*ப்ராஹ்மணராகையால் அவரால் கொளுத்தப்பட்ட இவர்களுக்கு உலகவழக்கத்தின்படி ஜலங் கொண்டு தர்ப்பணஞ் செய்கை வீணாகையால் அங்ஙனஞ் செய்ய நீ முயலவேண்டாம். எல்லாவற்றையு மறிந்த உனக்கு இது தெரியாத விஷயமன்று. புருஷர்களிற் சிறந்த வீரனே! ஹிமாலயத்தினுடைய மூத்த புதல்வியாகிய கங்கையென்னும் ஒரு நதி யுண்டு. மஹாபாஹுவே! உன் தந்தைகளாகிய இவர்களுக்கு அந்நதியிலிருந்து ஜலங்கொண்டு தர்ப்பணஞ் செய்வாயாக. அதன் ஜலத்தைக் கொண்டு தர்ப்பணஞ்செய்கை மாத்ரமேயன்றி, அந்நதி உலகங்களையெல்லாம் பாவநமாக்க வல்லதாகையால் அதன் ஜலத்தைக் கொண்டு இந்தப் பஸ்மராசியை நனைக்கவேண்டும். இப்படி மிகுந்த மகிமைகொண்டு உலகமெல்லாம் புகழும்படி விளங்கிய அக்கங்கா நதியைக் கொண்டு இந்நீற்றை நனையச்செய்தாயாயின், இதுவே அந்த ஸகரகுமாரர்கள் அறுபதினாயிரம் பெயர்களையும் ஸ்வர்க்கலோகம் அடையச் செய்யும்.

---

* 'சண்டாலாது₂தகாத் ஸர்ப்பாத் வைத்₃யுதாத் ப்ராஹ்மணாத₃பி,
த₃ம்ஷ்ட்ரிப்₄யஸ்ச பஸு₂ப்₄யஸ்ச மரணம் பாபகர்மணாம்.
உத₃கம் பிண்ட₃தா₃நஞ்ச ஏதேப்₄யோ யத் விதீ₄யதே,
நோபதிஷ்ட₂தி தத்ஸர்வ மந்தரிக்ஷே விநஸ்₂யதி'

என்று பாபிஷ்டர்களுக்குச் சண்டாலனிடத்திலிருந்தும், ஜலத்திலிருந்தும், ஸர்ப்பத்தினிடத்திலிருந்தும் இடியிலிருந்தும், ப்ராஹ்மணனிடத்திலிருந்தும், கோரைப்பற்களையுடைய ஜந்துக்களிடத்தினின்றும், பசுக்களிடத்தினின்றும் மரணமுண்டாகின்றது. கீழ்ச்சொன்ன விதத்தில் மரணமடைந்தவர்களுக்குச் செய்யும் ஜலதர்ப்பணம் முதலிய பரலோகவ்யாபாரங்கள் அவர்களுக்குப் போய்ச் சேருகின்றவையல்ல. இடையில் நசித்துப்போகின்றன. ஆகையால் அவை வீண் என்று சொல்லப்பட்டது இதைக்கருதியே இங்கு (ப்ராஹ்மணராகையால்) என்றது.

புருஷர்களிற் சிறந்த அம்சுமானே! நீ மிகுந்த பாக்யமுடையவனாகையால் குதிரையைப் பெற்றனை. அதைக் கொண்டு ஸகரனிடஞ் செல்வாயாக. நீ மஹாவீரனாயிருப்பது பற்றி நீயே உன்பாட்டன் யாகத்தை நிறைவேற்ற வல்லவன்' என்று மொழிந்தனன். இங்ஙனம் மிகுந்த பராக்ரமமுடைய [1] அக்கருத்மான் மொழிந்த மொழியைக் கேட்டுக் குதிரையைக் கைக்கொண்டு தன் கீர்த்தி நான்கு பக்கத்திலும் விளங்கும்படி திரும்பி வந்து யாகத்தில் தீக்ஷை பெற்றிருக்கிற ஸகரமஹாராஜனை கிட்டிக் கருடன் சொல்லியபடி தன் சிறியதந்தைகளின் விருத்தாந்தத்தை யெல்லாந் தெரியச் சொல்லினன். ஸகரசக்ரவர்த்தியும் அம்சுமான் மொழிந்த பயங்கரமான அவ்வார்த்தையைக் கேட்டுப் பின்பு க்ரமமாகச் சாஸ்த்ரங்களிற்சொல்லியபடி யாகத்தை நிறைவேற்றித் தானங்களைச் செய்து மிகவும் காந்திவெள்ளம் பெற்று விளங்கித் தன்பட்டணத்தைச் சேர்ந்தனன் அவவரசனுக்குக்கங்காநதியைக் கொண்டுவர யாதொரு உபாயமும் தோன்றாமல் போய்விட்டது. இப்படி ஸகரமஹாராஜன வெகுகாலம் வரையில் ஆலோசித்தும் அவ்விஷயத்தில் யாதொரு உபாயமும் தோனறாமல் முப்பதினாயிரம் வருஷங்கள் ராஜ்யபரிபாலநஞ் செய்து ஸ்வர்க்கலோகஞ் சென்றனன். நாற்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பகீரதன் கங்கைக்காகத் தவஞ்செய்தல்.

ராமா! ஸகரமஹாராஜன் இங்ஙனம் காலதர்மத்தையடைந்த பின்பு மந்த்ரிஜநங்கள் பரமதார்மிகனாகிய அம்சுமானை ராஜனாக விரும்பினர். ரகுநந்தனா! அவ்வம்

1 (அக்கருத்மான) அந்தக் கருடன்.

சுமானும் மஹாராஜனாகி மிகப் பெருமையுடன் விளங்கினன். அவ்வம்சுமானுக்குத் திலீபனென்று எங்கும் கியாதி பெற்றுச் சிறந்த ஒரு குமாரன் பிறந்தனன். அவனும் மிகப் பெருமை பொருந்தி விளங்கினன். மிகவும் கீர்த்தி பொருந்திய அவ்வம்சுமான் திலீபனிடத்தில் ராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டுக் கங்காநதியைக்கொண்டு வந்து சாம்பலாய்க் கிடக்கும் தன சிறிய தகப்பன்மார்களை நற்கதியடையச் செய்ய உத்தேசங் கொண்டு பரிசுத்தமாகிய ஹிமவத்பர்வதத்தின் சிகரத்திலுள்ள ஒரு தபோவநத்திற்குச் சென்று தவமே தநமென்றெண்ணிக்கொண்டு முப்பத்திரண்டாயிரமாண்டுகள் மிகவும் தாருணமாகத் தவம் புரிந்திருந்துங் கங்கையைப் பெறுமலே ஸ்வர்க்கத்தை யடைந்தனன். பின்பு மஹா தேஜஸ்வியாகிய திலீபமனனவனும் தன் பாட்டன்மார்கள் அபமிருத்யுவாக மாண்டுபோனதைக் கேட்டுத் தன் தகப்பனாகிய அம்சுமான் அப்படி யாவரும் செய்ய முடியாத கடுந்தவஞ் செய்தும் அவர்களுக்கு நற்கதியுண்டாகாமைக்கு மிக்க மனவருத்தங் கொண்டு மதிமயங்கி யாதொரு உபாயத்தையும் நிச்சயிக்க நேராமல் 'கங்கையைக் கொண்டு வருவது எப்படி? அவர்களுக்கு அந்நதீஜலத்தைக் கொண்டு தர்ப்பணஞ் செய்வது எப்படி? அவர்களை இந்த துர்க்கதியினின்றும் உத்தரிக்கச் செய்வது எப்படி?' என்று ஓயாமல் மனக் கவலையுற்றிருந்தனன். ஆத்மவித்தாகிய அத்திலீப மஹாராஜன் அங்ஙனம் தர்மத்தில் மனம் ஊன்றிப் பாட்டன்மார்களை உத்தரிப்பிக்கும் வழி ஏதென்று எப்பொழுதுஞ் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவனுக்கு மிகவும் தார்மிகனாகிய பகீரதனென்னும் குமாரன் பிறந்தனன்.

திலீபனும் தன் பராக்ரமம் நான்கு பக்கத்திலும் அளவின்றி விளங்கும்படி நின்று பல யாகங்களைச் செய்து முப்பதினாயிரம் வருஷங்கள் ப்ரஜைகளுக்கு மிகுந்த ஸந்தோஷம் உண்டாகும்படி ராஜ்யபரிபாலனஞ் செய்து வந்தனன். அவ்வளவு காலஞ் சென்றும் அத்திலீபமஹீபாலனுக்கு ஸகரபுத்ரர்களை உத்தரிப்பிக்கும் உபாயம் ஒன்றும் தோன்றாமல் அம்மன்னவன் வருத்தத்தினால் வியாதிக்ரஸ்தனாகித் தன் புத்ரனாகிய பகீரதனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வித்து அவ்வியாதி மூலமாகவே காலதர்மமடைந்து தான் செய்த புண்ய கருமங்களால் தேவலோகஞ்சென்றனன். திலீபகுமாரனாகிய அப்பகீரதமன்னவன் ராஜர்ஷியென்று பெயர் பெற்று தர்மங்களை நிறைவேற்றுந்தன்மை கொண்டு மஹா தேஜஸ்வியாகி விளங்கினனும் தனக்கு ஸந்தான மில்லாமையால் அதைப் பெற விரும்பினன். அம்மன்னவன் அங்ஙனம் ஸந்தானம் அற்றிருந்தது பற்றித் தன ராஜ்யதந்த்ர மந்த்ரிகளிடம் ஒப்புவித்துக் கங்கையைப் பூமிக்கு இழியச் செய்வதில் மிக்க விருப்பங் கொண்டு ஹிமாலயச்சாரல்களில் ஒன்றாகிய கோகர்ண மென்னும் ஓர் சிறிய பர்வதத்திற்குச் சென்று கைகளிரண்டையும உயர எழுப்பிக்கொண்டு ஐம்புலன்களையும் தீர வென்று மாஸத்திற்கு ஒருதரமாகப் போஜனஞ் செய்துகொண்டு பஞ்சாக்நிமத்யத்தில் நின்று ஓயாதத் தவம் புரிந்தனன்.

பகீரதமன்னவன் இப்படி பயங்கரமாகத் தவம் நடத்திக்கொண்டிருக்கையில், பல ஆயிரமாண்டுகள் கடந்துச்சென்றன. பின்பு எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு செலுத்திறம் பெற்று ப்ரஜைகள் அனைத்திற்கும் அதிபதியாக நின்று மகிமை யெல்லாம் அமைந்த

ப்ரஹ்மதேவன் மஹாநுபாவனுகிய அப்பகீரதமன்னவனுடைய கடுந்தவத்திற்கு அளவற்ற ஸந்தோஷமடைந்து தேவகணங்களோடு கூடித், தவஞ் செய்து கொண்டிருக்கிற அம்மஹநீயனிடம் வந்து 'பகீரத மன்னவனே ! நீ மிகுந்த பாக்யம் பொருநதியிருப்பவன். திடமான ஸங்கல்பத்துடன் நீ மிகவும் அரிதாகச் தவஞ் செய்தனே. ஆகையால் எனக்கு உன்னிடத்தில் ப்ரீதி அளவற்றிருக்கின்றது. வரம் வேண்டுவாயாக' என்றனன்.

அதைக் கேட்டுத் தவத்தின் மிகுதியால் மிகவும ஒளி பெற்று விளங்குகின்ற பாக்யநிதியாகிய அப்பகீரத மன்னவன் ப்ரஹ்மதேவனுக்கெதிரில் கையைக்கூப்பிக் கொண்டு நின்று ஸர்வலோகபிதாமஹனுகிய அத்தேவனைப் பார்த்து 'மஹாநுபாவரே ! நீர் என் தவத்திற்கு ஸந்தோஷம் அடைந்திருப்பீராயினும், நான் செய்த தவத்திற்குப் பலன் உள்ளதாயினும் ஸகரகுமாரர்களனைவரும் எனனுல் கங்காநதியின் ஜலப்ரவாஹத்தில் தர்ப்பணம் பெறவேண்டும். ஜலதர்ப்பணமாத்ரமேயன்று. என் முப்பாட்டன்மார்களாகிய இம்மஹாத்மாக்களனைவருடைய இச்சாமபற்குவியலானது கங்கா ஜலத்தினுல் நனையுமாயின் இவர்கள் எல்லோரும் அழிவில்லாது விளங்கும் ஸ்வர்க்கலோகத்தைப் பெறுவார்கள். ஆகையால் இப்படி யாகுமபடி அருளபுரிய வேண்டும. இதுவேயன்று ; இக்ஷ்வாகு வம்சத்திற் பிறநத எனக்கு ஸந்தாநம் உண்டாகும்படி அனுக்கிரகம் செய்யவேண்டும. எங்கள் வம்சம் அற்றுப்போகாதிருக்கவேண்டும். நான் வேண்டுகிற இநத மற்றொரு வரத்தையும் அருள்புரிந்து எனக்குத் தரவேண்டும்' என்றனன்.

அம்மன்னவன் இங்ஙனஞ் சொல்ல அதைக் கேட்டு உலகங்களுக்கெல்லாம் பாட்டனாகிய அநாதன்றோகக் கடவுள் அவ்வரசனை நோக்கி மதுரமான பதங்களடங்கி மனத்திற்கினிய பொருள் நிறைந்து சுபமான வாக்கியங்களை இங்ஙனமுரைத்தனன். 'மஹாரதா! பகீரதனே! நீ விரும்பின மனோரதமானது மிகவும் பெரிதாயிருக்கின்றது. ஆயினும் இது அப்படியே நடக்கேறும். மன்னவனே! உனக்குச் சுபம் உண்டாக வேண்டும். இதோ ஹிமவத்பர்வதத்தின் அருகில் தோன்றுகிற இக்கங்கையானது ஹிமவத்பர்வதத்தின் மூத்த புதல்வி. அதைத் தரிக்கவல்லவன் உருத்திரன் ஒருவனே யாகையால அம்மஹாதேவனை வேண்டிக் கொள்வாயாக. ராஜனே! கங்கை ஆகாயத்தினின்றும் கீழே வர விழுமாயின் அவ்வேகத்தை இப்பூமி ஸஹிக்கமாட்டாது. மஹாவீரனே! அக்கங்கையைத் தரிக்கவல்லவன் சிவனை யொழிய மற்றொருவனும் எனக்குத் தோற்றவில்லை' என்றனன.

இங்ஙனம் உலகங்களையெல்லாம் படைக்குந்தன்மையுடைய ஸரஸ்வதீவல்லபன் அம்மன்னவனுக்குச் சொல்லிவிட்டுக் கங்கையைப் பார்த்து 'இம்மன்னவன் விரும்பியபடி நீ அநுக்ரஹம் செய்வாயாக' என்று மொழிந்து ஸமஸ்ததேவர்களும் கூட்டங்கூட்டமாகச் சூழ்ந்து பின்றொடரத் தேவலோகஞ் சென்றனன். நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பகீரதன் கங்கையைக் கொண்டுவந்தது.

ராமா! தேவர்களுக்கெல்லாந் தேவனாகிய அந்த ப்ரஹ்மதேவன் அங்ஙனம் புறப்பட்டுப் போன பின்பு பகீரத வேந்தன் பூமியில் காற்கட்டைவிரலை ஊன்றிக்

கொண்டு நின்று புஜங்களிரண்டையும் உயரத்தூக்கி நிறுத்தி வாயுபக்ஷணஞ் செய்துகொண்டு எவ்விதத்தி லும் அவலம்பமின்றி இரவும் பகலும மொட்டை மரம் போல் அசையாமல் நின்று நிலை பெற்று ஒரு வருஷ காலம் சிவனை உபாஸித்தனன். பின்பு ஒரு வருஷம் நிரம்பிச் செல்ல, உலகங்களெல்லாம் வணங்க நின்ற பசு பதி உமையுடன்கூடி ப்ரத்யக்ஷமாய் வந்து நின்று அரசனை நோக்கி 'நரேச்வரனே! கடுந்தவம் புரிந்த உன்னிடத்தில் நானமிகவும் ஸந்தோஷம் அடைந்தனன். பர்வதராஜன் புத்திரியாகிய கங்காநதியை என் சிரத் தினால் தரித்து உன்மநோரதத்தை நிறைவேற்றுகி றேன்' என்றனன்.

பின்பு லோகங்களெல்லாம் வணங்கும்படி மகிமை பொருந்திய ஹிமாலயத்தின் மூத்த மகளாகிய கங்காநதி அப்பொழுது தன் உருவத்தைப் பருக்கச்செய்து கொண்டு பயங்கரமான வேகத்துடன் ஆகாயத்தினின் றும் பரிசுத்தமாகிய சிவபிரானுடைய சிரத்தில் விழுந்து தனக்குள் இங்ஙனம் சிந்தை கூர்ந்தனள். 'யாவரும் தரிக்கத்தரமல்லாத என்னைச் சிவன் தரிக்கமுயன்றனன். இங்ஙனம் ஆகட்டும். என் ப்ரவாஹங்களால் இவனை யெடுத்துக்கொண்டு பகீரதனிஷ்டப்படி பாதாளஞ்செல் லுகின்றேன்' என்று இங்ஙனம் ஆலோசித்துக்கொண்டு அதற்குத் தக்கபடி உருவத்தையும் வேகத்தையும் ஏற் றுக்கொண்டு விழுந்துவருகிற அக்கங்காதேவியின் கர் வத்தைக் கண்டறிந்த மகிமையெல்லா மமைந்த முக்கண் ணனாகிய சிவபெருமானானவன் மிகுந்த கோபங் கொண்டு அக்கங்கையை வெளியிற் புறப்படவொட்டாமல் தன்னி டத்திலேயே மறைந்திருக்கும்படி அடக்கவேண்டுமென்று மனத்தி லெண்ணங் கொண்டனன்.

ராமா! அப்புண்யநதி பெருத்த ஜடாமண்டலங்களால் சூழப்பட்டுப் பயங்கரமான குகைபோல இருண்டு ஹிமாலயத்தோடொத்து விளங்கி மிகவும் பரிசுத்தமாயிருக்கின்ற சிவபிரானுடைய சிரத்தில் விழுந்து கஷ்டப்பட்டு எவ்விதப்ரயத்நங்கள் செய்தும அச்சிரத்தினின்றும் பூமியைச் சேருகைக்குச் சிறிதுஞ் சக்தியில்லாமற் கிடந்தனள். ஆயிரம் படச் சொல்லியென்? அந்த ஜடாமண்டலத்தில் அகப்பட்டுக்கொண்டு யாதுந் தோன்றாமல் மனமயங்கிச சிறிதேனும் வெளியே புறப்பட்டுப் பொசியவும் முடியாமல் சக்தியற்றிருந்தனள். இனிப் பூமியைக குறித்து இழிய முடியவில்லையெனபது சொல்லவேண்டுமோ?

இபபடி அககங்காதேவியானவள் அச்சடாமண்டலத்தில் அகப்பட்டு மிகவும் கட்டுண்டு வெகுவருஷங்கள் அதிலேயே சுழலமிட்டுக்கொண்டிருநதனள். பின்பு பகீரதன அஙகுக கங்கையைக் காணாமல் மீளவும பெருந்தவம் புரிய, அதற்குச் சிவன் அளவற்ற ஸந்தோஷங் கொண்டு, ப்ரஹ்மதேவனால் நிருமிக்கப்பட்ட பிந்துஸரஸ்ஸென்னும் பெயர்பெற்ற ஒரு ஸரஸ்ஸில் அக்கங்கையை விழவிட்டனன். அங்ஙனம் அக்கங்கையை விடும்பொழுது ஏழு ப்ரவாஹங்கள் உண்டாயின. மங்களமான ஜலங் கொணடு மிகவுமழகாய் விளங்கிய ஹ்லாதினி பாவநி, நலிநி யென்னும் மூன்று கங்காப்ரவாஹங்கள் கிழக்கு முகமாய்ப் பெருகிச் சென்றன. பரிசுத்தமான தீர்த்தத்துடன் விளங்கிய ஸுசக்ஷுஸ்ஸு, ஸீதை, மஹாநதியாகிய ஸிந்து என்னும் இம்மூன்று நதிகள் மேற்கு முகமாய்ப் பெருகிசசென்றன.

ஏழாவதாகிய கங்காநதிப்ரவாஹமொன்று பகீரத மன்னவனைப் பின் சென்றது. ராஜரிஷியாகிய அப்பகீரத



242 சிவன் பகீரதனிடம் அருள்புரிந்து கங்கையை விடுதலும்,
அக்கங்கை ஏழு ப்ரவாஹங்களாகப் போதலும்.

மன்னவனும் திவ்வியமான ஒரு ரதத்தின் மீதில் ஏறிக் கொண்டு தன் பராக்ரமம் அளவின்றி விளங்கும்படி முன்னே செல்ல கங்கை அவனைப் பின்தொடர்ந்து போயினள். [1] அப்படி ஆகாயத்தினின்றும் சிவன் சிரத்தில் விழுந்து; அவ்விடத்திலிருந்து பூமியில் விழுந்து, பயங்கரமான சப்தங்கள் நிறைந்து வருகின்ற அக்கங்கையின் ஜலப்ரவாஹமானது பூமி முழுவதும் பரவிற்று. அப்பொழுது ஜலப்ரவாஹத்துடன் கூட்டங் கூட்டமாகப் பூமியில் விழுந்தும், மேன்மேலென விழுந்துகொண்டுமிருக்கின்ற மத்ஸ்யங்களாலும், ஆமைகளாலும், முதலைகளாலும், மற்றுமுள்ள ஜலஜந்துக்களாலும் பூமியானது நிறையப்பெற்று மிகவுமழகாய் விளங்கிற்று. பிறகு தேவர்களும், ரிஷிகளும், கந்தர்வர்களும், ஸித்தர்களும் அங்ஙனம் ஆகாயத்தினின்றும் கங்கை பூமிக்கு வந்து விழுவதைக் கண்டு கூட்டங் கூட்டமாக நடந்துவருகிற நகரங்கள்போல் விளங்குகின்ற விசாலமான விமானங்களின் மீதும், குதிரைகளின் மீதும், யானைகளின்மீதும் ஏறிக்கொண்டு பரபரப்புடன் கங்கை விழுமிடத்திற்கு வந்து சேர்ந்தனர். பூமியில் கங்கை விழுவது மிகவுமற்புதமாகி உலகத்தில் ஒப்பற்றுச் சிறந்திருந்தமையால் அதைப் பார்க்க விருப்பங்கொண்டு, தங்களுடைய அபாரதேஜஸ்ஸானது நான்கு பக்கத்திலும் நிரம்பி விளங்கும்படி மஹாதேஜஸ்விகளாகிச் சிறப்புற்ற தேவர்கள் அனைவரும் கூட்டங் கூடிவந்து அவ்விடம் சேர்ந்தனர். அங்ஙனம் தேவ

---

1 இவ்விடத்தில் கங்கை ஸ்வர்க்காகாசபூமிகளாகிற மூன்று இடங்களிலும் ப்ரவஹித்தபடியால் 'த்ரிபதகை' என்னும் பெயர் பெற்றதென்று சிலர் சொல்லுகின்றனர். மூன்று திசைகளிலும் ப்ரவஹித்தபடியால் அந்தப் பெயர் வந்ததென்று சிலர்.

லோகத்தினின்று கும்பற்கூடி வரும்பொழுது அவர்களது மிகுந்த சரீர தேஜஸ்ஸினாலும், ஆபரணங்களில் இழைக்கப்பட்டிருக்கின்ற பலவித உயர்ந்த ரத்ந காந்திகளாலும் ஆகாசமானது எங்கும் பரவப்பெற்று, மேகங்களின்றி அநேகஸூர்யர்கள் கூடி உதிக்கப்பெற்றது போல் கிரணங்கள் பரந்து ப்ரகாசித்தது.

பின்னும் முதலைகளும் பாம்புகளும் மீன்களும் கூட்டங்கூட்டமாக இங்குமங்கும் துள்ளித் திரிந்து ஜலத்தில் மறைந்துகொண்டிருக்கையில் மின்னற்கொடிகளால் எங்கும் நிரம்பியதுபோல் ஆகாயம் விளங்கிற்று. ப்ரவாஹவேகத்தினால் பலவாறாகத் தெறித்துச் சென்று வெளுத்து விழுகின்ற நுரைகளால் நிரம்பிய ஆகாயமானது, ஹம்ஸங்களோடுகூடிய சரத்காலத்திலுண்டான வெளுத்த மேகங்களால் சூழப்பட்டதுபோல் தென்பட்டது. அக்கங்காநதியானது சிற்சில விடங்களில் வெகுவேகமாகவும், மேடுபள்ளங்களாகிய சிற்சிலவிடங்களில் வளைந்து வக்ரமாகவும், சதுரச்ரமாகிய சிற்சிலவிடங்களில் நேராகவும், பள்ளங்களில் கீழே யிழிந்தும், கல் முதலியவைகளில் மேலெழும்பியும், மேடுகளில் மெதுவாகவும் பாய்ந்து பரவஹித்தது. மற்றோரிடத்தில் அடிக்கடி நீரினமீது நீர் மோதிக்கொள்வதனால் அடிக்கடி உயர எழும்பிக் கீழே விழுந்துகொண்டும் போயிற்று. இப்படி ஆகாயத்தினின்றும் சிவனுடைய சிரத்தில் விழுந்து, அவ்விடமிருந்து பூமியில் விழுந்து வருகிற அக்கங்கா ப்ரவாஹமானது நிர்மலமாகி ஸகல கல்மஷங்களையும் போக்கவல்லதுமாகி விளங்கிற்று.

ஆகாசஸஞ்சாரிகளான தேவர்களும், ரிஷிகளும், கந்தர்வர்களும், பூமியில் வஸிக்கும் ஜநங்களும் ஸர்வஜ்ஞ

ளுகிய சிவன் தலையால் தரித்திருந்து, அச்சிரத்தினின்
றும் வெளிவந்த இக்கங்காஜலமானது மிகவும் பரிசுத்த
மென்று நினைத்து அந்நதியின் ப்ரவாஹத்தில் ஸ்நாநஞ்
செய்தனர். சாபதோஷத்தினுல் ஆகாயத்தினின்றும்
பூமியில் விழுந்தவர் யாவரும் அதில் ஸ்நாநஞ் செய்து
சாபத்தினின்றும் விடுபட்டு, நிர்மலமாகி ஒளிபெற்று
விளங்குகின்ற அந்நதி ஜலத்தினுல் பாவங்களெல்லாந்
தொலைத்து மீளவும் ஆகாயமார்க்கத்தினுல் தங்கள்
உலகங்களுக்குப் போய்ச்சேர்ந்தனர். அழுக்கின்றி
அழகாய் விளங்குகின்ற அக்கங்கையின் ப்ரவாஹத்
தைக் கண்டு ஜநங்கள் மிகவும் ஆநந்தமடைந்து அதில்
ஸ்நாநஞ் செய்து ச்ரமந்தீர்ந்து ஸுகமடைந்தனர்.
ராஜர்ஷியாகிய பகீரதனும், திவ்யமான ஒரு தேரின்
மீதில் ஏறிக்கொண்டு தன் தேஜஸ்ஸெல்லாம் விளங்கும்
படி முன்னே நடக்க, அக்கங்கையும் அவனைப் பின்
ருெடர்ந்து சென்றனள்.

தேவர்களும், ரிஷிகளும், திதி குமாரர்களாகிய
தாநவர்களும், ராக்ஷஸர்களும், யக்ஷர்களும், கந்தர்வர்
களும், கிந்நரர்களும், மகிமை பொருந்திய உரகர்களும்,
அப்ஸரஸ்ஸுக்களென்கிற ஸமஸ்த தேவஸ்த்ரீகளும்
பகீரதமன்னவனைப் பின்ருெடர்ந்து செல்லுங் கங்கை
யின் ப்ரவாஹத்தைப் பார்த்துக்கொண்டு மிகுந்த ஸந்
தோஷத்துடன் பின்ருெடர்ந்தனர். அப்படியே ஜல
ஜந்துக்கள் யாவும் அந்த ப்ரவாஹத்துடன் பின்
சென்றன. ஸமஸ்த பாபங்களையும் போக்கவல்லதாகி நதி
களிற் சிறந்து எங்கும் புகழ்பெற்று விளங்கிய அக்கங்கா
நதியானது, பகீரதன் எவ்வெவ்விடத்திற்குச் செல்லு
கின்ருனே, அவ்வவ்விட மெல்லாம் தானுஞ் சென்றது.

அக்கங்காதேவி அங்ஙனம் போய்க்கொண்டிருக்கையில், அவ்வழியில் மஹாத்மாவாகி அற்புதமான காரியங்களைச் செய்ய வல்லவருமாகிய ஜஹ்நுவென்னும் மஹர்ஷி யாகஞ் செய்துகொண்டிருக்கிற யாகபூமி நேரிட, அதைத் தன் ப்ரவாஹத்தினால் மூழ்கச்செய்தனள். யாகஞ் செய்கிற அம்மஹர்ஷியும் அதின் கர்வத்தை யறிந்து, மிகவும் அற்புதமாக அக்கங்கையின் ப்ரவாஹத்தையெல்லாம் குடித்துவிட்டனர்.

பின்பு தேவர்களும், ரிஷிகளும், கந்தர்வர்களும் மிக்க வியப்படைந்து மஹாப்ரபாவம் பொருந்திப் புருஷர்களிற் சிறந்தவராயுள்ள ஜஹ்நுமஹர்ஷியினிடம் வந்து பூஜித்துக் கங்கையை அம்மஹாநுபாவருக்குப் பெண்ணாக ஏற்படுத்த, மஹாதேஜஸ்வியாகிய அம்மஹர்ஷியும் அதற்கு மிகவும் ஸந்தோஷமடைந்து காதுவழியாக மீளவும் வெளிவிட்டனர். ஆனதுபற்றியே கங்கையானது ஜஹ்நுமஹர்ஷியின் பெண்ணாகி, 'ஜாஹ்நவி' என்று சொல்லப்பட்டு வருகின்றது. நதிகளிற் சிறந்த அக்கங்கையானது மீளவும் பகீரதனுடைய ரதம் போகும் வழியாக பின்றொடர்ந்து அவனுடைய காரிய ஸித்திக்காகச் சென்று ஸமுத்திரத்தில் விழுந்து பாதாளத்திற்குச் சென்றது. அந்த ராஜர்ஷியும், மிகுந்த யத்நங்கள் செய்து கங்கையைக் கொண்டு சென்று சாம்பலாய்க் கிடக்கிற தன் பாட்டன்மார்களைக் கண்டு மிக மனவருத்தமடைந்தனன. அப்பொழுது அக்கங்காநதி அப்பஸ்மராசியை நனைக்க, ஸகர குமாரர்களும் பாவமெல்லாந் தொலைந்து ஸ்வர்க்கத்தை யடைந்தனர்.

நாற்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ப்ரஹ்மதேவன் பகீரதனோடு ஸம்பாஷிக்கை.

அப்பொழுது அப்பகீரதமன்னவன், கங்காநதி தன்னைப் பின்தொடர்ந்துவர ஸமுத்திரத்திற்குச்சென்று அவ்விடமிருந்து ஸகர குமாரர்கள் நீறாயிருக்கிற பாதாளத்தில் பிரவேசித்தனன். ராமா! பின்பு கங்காஜலம் அந்தச் சாம்பலின்மீது ப்ரவஹித்துச் செல்லும்பொழுதே ஸர்வலோகநாயகனாகிய ப்ரஹ்மதேவன் வந்து பகீரதமன்னவனை நோக்கி 'ஆண்சிங்கமே! மஹாத்மாவாகிய ஸகர மஹாராஜன் குமாரர்கள் அறுபதினாயிரம் பெயர்களும் உன்னால் பரேதபாவதத்தினின்றும் விடுபட்டு தேவர்களைப்போல் ஸ்வர்க்கமடைந்து விட்டனர். மன்னவனே! ஸமுத்ரஜலம் எவ்வளவுகாலம் இவ்வுலகத்தில் இருக்குமோ, அவ்வளவுகாலம் வரையில் ஸகரகுமாரர்கள் அனைவரும் தேவதைகளைப்போல் வானுலகில் வாழ்ந்திருப்பார்கள். அவ்வளவு மாத்ரமேயல்லாமல் இக்கங்கையும் உனக்கு மூத்தபெண்ணென்று எங்கும் கியாதி பெற்று விளங்கப்போகின்றது. அது நீ [1] தகப்பனாயிருப்பதுபற்றி உண்டான பெயரினால் இனி இவ்வுலகில் ப்ரஸித்தி யடையப்போகின்றது. மன்னவனே! ஸ்வர்க்கத்திலுண்டான இக்கங்காநதி த்ரிபதகையென்றும் உனது பெயரால் பாகீரதியென்றும் இரண்டு நாமங்களைப் பெற்று விளங்கும். மூன்று மார்க்கங்களில் ப்ரவஹித்து வந்தமையால் இந்நதி த்ரிபதகையென்று சொல்லப்பட்டது.

நராதிபதியே! உன் பாட்டன்மார்களாகிய ஸகர குமாரர்களனைவர்க்கும் இக்கங்காஜலத்தில் தர்ப்பணஞ் செய்து 'கங்காஜலங் கொண்டு ஸாகரர்களை உத்தரிக்

1 (தகப்பனாயிருப்பதுபற்றி உண்டான பெயரினால்) அதாவது 'பாகீரதி' என்னும் பெயரினாலென்கை.

கச் செய்கிறேன்' என்று நீ முன்பு செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றிக்கொள்வாயாக. உனக்குப் பூர்விகனுகிய ஸகரன் மிகவும் கீர்த்தி பெற்றவன்; தார்மிகஜநங்களனை வரிலும் முன்னே கணக்கிடத்தக்கவன். அப்படி மஹாநுபாவனுகிய ஸகரமஹாராஜனும் இப்பொழுது நீ நிறைவேற்றின இக்காரியத்தை முன்பு தான் செய்யுமென்றும் அம்மநோரதத்தை நிறைவேற்றுமற் போயினன். அப்பா! பகீரதனே! ஒப்பில்லாது விளங்கிய தன பராக்ரமத்தினுல் உலகம் முழுவதிலும் புகழ்பெற்ற அம்சுமானும் அவ்விதமாகவே கங்கையைப் பெற ப்ரார்த்தித்துக்கொண்டிருந்தானேயன்றி அவனும் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றவில்லை. உன் தகப்பனுகிய திலீபனும் ஸாமாந்யனன்று. அவன் ராஜர்ஷி யென்னும் பெயர் பெற்று நற்குணங்களுக்கு நிதியாகி மஹர்ஷிகளைப்போல் ப்ரபாவத்தினுல் விளங்குபவன்; மிகுந்த பராக்ரமமுடையவன்; க்ஷத்ரிய தர்மங்களைப் பரிபாலித்து வருவதே தொழிலாயிருப்பவன்; ஆயிரம் படச் சொல்லி யென்ன? தவத்தில் என்னேடொத்தவன். மிகுந்த பாக்யமுடையவனே! அப்படிப்பட்ட மஹாபாக்யசாலியும் கங்காநதியைக் கொண்டுவரவேண்டுமென்று விருப்பமுற்றிருந்தானேயன்றிக் கடைசியில் அதைக்கொண்டுவரும் விசாரமு மற்றிருந்தனன். இப்படிப்பட்ட மஹாநுபாவர்களுக்குஞ் செய்து நிறைவேற்ற அரிதன்றே? இக்கங்கையை இங்ஙனம் இழியச்செய்யும் ப்ரதிஜ்ஞை. இப்படிப்பட்ட ப்ரதிஜ்ஞையை நீ புருஷர்களிற் சிறந்தவனுகையால் நிறைவேற்றி விட்டனை. அதனுல் உலகங்களில் யாவரும் கொண்டாடும்படி அபாரமான கீர்த்தியைப் பெற்றனை.

சத்ருக்களை யடக்கவல்ல மஹாபராக்ரமசாலியே!

பகீரதா! நீ நிறைவேற்றின இக்கங்காவதரணத்தினால் நீ தர்மத்தில் மிகுந்த ப்ரதிஷ்டை அடைந்தனை. ஆண் சிங்கமே! இதரநதிகளைப் போலன்றியே எப்பொழுதும் ஸ்நாநயோக்யமாய் விளங்குகிற இந்நதீஜலத்தில் ஸ்நாநஞ் செய்வாயாக. அதனால் பரிசுத்தியையும் புண்யபலன்களையும் பெறுவாயாக. உன் பாட்டன்மார்களனைவர்க்கும் இதில் தர்ப்பணஞ் செய்வாயாக. உனக்குச் சுபம் உண்டாக வேண்டும். இனி நான் என்லோகத்திற்குப் போகின்றனன். நீயும் தர்ப்பணத்தைச் செய்துவிட்டு உன் பட்டணஞ் சென்று சேருவாயாக' என்றிவ்வாறு மொழிந்தனன். இப்படி ஸகல தேவர்களுக்கும் அதிபதியாகி ஸகல லோகங்களுக்கும் பாட்டனாகிய ப்ரஹ்மதேவன் அவ்வரசனுக்கு மொழிந்துவிட்டுக் கீர்த்தி நான்குபக்கத்திலும் ப்ரகாசிக்கும்படி தான் வந்தவழியே புறப்பட்டு ப்ரஹ்மலோகம் போய்ச் சேர்ந்தனன்.

பின்பு ராஜர்ஷியாகிய பகீரதனும் ஸ்ம்ருதிகளிற் சொல்லியபடி ஜ்யேஷ்டக்ரமமாகத் தன் பாட்டன்மார்களாகிய ஸகரகுமாரர்களுக்கு உத்தம லோகத்தையளிக்கும்படியான உதகக்ரியை செய்துமுடித்து மிகவும் பரிசுத்தனாகித் தன் கீர்த்தி எங்கும் விளங்கும்படி பட்டணத்தில் ப்ரவேசித்து ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்து நிலைநிற்கும்படி ராஜ்யபரிபாலனஞ் செய்து வந்தனன். ரகுநந்தனா! ராமா! உலகங்களெல்லாம், வெகுகாலம் தோன்றாதிருந்த அம்மன்னவனை அடைந்து மனவருத்தமனைத்தும் தொலைந்து செல்வங்களெல்லாம் நிறைந்து நன்கு ஆரோக்யம் பெற்று மிகுந்த ஸந்தோஷமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கிக் கிடந்தனர். ராமா! நீ ஸவிஸ்தரமாகக் கேட்ட கங்காவிருத்தாந்தத்தை இதோ சொல்லி முடித்தனன். நீ க்ஷேமம் பெறு

வாயாக. உனக்குச் சுபம் உண்டாகவேண்டும். ஸந்த்யாகாலம் கடந்துபோகின்றது. இனி இப்பொழுது என்னை ஒன்றும் வினவாதிருப்பாயாக. பொருளைப் பொழிய வல்லதும், புகழைப் படைக்குந் திறமுடையதும், ஆயுளைப் பெருகச் செய்வதும், ஸந்ததியைக் கொடுப்பதும், ஸ்வர்க்கத்தை அளிப்பதுமாகிய இக் கங்காவதாரவிருத்தாந்தத்தை ப்ராஹ்மணர்களிலும் க்ஷத்ரியர்களிலும் மற்றும் இதர ஜாதிஸ்தர்களிலும் எவனாயினும் ஒருவன் கேட்பிப்பானாயின் அவனிடத்தில் பித்ருதேவதைகளும் மற்றுமுள்ள தேவதைகளும் களிக்கின்றனர். கங்காவதரணமென்னும் இச்சுப உபாக்யானத்தை இதரவிஷயங்களிற் செல்லாமல் ஊக்கத்துடன் கூடிய மனத்தோடு எவன் கேட்கின்றானோ, அவனுக்கு ஸர்வாபீஷ்டங்களும் ஸித்திக்கும். அவன் பாவங்களெல்லாந் தொலைந்து ஆயுஸ்ஸும் யசஸ்ஸும் மேன்மேலென வளரப்பெறுவான்' என்றிங்ஙனம் விச்வாமித்ரமாமுனிவர் மொழிந்தனர். நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ விசாலாபுர விருத்தாந்தமும், பாற்கடலைக் கடைந்ததும். }

இங்ஙனம் விச்வாமித்ரமாமுனிவர் மொழிந்த கங்காநதியின விருத்தாந்தத்தைக் கேட்டு ராமலக்ஷ்மணர்களிருவரும் மிகவும் வியப்படைந்து அம்மாமுனியை நோக்கி 'மஹாநுபாவரே! நீர் சொன்ன கங்காவதரண விருத்தாந்தமும், ஸகரகுமாரர்கள் ஸமுத்ரம் தோண்டிவைத்ததும், அதைக் கங்கையின் ப்ரவாஹத்தினால் நிரம்பச் செய்ததும் ஆகிய இவை யெல்லாம் மிகச் சிறந்தவைகளும் மிகுந்த பரிசுத்தி பெற்றவைகளும்

மிக்க அற்புதத்தை விளைப்பவைகளுமாயிருக்கின்றன' என்று மொழிந்து விச்வாமித்ரமாமுனிவர் சொன்ன அவ்வழகான கதையைச் சிந்தித்துக்கொண்டே அவ் விருவரும் அன்றிரவெல்லாங் கடக்கச்செய்தனர். பின்பு புலபுலவென்று பொழுது விடிந்து ஸூர்யோதயமா கையில், சத்ருக்களை யடக்கவல்லனாகிய ராகவன் நித்ய கர்மங்களை யெல்லாம் முடித்து உட்கார்ந்து கொண் டிருக்கிற விச்வாமித்ரமுனிவரை நோக்கித் 'தபோ நிதியே! கேட்கவேண்டிய விஷயங்களிற் சிறந்த இக்க தையைக் கேட்டனன். அதனால் இந்த ராத்ரியானது மிகவும் பூஜிக்கத்தக்கதாயிருக்கின்றது. நீர் மொழிந்த இக்கதை முழுதும் அழகாயிருந்தமையால் அதை ஆதி யோடந்தமாகச் சிந்தித்துக்கொண்டிருக்கையில் எங் களுக்கு இன்றிரவெல்லாம் ஒரு க்ஷணப்பொழுதுபோல் கடந்துபோயிற்று. ஸுகமாய் உட்காரும்படி விசால மாகிப் புண்ய பாராயணர்களாகிய ரிஷிகள் ஏறிப்போ வதற்கு யோக்யமான ஓடமானது, யாவரும் மகிழ்ந்து பூஜிக்கும்படி மஹாநுபாவராகிய நீர் இவ்விடம் வந்தி ருப்பதுகண்டு மிக்கவேகமாக இதோ வந்து நிற்கின்றது. இதனால் புண்யநதிகளிற் சிறந்த இக்கங்காநதியைத் தாண்டிப்போவோம்' என்றுரைத்தனன்.

மஹாத்மாவாகிய அந்த ராகவன் வார்த்தையைக் கேட்டு விச்வாமித்ரமாமுனியும் ரிஷிகள் அனைவரும் கூட்டங்கூட்டமாகப் பின்சென்றுவர ரகுகுலத்திற் பிறந்த ராமலக்ஷ்மணர்களோடுகூடிக் கங்காநதியைத் தாண்டி அந்நதியின் வடகரையைச் சேர்ந்து ஓடத்தைக் கொண்டு நதியைத் தாண்டுவிக்கும்பொருட்டுத் தன் னுடன்வந்த மஹர்ஷிக்கூட்டத்தைப் பூஜித்துத் திருப்பி யனுப்பிவிட்டு அந்நதிக்கரையில் க்ஷணகாலம் உட்

கார்ந்திருந்து விசாலையென்னும் பட்டணத்தைக் கண்ட னர். பின்பு விச்வாமித்ரர் அப்பொழுது ராமலக்ஷ்ம ணர்களோடுகூடிப் புறப்பட்டு ஸகல ஸம்பத்துக்களும் நிறைந்து பூமியில் ஒப்பில்லாதபடி சிறப்புற்று தேவ லோகத்தை நிகர்த்து மிகவும் அழகாகி விளங்கிய விசாலையென்னும் அந்நகரத்திற்கு வேகமாகப் போய்ச் சேர்ந்தனர்.

பின்பு எல்லாமறிந்து சிறந்தவர்களிற்றலைவனாகிய ராமன் விச்வாமித்ரமாமுனியைப் பார்த்துக் கைகளைக் கூப்பிக் கொண்டு 'மஹாநுபாவரே! நகரங்களிற் சிறந்த இவ்விசாலாநகரத்தின் மகிமை யாது? மாமுனியே! இவ்விசாலாநகரத்தில் இப்பொழுது வாஸஞ்செய்யும் மன்னவர்குலம் யாது? இதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று எனக்கு மிகவும் குதூஹலமாயிருப் பதுபற்றி, இதை நான் கேட்க விரும்புகின்றனன். உமக்குச் சுபம் உண்டாகவேண்டும்' என்றான். இங் ஙனம் மொழிந்த ராமன் வார்த்தையைக் கேட்டு அம் மாமுனிவர் விசாலாநகரத்தைப்பற்றி முன்பு நடந்த விருத்தாந்தத்தை யெல்லாஞ் சொல்லத் தொடங்கினர்.

ராமா! இத்தேசத்தில் யாது நடந்ததோ, அதைச் சொல்லுகின்றேன்; கேட்பாயாக. இந்திரனுடைய விருத்தாந்தமும் இதில் ஸம்பந்தித்திருக்கின்றது. மிக வும் அழகான அந்த விருத்தாந்தத்தை நான் சொல் லிக்கொண்டுவருகிறேன். ஊக்கத்துடன் கேட்பாயாக. மஹாநுபாவனே! ராமா! முன்பு கிருதயுகத்தில் திதி புத்ரர்கள் மிகுந்த பலமுடையவர்களாக மாத்திரம் இருந்தனர். அதிதிபுத்ரர்கள் நன்கு பராக்ரமமுடைய வர்களும், மிக்க தார்மிகர்களுமாயிருந்தனர். புருஷோ த்தமா! பின்பு மஹாதீரர்களாகிய அந்த இருவகைப்

பட்டவர்களுக்கும் 'நாம் என்ன செய்தால் சாவும் கிழத்தனமும் நோயுமின்றி இருப்போம்' என்று ஓரெண்ணம் உண்டாயிற்று. அங்ஙனம் ஆலோசித்துக்கொண்டிருக்கையில் அளவற்ற தைரியம் பொருந்தி விளங்குகிற அவ்வீரர்களுக்கு 'நாம் க்ஷீரஸமுத்திரத்தைக் கடைந்து அதினின்று வெளியாகும் ஸாரமாகிய அம்ருதத்தைப் பெறவேண்டும்' என்று புத்தி உண்டாயிற்று.

அங்ஙனம் நிச்சயித்து அவர்கள மிகுந்த பராக்ரமமுடையவர்களாகையால் ஸர்ப்பராஜனுகிய வாஸுகியைக் கயிருகவும், மந்தரபர்வதத்தை மத்தாகவும் ஏற்படுத்திக்கொண்டு பாற்கடலைக் கடையத் தொடங்கினர். அப்படியே கடைந்துகொண்டிருக்கையில் ஆயிரமாண்டுகள் சென்றபின்பு வாஸுகியின் சிரங்களெல்லாம் பயங்கரமாக விஷத்தை வெளியில் கக்கிக்கொண்டிருந்தன. மத்தாகிய மந்தரபர்வதத்தினுடைய கற்களெல்லாம் வெடித்துப்போயின. இப்படியிருக்கையில் நெருப்புப்போல் எரிந்துகொண்டிருக்கிற ஹாலாஹலமென்னும் மஹாவிஷம் மேலே கிளம்பிற்று. அதனால் தேவாஸுர மநுஷ்யர்கள் அனைவருமடங்கிய உலகங்களெல்லாம கொளுத்தப்பட்டன. பின்பு தேவதைகள் தேவர்களில் பெருமைபெற்றவனும் யாவர்க்கும் ஆநந்தத்தை விளைவிப்பவனுமான பசுபதியைச் சரணமடைந்து 'காப்பாற்றவேண்டும், காப்பாற்றவேண்டும்' என்று துதி செய்தார்கள்.

அப்பொழுது உமாபதியாகிய அச்சிவனிருக்குமிடத்திற்குச் சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு, தேவதேவனென்னும் பெயரிட்டுக்கொண்டிருக்கின்ற ப்ரஹ்மா ருத்ரன் முதலியவர்களுக்கும் தேவனுகி ஸமஸ்தகாரியங்களையும் அபாயமின்றி

நிறைவேற்ற வல்லனுமாகிய ஸர்வேச்வரன் ஸ்ரீமஹாவிஷ்ணு எழுந்தருளிப் புன்சிரிப்பு விளங்கும்படி சூலபாணியாகிய அச்சிவனைக் கண்டு 'தேவாதிபதியே! நீ தேவர்களுக் கெல்லாம் முதலிற் பிறந்தவன். ஆனதுபற்றிப் பாற்கடலைக் கடைகையில், அதில் முதலில் உண்டானது உன்னுடையதன்றோ. ஆகையால இவ்விஷத்தை அக்ரபூஜையாக நினைத்து அங்கீகரிப்பாயாக' என்று மொழிந்து அம்மஹாதேவனாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு அவ்விடத்திலேயே அந்தர்த்தான மடைந்தனன். பின்பு மகிமைபொருந்திய சிவபிரானும் தேவதைகளுக்கு உண்டான பயத்தைக் கண்டும் ஸ்ரீமஹாவிஷ்ணு நியமனத்தைக் கேட்டும் பயங்கரமாகிய ஹாலாஹல விஷத்தை அம்ருதம்போல் உட்கொண்டு தேவதைகளை விடுவித்துவிட்டுப் போயினன். பின்பு தேவதைகளும் அஸுரர்களும அக்கடலை மீளவும் கடைகையில் மத்தாகிய மந்தரபர்வதம் பாதாளத்தில் மூழ்கி விட்டது.

அதைக் கண்டு தேவர்களும் கந்தாவர்களும் மதுவெனும் அஸுரனைக் கொன்று மஹோபகாரஞ்செய்த ஸ்ரீ மஹாவிஷ்ணுவிடம சென்று 'திரண்டுருண்டு நீண்ட புஜ தண்டங்களையுடைய மஹாநுபாவனே! நீயே ஸகல பூதங்களுக்கும் விசேஷித்து தேவர்களுக்கும் கதியாயிருக்கின்றனை. ஆகையால் நீ எங்களைக் காக்க வேண்டும். நாங்கள் மத்தாகக்கொண்ட மந்தரபர்வதம் பாதாளத்தில் அமிழ்ந்துவிட்டது. அதை மேலெடுத்தருளவேண்டும். அதற்கு நீ ஒருவனே வல்லனாயிருக்கின்றனை' என்று ஸ்தோத்ரஞ் செய்தார்கள். [1] இருடீ

---

1 இருடீகேசன். இது (ஹ்ருஷீகேஶ) என்னும் வடமொழியினின்று திரிந்துவந்தது. (ஹ்ருஷீக) ங்களென்றால் இந்திரியங்கள்.

கேசனென்று ஓதப்படுகிற அம்மஹாதேவனும் அதைக் கேட்டு உடனே கூர்ம உருவங்கொண்டு தன் முதுகினால் அப்பர்வதத்தைத் தாங்கிக்கொண்டு அப்பாற்கடலில் பள்ளிகொண்டிருந்தனன். மேலும் ஸமஸ்தவஸ்துக் களிலும் உட்புகுந்து உலகங்களெல்லாம் தானே யென்னும்படி விளங்குந்தன்மையுள்ள அப்புருஷோத் தமன் அப்பர்வதத்தின் நுனியைக் கையினால் அமுக்கிக் கொண்டு தேவதைகளின் நடுவில் நின்று தானுங் கடைந்தனன்.

இங்ஙனம் ஆயிரமாண்டுகள் சென்றபின்பு தண்டத் தையும் கமண்டலுவையும் தரித்துக்கொண்டு தந்வந்தரி யென்னும் பெயர்பெற்ற தேவலோகத்து வைத்தியன் முதலில் வெளித்தோன்றினன். பின்பு அழகான ஒளி யுடைய அப்ஸரஸ்ஸ்த்ரீகளும் வெளியாயினர். அப்பாற் கடலிற் பாலைக் கடையும்பொழுது அதினின்றும் ஒரு ரஸம் உண்டாக, அதினின்றும் இவர்களுண்டானது பற்றி [1] அப்ஸரஸ்ஸுக்களென்று யதார்த்தமாகிய நாமத் தைப் பெற்றனர். அழகான ஒளியுடைய அவ்வப்ஸரஸ் ஸ்த்ரீகள் அறுபதினாயிரக்கோடிக் கணக்கிற் பிறந்தனர். அவர்களுடன் உண்டான அவர்கள் வேலைக்காரிகள் இவ் வளவினரென்று கணக்கிடத் தரமன்று. அவ்வப்ஸர மடந்தையர் தமக்குப்பதி யாரென்று விசாரமற்றிருந்த மையால் தேவாஸுரர்களில் ஒருவரும் அவர்களை விதிப்

(ஈ-ஙு) னென்றால் அவைகளை யடக்கித் தன்வசமாகச் செய்பவனென்று பொருள்.

1 அப்பென்றால் ஜலம். இங்கு ஜலம்போல் த்ரவமாகி அதன் விகாரமாகிய பாலைச் சொல்லுகிறது. அதினின்று முண்டான ரஸம் அப்ரஸம். அதினின்று பிறந்தவர் அப்ஸரஸ்ஸுக்கள். (அப்ரஸர்) என்றுரைக்க வேண்டியிருக்க, ரஸசப்தம் 'ப்ருஷோதராதீனி

படி மணம்புரியவில்லை. ஆனால் பொதுவாக அநுபவித்துக்கொடிருந்தனர். ஆனதுபற்றியே அவர்கள் வேசிகளென்னும் கியாதி பெற்றனர்.

பின்பு ஸமுத்ராதிதேவதையாகிய வருணனு புத்ரியாகி மஹாபாக்யம் பொருந்திய [1] வாருணி யென்னும் தேவதை கடலினின்றும் வெளிவந்து தன்னைக் கைப்பற்றுவார் யாரென்று தேடிக் கொண்டிருக்கையில் திதிகுமாரர்களாகிய அஸுரர்களனைவரும் அவ்வருணபுத்ரியாகிய வாருணியைக் கைப்பற்றவில்லை. மஹாவீரனே! ராமா! அதிதிபுத்ரர்களாகிய தேவதைகள் மாத்திரம் தோஷமொன்றுமின்றி விளங்கிய அவ்வாருணியைக் கைக்கொண்டனர். வாருணியைக் கைப்பற்றாதது பற்றியே திதிகுமாரர்கள்[2] அஸுரரென்று பேர்பெற்றனர். அதை அங்கீகரித்ததுபற்றியே தேவர்கள் ஸுரரென்று கியாதி அடைந்தனர். அங்ஙனம் தேவதைகள் அவ்வாருணியைக் கைப்பற்றினமையால் உடம்பெங்கும் மயிர்க்கூச் செறியும்படி மிகுந்த ஸந்தோஷமடைந்தனர்.

புருஷோத்தமா! ராமா! பின்பு உச்சைச்ச்ரவஸ்ஸென்னும் உயர்ந்த குதிரையும் கௌஸ்துபமென்னும்

---

யலோபஹ்ஷிட்டம்' என்கிற வ்யாகரணஸூத்ரத்தின்படி (ஸரஸ்) என்று மாறிக்கிடக்கிறது. ஆகையால் (அப்ஸரஸ்) என்று காரணப் பெயராயிருக்கின்றது.

1 (வாருணி) யென்றால் கள்ளு. அதற்கு அதிஷ்டாநதேவதை இங்கு வாருணி யென்னப்பட்டது.

2 ஸுரை யென்றால் கள்ளு. இதுவே வாருணியென்றுரைக்கப் படுகின்றது. (ஸுரா ஏஷாமஸ்தீதி ஸுராஃ) அந்த வாருணியை உடையவர்களாகையால் ஸுரர்கள். மத்வர்த்தத்தில் (அர்ஸ ஆதிப்வாத் அச்ப்ரத்யயஃ) இங்ஙனமே (ஸுரா நாஸ்தி ஏஷாமிதி அஸுராஃ) அந்த வாருணியில்லாதவராகையால் அஸுரர்கள்.

சிறந்த ரத்நமும் அப்படியே மேலான அம்ருதமும் ஸமுத்திரத்தினின்று வெளியாயின. அவ்வம்ருதத்தைப் பற்றித் தேவாஸுரர்களிருவரும் பெருத்த சண்டை செய்து குலங்குலமாக மாண்டனர். பின்பு தேவதைகள் அஸுரர்களை அதிகமாகக் கொன்றனர். அப்பொழுது அஸுரர்கள் அனைவரும் தமக்குப் பலம் அதிகமாகும் பொருட்டு ராக்ஷஸர்களோடு ஒருமித்துக் கொண்டனர். பின்பு மூவுலகங்களும் நடுங்கும்படி மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. அப்பொழுது தேவாஸுரர்கள் அனைவரும் அழிந்து போவதைக் கண்டு மஹாபலமுடைய விஷ்ணுதேவன் ஜகத்தெல்லாம் மோஹிக்கும்படியான தன் மாயையைக் கொண்டு யாவரும் மயங்கும்படி அற்புதமான மோஹிநீரூபந் தரித்து அவர்களை வஞ்சித்து அவர்களிடமிருந்து அம்ருதத்தைப்பறித்துக் கொண்டனன்.

எக்காலத்திலும் [1] அழிவின்றிப் புருஷோத்தமனென்று அஸாதாரணமாக நாமம் பெற்று ஸமஸ்தமும் நிறைவேற்றவல்லமையும் பொருந்தி விளங்கும் மாஹாநுபாவனாகிய அம்மஹாவிஷ்ணு தன்னை யெதிர்த்து வந்தவர்கள் அனைவரையும் வென்று பலமற்றவர்களாகச் செய்துவிட்டனன். பின்னும் தன்னைச் சரணம் புகுந்த வானவர்களை யெல்லாம் ஆவேசித்து அவர்களுக்கு மிகுந்த பலம் உண்டாகச் செய்தனன். பயங்கரமான

---

1 (அழிவின்றி) அதாவது—(அஸதி, ஜாயதே, பரிணமதே, விவர்யதே, அபக்ஷீயதே, விநஸ்யதி) என்று வழங்கிவருகிற ஸத்தை, ஜநமம், பரிணாமம், வ்ருத்தி, அபக்ஷயம், நாசம் ஆகிய பாவ விகாரங்களாறுமற்றிருக்கை. இவற்றில்ஸத்தை—இருத்தல். ஜந்மம்-பிறப்பு. வ்ருத்தி-வளர்தல். அபக்ஷயம்-குறைதல், நாசம்-தோன்றாதிருத்தல்.

அந்தத்தேவாஸுரயுத்தத்தில் அம்மஹாவிஷ்ணுவின் ஆவேசத்தால் பலம் அதிசயித்து விளங்குகிற அதிதி குமாரர்களாகிய தேவதைகள் திதி புத்ரர்களாகிய அஸுரர்களை அடித்துக் கொன்றுவிட்டனர். இப்படி இந்திரன் திதிபுத்ரர்களைக் கொன்று த்ரிலோக ராஜ்யம் பெற்று அம்ருதம் கைபுகுந்து ஸந்தோஷமடைந்து கூட்டங்கூட்டமாக மஹர்ஷிகளோடும் சாரணர்களோடும் மற்றுமுள்ள தேவர்களோடும் கூடி ஸமஸ்த லோகங்களையும் பரிபாலித்து வந்தனன். நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

திதி தவஞ் செய்தல்.

திதி தன் புத்ரர்களாகிய அவ்வஸுரர்கள் அனைவரும் தேவர்களால் அடியுண்டு மாண்டுபோகையில் மிகத் துயரமடைந்து மரீசி மாமுனிவர் குமாரராகிய காச்யபரென்னும் தனபர்த்தாவை நோக்கி 'நாதா! மஹாநுபாவரே! மிக்க பலம் பொருந்திய உமது புத்ரர்களால என்பிள்ளைகள் யாவரும் அடியுண்டு மாண்டுவிட்டார்களே; ஆதலால் வெகுகாலம் தவஞ்செய்து அத்தவமகிமையால் மிகுந்த வலிவுடன் கூடி இந்திரனைக் கொல்ல வல்லனும் மூவுலகங்களையும் ஆளத்தக்கவனுமாகிய ஒரு புதல்வனைப் பெற யான் விரும்புகின்றனன். ஆனது பற்றிப் பிள்ளையில்லாத யான தவஞ் செய்யப் போகின்றேன். எனக்கு (நன்கு பலம் பொருந்திய மேலான வில்லைத் தாங்கத்தக்க வல்லமை பெற்று என் கிலேயை அறிந்தவனும் யாவரையும் ஒருமித்துப் பார்க்குந் தன்மையுடையவனும்) உலகங்கட்கெல்லாம் அதிபதியாகுந்திறமுடையவனும் இந்திரனை ஸம்ஹரிக்க வல்லனுமாகிய புதல்வனைத் தரவேண்டும். அதற்காக

யான் தவஞ்செய்யும்படி எனக்கு அநுமதியும் அளிக்க வேண்டும்' என்று வேண்டிக்கொண்டனள்.

மஹாநுபாவராகிய காச்யபரும் அங்ஙனம் திதி கூறிய அம்மொழிகளைக் கேட்டு, மிகத் துயரங் கொண்டு நிற்குந்திதியைப் பார்த்து, 'நீ வேண்டினபடி ஆகட்டும். உனக்குச் சுபம் உண்டாகவேண்டும். நீ மிகத் தவம் புரிந்து நன்கு ஆசாரத்துடன் பிள்ளை பிறக்குமளவும் பரிசுத்தியோடிருக்கவேண்டும். அப்படி இருந்தாயாயின் யுத்தத்தில் இந்திரனைக் கொல்ல வல்லனாகிய புதல்வனைப் பெறுவாய். ஆயிரமாண்டுகள் திரும்பும் வரையில் சுசியாயிருப்பாயாயின் மூவுலகங்களையும் ஆளவல்லனாகிய குமாரனை என் அனுக்கிரகத்தினால் பெறுவாய்' என்றுரைத்து அம்மடந்தையைத் தன் கையினால் தடவிக்கொடுத்துத தேறுதல் சொல்லி வயிற்றைப் பரிசித்து 'உனக்கு க்ஷேமம் உண்டாகுக' என்று மொழிந்துவிட்டுத் தவஞ் செய்யச் சென்றார். புருஷோத்தமா! ராமா! இவவாறு காச்யபர் உரைத்துச் சென்றபின்பு திதி மிக்க ஆநந்தங் கொண்டு விசாலாபுரத்திற்குப் பூர்வஸ்தாநமாகிய குசப்லவமென்னும் இவ்விடம் வந்து தாருணமாகத் தவம புரிந்தனள்.

அம்மடந்தை அங்ஙனந் தவம் நடத்திக் கொண்டிருக்கையில், ஆயிரக் கண்ணனாகிய தேவேந்திரன் விநயம் முதலிய ஸகலநற்குணங்களும் அளவின்றி விளங்கும்படி அம்மாதரசுக்குப் பணிவிடைகள் யாவுஞ் செய்து வந்தனன். அவ்வானவரதிபதி அவளுக்கு வேண்டிய அக்நி தர்ப்பம் ஸமித்தை தீர்த்தம் பழம் கிழங்கு முதலி

1 ஸ்திரீகளுக்குப் பாத்தாவின் அநுமதி யில்லாமல் ஸ்வதந்த்ரமாகத் தவம் முதலியவற்றில் அதிகாரமில்லாமைபால் திதி காஸ்யபரை அநுமதி கொடுக்கும்படி ப்ரார்த்திக்கின்றாள்.

யவற்றையும் மற்றும் யாதுயாது வேண்டுமெனினும் அவையெல்லாவற்றையும் கொண்டுவந்து கொடுத்தல், ச்ரமமாயிருக்கும்பொழுது உடம்பைப் பிடித்தல், விசிறியைக் கொண்டு வீசுதல் முதலிய கார்யங்களைச் செய்து கொண்டு ஒவ்வொருபொழுதுந் தவறுதல் பரிசர்யையெல்லாம் நடத்திக்கொண்டிருந்தனன்.

பின்பு ஆயிரமாண்டுகள் நிரம்பப் பத்துவருஷங்கள் குறைந்திருக்கையில், திதி இந்திரன் செய்த சுச்ருஷைக்கு மிகவும் ப்ரீதி யடைந்து அவனைப் பார்த்து 'வானவர்க்கதிபதீ! மஹாநுபாவராகிய உன் தந்தையைக்கேட்டு ஆயிரமாண்டுகள் நிறைந்த பின்பு பிள்ளையைப் பெறும்படி யான் ஒருவரம் பெற்றனன். அதற்காக யான தவஞ் செய்துகொண்டிருக்கின்றனன். வீரர்களிற்றலைவனே! இன்னும் ஆயிரமாண்டுகள் நிரம்பப் பத்துவருஷங்கள் குறைவாயிருக்கின்றன. உனக்குச் சுபம் உண்டாகுக. அப் பத்துவருஷங்கள நிறைந்த பின்பு உனது உடன்பிறந்தவனைக் காண்பாய். அவன் உன்னை வெல்லுவதற்கு உத்ஸாஹங் கொண்டிருப்பான. ஆயினும் உனக்காக அவனை யான் ஸமாதானப்படுத்தி உன்னிடத்தில் நேசத்துடன் இருக்கச் செய்கின்றேன. நீ அவனுடன கூடி மூவுலகங்களையும் வென்று மனக்கவலை தீர்ந்து ஸுகமாக வாழ்ந்திருப்பாய்' என்று சுச்ருஷையாலுண்டான ஸந்தோஷத்தில் மதிமயங்கி மொழிந்தனள்.

அந்தத் திதி இங்ஙனம் மொழிந்து ஸூர்யன் ஆகாயமத்தியிற் சென்று நடுப்பகலாகையில நித்திரையால் தேகம் பரவசமாகத் [1] தலைமாட்டில் காலை வைத்துப்

---

1 பகலில் படுக்கையில் படுத்துநித்ரைசெய்யப்ரஸக்தி இல்லாமையால்ஆஸநத்திலிருந்துகொண்டேஉறங்கும்போது தலைசாய்ந்துகாலில்

படுத்தனள். இந்திரன் இப்படி அவ்வம்மை சுசி தப்பிக் கால்மாட்டில் தலையையும் தலைமாட்டில் காலையுமாக வைத்துக் கொண்டு நித்திரைபோயிருப்பது கண்டு, இவள் வீண் கர்வப்பட்டாளென்று தனக்குள் சிரித்துக் கொண்டு அவளது கர்ப்பத்தைக் கெடுக்க அவகாசம் நேரிட்டதுபற்றி ஸந்தோஷங்கொண்டு அவளது சரீரத்தினுட்புகுந்து மிகவுந் தீரனுகையால் அக்கருவை ஏழு துண்டங்களாகப் பிளந்து விட்டனன். இங்ஙனம் இந்திரன் அநேகங்கணுக்களையுடைய தனது வஜ்ராயுதத்தினால் கருவைப் பிளந்துகொண்டிருக்கையில் அச்சிசு இனிய குரலுடன் அழத்தொடங்கிற்று. பின்பு திதியும் அவ்வழுகுரலைக் கேட்டு எழுந்திருந்தனள். தேவேந்திரன் அது கண்டு சிசுவைப்பார்த்து 'அழவேண்டாம், அழவேண்டாம்' என்றுரைத்து அது அழுதுகொண்டேயிருப்பினும் மிகக்களிப்புடன் துண்டு துண்டாகச் செய்தனன். திதியும் 'கொல்லவேண்டாம், கொல்ல வேண்டாம்' என்று மொழிய, தேவாதிபதியும் தாய்வார்த்தையில் கௌரவம் வைத்து வயிற்றிலிருந்து வெளியே வந்து வஜ்ராயுதமும் கையுமாகத் தோற்றிக்கொண்டு நின்று கையைக்கூப்பித் திதியைப் பார்த்துத் 'தாயே! நீ சுசி தப்பிக் கால்மாட்டில் தலையை வைத்துக்கொண்டு நித்திரைசெய்தனை. ஆகையால் நான் அவகாசம் பெற்று

---

படுத்ததால் அசுசித்வம் வந்ததென்று சிலர். தலை வைக்குமிடத்தில் காலையும கால் வைக்குமிடத்தில் தலையையும் வைத்துப் படுத்தாளாகையால் அசுசித்வமென்று சிலர் கிழக்குதெற்குகளில் தலை வைக்க வேணுமென்கிற ஸ்ம்ருதிக்கு விரோதமாய்ப் படுத்தாளாகையால் அசுசித்வமென்று சிலர். மற்றுஞ் சிலர் க்ருஷ்ணஜினத்தின் தலைப்பக்கம் காலையும் கால்பக்கம் தலையையும் வைத்துப் படுத்தாளாகையால் அசுசித்வம் வந்ததென்று கூறுவர்.

இந்திரனை யுத்தத்தில் கொல்ல வல்ல இச்சிசுவை ஏழு துண்டங்களாகக் கண்டித்துவிட்டனன். தாயே! நீ இதைப் பொறுக்கவேண்டும்' என்று மொழிந்தனன்.
நாற்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸப்தமாருத விருத்தாந்தமும் விசாலாதிபதியான ஸுமதியின் வரலாறும்.

இவ்வாறு தன் கருவை இந்திரன் ஏழு துண்டங்களாகச் செய்யக்கண்டு, திதி மிகவும் துயரமடைந்து யாவராலும் வெல்லமுடியாது வல்லவனாகிய தேவேந்திரனை நோக்கி 'ஓ வானவர்க்கரசே! எனது அபராதத்தால் இக்கரு ஏழுதுண்டங்களாக வீணாய்விட்டது. இதில் உனது பிழை யாதொன்றும் இல்லை. வீணாயொழிந்த இக்கருவுக்கு ஓர் மேன்மை கொடுக்கவேண்டுமென்று விரும்புகின்றேன். இத்துண்டங்களேழும் [1] வாயுலோகங்களேழையும் பாதுகாப்பவர்களாகவேண்டும். குழந்தாய்! என்னிட முண்டான இவ்வேழுபுத்ரர்களும் வாதஸ்கந்தாபிமானி தேவதைகளாகி, தேவரூபந்தரித்து [2] மாருதர்களென்னும் பெயர்பெற்று வானுலகில் வாழ்ந்திருக்கவேண்டும். ஒருவன் ப்ரஹ்மலோகத்தில்

---

1 (வாயுலோகங்க ளேழையும்) 'ம்ருந: ஸ்பர்ஸநோ வாயுரநிலஸ்ச தயாபர:| ப்ராண: ப்ராணேஸ்வரோ ஜீவ இத்யேதே ஸப்த மாருதா:' என்று வாயுக்கள் ஏழுவர். அப்படியே அவர்களது லோகங்களும் ஏழாயிருக்கும். ஆவஹ, ப்ரவஹ, ஸம்வஹ, உத்வஹ, விவஹ, பரிவஹ, பராவஹர்கள் என்று ஸப்தமருத்துக்கள் ஸ்ரீவிஷ்ணு புராணத்திற் சொல்லப்பட்டனர்.

2 (மாருதர்களென்னும் பெயர்பெற்று) மருத்துக்களென்றால் வாயுக்கள். அவைகளுக்கு அபிமானிதேவதைகளாகையால் (மருதாமிமே மாருதா:) என்று மாருதர்களென்னும் பெயர் பெற்று. அன்றியே நீ இச்சிசுவைப் பார்த்து 'மா ருத:, மா ருத:' 'அழவேண்டாம், அழ

ஸஞ்சரிக்கவேண்டும். மற்றொருவன் இந்த்ரலோகத்தில் திரிந்துகொண்டிருக்கவேண்டும். மூன்றாவன் பெரும் புகழ்பெற்று வாயுவென்னும் பெயர்கொண்டு விஷ்ணுபத மெனறு வழங்கும் விஷ்ணுலோகத்தில் வஸித்திருக்க வேண்டும். தேவாதிராதனே! எனது புத்ரர்கள் மற்றை நால்வரும் உனதாணைக்குட்பட்டு தேவத்வம்பெற்று நீ இட்டபேரைக்கொண்டே மாருதர்களென்னும் கியாதி அடைந்து திசைகள் நானகிலும் ஸஞ்சரித்துக்கொண் டிருக்கவேண்டும்' என்றிவ்வாறு இனிய சொற்களைச் சொலலினள்.

திதி இங்ஙனம் உரைத்த மொழிகளைக் கேட்டுப் பகைவரை வெலலுந்திறமுடைய ஆயிரக்கண்ணனாகிய தேவேந்திரன கையைக் கூப்பிக்கொண்டு 'தாயே! எல் லாம் நீ சொன்னபடியே நடக்குமாக. இதிற் சந்தேக மில்லை. உனது புத்திரர்கள் யாவரும் தேவத்வம் பெற்று ஸஞ்சரிப்பார்களாக. உனக்கு நன்மை உண்டா குக' என்றுரைத்தனன். ராமனே! தாயும் பிள்ளையுமா கிய திதியும் தேவேந்திரனும் இப்படி அத்தபோவனத் தில் நிச்சயம்பண்ணிக்கொண்டு தந்தங் கருத்து நிறை வேறபபெற்று ஸ்வர்க்கத்திற்குப் போயினர்' என்று எனககுக கேள்வி. முனபு இந்திரன் எந்த இடத்தில் வஸித்திருந்து தவத்திலூான்றிய திதிக்குப் பணிவிடை கள் செய்தானே, அததேசம் இதுவே. அது இப் பொழுது விசாலையென்னும் பெயர்பெற்றிருக்கின்றது.

இனி எந்த ராஜவமசத்தார் இப்பொழுது இங்கு வஸித்திருக்கின்றார்களோ, அதைச் சொல்லுகின்றேன்,

---

வேண்டாம்' எனறு மொழிந்தாயாகையால மாருதர்களென்னும் பேர் பெற்று-என்க. ஊகாரம் 'பூர்வேஷாமூராதீச்' என்கிற ஸூத்ரத்தின் படி தகாரமாக மாறிக்கிடக்கிறது.

கேட்பாயாக. இக்ஷ்வாகு மஹாராஜனுக்கு அலம்புஸை என்பவளிடத்தில் பரமதார்மிகனாகிய விசாலனென்று ஒரு புத்திரன் பிறந்தனன். அவ்விசாலன் தான் இங்கு விசாலை யென்னும் இப்பட்டணத்தை நிருமித்தனன. விசாலமஹாராஜனுக்கு மிகுந்த பலமுள்ள ஹேமசந்திரனென்னும் புதல்வன் உண்டாயினன். ஹேமசந்திரனுக்கு ஸுசந்திரனென்பவன் தோன்றினன. ஸுசந்திரனுக்கு தூம்ராச்வனென்னும பிள்ளை பிறந்தனன். தூம்ராச்வனுக்கு ஸ்ருஞ்ஜயனென்பவன் உதித்தனன். ஸ்ருஞ்ஜயனுக்கு மிகுந்த பராக்ரமும் சிறந்த ஸம்பத்தும் அமைந்த ஸஹதேவனெனனும் குமாரன் பிறந்தனன். ஸஹதேவனுக்குப் பரமதார்மிகனாகிய குசாச்வனென னும் புத்திரன் உண்டாயினன். குசாச்வனுக்கு மிகுந்த தேஜஸ்ஸும் அளவற்ற பராக்ரமமும் பொருந்திய ஸோமதத்தனென்பவன் பிறந்தனன். ஸோமதத்தனுக்குக் காகுத்தனென்னும் குமாரன் தோன்றினன். அந்தக் காகுத்தனுடைய பிள்ளை மிகுந்த பராக்ரமசாலியும் தேவர்களோடொத்தவனும் பகைவரால் வெல்லமுடியாதவனுமாகிய ஸுமதியென்பவன். அவன் தான இப்பொழுது இவ்விசாலாநகரத்தில் வஸித்திருக்கின்றனன.

இக்ஷ்வாகுவின் அனுக்கிரகத்தினால் விசாலாபுராதிபதிகளாகிய அரசர்கள் யாவரும் தீர்க்கமான வாழ்நாளையும் மிகுந்த தைரியத்தையும் சிறநத வீரியததையும் பெற்றுப் பரமதார்மிகர்களுமாயிருப்பார்கள். ராமனே! நாம் இன்றிரவு இங்கு ஸுகமாக வஸிததிருப்போம். நாளை விடியற்காலத்தில் ஜநகமஹாராஜனைப் பார்க்கப் போகலாம்' என்றனர். மஹாதேஜஸ்வியும் மஹாயசஸ்வியுமாகிய ஸுமதியும் விச்வாமித்ரமாமுனியின் வரவைக் கேட்டுப் புரோஹிதர்களோடும் பந்துக்களோடுந்

கூடி எதிர்கொண்டுவந்து அம்மாமுனியை நன்கு பூஜித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு க்ஷேமம் விசாரித்து 'விச்வாமித்ரமுனிவரே! எனது தேசத்திற்கு எழுந்தருளி தர்சநங் கொடுத்ததுபற்றி யான மிகவுந் தந்யனாகின்றனன். மஹாநுபாவராகிய உமது அனுக்கிரகத்தையும் யானே பெற்றனன். இனி எனக்கு நிகரான பாக்கியசாலிகள் எவருமில்லை' என்று மொழிந்தனன்.
நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அஹல்யா விருத்தாந்தம்.

இங்ஙனம் ஸுமதிமஹாராஜனும் விச்வாமித்ரமாமுனியுமாகிய இருவரும் ஒருவருக்கொருவர் க்ஷேமம் விசாரித்து, மறுமொழி சொல்லி முடிக்கும்போது, ஸுமதிமன்னவன் அம்மாமுனியைப் பார்த்து 'விச்வாமித்ரமஹாமுனிவரே! இக்குமாரர்களிருவரும் யாவர்? உமக்கு நன்மை உண்டாகவேண்டும். உருவத்தைப் பார்க்கில் விஷ்ணுவைப்போன்ற பராக்ரமமுடையவர்களாகத் தோன்றுகின்றனர். யானையைப்போல கம்பீரமாகவும் சிங்கத்தைப்போல் மிக்க அழகாகவும் பெரும் புலியைப்போல் மிகப்பயங்கரமாகவும் மதித்த விருஷபத்தைப்போல் கர்வம் நிரம்பியதாகவும் இம்மஹாவீரர்களின நடைபுலப்படுகின்றது. இவரது கண்கள் தாமரையிதழ்போல் அகன்று செவ்வரியோடி யாவருங் கண்டு மதிமயங்கும்படி லாவண்ய வெள்ளங் குடி கொண்டு விளங்குகின்றன. இவ்விருவரும் கத்தி அம்பறாத்தூணி வில்லென்னுமிவைகளைத் தரித்துப் பல ஆபரணங்களையணிந்தாற்போல் பிரகாசிக்கின்றனர். அச்விதேவதைகளைப்போல் உருவத்திலொப்பற்று அதற்கேற்ற யௌவநப்பருவமும் பெற்றுப் பூமியில் ஸஞ்சரிக்கவேண்டுமென்

றெண்ணங்கொண்டுவந்த அழகிய தேவகுமாரர்களோ என்னும்படி தோன்றுகின்றனர். மிகவும் மெதுவான இவ்வடிகளைக்கொண்டு இக்குமாரர்கள் எப்படி இக்கடுங் கானகத்தைக் கடந்து இங்கு வந்தனர்? இவர்களது உருவத்தைப் பார்த்தமாத்திரத்தில்தானே கருத்தெல் லாம் நிறைந்திருப்பவர்களெனத் தோன்றுகின்றது. அப்படியிருக்க யாதுபயனை விரும்பி யாருக்காக இங்கு வந்தனர்? மாமுனிவரே! நீர் எல்லாமறிந்தவராகையால் இதைத் தெரியச் சொல்லவேண்டும். சந்த்ரஸூர்யர்கள் ஆகாயத்தை விளங்கச்செய்வதுபோல் இவர்கள் இத் தேசத்தை விளங்கச் செய்கின்றனர். உயரம் முதலிய தேஹப்ரமாணத்தாலும் மனத்திலுள்ள கருத்தை வெளிப்படுத்துகின்ற சிரிப்பு முதலிய குறிப்புக்களாலும் பேச்சு நடை முதலிய சேஷ்டைகளாலும் ஒருவர்க்கொ ருவரே ஒத்திருக்கின்றனர் மேலான ஆயுதங்களைத் தரித்து மிகுந்த வல்லமை அமைந்து விளங்குகின்ற இம் மஹானுபாவர்களிருவரும் நடக்கமுடியாத இக்கொடிய வழியைக் கடந்து வருவதற்குப் பயன் யாது? இதன் உண்மையை அறிய விரும்புகின்றேன்' என்று வினு வினன்.

இங்ஙனம் வினவிய அம்மன்னவனது மொழிகளைக் கேட்டு விச்வாமித்ரமாமுனியும் ஸித்தாச்ரமத்திற்கு வந்திருந்தது, அங்கு யாகத்தை யழிக்கவந்த அரக்கர்க ளைக் கொன்றது, ஜநக மஹாராஜனது யாகத்தைப் பார்க்கும் பொருட்டு மிதிலா புரத்திற்குப் போவது முத லிய விருத்தாந்தங்களை எல்லாம் நடந்தபடியே சொல்லி முடித்தனர். அதைக் கேட்டு, ஸுமதிமன்னவன் நமக்கு மேலான அதிதிகள் நேரிட்டார்களே யென்று மிகுந்த ஸந்தோஷமடைந்து யாவரும் பூஜிக்கத்தக்க

மகிமை பொருந்தி மிகுந்த பலசாலிகளாகிய அத்தசரத சக்ரவர்த்தியின் குமாரர்களிருவரையும் மிகப்பரிவுடன் விதிப்படி உபசரித்துக் கொண்டாடினன்.

பின்பு ராம லக்ஷ்மணர்களிருவரும் ஸுமதிமன்னவன் செய்த மேலான ஸத்காரம் பெற்று அங்கு ஓரிரவு வஸித்திருந்து மற்றை நாள் விடியற்காலத்தில் எழுந்திருந்து புறப்பட்டு மிதிலாநகரை நோக்கிச் சென்றனர். அப்பொழுது முனிவர்கள் யாவரும் ஜநகராஜன் பட்டணமாகிய அழகான அம்மிதிலை மாநகரைக்கண்ணுற்று 'நன்று நன்று' என்று மகிழ்ந்து புகழ்ந்தனர். இங்ஙனம் நடந்து போகையில் ராமன் அம்மிதிலைக்கருகான ஒரு வநத்தில் ஜநங்களொருவருமின்றிப் பர்ணசாலையும ஒன்று மில்லாதிருப்பினும் அழகாய்விளங்குகிற பழைய தான ஓராச்ரமததைக் கண்டு விச்வாமித்ர மாமுனியை நோக்கி 'மாமுனியே! மஹாநுபாவரே! இவ்விடம் மிகவும் அழகு பொருநதி ஓராச்ரமம்போல் தோற்றுகின றது. ஆனால் இங்கு ரிஷிகள் ஒருவரும் புலபபடவில்லை ஆகையால் இது வென்? முன்பு இது யாருடைய ஆச்ரமம்? இதைக்கேட்க விரும்புகின்றனன்' என்று வினவினன்.

அவ்வார்த்தையைக் கேட்டுப் பேசவல்லவராகிய விச்வாமித்ரமாமுனிவரும் அஹல்யையின் சாபத்திற்கு விடுமுறை நேரிட்டதே யென்று ஸந்தோஷமடைந்து மிகவும் ஒளி பெற்றுவிளங்கி ராமனைப் பார்த்து 'ராமா! இவ்வாச்ரமம் யாருடையதோ, யாருடைய கோபத்தினால் இது சாபமடைந்ததோ அம்மஹாநுபாவரை உள்ளபடி சொல்லுகின்றேன், கேளாய். முன்பு இது மஹாநுபாவராகிய கௌதம மஹர்ஷியின் ஆச்ரமம். இது மிகவும் பெருமை பொருந்தி விளங்கியிருந்ததுபற்றித்

தேவர்களுங்கூட இதை அதிகமாய்ப் புகழ்ந்துகொண்டிருந்தனர். பெருங்கீர்த்தி பொருந்திய அந்தக் கௌதம மாமுனிவர் தன் பத்னியாகிய அஹல்யையுடன் கூடி முனபு பல ஆண்டுகளாக இதில் தவஞ்செய்துகொண்டிருந்தனர்.

ஒருகாலத்தில் இந்திரன் அம்முனிவரில்லாத ஒரு ஸமயந் தெரியக் கண்டு அக்கௌதமமுனிவரைப் போல வேடம் பூண்டுவந்து அஹல்யையைப் பார்த்து 'ஓ மடந்தையர்மணியே! காமம் மீறிப் போகத்தை விரும்புகிறவர்கள் இஷ்டப்படி க்ரீடிப்பர்களேயன்றி ருது காலத்தை எதிர்ப்பார்த்திருக்கமாட்டார்கள். மேலும் பிரமனால் தனக்குப் படைப்பதிலுள்ள வல்லமை யெல்லாந்தோற்றும்படி ஒரு குறையுமின்றி நிருமிக்கப்பட்டு, மிகவும் அழகு பொருந்தி விளங்குகின்ற உன்னைக் கண்டால் எவனுக்குத்தான் மனந்தளராதிருக்கும்? உனது அழகான இடையைப் பார்த்து நான் இப்பொழுதே உன்னைப் புணர விரும்புகின்றேன்' என்று இங்ஙனம் வேண்டினன்.

அதைக் கேட்டு அஹல்யையும் தனக்குள் 'என் பர்த்தாவாகிய கௌதமமுனி எப்பொழுதும் இவ்வண்ணம வேண்டார். மற்றொருவனும இங்கு வர வல்லனல்லன். ஆனால் இந்திரனொருவனே வெகுநாளாக என்னை விரும்பியிருப்பதாகக் கேள்வி. ஆகையால் இவன் ஆயிரக்கண்ணனாகிய தேவேந்திரனே முனிவேடம் பூண்டு வந்தானாகவேண்டும்' என்றறிந்து வானவர்க்கரசனாகிய அவ்விந்திரனோடு புணரவேண்டுமென்னுங் குதூஹலங் கொண்டு மதி மயங்கி அதற்குச் சம்மதித்து அவனோடு கலந்தநுபவித்துத் தன்கருத்திடேறி மனமகிழ்ச்சியடைந்து அவ்விந்திரனைப் பார்த்து 'வானவர்கோனே!

நான் உன்னுடன் புணர்ந்து பயன்பெற்று மகிழ்ந்தேன். இனி இவ்விடம் விட்டு வேகமாய்ச் செல்வாயாக. நீ தேவர்களுக்கதிபதி; யாவர்க்கும் பெருமையைக் கொடுக்கவல்லவன. ஆகையால் ஒருவர்க்குந் தெரியாதபடி இவ்வண்ணஞ்செய்து உன்னையும் என்னையும் எப்பொழுதும் பாதுகாத்துக் கொள்வாயாக' என்று மொழிந்தனள்.

இந்திரனும் அதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே அஹல்யையைப் பார்த்து 'மங்கையர்க்கரசியே! நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். ஆகையால் இனி நில்லேன். வந்தவழியே போகின்றேன்' என்று சொல்லி இவ்வண்ணம் அம்மடந்தையுடன் கலந்து ஸுகித்து இடையில் கௌதமுனி வந்துவிடுவரோவென்று மனத்தில் அச்சங் கொண்டு விரைந்து அவ்வாச்ரமத்தினின்று வெளியே வந்தனன். அங்ஙனம் புறப்பட்டு வெளிவருகையில் பரிசுத்தமான தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து ஸமித்தையும் தர்ப்பத்தையும் எடுத்துக்கொண்டு அக்கினியைப்போல் மிகுந்த ஒளியுடன் ஜ்வலித்து விளங்குகின்ற கௌதமமஹர்ஷி உள்ளே புகுந்தனர்.

அம்மாமுனி தன் தவமகிமையால் தேவாஸுரர்களாலும் எதிரிடமுடியாதவர். அப்படிப்பட்ட தபோநிதியாகிய கௌதமமுனி ஆச்ரமத்துக்குள் நுழைந்து வருவதைக் கண்டு தேவேந்திரன் அச்சமுற்று நடுங்கி நலங்கொலைந்து முகவொளி மழுங்கி நின்றனன். உடனே நல்லொழுக்கம் பொருந்திய அக்கௌதமமஹர்ஷி முனிவேஷம்பூண்டு கொடுஞ்செயலுக்காக வந்த இந்திரனைக் கண்டு கோபாவேசங் கொண்டு 'அடா மதிகேடனே! நீ என் வேஷங் கொண்டு செய்யத்தகாத இச்செயலைச் செய்தனை. ஆகையால் உன் அண்டங்கள் இரண்டும் அற்று நபும்ஸகனைப்போலிருப்பாயாக' என்று சபித்தனர்.

இங்ஙனம் மஹாநுபாவராகிய அம்மாமுனி கோபாவேசங்கொண்டு சபிக்க, அந்த க்ஷணத்திலேயே ஆயிரக்கண்ணனாகிய அவ்வானவர்க்கரசனது அண்டங்களிரண்டும் அறுந்து கீழே விழுந்துவிட்டன. அப்படி தேவேந்திரனுக்குச் சாபங்கொடுத்து அம்முனி உடனே அஹல்யையைப் பார்த்து 'நீ இவ்வாச்ரமத்தில் அநேகமாயிரமாண்டுகள் வாயுபக்ஷணஞ் செய்துகொண்டு அந்நபாநாதிகளின்றி அதனால் வருத்தமடைந்து [1] இப்புழுதியில் புரண்டுருண்டு எவ்வகைப்ராணிகளுக்கும்புலப்படாதவளாகி வஸித்திருப்பாயாக. எப்பொழுது, யாவராலும் எதிரிடப்போகாதபராக்ரமம் பொருந்தியவனும் தசரதசக்ரவர்த்தியின் புதல்வனுமாகிய ராமன் பிழைத்து பயங்கரமாயிருக்கின்ற இவ்வாச்ரமத்துக்கு வருவானோ, அப்பொழுது அவனுடைய பாதாரவிந்தத்தின் [2] பராகம் பட்டுப் பரிசுத்தையாகி லோபமோஹங்களை

1. அஹல்யை புத்திபூர்வகமாக வியபிசாரம் செய்ததற்காகக் கௌதமமாமுனிவர் சாபரூபமாக ப்ராயச்சித்தம் விதித்தனர். ஆகையால் அஹல்யையைக் கல்லாகச் சபித்தாரென்று சொல்லலாகாது. ஆகையாலேயே (உனது உருவம் பெறுவாய்) என்கிற விடத்தில் முன்போல எல்லோருக்கும் புலப்படும்படியான உன்னுடைய தேஹத்தைப் பெறுவாயென்று பொருள் கொள்ளவேணும். ஆனாலும் 'ஸ ததஸ் தஸ்ய ராமஸ்ய பாதஸ்பர்ஸாந் மஹாத்மந:| அஹல்யைத் ஸ்வரூபா வநிதா ஸமாக்ராந்தா மஹாஸிலா' என்று பாத்மபுராணத்தில் அஹல்யைக்குச் சிலாரூபஞ் சொல்லப்பட்டது. இது கல்பாந்தரவ்ருத்தாந்தத்தை அநுஸரித்துச் சொல்லப்பட்டதென்று சிலர். மற்றுஞ் சிலர் பாத்மபுராணத்தை அநுஸரித்து அஹல்யை சிலையாகச் சபிக்கப்பட்டாளென்று கொண்டு, அதற்கநுகுணமாக (உனது உருவம் பெறுவாய்) என்கிற விடத்தில் நீ சிலாரூபத்தை விட்டு உனக்கு அஸாதாரணமாயுள்ள தேஹத்தைப் பெறுவாயென்று கருத்து கூறுகின்றனர்.

2 பராகம்-தூளி.

விட்டு அவனை அதிதிஸத்காரங் கொண்டு பூஜித்து என்னருகில் ஸந்தோஷத்துடன் மறுபடியும் உனது உருவம் பெறுவாய்' என்று சாபமிட்டுச் சாபத்திற்கு முடிவையுங் கூறினர். மிகத் [1] தேசுடையவரான அக் கௌதமமா முனிவர் கொடுந்தொழில் புரிந்த அவ் வஹல்யையைக்குறித்து இவ்வண்ணமுரைத்து இவ்வாச் ரமத்தை விட்டு ஸித்தர்களாலும் சாரணர்களாலும் எப்பொழுதுஞ் சூழப்பட்டு மிகவும் பாவநமாகிய இமய மலையின் சிகரத்திற் சென்று சாபங்கொடுத்த பாபத் துக்கு பராயச்சித்தத்தின்பொருட்டு மிகத்தவஞ் செய்த னர். நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

---

அஹல்யை சாபந் தீர்ந்து ராமனைப் பூசித்தல்.

பின்பு தேவேந்திரன் அண்டங்களற்று முகத்தில் வருத்தந்தோற்றும்படி மிகுந்த மனக்கலக்கமுற்று ரிஷிக் கூட்டங்கள் நிறைந்து சாரணர்களோடுகூடிய அக்நிமுதலான தேவர்களை நோக்கி 'மஹாநுபாவராகிய கௌதமமுனி ஸமஸ்ததேவர்களையும் தந்தம்பதத்தி லிருந்து நழுவச்செய்யும்படி மிகவுங்கோரமாகத் தவம் புரிந்திருக்கையில், அவர்க்குக் கோபத்தை யுண்டு பண் ணித் தவத்தைக் கெடுக்கும்பொருட்டு நான் இப்படிப் பட்ட செயலைச் செய்தனன். இக்காரியம் தேவர்களுக் காகவேயன்றி வேறில்லை. அம்முனியும் பெருத்த கோபாவேசங்கொண்டு எனது அண்டங்களைப் போக்கி னர். அஹல்யையையும் சபித்துவிட்டனர். எனக்கும் அஹல்யைக்கும் பெருஞ்சாபங் கொடுத்ததுபற்றி அவரு டைய தவங் குன்றிவிட்டதாகையால் நான் அவரது தவத் தைப் போக்கினேன். ஆகையால், தேவர்களே! நீங்க

1 தேசு-தேஜஸ்ஸு.

ளனைவரும் ரிஷிகளும் சாரணர்களுங்கூடி உங்களுக்கு ஸஹாயஞ் செய்த எனக்கு அண்டங்கள் உண்டாகும்படி செய்யவேண்டும்' என்று வேண்டிக்கொண்டனன்.

இங்ஙனம் இந்திரன மொழிந்த மொழிகளைக் கேட்டு அக்கிமுதலாகிய தேவர்கள் யாவருமே ஸகல மருத்துக்களோடுங்கூடிப் பித்ரு தேவதைகளிடஞ் சென்று 'இப்பொழுது யாகத்தில் உங்களுக்குப் பாகமாக ஏற்பட்டிருககிற இமமேஷங்களுக்கு அண்டங்கள் இருக்கின்றன. இந்திரனுக்கு அண்டங்கள் போயின. ஆகையால் இமமேஷத்தினண்டங்களைக் கொய்து இநதிரனுக்குக் கொடுக்கவேண்டும். அண்டங்களில்லாவிடில் அதனால் வரும் ஸந்தோஷம் குறையுமே யென்ன வேண்டாம். இவைகளை அண்டமற்றவையாகச் செய்த போதிலும் உங்களுக்கு மிகுநத ஸநதோஷத்தைக் கொடுப்பனவாகும். இதுவேயன்றி, உங்களுக்கு ஸநதோஷமுண்டாகும்பொருட்டு யாகஞ்செய்யும் மானிடவர்களும் அண்டமில்லாத மேஷத்தின மாம்ஸத்தையே கொடுப்பார்கள். அது உங்களுக்கு மிகுந்த ஸநதோஷத்தை விளைவிப்பதாயிருக்கும்' என்றனர்.

இங்ஙனம் அக்கி முதலிய தேவர்களின் வசநத்தைக் கேட்டுப் பித்ருதேவர்கள் யாவருங் கூடி அப்பொழுதே யூபஸ்தம்பத்திற் கட்டப்பட்டிருக்கிற மேஷத்தின் அண்டங்களைக் கொய்து வாங்கி இநதிரனுக்கு உபயோகப்படுத்தினர். காகுத்தனே! அது முதலாகப் பித்ருதேவதைகள் யாகங்களில் வந்து தமக்குக் கொடுக்கிற மேஷங்களினண்டங்களைப் போக்கியே அவைகளைப் புசித்து வருகின்றார்கள். மேஷங்களை அண்டங்களின்றியே தமக்குக் கொடுக்கிற மானிடவர்க்கும் அந்தப் பித்ருதேவதைகள் முன்போலவே பலன்களைக் கொடுக்

கின்றனர். இந்திரனும் மிகுந்த ப்ரபாவமுடைய கௌதம மஹர்ஷியின் தவமகிமையால் அண்டங்களற்று அது முதலாக மேஷத்தின் அண்டங்களைப் பெற்றவனாயினன்.

ராமா! நீ மிகுந்த மகிமையமைந்தவன. அப்படிப் பட்ட நீ இங்குப் புகும்வரையில்தான் இவ்வஹல்யைக்குச் சாபங் கிடப்பது. ஆகையால் நல்லொழுக்கமுடையவ ராகிய அம்மாமுனிவரின் ஆச்ரமத்துக்கு வந்து தேவ கன்னிகையைப்போல் ஒப்பில்லாத உருவம் பொருந்தி மிகுந்த பாக்கியசாலினியாகிய அவ்வஹல்யையைச் சாபத் தினின்றும் ஈடேறச் செய்வாயாக' என்று இவ்வாறு விச்வாமித்ரமாமுனிவர் சொல்லிமுடிக்க, அந்த வசனத் தைக் கேட்டு ராமனும் லக்ஷ்மணனோடுகூடி விச்வா மித்ர முனிவரை முன்னிட்டுக்கொண்டு அவ்வாச்ர மததுக்குச் சென்று அஹல்யையைக் கண்டனன்; மிகுந்த பாக்கியம் பொருந்திய அவ்வஹல்யையும் தன் பர்த்தாவின் சாபத்தின்படி வாயுபக்ஷணம் முதலிய தவப்பெருக்கினால் மேனமேலெனப் பெருகிவருகின்ற ஒளியுடன் விளங்கி மனிதர்களும் தேவர்களும் அஸுரர் களுமாகிய யாவராலும் அருகில் வநது கண்கொண்டு காணக்கூடாது நின்று, தனக்குள்ள வல்லமையனைத்தும் விளங்குமாறு மிக்க ஊக்கத்துடன் நெடுநாள் முயன்று நான்முகன படைத்தானென்னும்படி யாவருங் கண்டு மதிமயங்குதற்குரிய திவ்யரூபலாவண்யங்களுமமைந்து தேவர்கள் அனைவருங் கூடித தமது அற்புதசக்தியைக் கொண்டு நிருமிக்கப்பட்டவள்போலவும், விருக்ஷங் களுங் கொடிகளும் பூக்களுமாகிய இவைகளினிடையி லிருப்பது பற்றிப் பனியும் மேகமும் மூடிய பூர்ண சந்திரன போலவும், புகையுடன்கூடி யெரிகிற அக்நி போலவும், ஜலத்தின்மத்தியில் ப்ரகாசிக்கிற சூரிய மண்டலம்போலவும் தோன்றினள்.

அவ்வஹல்யையும் கௌதமமஹர்ஷியினுடைய சாப வசனத்தின்படி ராமதர்சனம்வரையில் யாவர்க்கும் புலப்படாதிருந்து அப்பொழுது சாபத்தின் முடிவு நேரிட்டதுபற்றி விச்வாமித்ரமாமுனி முதலியவர்களது கண்ணுக்குப் புலப்பட்டவளாயினள். அப்பொழுது ராமலக்ஷ்மணர்களிருவரும் மிக்க ப்ரபாவம் பொருந்திய கௌதமமுனியின் பத்நியாகிய அவ்வஹல்யையின் பாதங்களில் வீழ்ந்து வந்தனஞ் செய்தனர். அவ்வஹல்யையும் தன் பர்த்தாவாகிய கௌதமமஹர்ஷியின் மொழியை நினைத்து அவர்களைப் பூஜிக்க முயன்று மிக்க ஊக்கத்துடன் சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி அர்க்கியபாத்தியங்களைக் கொடுத்து அதிதிஸத்காரம் நடத்தக், காகுத்தனும் அதை அங்கீகரித்தனன்.

அப்பொழுது தேவர்கள் புஷ்பவர்ஷங்களைப் பெய்தனர்; துந்துபி வாத்தியங்களை முழங்கச்செய்தனர் கந்தர்வர்களும் அப்ஸரஸ்ஸ்த்ரீகளும் கூட்டங் கூட்டமாக வந்து ந்ருத்யகீதவாத்யங்களை நடத்தினர். அஹல்யையும் தனது தவமகிமையால் சரீரதோஷங்களற்று மிகப் பரிசுத்தியும் பெற்று, அப்பொழுது ராமன் வந்தது முதலிய விருத்தாந்தங்களை யெல்லாங் கண்டறிந்து யோகப்ரபாவத்தினால் அவ்விடம் வந்த கௌதமமஹர்ஷியின் வசஞ் சேர்ந்திருக்கக் கண்டு தேவர்கள் அனைவரும் நன்று நன்றென்று அம்மடந்தையைக் கொண்டாடினர். மஹாநுபாவராகிய கௌதமமஹர்ஷியும் வெகுகாலமாகப் பிரிந்திருந்த அவ்வஹல்யையுடன் கலந்து ஸுகத்தை அடைந்து ராமனை விதிப்படி நன்கு பூஜித்துப் பத்நியாகிய அஹல்யையுடன் பொருந்தி அவ்வாச்ரமத்தில் தவஞ்செய்யத் தொடங்கினர். ராமனும் அம்மாமுனியிடம் விதிப்படி நன்கு பூஜையைப் பெற்று அங்



274. அஹல்யா சாபவிமோசநம்.

கிருந்து புறப்பட்டு மிதிலாநகரத்தைக் குறித்துச் சென்றனன. நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமாதிகள் மிதிலைக்குப் போதலும், ஜநகன் விச்வாமித்ரரோடு ஸமபாஷித்தலும்.

பின்பு ராமன லக்ஷ்மணனோடு கூட விச்வாமித்ரமாமுனியை முன்னிட்டுக்கொண்டு அவ்வாச்ரமத்துக்கு வடகிழக்காகச் சென்று ஜநகமஹாராஜனது யாகசாலைக்குப் போய்ச் சேர்ந்தனன. அப்பொழுது யாகசாலையைக் கண்ட ராமலக்ஷ்மணர்களிருவரும் அவ்விச்வாமித்ரமாமுனியைப் பார்த்து 'மஹாபாக்யசாலியே! மஹாநுபாவனுகிய ஜநகமஹாராஜனது யாகஸம்பாரஸாமக்ரி மிகவும் அழகாகப் புலப்படுகின்றது. வேதங்களையோதியுணர்ந்தவர்களும் பல தேசாந்தரங்களில் வாஸஞ்செய்பவர்களுமாகிய ப்ராஹ்மணோத்தமர்கள் அநேகமாயிரம் பேர் இந்த யாகசாலையில் வந்திருக்கின்றனர். ரிஷிகள் வந்திறங்கிய விடங்களும் அக்நிஹோத்ரத்துக்குரிய ஸம்பாரங்களை யேற்றிக்கொண்டுவந்த வண்டிகள் நூறுநூறாக நிறைந்து விளங்குகின்றன. நாம இறங்கியிருப்பதற்குரியதான ஓரிடத்தை யேற்படுத்துவீராக' என்றனர்.

இவ்வண்ணமுரைத்த ராமனது வசநத்தைக் கேட்டு அம்மாமுனியும் ஜநக்கூட்டமின்றி ஜல ஸௌக்கியமும் பொருந்தி மிகப்பரிசுத்தமுமாகிய ஓரிடத்தில் விடுதி ஏற்படுத்தினர். அப்பொழுது விச்வாமித்ரமாமுனிவர் வந்திருப்பதைக் கேட்டு ஜநகமஹாராஜன் யாதொரு தோஷங்களுமின்றி மிகப்பரிசுத்தராகி விளங்குந் தனது புரோஹிதராகிய சதாநந்தரை முன்னிட்டுக்கொண்டு

மிக்க வணக்கத்துடன் வேகமாக எதிர்கொண்டனன். மஹாநுபாவர்களாகிய ஜநகனது ரித்விக்குக்களும் வெகு வேகத்துடன் அர்க்கியம் முதலியவற்றை யெடுத்துக் கொண்டுவந்து விதிப்படி மந்தரங்களைச் சொல்லி அம் முனிவருக்குக் கொடுத்து அதிதி ஸத்காரம் நடத்தினர். மஹாநுபாவனுகிய ஜநகமஹாராஜன் நடத்தின அதிதி பூஜையை அங்கீகரித்து விச்வாமித்ரமாமுனிவர் அம்மன்னவனைப் பார்த்து க்ஷேமத்தையும் யாதொரு தீங்குமின்றி யாகம் நடக்கும் விதத்தையும் விசாரித்துப் பின்பு வந்திருக்கிற ரித்விக்குக்களையும் புரோஹிதராகிய சதாநந்தரையும் க்ரமப்படிக [1] குசலம் விசாரித்துவிட்டு, அனைவரோடும்கூடி ஸந்தோஷித்திருந்தனர்.

பின்பு அம்மன்னவன் கையைக் கூப்பிக்கொண்டு அம்முனிவரை நோக்கி 'மஹாநுபாவரே! இம்முனிவர்களோடு கூடி ஆஸநத்தில் வீற்றிருப்பீராக' என்று வேண்டிக்கொள்ள, அதைக்கேட்டு விச்வாமித்ரமாமுனியும் ஆஸநத்தில் உட்கார்ந்தனர். பின்பு புரோஹிதராகிய சதாநந்தரும் மற்றுமுள்ள ரித்விக்குக்களும் உட்கார, ஜநகமன்னவன் தானும் தனது மந்திரிகளுடன் உட்கார்ந்தனன். இப்படி நான்கு புக்கத்திலும் ஆஸநங்களில் க்ரமப்படி யாவரும் உட்காரக்கண்டு பிறகு ஜநகமஹாராஜன் விச்வாமித்ரரைப் பார்த்து 'மாமுனியே! இப்பொழுதுதான் எனது யாகம் நிரம்பப்பெற்றது. தேவர்களும் எனது யாகத்தை ஸபலமாக்கிவிட்டனர். யாகம் அப்படி யிருக்கட்டும். உம்மைக் கண்ட காட்சியே எனக்கு யாகத்தின்பயன். நீர்

---

1 குசலம்-க்ஷேமம்.

முனிவர்களுடன் கூடி எனது யாகசாலைக்கு வந்தது பற்றி நான் மிகவும் தந்யனாயினேன். உமது கருணை யும் பெற்றேன்.

ப்ரஹ்மர்ஷியே ! கற்றுணர்ந்தவராகிய ரித்விக்குக் கள் யாவரும் எனது யாகம் முடிய இன்னும் பன்னி ரண்டு நாட்கள் இருக்கின்றனவாகச் சொல்லுகின்றனர். அவை கடந்தபின் தந்தமது ஹவிர்ப்பாகங்களை வாங்கிக் கொள்ள வருகின்ற தேவர்களைப் பார்க்கலாம்' என்று ரைத்து முகத்திற் சந்தோஷம் நிரம்ப மறுபடியும் அம் மாமுனியை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு இவ்வாறு வினவினன். 'மாமுனியே! உமக்குச சுபம் உண்டாகவேண்டும். இக்குமாரர்கள் இருவரும் யாவர்? உருவத்தைப் பார்க்கில் ஸ்ரீமஹாவிஷ்ணுவைப்போன்ற பராக்ரமமுடையவர்களாகத் தோற்றுகின்றனர். யானை யைப்போல் கம்பீரமாகவும் சிங்கத்தைப்போல் மிகக அழகாகவும், பெரும்புலியைப்போல் மிகப் பயங் கரமாகவும் மதித்த விருஷபத்தைப்போல் கர்வம் நிரம்பியதாகவும் இம்மஹாவீரர்களின் நடை புலபபடு கின்றது. இவரது கண்கள் தாமரை யிதழ்போல அகன்று செவ்வரியோடி யாவருங்கண்டு மதிமயங்கும் படி லாவண்ய வெள்ளங் குடிகொண்டு விளங்குகின்றன. இவ்விருவரும் கத்தி அம்பறாத்தூணி வில் என்னுமிவ் வாயுதங்களைத் தரித்திருப்பினும் பல ஆபரணங்களை யணிநதாற்போல் ப்ரகாசிக்கின்றனர். அசவிதேவதை களைப்போல் உருவத்தில் ஒப்பற்று அதற்கேற்ற யௌவ நப்பருவம பெற்றுப் பூமியில ஸஞ்சரிக்கவேண்டுமென் றெண்ணங்கொண்டு வநத அழகிய தேவகுமாரர்களோ வென்னும்படி தோற்றுகின்றனர்.

இக்குமாரர்கள் மிக மெதுவான இவ்வடிகளைக் கொண்டு எப்படி இக்கடுங்கானகத்தைக் கடந்து இங்கு வந்தனர். இவர்களது உருவத்தைப் பார்த்த மாத்திரத்தில்தானே கருத்தெல்லாம் நிரம்பினவரெனத் தோற்றுகின்றது. இங்ஙனம் இருக்க, யாது பயனை விரும்பி யாருக்காக இங்கு வந்தனர்? மாமுனியே! நீர் எல்லாமறிய வல்லவர். மேலான ஆயுதங்களைத் தரித்து மிகுந்த வல்லமையமைந்து விளங்குகின்ற இவ்விருவரும் எந்த மஹாநுபாவனுடைய புத்திரர்கள்? சந்த்ர ஸூர்யர்கள் ஆகாயத்தை விளங்கச் செய்வதுபோல் இவ்விருவரும் இத்தேசத்தை விளங்கச் செய்கின்றனர். உயரம் முதலிய தேகப்ரமாணத்தாலும், மனத்திலுள்ள கருத்தை வெளிப்படுத்துகிற சிரிப்பு முதலிய ஆகாரங்களாலும் பேச்சு நடை முதலிய சேஷ்டைகளாலும் ஒருவருக்கொருவரே ஒத்திருக்கின்றனர். [1] காகபக்ஷங்களைத் தரித்து இளமைப் பருவத்திலிருப்பவர்களாயினும் மிக்க வீரத்தன்மை பொருந்திய இக்குமாரர்களது விருத்தாந்தத்தை உள்ளபடி கேட்க விரும்புகின்றனன்' என்று மஹாபாநுவனாகிய அம்மன்னவன் மொழிந்தனன்.

விச்வாமித்ரரும் அவ்வுரைகளைக் கேட்டு மிக்க மகிமை பொருந்திய அவ்விருவரையும் தசரத சக்ரவர்த்தியின குமாரர்களெனத் தெரிவித்து, மேலும் ஸித்தாச்ரமத்துக்கு வந்தது, அங்கு யாகத்துக்கு விக்நஞ் செய்யவந்த ராக்ஷஸர்களைக் கொன்றது, ராக்ஷஸர் குடி புகுந்து வஸித்திருக்கிற அக்கடுங்கானகத்தில்

(1) ராஜபுத்ரர்கள் வைத்துக்கொள்ளும் முக்குடுமி. இதைப் பக்கக் குடுமியென்றும் சிறு குடுமியென்றும் கன்றுக்குடுமி யென்றும் ஜில்பா என்றுஞ் சொல்லுவார்கள்.

பூயமின்றி அவர்கள் நடந்து வந்தது, விசாலாபுரியைக் கண்டது, அஹல்யையைப் பார்த்தது, கௌதமரோடு கலந்தது, ஜநகனிடத்திலிருக்கிற பெரிய வில்லின் ஸாரத்தை அறியக்கோலி வந்தது ஆகிய இவை யெல்லாவற்றையும் மஹாநுபாவனாகிய ஜநகமஹாராஜனுக்குச் சொல்லி மிகப்ரபாவமுடைய விச்வாமித்ரமாமுனிவர் முடித்து நின்றனர். ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{சதாநந்தர் விச்வாமித்ரமுனிவரது சரித்திரத்தைக் கூறுதல்.}

மிருந்த மதியுடைய விச்வாமித்ரமாமுனி அவ்வாறு உரைத்த மொழிகளைக்கேட்டு மிகத் தவம் பொருந்தி மஹாதேஜஸ்வியுமாகிய சதாநந்தர் தம்சரீரமெங்கும் மயிர்க்கூச்சலடைந்தனர். [2] தவப்பெருக்கினால் அளவின்றி வளர்ந்து மிகவும் ஜ்வலிக்கிற தேககாந்தியையுடைய மஹாநுபாவராகிய அச்சதாநந்தர் கௌதமமஹர்ஷியின் மூத்த குமாரர். ஆனதுபற்றி அவர் ராமனைப பார்த்த மாத்திரத்திலேயே 'என் தாயைச் சாபத்தினின்று நீக்குவித்த ராமனது மகிமையே மகிமை' என்று மிக்கவியப்படைந்தனர். பிறகு அந்தச்

(1) ஆசாரய வைபவம அவசயம் அறியத்தக்கதென்னு மபிப்ராயங்கொண்டு இது முதலாகப் பதினைந்து ஸர்க்கங்களாலே விச்வாமித்ரரது சரித்திரத்தைச் சொல்லுகிறார் வால்மீகி சதாநந்தர் வாக்யத்தாலே.

(2) மிகத் தவமபொருந்திய கௌதமமஹர்ஷியின் புத்திரராகிய சதாநந்தரும 'பிதுஸ்ஸதகுணம் புத்ரஃ' எனகிற சொற்படி தகப்பனுக்கு மேலான தவபபெருக்குடையவரெனக் கருதி (தவப்பெருக்கினால்) என்றது முதலாக (கௌதமமஹர்ஷியின மூத்த குமாரர்) என்றதிருகச் சொல்லப்பட்டது.

சதாநந்தர் ராஜகுமாரர்களாகிய அவ்விருவரும் ஸுகமாக ஆஸநத்தில் வீற்றிருக்கக் கண்டு விச்வாமித்ர முனிவரை நோக்கி 'மாமுனிவரே! நெடுநாளாகப் புழுதியிற் புரண்டு காற்று மழை வெயில் பசி யென்னு மிவைகளைப் பொறுத்திருப்பதாகிய தவத்தைப் புரிந்து பெரும்புகழ்பெற்ற என் தாயைத் தசரதசக்ரவர்த்தியின் குமாரனுகிய ராமனுக்குக் காண்பித்தீரா? மஹாப்ரபாவமுடையவளும் பெருங்கீர்த்தி பெற்றவளுமாகிய அவ்வம்மை ஸமஸ்தப்ராணிகளும ஒருமித்துப் புகழுகைக்குரிய மஹாநுபாவனுகிய ராமனுக்கு வநத்திலுண்டாகுங் காய் கிழங்கு முதலியவற்றைக் கொண்டு அதிதி ஸத்காரம் நடத்தினளா? முன்பு தெய்வச்செயலால் என்தாய்க்கு இந்திரனைப்பற்றி நேரிட்ட கொடிய விருத்தாந்தத்தை ராமனுக்குத் தெரிவித்தீரன்றே? குசிகவம்சத்திற் பிறந்த மஹாநுபாவரே! உமக்கு நன்மை யுண்டாகவேண்டும். எனது அன்னையும் ராமனைக் கண்டு ஸத்காரம் முதலியவை நடத்தின பின்பு அம்மகிமையால் எனது தந்தையுடன கூடினளா? எனது தந்தையும் ராமனைப் பூஜித்தனரா? இமர்லயத்தினின்று அப்பொழுது எமதாச்ரமத்துக்கு வந்த மிக்க ப்ரபாவம் பொருந்திய எனது தந்தையும் மஹாநுபாவனுகிய ராமனிடமிருந்து அஹல்யாதாநமென்னும் பூஜையைப் பெற்றனரா? எனது தந்தை மனத்திற் சினம் மாறித் திரியவும் இவ்வாச்ரமத்துக்கு வரும்பொழுது ராமன் மனஊக்கங்கொண்டு நமஸ்கரித்தனனு'? என்று இவ்வண்ணம் வினவினர்.

அதைக் கேட்டு விச்வாமித்ரமாமுனியும் அவ்வாக்யத்தின் கருத்தையெல்லா முணர்நது பேசவல்லவராகிய சதாநந்தரைப் பார்த்து 'முனிவேழமே! சதா

நந்தா! நான் ஒன்றையும் மறந்துவிடவில்லை. எச் சமயத்தில் எதைச் செய்யவேண்டியது அவச்யமோ, அதையெல்லாஞ் செய்து முடித்துவிட்டனன். ரேணுகை ஜமதக்நியைப்போல் அஹல்யையும் கௌதமரோடு கூடினள்' என்றுரைத்தனர். விச்வாமித்ரர் மொழிந்த அவ்வசநத்தைக் கேட்டுச் சதாநந்தர் முகத்தில ஒளிபரவும்படி மிகவுங் களிப்புற்று ராமனைப் பார்த்து இவவாறு மொழிநதனர்.

மானிடவரில் சிறந்தவனே! ராகவா! உனக்கு நல்வரவுண்டாக வேண்டும். ராமா! எவ்வண்ணத்திலும் யாவராலும் எதிரிடவொண்ணாத வைபவமுடைய இவ்விச்வாமித்ரமஹர்ஷியை முன்னிட்டுக்கொண்டு நீ இவவிடம் வந்தது என் பாக்கியவசத்தினாலன்றி வேறில்லை. இவ் விச்வாமித்ரமாமுனி மனத்தினால் சிந்திக்கவும் முடியாத மேலான காரியங்களை நடத்தின மஹாநுபாவர். தவ மகிமையால் இவர் ப்ரஹ்மர்ஷியாகி ஒப்பில்லாத ஒளியுடன் விளங்கிநிற்பவர்; மிகுந்த ப்ரபாவமுடையவர். இவர் உனக்கு மேன்மேலும் பரமஹிதங்களை நடத்துபவரென்று நன்கு அறிவாயனறோ? மிகக்கடுமையான தவங்களை நடத்தின குசிகபுத்திரராகிய விச்வாமித்ரர் காப்பவராயிருப்பதுபற்றி இப்புவனியில் உன்னையொழிய பாக்கியசாலி மற்றெவனும் இல்லை. மஹாநுபாவராகிய இக்கௌசிகரது தவமகிமை எவ்வகைப்பட்டதோ, இவரது சரித்திரம் எவ்வண்ணங்கொண்டதோ, அதைச் சொல்லுகின்றேன்; அவதாநத்துடன் கேட்பாயாக.

தர்மத்தையே சரீரமாகப் பெற்றிருக்கின்ற இவவிச்வாமித்ரமுனிவர் வெகுகாலம் அரசனாயிருநது பகைவரைப் பறந்தோடச் செய்பவரும் தர்மங்களை யறிந்து நடத்துந் திறமுடையவரும் கல்விகளனைத்தையும் கற்ற

றிந்தவரும் ப்ரஜைகளுக்கு நன்மைசெய்வதிலூக்கமுடை யவருமாயிருந்தனர். இவரது வம்சபரம்பரையைச் சொல்லுகின்றேன், கேள். ப்ரஹ்மதேவனது குமாரன் குச னென்னும் ஓரரசன் உண்டு. அந்தக்குசனுக்குமிகுந்த பலமுடையவனும் மிக்க தார்மிகனுமாகிய குசநாப னென்று ஒரு புகல்வன் உண்டாயினன். அந்தக் குசநாப னுக்குக் காதியென்று ஒருவன் பிறந்தனன். மஹா தேஜஸ்வியாகிய இவ்விச்வாமித்ரமாமுனி அந்தக்காதி யின் குமாரர். இந்த விச்வாமித்ரரும் தமது பராக்ரமம் மிகுந்து எங்கும் விளங்குமாறு பல ஆயிரமாண்டுகள் அரசனாயிருந்து பூமியைப் பரிபாலித்துக்கொண்டு ராஜ்யஞ்செய்து வந்தனர். மிகவும் பராக்ரமசாலியாகிய இம்மஹானுபாவர் ஒருகாலத்திற் புறப்பட்டுச் சதுரங்க பலத்தையுங் கூட்டிக்கொண்டு அக்ஷௌஹிணிக்கணக் கில் நான்கு பக்கத்திலும் ஸைந்யங்கள் சூழப்பெற்றுத் தரணிமுழுதுந் திரிவதாகக் கோலி, நானா தேசங்களை யும் அதிலுள்ள பலவகை நகரங்களையும் [1]நதிநதங்களை யும் பர்வதங்களையும் புண்யாச்ரமங்களையும் க்ரமமாகச் சுற்றிக்கொண்டு வஸிஷ்டாச்ரமத்துக்கு வந்து சேர்ந்த னர்.

அது தழைத்தோங்கிய பலவகை விருக்ஷங்களால் எங்கும் நிறைந்து நெருங்கி அழகாயிருக்கும். அதில் சிங்கம் புலி யானை கரடி முதலிய பலவகை மிருகங்களும் கூட்டங்கூட்டமாக நிறைந்து திரிந்துகொண்டிருக்கும் பின்னும், அவ்வாச்ரமம் ஸித்த சாரண தேவ தானவ கந்தர்வ கிந்நர பந்நகர் முதலிய மஹானுபாவர்களால் எப்பொழுதும் எங்கும் நிரம்பப்பெற்று விளங்கும். அங்கு

---

1 நதிகள்-கிழக்குமுகமாகப் பெருகுமாறுகள். நதங்கள்—மேற்கு முகமாகப் பெருகுமாறுகள்.

மனிதர்களைக் கண்டு மான்கள் பயந்தோடாதிருக்கும். எவ்வகை மிருகங்களும் ஒன்றோடொன்று வைரமின்றி நேசம் பொருந்தியிருக்கும். அங்குப் பறவைகள் பலவும் உலாவிக்கொண்டிருக்கும். மேலும் அது ப்ரஹ்மர்ஷிகளாலும் தேவர்ஷிகளாலும் கூட்டங்கூட்டமாக நிறையப் பெற்று மிகவுமழகாயிருக்கும். இவ்வளவே யன்றித் தவஞ்செய்து ஸித்தி பெற்றவர்களும அக்னியை நிகர்த்தவர்களும் மஹாதேஜஸ்விகளும் ஜலத்தையே ஆகாரமாகக் கொண்டவர்களும் வாயுபக்ஷணமாத்திரத்தில் ப்ராணதாரணஞ் செய்பவர்களும் உலர்ந்த சருகு, காய் கிழங்குகளைப் புசித்து ஜீவித்துத் தவம் புரிபவர்களும் மனத்தை யடக்கி வென்றவர்களும கோபமற்றவர்களும ஐம்புலன்களை யடக்கி ஜயித்தவர்களுமாகிய ரிஷிகளும், ஜபஹோமங்களை யொழிவறச் செய்து விளங்கிய வாலகில்யமஹர்ஷிகளும்,[1] மற்றுமுள்ள வைகாநஸர் முதலிய முனிவர்களும் எங்கும் நிரம்பி அவ்வாச்ரமம் மிகப்பரிசுத்தமாயிருக்கும். இப்படி வேறொரு ப்ரஹ்மலோகம்போல் ப்ரகாசித்து நிற்கிற அவ்வஸிஷ்டாச்ரமத்தை அளவற்ற ஸைந்யத்தோடுகூடி ஜயசீலர்களிற்றலைவராகிய விச்வாமித்ரமன்னவர் கண்டு களித்தனர். [2]

ஐம்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1. ப்ரஹ்மாவினது வாலத்திலிருந்து உண்டான ரிஷிகள் வாலகில்யாகளென்றும் ப்ரஹ்மாவினது நகத்திலிருந்து உண்டான ரிஷிகள் வைகாநஸர்களென்றும் சொல்லப்படுகின்றனர். இங்கு 'யே நகாஃ, தே வைகாநஸாஃ. யே வாலாஃ, தே வாலகில்யாஃ' என்று சுருதி ப்ரமாணம்.

2 வஸிஷ்டருடைய ஆச்ரமத்தின் வைபவத்தை இங்ஙனம் பரக்கச் சொன்னது—இப்படிப்பட்ட மஹாநுபாவராகிய வஸிஷ்டமாமுனிவராலும் விசுவாமித்ரர் பூஜிக்கத்தக்க பெருமையுடையவரென்று தோற்றுகைக்காக.

றிந்தவரும் ப்ரஜைகளுக்கு நன்மைசெய்வதிலூக்கமுடை-யவருமாயிருந்தனர். இவரது வம்சபரம்பரையைச் சொல்லுகின்றேன், கேள். ப்ரஹ்மதேவனது குமாரன் குசனென்னும் ஓரரசன் உண்டு. அந்தக்குசனுக்கு மிகுந்த பலமுடையவனும் மிக்க தார்மிகனுமாகிய குசநாபனென்று ஒரு புதல்வன் உண்டாயினான். அந்தக் குசநாபனுக்குக் காதியென்று ஒருவன் பிறந்தனன். மஹாதேஜஸ்வியாகிய இவ்விச்வாமித்ரமாமுனி அந்தக்காதியின் குமாரர். இந்த விச்வாமித்ரரும் தமது பராக்ரமம மிகுந்து எங்கும் விளங்குமாறு பல ஆயிரமாண்டுகள் அரசனாயிருந்து பூமியைப் பரிபாலித்துக்கொண்டு ராஜ்யஞ்செய்து வந்தனர். மிகவும் பராக்ரமசாலியாகிய இம்மஹானுபாவர் ஒருகாலத்திற் புறப்பட்டுச் சதுரங்க பலத்தையுங் கூட்டிக்கொண்டு அக்ஷௌஹிணிக் கணக்கில் நான்கு பக்கத்திலும் ஸைந்யங்கள் சூழப்பெற்றுத் தரணிமுழுதுந் திரிவதாகக் கோலி, நாநா தேசங்களையும் அதிலுள்ள பலவகை நகரங்களையும் [1]நதீநதங்களையும் பர்வதங்களையும் புண்யாச்ரமங்களையும் க்ரமமாகச் சுற்றிக்கொண்டு வஸிஷ்டாச்ரமத்துக்கு வந்து சேர்ந்தனர்.

அது தழைத்தோங்கிய பலவகை விருக்ஷங்களால் எங்கும் நிறைந்து நெருங்கி அழகாயிருக்கும். அதில் சிங்கம் புலி யானை கரடி முதலிய பலவகை மிருகங்களும் கூட்டங்கூட்டமாக நிறைந்து திரிந்துகொண்டிருக்கும். பின்னும், அவ்வாச்ரமம் ஸித்த சாரண தேவ தானவ கந்தர்வ கிந்நர பந்நகர் முதலிய மஹானுபாவர்களால் எப்பொழுதும் எங்கும் நிரம்பப்பெற்று விளங்கும். அங்கு

1 நதிகள்-கிழக்குமுகமாகப் பெருகுமாறுகள். நதங்கள்—மேற்கு முகமாகப் பெருகுமாறுகள்.

யநுஸரித்து அவர்களைப்பரிபாலித்து வருகின்றாயன்றோ? வேலைக்காரர்களையும் நன்கு ஸந்தோஷிக்கச்செய்கின்றாயன்றோ? அவர்களும் உனது கட்டளை தவறாது நடந்து வருகின்றார்களா? நீ பகைவரைப் பறந்தோடச் செய்ய வல்ல பராக்ரமம் பொருந்தி விளங்குகின்றனை. ஆனது பற்றிச் சத்ருக்களனைவரும் தோற்புற்றுப் பறந்தோடினரன்றோ? சத்ருக்களைத் தபிக்கச்செய்யும் திறமுடைய மஹாவீரனே! உனது சதுரங்கபலங்களும் பொக்கிஷங்களும் நண்பர்களும் புத்திரபௌத்திரர்களும் க்ஷேமமா?' என்று வஸிஷ்டமாமுனிவர் கேட்க, விச்வாமித்ரரும் அம்மெய்த்தவரை நோக்கி மிக்கவணக்கத்துடன 'நீர் வினவியவை அனைத்தும் க்ஷேமமே' என்று பதிலுரைத்தனர்.

இங்ஙனம் பரமதார்மிகர்களாகிய அவ்விருவரும் நெடும்பொழுது மிகுந்த களிப்புடன் ஒருவருக்கொருவர க்ஷேமம் விசாரிப்பது பதிலுரைப்பதாகிய ஸல்லாபங்களைச் செய்துகொண்டு ஸந்தோஷித்திருந்தனர். ரகு குலமனைத்தையுங் களிக்கச் செய்யவல்ல மஹாநுபாவனே! ராமா! அவ்விருவரும் இவ்வாறு ஒருவர்க்கொருவர் பேசிமுடித்தபின்பு, வஸிஷ்டமாமுனிவர் புன்னகை பொடுகூடி விச்வாமித்ரரைப் பார்த்து 'மன்னவனே! நீ மிகுந்த விஸ்தாரத்துடன் இவ்விடம வந்தனை. ஆகையால் இச்சதுரங்கபலத்துக்கும் அளவிடவொண்ணாத மகிமைபொருந்திய உனக்கும் தகுந்தபடி விருந்து செய்ய விருப்பமுற்றிருக்கின்றனன். நீயும் எனது வேண்டுகோளுக்குட்பட்டு நான் செய்யமுயன்ற இவ்வதிதிஸத்

---

சம்பாதிப்பது அதை விருத்திசெய்வது, அதைக் காப்பது, நல்லொழுக்க முடையவர்களிடத்தில் அதை உபயோகப்படுத்துவது என்று ராஜமார்க்கம் நாலு வகைப்பட்டிருக்கும்.

காரத்தை அங்கீகரிக்கவேண்டும். நீ அரசனும், சிறந்த அதிதியுமாயிருக்கின்றனை. ஆனதுபற்றி உன்னை நான் யத்நத்துடன் பூஜிக்கவேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

விச்வாமித்ரரும் வஸிஷ்டர் மொழிந்த மொழியைக் கேட்டு மிகுந்தமதியுடையவரானது பற்றி அவருக்கு ச்ரமங்கொடுப்பது தகாதென்று மனத்திற் கருதி அவரைப் பார்த்து 'மஹாநுபாவரே! அதிதிஸத்காரஞ் செய்யவேண்டுமென்று மொழிந்த வசனமாத்திரத்திலேயே எனக்கு உம்மிடமிருந்து அபபூஜையெல்லாம் சேர்ந்துவிட்டது. இனி வேறொன்று செய்யவேண்டுமா? உமது ஆச்ரமத்திலுள்ள காய்கிழங்குகள், பாத்யம், ஆசமநீயம், மிகுந்த மகிமையெல்லாமமைந்த உமது தர்சநம் ஆகிய இவைகளைக் கொடுத்து ஸமஸ்த ப்ரகாரங்களாலும் என்னை நன்கு பூஜித்தீர் நான் பூஜிக்கவேண்டியிருக்க, நீர் இவ்வளவு என்னை ஸத்கரிப்பது எனக்கு மேலான பூஜையாயிற்று. மேலும் பூஜையேதுக்கு? இது மிகவும் கற்றறிந்தவராகிய உமக்குத் தெரியாதவிஷயமன்று. ஆனதுபற்றி நான் போய் வருகின்றேன். இதோ நமஸ்காரஞ் செய்கின்றேன். என்னை நேசத்துடன் நோக்கிக் கடாக்ஷித்தருள்வீராக' என்றனர்.

இப்படி விச்வாமித்ரர் எவ்வளவு வேண்டாமென்று வேண்டிக்கொண்டபோதிலும் அவ்வஸிஷ்டமாமுனிவர் ஆழ்ந்த மனமுடையராயிருப்பதுபற்றி மேன்மேலும் விருந்துண்ணும்படி வேண்டிக்கொள்ள, விச்வாமித்ரரும் அப்படியேயென்று அங்கீகாரஞ்செய்து வஸிஷ்டரைப் பார்த்து 'மாமுனிவரே! உமது மனத்துக்கு எப்படியாகில் களிப்புண்டோ, அப்படியே ஆகட்டும்' என்ற

னர். அதற்கு வஸிஷ்டமாமுனியும் மனக்கலக்கம் நீங்கி அளவற்ற ஸந்தோஷமடைந்து முகத்தில் மிகவும் ஒளி மேலெழப் பலவகைவர்ணங்களமைந்து அழகான காம தேனுவை அழைத்துக் கட்டளை இட்டனர்.

'சபளையே! கடுக வருவாயாக. நானொருவார்த்தை சொல்லுகின்றேன். அதை நீ கேட்க வேண்டும். நான இந்த ராஜர்ஷிக்கும் இவரது ஸைந்யங்களுக்கும் மிகச் சிறப்புடன் மேலானவிருந்து செய்ய உததேசித்திருக் கின்றனன். நீ அதற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சித்தப்படுத்தவேண்டும நீ வேண்டினவற்றையெல்லாம் கொடுக்கவல்லவளன்றோ? ஆனதுபற்றி ஆறுவகை ரஸங்களிலும் எவனுக்கு எது இஷ்டமோ, அதையெல் லாம் அவர்களுக்கு நீ எனனைப்பற்றி அளிக்கவேண்டும். ரஸாயநங்களும் பக்ஷ்யங்களும் பாநகங்களும் தேன முதலிய லேஹ்யங்களும் தயிர் முதலிய சோஷ்யங்களும் குவியலகுவியலாக அந்நங்களும ஆகிய வேண்டியவற் றை யெல்லாம் போரும்படி நிரும்ப்பாயாக. விளம்பிக்க வேண்டாம' என்றனர். ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---



விச்வாமித்ரர் காமதேநுவைத் தனக்குக
கொடுக்குமபடி வஸிஷ்டரை
வேண்டிக்கொள்ளுதல்.



பகைவரைப் பறக்கச்செய்யும் மஹாவீரனே! ராமா! வஸிஷ்டர் இங்ஙனம் மொழிநதபின்பு சபளையெனனும் காமதேனுவானது வேண்டினவற்றையெல்லாங் கொடுக் கவல்லமையுடையதுபற்றி எவனெவனுக்கு எப்படி வேண்டுமோ, அவனவனுக்கு அப்படியே வேண்டியவற் றையெல்லாம் நிரும்பித்துச் சித்தப்படுத்திவிட்டது.

கரும்பு, தேன, பொரி, புஷ்பங்களிலிறங்கிய மேலான கள், உயர்ந்த பசனகம், பலவகைப்பணியாரங்கள் ஆகிய இவை யெல்லாவற்றையும் சித்தஞ்செய்து கொடுத்தது. பின்னும் அவ்வாச்ரமத்தில் அப்பொழுதே சமைத்தன போல் சுடுகையாறமல் மலைகள்போல் குவியற்குவியலாகக் குவிந்த அந்நராசிகளும்; பாயஸம் முதலிய மேலான ஆஹாரவர்க்கங்களும், பருப்புகளும், அப்படியே ஆற்றங் கால்போல் பெருகிவருகின்ற தயிர்ப்பெருக்குகளும், பல வகை ருசிகளுண்டாகும்படி ஆறுரஸங்களுமமைத்துச் செய்யப்பட்ட அளவற்ற பக்ஷ்யவிசேஷங்களும் பலவகை ஆஹாரங்கள் நிறைந்த போஜநபாத்ரங்களும் கணக்கின்றிச் சித்தஞ்செய்யப்பட்டிருந்தன. ராமா! விச்வாமித்ரரது ஸைந்யத்திலுள்ள ஜநங்களனைவரும் வஸிஷ்டமாமுனிவரது விருந்தை வேண்டியவரையிலுண்டு மிகவும் களிப்புறறுச் சரீரம பூரித்து வலிவு பெற்றுப் பேராநந்தம் அடைநதனர்.

ராஜர்ஷியாகிய விச்வாமித்ரரும அவரது அந்தப்புரத்திலுள்ள மங்கைமார்களும் அவனுடன வந்த அந்தணர்களும் புரோஹிதர்களும் அப்படியே அவ்விருந்தையுண்டு மிக்க ஸந்தோஷமடைந்தனர். விச்வாமித்ரர் தன்னையும் தன்னுடன் காரியங்களை நிறைவேற்றும் பொருட்டும் ஆலோசனை செய்யும் பொருட்டும் வந திருக்கிற மந்திரிகளையும் வேலைக்காரர்களாகிய தனது பரிவாரங்களையும் வேண்டிய அளவுக்கு மேலாகஸத்கரித்ததைப்பற்றி அப்பொழுது மிகுநத ஸநதோஷமடைந்து, அம்முனிவரை நோக்கி 'அந்தணர்களில் தலைவரே! நீர் என்னைப் போன்றவர்களால் மிகவும் பூஜிக்கத் தக்கவர். இப்படியிருக்க, நீர் என்னை இங்ஙனம் அதிதிஸத்காரம் அபாரமாகச் செய்து நன்கு பூஜித்தீர். இதை

யொழிய மேன்மை எனக்கு யாதுந தோற்றவில்லை, அதெல்லாம அப்படி யிருக்கட்டும. பேசுவதில் நீர் மிககவலலமை அமைநதவர். ஆனதுபற்றி உம்மிடத்தில் ஒருவார்த்தை சொல்லுகினறேன; கேட்பீராக. உமக்கு லக்ஷம பசுக்களைக கொடுக்கினறேன. அவற்றை வாங்கிக்கொண்டு எனக்கு இந்தக் காமதேநுவைக் கொடுககவேண்டும். இது பசுஜாதிகளெல்லாவற்றிலும் மிகச்சிறப்புற்றது. ஆகையால் இதை ரத்நமெனத்தகும். ரதநங்களனைத்தும அரசனைச் சேரவேண்டுமெனபது உமககுத தெரியாத விஷயமனறே? ஆனதுபற்றி இதை எனக்குத் தரவேண்டும். தர்மத்தை ஆலோசித்துப் பார்க்கில் இது ராஜாவாகிய எனதே யன்றி அநதணராகிய உமதனறு’ என றிவவாறு மொழிநதனர்.

இங்ஙனம் அவ்விச்வாமித்ரர் மொழிய மஹாத்மாவாகிய அவ்வஸிஷ்டமுனிவர் இதைக் கேட்டும் தர்ம ஸ்வபாவராயிருப்பது பற்றித் தனது தர்மாநுஷ்டானங்களுக்கு ஸாதநமாகிய அக்காமதேநுவைக கொடுக்க முடியாமல் அவவரசனை நோக்கி ‘மஹாராஜனே! நீ எனது சபளை ஒனறுக்காக நூறாயிரம் பசுக்களைக் கொடுத்தாயாயினும் அதை நான் கொடுக்கத் தகாது. இதுவன்றி நீ நூறுகோடிப்பசுக்களைக் கொடுத்தாயாயினும் இக்காமதேநுவைக் கொடுக்கமுடியாது. இதுவுமன்றி நீ ராசி ராசியாக வெள்ளியைக் கொடுத்தாயாயினும நான இச்சபளையைக் கொடுக்கவல்லனல்லேன். நீ சத்ருக்களனைவரையும் அடக்கத்தக்க வல்லமையுடையவனென்று நானறிவேன். ஆயினும் ‘இப்படிப்பட்ட இம்மன்னவன் நமக்கு யாது கெடுதியைச் செய்வனோ’ என்று பயந்து இதைப் போகவிடுவேனோ? விடமாட்டேன். ஏனெனில் இது என்னிடத்திலேயே இருக்க

வேண்டுமென்றி எனனைத் தப்பி யிருக்கத் தக்கதன்று. மாதியாயிருப்பவனுக்குக் கீர்த்தி சாச்வதமாயிருப்பது போல எனக்கும் இது எப்பொழுதும் இடைவிடாது ஸ்திரமாயிருப்பதொன்று. இதற்குக் காரணஞ் சொல்லு கினறேன ; கேட்பாயாக. தேவர்களுக்குக் கொடுக்கிற ஹவ்யங்களும் பித்ருக்களுக்குக் கொடுக்கிற கவ்யங்களும் காலையிலும் மாலையிலும் நடநதேறி வருகின்ற அக்னி ஹோத்ரங்களும் பூதங்களுக்குக கொடுககிற பலிகளும் அமாவாஸ்யை பர்வம முதலியவற்றிற் செய்கிற ஹோமங் களும் இச்சபளையினாலேயே எனக்கு நடககவேண்டி யிருக்கினறன. இவையவையென்று பலபடச் சொல்லி யென்? எனது சரீரயாத்திரையும் இக்காமதேநுவின் அதீநமாகவே நடநது வருகினறது. ராஜர்ஷியே! உனக்குத் தெரியாதவையில்லை. ஸ்வாஹாகார வஷட்கார மந்த்ரங்களும் வேதம முதலிய பலவகைவித்யாப்யாஸங் களும நடக்கைக்குக் காரணம இக்காமதேநுவேயன்றி வேறில்லை. இதற்குச் சந்தேகமில்லை. மன்னவனே! இவையெல்லாமுண்மையாகச் சொல்லுகினறேன். எனக் குள்ள பொருளனைத்தும் இக்காமதேநுவேயன்றி வேறன்று. எனக்கு எபபொழுதும் ஆநநதத்தைக கொடுப்பதும் இதுவே. இப்பொழுது நான இங்ஙனம மொழிந்த காரணஙகளேயன்றி மற்றும் பல காரணங்க ளுமுண்டு. அவைகளைபபறறியும் நான இந்தப் பசுவை உனக்குக் கொடுக்க நேராது' எனறனர்.

வஸிஷ்டமாமுனிவர் இங்ஙனம் மொழிந்துநிற்க விச்வாமித்ரரும் மிகுநத பிடிவாதத்துடன் படபடப்புங் கொண்டு பேசுவதில் தனக்குள்ள வல்லமையனைத்தும் விளங்குமாறு மேன்மேலும் அம்முனிவரை நோக்கிக் கழுத்துக்குப் பொற்சங்கலிகள் பூட்டிக் காதுக்குப்

பொன்மாவெட்டிகள் மாட்டி அலங்காரஞ்செய்து அழகாய் விளங்கும் பதினாயிரம் யானைகளை நான் உமக்குக் கொடுக்கின்றேன். ஒவ்வொன்றிலும் நான்கு வெள்ளைக் குதிரைகள் பூட்டி அழகியசிறுமணிகள் கட்டி விளங்கும் எண்ணூறு பொனதேர்களை உமக்குத் தருகினறேன். விரதஙகளை நன்கு நடத்துந்தனமையுடைய மாமுனியே! மேலும் காம்போஜம் பாஹ்லிகம முதலிய நலல தேசங்களிலுண்டாகி மேலான ஜாதியிற் பிறநது மிகுந்த வலிவு பொருநதிச் சிறிய மணிகள் கடடி அலஙகாரமுஞ் செய்யப்பெற்று அழகிய குதிரைகள் பதினோராயிரம் உமக்குக் கொடுக்கினறேன். இவ்வாறேயனறிப பல வகை வாணங்கள் பொருநதி வேறுவேறாக விளங்குகினற ஒரு கோடி இளமபசுக்களைக் கொடுக்கின்றேன். சபலையை எனககுக் கொடுத்துவிடுவீராக. அந்தணர்களில் தலைவரே! உமக்கு ரத்நங்களாயினும் ஸுவர்ணங்களாயினும் எவ்வளவு வேண்டுமோ, அவையெல்லாவற்றையும் அவ்வளவுங கொடுக்கினறேன. இக்காமதேநு வொனறைமாத்திரம் எனக்குக் கொடுத்து விடுவீராக' எனறனர்.

இங்ஙனம் மிகுந்த மதியுடைய விச்வாமித்ர மனனவர் காமதேனுவைத் தரவேண்டிக் கேட்க, மஹாநுபாவராகிய வஸிஷ்டமாமுனிவரும் அம்மன்னவரைப் பார்த்து 'மஹாராஜனே! நான் இப்பசுவை எவ்விதத்திலாயினும் கொடுக்கமுடியாது. நீ கொடுக்கிற ரத்நம் முதலியவை யெல்லாம் எனக்கேதுக்காக? இதுவே எனக்கு ரத்நம். இதுவே எனக்கு தநம். எனது ஸகலஸொத்துக்களும் இதுவே. இதுவே எனக்கு ப்ராணன். அமாவாஸ்யைகளிலும் பௌர்ணமாஸிகளிலும் செய்யவேண்டிய செயல்கள் யாவும் எனக்கு

இதன் மூலமாகவே நடக்கின்றன. இதுவும் தவிர நன்கு தக்ஷிணைகளுடன் நடத்தப்படுகிற யாகங்களும் இக்காம தேநுவின மகிமையாலேயே எனக்கு நடந்தேறுகின்றன. பின்னும் பலவகைக் காரியங்களும் இதனால் நடக்கின்றன. இவ்வளவென்? நான் செய்யும் கர்மங்களனைத்துக்கும இதுவே மூலமாயிருக்கின்றது வீணாகப் பல சொல்லியெனை? நான் விரும்பியவற்றை யெல்லாங் கொடுக்கவற்றாகிய இக்காமதேநுவைக் கொடுக்கமாட்டேன்.' என்று இங்ஙனம மொழிந்தனர். ஐம்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

சபளை பலங்களை நிருமித்து விசவாமித்ரரது ஸேனையை அழித்தல.

இவ்வாறு வஸிஷ்டமாமுனிவர தமது காமதேநுவைக் கொடுக்க முடியாதென்று ஒரேமொழியாக மறுத்துரைத்து நிற்கும்பொழுது, விச்வாமித்ரமன்னவர் இவருடைய காமதேனுவைப் பலாத்காரமாக இழுத்துக்கொண்டு போகத் தொடங்கினர். ராமா! மிகவுந் தைரியசாலியாகிய விச்வாமித்ரமன்னவரால் அங்ஙனம் இழுக்கப்பட்ட சபளையானது வஸிஷ்டரைப் பிரிந்து போகின்றோமென்கிற சோகத்தினால் இளைத்து மிகவுந் துயரமடைந்து அழுதுகொண்டு தனக்குள் 'இவ்வரசனது சேவகர் என்னை மிகவருத்தங்கொண்டு தீனையாகி நிற்கும்படி பிடித்துக் கட்டி யிழுத்துக்கொண்டு போகின்றார்கள். இதேனோ? மஹாநுபாவராகிய வஸிஷ்டர் என்னைத் துறந்துவிட்டாரோ. அம்மஹர்ஷிக்கு நான் யாதோரபகாரமும் செய்யவில்லையே. எல்லாவற்றையு மறிந்த அம்மாமுனிவருக்கு எதுதான்தெரியாது? அப்படிப்பட்ட தார்மிகர் யாதோரபராதமும் செய்யா

மல் தனனிடத்தில் மிக்க பக்தியுடன் நடந்து தானும் அன்புடன் பாதுகாத்துவந்த என்னை இங்ஙனம் போக விடுவதற்கு யாது காரணமோ?' என்று சிந்தித்து அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, தனனை இழுத்துக்கொண்டு போகிற ராஜபடர்களைப் பலவகையாக உதறிவிட்டு வேகமாய்ச் சென்று மஹாநுபாவராகிய வஸிஷ்டரது பாதமூலததைச் சேர்ந்து அம்மாமுனியின் எதிரில நின்று அழுதுகொண்டு மேகத்தின் கர்ஜனை போலவும் துநதுபிவாத்தியத்தின் முழக்கம்போலவும் கம்பீரமாகச் சத்தமிட்டுக்கொண்டு அம்முனிவரை நோக்கி 'மஹாநுபாவரே நீர் என்னைப் போகவிட்டீரா? இல்லையாயின், என்னை ஏன் இந்த ராஜபடாகள் உம்மிடமிருந்துஇழுத்துக்கொண்டு போகின்றார்கள்? ப்ரஹ்ம புத்ரரே! நீர் எனனை விடத் தகுமா?" என்றுவினவிற்று.

அதைக் கேட்ட அந்த ப்ரஹ்மரிஷியும் மிகுந்த சோகத்தால் மனக்கலக்க முற்றுத் துக்கித்துத் தங்கையைப்போல் அழுதுகொண்டு நிற்கிற அநதச் சபளையை நோக்கி 'உன்னை நான் விடமாட்டேன். நீயும் எனக்கு யாதோராபகாரமுஞ் செய்ய மாட்டாய். உன்னை விடுவேனோ? மிகுந்த பலமுடைய இம்மன்னவன் தனது பலத்தின் மிகுதியால் மதித்து வழி தப்பி உன்னை இழுத்துக்கொண்டு போகின்றனன். அவனை அடக்கி உன்னை விடுவித்துக்கொள்ள எனக்கு இம்மன்னவனோடு நிகர்த்த பலமில்லை. தவமகிமையால் நிக்கிரகஞ் செய்யலாமென்றால், அவன் நமக்கு அரசனாயிருக்கின்றனன். அரசனைத் தவபலத்தினால் தண்டிப்பது யுக்தமல்லவே. அதிலும் விசேஷித்து அதிதி ஸத்காரஞ்செய்த இச்சமயத்தில் யாதுஞ் செய்யத்தகாது. இவ்வரசன் மிகுந்த பலம்பொருந்திய க்ஷத்ரியனாகிப்

பூமியையெல்லாம் பரிபாலித்து வருகின்றவன. பூமியைப் பாதுகாத்து வருகின்றவனை நிக்கிரகித்தால், அது மிகுந்த பாபத்துக்கிடமாகுமே. இச்சேனையோ ஸாதாரணமாகப புலப்படவில்லை. நிரம்ப ஓரக்ஷௌஹிணியா யிருக்கின்றது. இச்சைன்யம் குதிரைகளும் தேர்களும் நெருங்கி யானைகளும் கொடிமரங்களும் சூழ்ந்து மிகப் பயங்கரமாக விளங்குகினறது. இப்படிப்பட்ட ஸைந்யத்தையுடைய இம்மன்னவனன்றோ மிக்க பலிஷ்டன். ஆனதுபற்றி நாம் என்ன செய்யக் கூடும்' என்று மறுமொழி உரைத்தனர்.

மொழிகளின கருத்தையெல்லா மறியுந திறமுடைய அச்சபலையும் வஸிஷ்டரது மொழிகளைக கேட்டு மிக்க வணக்கத்துடன் கூடி அளவற்ற ஒளிபொருநதிய அநத ப்ரஹ்மரிஷியை நோக்கி, 'அநதணர்களிற் றலைவரே! க்ஷத்ரியனது பலத்தை ஒருபலமாகச் சொல்லமாட்டார்கள். ப்ராஹ்மணனன்றோ மேலான பலமுடையவன். அநதணரே! ப்ராஹ்மணனது பலம் மேலான மகிமையெல்லாமமைநது விளங்கவற்றாயிருக்கும். ஆகையால் க்ஷத்ரியபலததைககாட்டிலும் ப்ராஹ்மணனது பலம் மிகச் சிறநதது. ஆனதுபற்றி அந்தணர்களிற் சிறந்த உமது பலம் அளவிடமுடியாதிருக்கும். விச்வாமித்ரர் மிகுநத வீரத்தன்மை யமைந்தவராயினும் உம்மைக் காட்டிலும் பலிஷ்டரனறு. உமது பராக்ரமம வீரவராலும் வெல்லமுடியாதது. நீர் இங்ஙனம் மிகுநத மகிமையுடையவராகையால் உமது ப்ரஹ்மபலத்தைக் கொண்டு எனக்கு ப்ரபாவத்தைக் கற்பித்துக் கட்டளையிடுவீராக. கொடிய எண்ணங்கொண்ட இவ்வரசனது செருக்கையும் ஸைந்யத்தையும் இப்பொழுதே நாசஞ்செய்து விடுகின்றேன்' என்றுரைத்தது.

ரீராம! பெரும்புகழுடைய வஸிஷ்டமாமுனியும் அதைக் கேட்டு அச்சபலையை நோக்கி 'இச்சத்ருபலத்தை அழிக்கும்படியான ஸைநயத்தைப் படைப்பாயாக' என்று கட்டளையிட்டனர். அம்மொழியைக் கேட்டு அச்சபலையானது படையைப் படைக்க முயன்று 'ஹூம்பா' என்று சப்தஞ்செய்தது. அங்ஙனம் சபதித்தவுடனே பபலவரென்னும் சில ம்லேச்சர்கள் கணக்கின்றி உண்டாகி விச்வாமித்ரரது கண்முனபாகவே அவரது ஸைநயத்தை யெல்லாம் நிர்மூலமாகச் செயதுவிட்டனர். கௌசிகரும் தமது ஸைந்யம இவ்வாறு நிர்மூலமாய் விட்டதைக் கண்டு ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு சத்ருக்களினமீது முயன்று மிகக் கோபாவேசத்துடன் கண்களை மருட்டி விழித்துப் பலவகை அஸ்த்ரங்களை எய்து அந்தப் பப்லவர்களை அடித்து முடித்துவிட்டனர்.

இங்ஙனம் விச்வாமித்ரரால் பப்லவர்கள் அனைவரும் முடிநது போகக் கண்டு மிகக் கோபங்கொண்ட காமதேநுவானது மேலும சகர்களையும யவநர்களையும் நிருமித்துவிட அவர்களும் சண்பகமலரினொளியை நிகர்த்த தேககாநதி யமைந்து பொனமயமான ஆடைகளை உடுதது, மிகுநத வீரத்தன்மை பொருநதி நீண்ட கத்திகளையும பட்டயங்களையும கைகளிலுானறிகொண்டு பாரமுழுதும் எங்குப் பாரக்கிலும் தாமேயாகி நிறைநது பளபளவெனறு ஜ்வலிக்கிற அகநிபோல விளங்கி அவ விச்வாமித்ரரது ஸைந்யத்தையெல்லாம எரித்து விட்டனர். பிறகு விச்வாமித்ரரும் தமது பராக்ரமம் விளங்கும்படி அஸ்த்ரங்களை அநத ம்லேச்சர்கள்மீது ப்ரயோகிக்க, யவநா காம்போஜர் பப்லவர் எனனும அம்மிலேச்சர்கள் யாவரும் சிதறுண்டு புறஙகாட்டியோடிக் குழப்பமடைநதனர். ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

விச்வாமித்ரர் தோல்வியடைந்து பின்பு சிவனிடமிருந்து அஸ்த்ரங்களைப் பெற்று வந்து வஸிஷ்டருடன் போர்புரிதல்

பின்பு வஸிஷ்டமாமுனிவர் விச்வாமித்ரருடைய பாணவர்ஷங்களால் மனமயங்கிச் சிதறிப்போகின்ற ம்லேச்ச பலங்களைக் கண்டு காமதேனுவைப் பார்த்து 'யோக மகிமையால் இன்னும் சில படைகளைப் படைப்பாயாக' என்று கட்டளையிட்டனர். பின்பு அந்தக் காமதேநுவும் 'ஹும்பா' என்று கோஷிக்க, அப்பொழுது ஸூர்யனை நிகர்த்த ஒளிபொருந்திய காம்போஜர்கள் உண்டாயினர். மேலும் அப்பசுவின் மடியிலிருந்து கையும் கத்தியுமாகப் பப்லவர்கள் என்னும் ம்லேச்சர்கள் பிறந்தனர். பின்னும் அதன் மூத்ரத்வாரத்திலிருந்து யவநர்களும், மலத்வாரத்திலிருந்து சகர்களும், மயிர்க்கால்களிலிருந்து ம்லேச்சர்களும் ஹாரீதர்களும் கிராதர்களும் தோன்றினர். ரகுகுலத்திற் பிறந்த மஹாவீரனே! அவர்களனைவரும் வேறுவேறாக[1] ரத கஜ துரக பதாதிகளுடன் கூடிய விச்வாமித்ரரது ஸைந்யங்களை உடனே பறந்தோடச் செய்தனர்.

அப்பொழுது விச்வாமித்ரரது புத்திரர்கள் நூறு பேர்களும் தமது ஸைந்யங்களை வஸிஷ்டமஹர்ஷி தமது யோகமகிமையால் இங்ஙனம் நாசஞ்செய்யக்கண்டு, நாநாவிதங்களாகிய ஆயுதங்களைத் தரித்து, மிகச் சினங்கொண்டு நிற்கிற வஸிஷ்டமாமுனிவர்மீது எதிர்த்தோடிவர, அம்மாமுனியும் சிறந்த மகிமைகளெல்லாமமைந்திருப்பது பற்றித் தமது ஹுங்காரத்தினாலேயே அவர்களனைவரையும் தஹித்துவிட்டனர். அப்பொழுது அவ் விச்வாமித்ரரது குமாரர்களும் அவரது குதிரைகளும்

1 ரதம்-தேர். கஜம்-யானை. துரகம்-குதிரை. பதாதி-காலாள்.

தேர்களும் அவர்களைப் பின்றொடர்ந்த காலாட்களும் ஒன்றுந்தவறாமல் அந்தக்ஷணத்திலேயே நீறாய்விட்டனர். பெரும்புகழுடைய விச்வாமித்ரமன்னவரும் அப்பொழுது புதல்வர்களும படைகளும் மிகுதியில்லாமல் மாண்டுவிட்டதைக் கண்டு தமது பெருங்கீர்த்திக்குக் குறைநேரிட்டதேயென்று மிகுந்த வெட்கங்கொண்டு சிந்தையில் மூழ்கி அலையற்ற கடல்போல் யுத்தோத்ஸாஹமின்றி மழுங்கியும், பல்லைப் பிடுங்கின பாம்புபோல் யாதுஞ்செய்யச் சக்தியில்லாமலும், இராகுவினால் பிடிக்கப்பட்ட ஸூர்யன்போல் அப்பொழுதே ஒளியெல்லாங் குன்றியு மிருந்தனர்.

மேலும அம்மன்னவர் பிள்ளைகளும் படைகளும் முடிந்துபோனது பற்றி மிகவும வருந்தி இறகொடிந்த பக்ஷிபோலாகி மிடுக்கும் உத்ஸாஹமும் குலைந்து இச்சதுரங்க பலத்திற் சிறிதும் பயனில்லையென்றெண்ணி அதில் மிகவும மனவெறுப்புற்றனர். பின்பு அம்மன்னவர் யுத்தத்தில் தப்பிபபிழைத்து நின்ற தன புத்ரனொருவனுக்குப் பட்டங் கட்டிவைத்து 'அப்பா! நீ க்ஷத்ரிய தர்மத்துக்கிணங்க இப்பூமியனைத்தும் பாதுகாத்துவருவாயாக' என்று கட்டளையிட்டுத் தாம் காடேறச் சென்று, கிந்நரர் உரகர் முதலிய தேவகணங்கள் வஸிக்கக்கூடிய ஹிமாலயத்தினருகிற் போய்ச் சேர்ந்து அங்குத் தேவாக்குந் தேவனாகிய சிவபெருமானது அருள் பெறவேண்டிக் கடுமையாகத் தவம்புரிந்திருந்தனர்.

பின்பு இங்ஙனஞ் சிலகாலஞ்செல்ல எருத்துக்கொடியுடையானாகிய தேவாதிதேவன சிவபெருமான் தன்னைப் பற்றினார்க்கு வரங்கொடுக்குந் தன்மையனாகையால் மிகுந்த பலமுடைய விச்வாமித்ர மன்னவருக்குத் தர்சனங் கொடுத்து 'மனனவனே! நீ தவஞ்செய்வது ஏதுக்

காக? நீ மனத்திற் கருதியவற்றைச் சொல்வாயாக. நான என்னைப் பற்றினார்க்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பவன். ஆகையால் நீ விரும்பிய வரம் ஏதோ; அதைச் சொல்' என்றனன. மிகத்தவம்பொருந்திய விச்வாமித்ர மன்னவர் அவ்வுரைகளைக் கேட்டு அந்த மஹாதேவனுக்கு நமஸ்காரஞ் செய்து 'மஹாதேவனே! பாபங்களொன்று மின்றி யிருப்பவனே! உனக்கு என் மீது மிகுந்த ப்ரீதி இருக்குமாயின, தநுர்வேதங்களும் அதன அங்கங்களும் அவைகளுக்குள்ள ரஹஸ்யமந்த்ரங்களும் குருபதேசத்தினலறியவேண்டிய ரஹஸ்யார்த்தங்களும் எனக்குத் தாமே தோற்றும்படி அருள்புரிந்தளிக்கவேண்டும். பாபமற்றவனே! தேவர் தானவர் மஹர்ஷிகள் யக்ஷர் கின்னரர் ராக்ஷஸர் கந்தர்வர் முதலிய மஹானுபாவர்களிடத்தில் யாவையாவை அஸ்த்ர விசேஷங்கள உண்டு, அவையெல்லாம் எனக்குத் தோற்றும்படி யருளவேண்டும். நீ ஸாதாரண தேவதையோ? தேவர்க்கும் தேவனன்றோ? உனது அனுக்கிரகத்தினல் மற்றுமுள்ள மனோரதங்களும் நிறைவேறும்படி அருளவேண்டும்' என்று வேண்டிக்கொள்ள, அந்தத்தேவதேவனும் 'அப்படியே' என்று மொழிந்து அப்பொழுதே தனிடத்துக்குப் போய்ச்சேர்ந்தனன.

விச்வாமித்ரர் இதற்கு முன்னமே மிகுந்த பலமுடையவரும் க்ஷத்ரியத்தனம் முதலியவற்றால் வந்த மேலான கர்வங்கொண்டவருமா யிருந்தனர். இப்பொழுது மஹாதேவனது அனுக்கிரகத்தினலே சிறந்த அஸத்ரங்கள் பலவும் பெற்ற பினபு அவருடைய செருக்கு அளவிடமுடியாதிருக்குமன்றோ? அவவிச்வாமித்ரர் பர்வகாலத்தில் கடல் பொங்கி வருவதுபோல் மிக்கபராக்ரமத்துடன் மேன்மேலெனப் பெருகி வளர்ந்து

கொண்டு ரிஷிகளில் தலைவராகிய வஸிஷ்டரை 'இனி இவனெங்கே பிழைக்கப்போகின்றனன்? இதோ என்கை யிலகப்பட்டு முடிந்தானிவன்' என்று அப்பொழுதே நாசஞ்செய்து விட்டதாக நினைத்தனர். பின்பு அவ்விச் வாமித்ரவேந்தர் வஸிஷ்டரது ஆச்ரமப்ரதேசத்துக் குச்சென்று பலவகை அஸ்த்ரங்களை ப்ரயோகிக்க, அவ்வஸ்த்ரங்கள் தமது தேஜஸ்ஸினால் வஸிஷ்டரது ஆச்ரமத்தை முழுதும் எரித்துவிட்டன.

இங்ஙனம் விச்வாமித்ரர் தனது மோலான மதி யைக் கொண்டு ப்ரயோகஞ்செய்கிற அந்த அஸ்த்ரங் களைக் கண்டு அங்குள்ள முனிவர்களனைவரும் கூட்டங் கூட்டமாகப் பத்துத்திசைகளிலும் பறந்தோடி விட் டனர். அவ்வாச்ரமத்திலுள்ள வஸிஷ்டரது சீடர் களும் மிருகங்களும் பக்ஷிகளும் மிகவும் பயமுற்று ஆயிரமாயிரமாகத் தந்தமிருப்பிடங்களை விட்டு ஓடலா யினர். இங்ஙனம் மஹாநுபாவராகிய வஸிஷ்டரது புண்யாச்ரமும் கெட்டுப் பாழடைந்து மனிதர் மிருகங் கள் பக்ஷிகள மரங்கள் ஆகிய இவையெல்லாமற்று நிச் சப்தமாகிக கிளர்பூமியைப போலாய் விட்டது.

இவ்வளவுங் கண்டு வஸிஷ்டர் வெறுமனே இருக்க லாகுமா? அப்பொழுது அம்முனிவரும் 'இதோ ஸூர் யன பனியைத் தொலைப்பதுபோல் இவ்விச்வாமித்ரனை நாசஞ்செய்து விடுகின்றேன. ஒருவரும் பயப்படவேண் டாம்' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டே யிருந தனர். ஆயினும் அமமொழியைக காது கொடுத்துக் கேளாமலே யாவரும் பயநதோடிவிட்டனர். இங்ஙனம் வஸிஷ்டமாமுனிவர் ஆச்ரமத்தினின்று பயநதோடுகிற ஜநங்களுக்குச் சொல்லிவிட்டு, உடனே மிகவும் ஒளி மீறி விளங்கிக் கடுஞ்சினங்கொண்டு விச்வாமித்ரரை

நோக்கி, 'அடா மூடனே! இவ்வாச்ரமம் வெகுகால மாக வளர்ந்து மிகவுந் தவம்பொருந்தி விளங்கி வரு வதைச் சிறிதும் பாராட்டாமல் பாழாகச் செய்தனை. ஆனதுபற்றி நீ மிகக் கொடுஞ்செயலுடையவன். நீ உயிருடன் பிழைத்திருக்கத்தகுமோ? நீ இனி இருக்கப் போகிறதில்லை' என்று மொழிந்து கொண்டு கோபாக்நி மேலெழுந்தெரியப் புகையின்றி விளங்கிய காலாக்நி போலவும் மற்றொரு யமதண்டம்போலவும் ப்ரகா சிக்கிற தமது ப்ரஹ்மதண்டத்தை எடுத்துக் கொண்டு எதிரே வந்து நின்றனர். ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## வஸிஷ்டர் விச்வாமித்ரரை வென்றது

அங்ஙனம் வஸிஷ்டமாமுனிவர் மொழிந்த மொழி யைக் கேட்டு விச்வாமித்ரரும் மஹாபலசாலியானது பற்றி வெறுமனே இராமல் ஆக்நேயாஸ்த்ரத்தைக் கையிலெடுத்துக்கொண்டு 'வஸிஷ்டா! நில்லு நில்லு; உன்னைச் சும்மா விடுகிறதில்லை' என்று அதட்டினர். வஸிஷ்டபகவானும் மிககோபாவேசங்கொண்டு இரண் டாவது யமதண்டமோ வென்னும்படி மிகப்பயங்கரமா யிருக்கிற தமது ப்ரஹ்மதண்டத்தை எடுத்துக்கொண்டு 'அடா க்ஷத்ரியாதமனே! இதோ நீ சொன்னபடி நின் றேன் ஏதோ உனக்குண்டான பலத்தைக் காட்டுவாய். அடா காதிகுமாரனே! உனது கொழுப்பையும் நீ ஸம்பாதித்துக்கொண்டுவந்த அஸ்த்ரங்களின் செருக் கையும் நாசஞ் செய்துவிடுகின்றேன்; பார். க்ஷத்திரி யனாகிய உனது பலம் எங்கே? யாவரும் புகழும்படியான மேன்மையுள்ள எனது ப்ரஹ்ம பலம் எங்கே? க்ஷத்தி ரியகுலத்துப்பெருமையைக் கெடுக்கவந்த பாதகனே!

யாவராலுங் கொண்டாடத்தக்க எனது ப்ரஹ்மபலத்தை இதோ காட்டுகின்றேன; பார்' என்று சொல்லிக் கொண்டே யிருக்கையில் விச்வாமித்ரர் ப்ரயோகித்த பயங்கரமாகிய அவ்வாக்நேயாஸ்த்ரமானது ஜலம்பட்டவுடனே நெருப்பு வேகம்போல் அந்தப்ரஹ்மதண்டத்தின் மகிமையால் அடங்கிவிட்டது.

காதியின குமாரராகிய விச்வாமித்ரர் அவ்வளவோடு விடாமல மேலும் கிலேசின்று கோபம் மேலெழுந்து விளங்கி வாருணாஸ்த்ரம், ரௌத்ராஸ்த்ரம, ஐந்த்ராஸ்த்ரம், பாசுபதாஸ்த்ரம், ஐஷீகாஸ்த்ரம் ஆகிய இவ்வஸ்த்ரங்களை ஒரு தடவையிற் பிரயோகஞ்செய்தனர். பினனும் மாநவாஸ்த்ரம், மோஹநாஸ்த்ரம், காந்தர்வாஸ்த்ரம், ஸ்வாபநாஸ்த்ரம், ஜ்ரும்பணாஸ்த்ரம், மாதநாஸ்த்ரம், ஸந்தாபநாஸ்த்ரம், விலாபநாஸ்த்ரம, சோஷணாஸ்தரம், தாரணாஸ்த்ரம், யாவராலும் வெல்லமுடியாத வஜ்ராஸ்த்ரம், ப்ரஹ்மபாசம, காலபாசம், வாருணபாசம், பைநாகாஸ்த்ரம், தயிதாஸ்த்ரம், [1] சுஷ்காசநி, [2] ஆர்த்ராசநி, தண்டாஸ்த்ரம், பைசாசாஸ்த்ரம், க்ரௌஞ்சாஸ்த்ரம், தர்மசக்ரம், காலசக்ரம், விஷ்ணுசக்ரம், வாயவ்யாஸ்த்ரம், மதநாஸ்த்ரம், ஹயக்ரீவாஸ்த்ரம், இரண்டு சக்திகள் ஆகிய இவற்றை அவ்வஸிஷ்ட மாமுனிவர்மீது எய்தனர்.

இவ்வளவேயன்றிக் கங்காளாஸ்த்ரம், முஸலாஸ்த்ரம், மகிமைபொருந்திய வித்யாதராஸ்த்ரம், காலாஸ்த்ரம், தாருணாஸ்தரம், கோராஸ்த்ரம், காபாலாஸ்த்ரம், கங்கணாஸ்த்ரம் என்கிற இவ்வஸ்த்ரங்களை யெல்லாம் பிரயோகஞ் செய்தனர். எவவளவு அஸ்த்ரப்ரயோகஞ்

1 சுஷ்காசநி-நெருப்பிடி. 2 ஆர்த்ராசநி-நீரிடி.

செய்தபோதிலும் வஸிஷ்டர் மேலான தபஸ்வியாகை யால் அவரிடத்திற் சிறிதும் பயன்படாமற் போய்விட் டன. அது மிகவுமாச்சரியமாயிருந்தது. ப்ரஹ்மபுத்ர ராகிய வஸிஷ்டமாமுனிவர் விச்வாமித்ரர் பிரயோகித்த அவ்வஸ்த்ரங்களையெல்லாம் தமது ப்ரஹ்மதண்டத்தில் அடக்கிவிட்டனர். விச்வாமித்ரர் தமது அஸ்த்ரங்கள் அனைத்தும் அங்ஙனம் அடங்கிவிட்டது கண்டு ப்ரஹ் மாஸ்த்ரத்தை ப்ரயோகித்தனர். அங்ஙனம் ப்ரஹ் மாஸ்த்ரப்ரயோகஞ் செய்ய, அதைக் கண்டு அக்னி முத லிய தேவதைகளும் தேவரிஷிகளும் கந்தர்வர்களும் உர கர்களும் பெரிய குழப்பமுற்றனர். பல படச் சொல்வ தென்? ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோகித்தது கண்டு மூவுல கங்களும் நடுங்கிவிட்டன.

ராகவனே! மிகவும் பயங்கரமாகிய அந்த ப்ரஹ் மாஸ்த்ரத்தையும் வஸிஷ்டமாமுனிவர் ப்ரஹ்மவித்யாப் யாஸத்தினாலுண்டாகிய தமது ப்ரஹ்மதேஜஸ்ஸினால் மிகவும் மேன்மை பெற்று விளங்கிய ப்ரஹ்மதண்டத் தைக் கொண்டு அடக்கிவிட்டனர். அம்மஹாநுபாவர் அந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தையும் அங்ஙனம் அடக்கி நிற் கையில் அம்முனிவரது உருவமானது மூவுலகங்களும் மிகுந்த பயங்கொண்டு மதிமயங்கும்படி நெஞ்சிலும் நினைக்க முடியாததாகி மிக்க தாருணமாகத் தெரிபட் டது. அப்பொழுது அம்மஹாநுபாவருடைய மயிர்க் கால்களெல்லாவற்றினின்றும் புகை சூழ்ந்த பொறிகளை யுகுக்கின்ற அக்னியின் ஜ்வாலைகள் வெளிப்புறப்பட்டன போற்றோன்றின. அவ்வஸிஷ்டமாமுனிவர் கையிற் பிடித்திருந்த ப்ரஹ்மதண்டமும் புகையின்றி விளங்கிய காலாக்னிபோலவும் இரண்டாவது யமதண்டம்போல வும் ஜ்வலித்துக் கொண்டிருந்தது.

பின்பு முனிவர்கள் அனைவரும் அம்மஹர்ஷியைப் பார்த்து 'அந்தணர்களில் சிறந்தவரே! உமது ப்ரஹ்ம பலம அமோகமாயிருக்கின்றது. உமது மகிமையைக் கொண்டு அந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தினது தேஜஸ்ஸை அடங்கச செய்யவேண்டும். விச்வாமித்ரர் மிகத்தவம் புரிந்தவராயினும் உம்மிடந் தோற்றுபபோயினர். இனிக் கோபு மேதுக்காக? அருள்புரியவேண்டும். முனிவர் களிற் சிறந்தவராகிய உமது அனுக்கிரகத்தினால் உலகங் களெல்லாந துயரம் நீங்கியிருக்குமாக' என்று இவ்வாறு சொல்லிப புகழ்ந்து கொண்டனர். அதைக் கேட்டு மஹாதபஸ்வியும் மஹாதேஜஸ்வியுமாகிய அவவஸிஷ்ட மாமுனிவரும் கோபந் தணிநதனர். விச்வாமித்ரரும் தோல்வியடைநது பெருமூச்சு விட்டுக்கொண்டு 'சீ! க்ஷத்ரியபலத்தையும் ஒரு பலமாகச் சொல்லலாகுமா! ப்ரஹ்மதேஜஸ்ஸினாலுண்டாகிய பலமே மிகுநத பலம். இதுக்கு மற்றொரு நிதர்சநம் வேண்டுமோ? இதோ ஒரு ப்ரஹ்மதண்டத்தினால் எனது அஸ்த்ரங்களெல்லாம் அடி பட்டுப் பயனற்றவையாயின. இதுவே போராதா. இந தத் தாரதமயத்தை நன்கு ஆராய்ந்து மனத்தையும் மற்றும புலனகளையும் அடக்கித் தெளிவுறச் செய்து க்ஷத் ரியத்தனத்தால்வரும் அஹங்காரத்தை ஒழித்துவிட்டுப் பெருந்தவஞ் செய்து யான் ப்ராஹ்மண்யத்தைப் பெற வேண்டும்' என்று இவவாறு தனக்குள் மொழிந்து கொண்டனர். ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விசவாமித்ரர் தவஞ்செய்து ராஜர்ஷியாதல்.

ராகவனே! இங்ஙனம் வஸிஷ்டமாமுனியுடன் வீணு க வைரத்தை ஏறிட்டுக்கொண்ட அவ்விச்வாமித்ரமன னவர் தமக்கு நேரிட்ட மாநக்கேட்டைப் பலமுறையாகச்

சிந்தித்து மனங்கொதித்து அடிக்கடி பெருமூச்செறிந்து கொண்டு இருந்தனர். அவ்வளவேயன்றி வஸிஷ்டருக்கு இவர் யாதுஞ் செய்ய வல்லரல்லர். அவ்வளவு தவ மகிமை இவருக்கில்லை. ப்ரஹ்மஜ்ஞானிகளில் சிறந்த மஹானுபாவராகிய அவ்வஸிஷ்டருடன் வீணாக வைர மேற்கொண்டது பற்றித் தாம் செய்திருந்த தவமும் நசித்துப் போய்விட்டது. ப்ரஹ்மவித்துக்களிடத்தில் அபசாரப்பட்டால், அது எல்லா நன்மைகளையும் அழித்து விடுமல்லவா? ஆகையால் மறுபடியும் தவத்தினால் அவரை வெல்ல முயன்று பட்டமஹிஷியுடன் தென்திசைக்குச் சென்று அங்குக் (காய்கிழங்குகளை ஆகாரஞ்செய்துகொண்டு ஐம்புலன்களையுமடக்கி) மிகவும் பயங்கரமாகிய பெருந்தவஞ் செய்தனர். பின்பு அம்மன்னவருக்கு ஸத்யத்தில் நிலைநின்றவர்களும் தர்மத்தில் மனஞ்சென்றவர்களும் மிகுந்த பராக்ரமமுடையவர்களுமாகிய ஹவிஷ்யந்தன் மதுஷ்யந்தன் த்ருடநேத்ரன் என்னும் பிள்ளைகள் பிறந்தனர்.

பின்பு ஆயிரமாண்டுகள் நிரம்ப, உலகங்களுக்கெல்லாம் பாட்டனாகிய ப்ரஹ்மதேவன் வந்து, தவம்புரிகிற விச்வாமித்ரரை நோக்கிக் 'கௌசிகனே! நீ ராஜர்ஷிகளுக்குரிய உலகங்களையெல்லாம் வென்று கைக்கொண்டனை. இத்தவத்தினால் உன்னை ராஜர்ஷியாக அங்கிகரிக்கின்றனம்' என்று அதிமதுரமான மொழிகளை உரைத்துவிட்டு ஸர்வலோகங்களுக்கும் பரமேச்வரனாகிய அந்த நான்முகக்கடவுள் தனது ஒளி விளங்கும்படி ப்ரஹ்மலோகத்துக்குச் சென்றனன். அவனுடன் வந்திருந்த தேவர்களும் ஸ்வர்க்கத்துக்குப் போய்ச் சேர்ந்தனர்.

காகுத்தனே! விச்வாமித்ரரும் பிரமன் மொழிந்த உரைகளைக்கேட்டு மிகுந்த வெட்கமடைந்து தலைவணக்க முற்று மிகவுந் துக்கிததுப பரிதாபம் மேலிட்டு 'நான் மிகவும் பெரியதவஞ் செய்தனன. ரிஷிகணங்களோடு கூடிய தேவர்கள் அனைவரும் என்னை ராஜர்ஷியாகக் கொண்டனர். ஆனால் நான் செய்த பெரியதவத்துக்குப் பயன் இவவளவுமாத்ரமேயன்று. ப்ராஹ்மத்வமே அதுக்குத் தக்க பயன' என்று மனத்தில ஆலோசித்து மிக்க மனஉறுதி கொண்டு மேலான முயற்சியுடன முனசெய்த தவத்தைக்காட்டிலும் ஆயிரமபங்கு அதிகமெனனும் படி மீளவும் கடுமையான தவஞ் செய்தனர். இப்படி அவர் தவஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில் இக்ஷ்வாகுவம்சத்தை வளரச்செய்பவனாகிய த்ரிசங்கு வென்னும் ஓர் அரசன் இருந்தனன. அவன் உண்மையே உரைக்குநதனமையன்; ஐம்புலன்களையும் அடக்கி நடப்பவன். இப்படிப்பட்ட அவ்வரசனுக்கு 'யாகஞ் செய்து சரீரத்துடனே தேவதைகளின உயர்ந்த ஸ்தாநமாகிய ஸ்வர்க்கலோகத்தைப் பெறவேண்டும்' என்ற புத்தி பிறந்தது. அவன் தனது குலபுரோஹிதராகிய வஸிஷ்டரை வரவழைத்துத் தான் மனத்தில் நினைத்த காரியத்தை விண்ணப்பஞ்செய்தனன். அம்மஹாநுபாவரும 'சரீரத்தோடு ஸ்வர்க்கம் போவது முடியாது' என்று மொழிந்து அவனது முயற்சியைத் தடுத்துவிட்டனர்.

அம்மன்னவன் வஸிஷ்டர் அங்ஙனம் தடுத்தபிறகு அவரிடம் நசையற்று, அக்காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளும்பொருட்டுத் தென்திசைக்குச் சென்று மிக்க தேஜஸ்ஸுடன் விளங்குகின்ற வஸிஷ்டபுத்திரர்கள் நூறு பேர்களும் பெருந்தவம் புரிந்திருக்குமிடம் போய்ச் சேர்ந்தனன். அங்குப் பெருங்கீர்த்தியாகிய அந்த

வஸிஷ்டபுத்திரர்கள் தவம் புரிந்திருக்கக்கண்டு, மஹாநுபாவர்களாகிய அக்குருபுத்திரர்கள் அனைவர்க்கும்கிரமம் தவறாதபடி நமஸ்காரஞ்செய்து வஸிஷ்டரிடஞ்சென்று நிராகரிக்கப்பட்டு வந்ததுபற்றி வெட்கத்தினால் தலை வணக்கத்துடன் நின்றனன். அவ்வரசன் அவர்கள் அனைவரையும் நோக்கிக் கை கூப்பிக்கொண்டு 'குருபுத்திரர்களே! யான் சரணம் பெறவேண்டி வந்தனன். நீங்கள் சரணம் புகுந்தவர்களைக் காக்க வல்லர்களாகையால் உங்களை யான் சரணம் அடைகின்றனன். குலகுருவாகிய வஸிஷ்டரை முன்பே சரணமடைந்தேனாயினும் அம்மஹாநுபாவர் எனது அபிப்ராயத்தைத் தடுத்துவிட்டனர். நான் வேண்டிக்கொண்டது மற்றொன்றும் அன்று. நான் ஒரு பெரிய யாகத்தைச் செய்ய வேண்டிக்கொண்டனன். நீங்கள் அதற்கு அனுமதி செய்யவேண்டும். குருகுமாரர்கள் அனைவர்க்கும் நமஸ்காரஞ் செய்கின்றேன். நீங்கள் என்மீது அருள்புரியவேண்டும். தலையை வணக்கி நமஸ்காரஞ் செய்து, தவம்புரிந்து ப்ராஹ்மணர்களிற் சிறந்த உங்களை வேண்டிக் கேட்டுக்கொள்ளுகின்றேன். அப்படிப்பட்ட நீங்களும் அவதானத்துடன் நான் வேண்டிக்கொண்ட காரியத்தை நிறைவேற்ற முயன்று நான் இந்தச்சரீரத்துடனே தேவலோகஞ் செல்லும்படி என்னைக்கொண்டு யாகம் நடத்திவைப்பீர்களாக. வஸிஷ்டமாமுனிவர் என்னை நிராகரித்துவிட்டனர். நீங்கள் அனைவரும் தவத்தையே தநமாகக் கொண்டிருப்பவர்; மேலும் குருபுத்திரர்கள். ஆதலால் உங்களைத் தவிர யாகஞ் செய்விக்க மற்றோருபாயம் ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. இக்ஷ்வாகு வம்சததிற் பிறந்த மன்னவர் அனைவர்க்கும் புரோஹிதராகிய வஸிஷ்டரே மேலான கதி. கற்றுணர்ந்திருக்கிற புரோஹிதர்களே எப்பொழு

தும அரசர்களைக் கரையேற்றுவிக்கின்றனர். அப்படிப் பட்ட புரோஹிதர் ரக்ஷகராகாமற் கைவிட்டாரென் றால், அவருக்குப் பின்பு நீங்கள் யாவருமே என்னைத் தைவம்போற் காக்கவேண்டும்' என்றனன். ஐம்பத் தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ வஸிஷ்டபுத்திரர்களும் நிராகரிக்க, த்ரிசங்கு விசுவாமித்ரரை ஆச்ரயித்தல் }

ராமா! பிறகு வஸிஷ்டபுத்திரர்கள் நூறுபேர்களும் த்ரிசங்குவின் மொழிகளைக் கேட்டுக் கோபங்கொண்டு 'நீ மதிகெட்டுக் காரியஞ்செய்ய முயன்றமை பற்றி ஸத்ய வாதியாகிய உன்குரு அதற்குச் சம்மதிக்காமல் உன்னை நிராகரித்து விட்டனர். அப்படிப்பட்ட குருவை உல்லங் கனஞ்செய்து மற்றொரு அவலம்பநத்தை அடுப்பது எப் படி? இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்தார் அனைவர்க்கும் அவரே புரோஹிதரும் பரமாசார்யருமாகி யிருக்கின்ற னர். அவர் எப்பொழுதும் ஸத்யத்தையே உரைப்பவர். அப்படிப்பட்டவரது வார்த்தை சிறிதும் தாண்டத்தக் கதன்று. மஹாநுபாவராகிய வஸிஷ்டமஹர்ஷி அவ்வித யாகஞ் செய்யமுடியாதென்று சொல்ல, அப்படிப்பட்ட யாகத்தை நாங்கள்தான் எப்படி உனக்குச் செய்விக்க முடியும்? நீ மன்னவர்கள் அனைவரிலும் சிறந்தவனாயிருந் தும் இப்படிப்பட்ட ப்ரயத்தினஞ் செய்வது கண்டால் மூர்க்கனாகத் தோற்றுகின்றனை. நீ ஸுகமாக உனது நகரத்துக்குப் போய்ச்சேருவாயாக. அரசனே! அம் மஹானுபாவர் உனக்கு மாத்திரமேயன்றி, மூவுலகங் களுக்கும் யாகஞ் செய்விக்க வல்லவர். அப்படிப்பட்ட அம்மாமுனிவருக்கு அவமதியான காரியத்தை நாங்கள் எப்படி செய்யக்கூடும்?' என்றனர்.

இங்ஙனம் அந்த வஸிஷ்டபுத்திரர்கள் கோபாவேசங் கொண்டு எழுத்துக்கள் தழுதழுக்கும்படி உரைத்த அவ் வுரைகளைக் கேட்டு அம்மன்னவன் மீளவும் அவர்களை நோக்கி, 'குருவாகிய வஸிஷ்டர் முதலில் என்னை நிராகரித்தனுப்பினார். அப்படியே குருபுத்திரர்களும் நடத்திவிட்டனர். இனி மற்றொரு கதியைத் தேடிக் கொள்ளுகின்றேன். தபோதனர்களே! உங்களுக்கு நன்மை உண்டாக வேண்டும்' என்று மொழிந்தனன். அந்த வஸிஷ்ட புத்திரர்களும் அவ்வாக்கியத்தைக் கேட்டு 'அடா துர்ப்புத்தியே! உனக்கு நேரே குலகுருவும் ப்ரஹ்மபுத்திரருமாகிய வஸிஷ்டரை உல்லங்கனஞ்செய்து மற்றொரு புரோஹிதரை அடுக்க நினைத்தனை. இப்படிக் கொடிய எண்ணங்கொள்வதும் உண்டோ!' என்று மிகுந்த கோபங்கொண்டு 'நீ சண்டாளனாகக்கடவை' எனச் சாபமிட்டு உடனே அம்மஹானுபாவர்கள் தமது ஆச்ரமத்திற்குச் சென்றனர்.

பிறகு அன்றிரவு கடந்து பொழுது விடிந்தவுடனே அவ்வரசன் சண்டாளத்தன்மையடைந்தனன். அவனிடையில் விளங்கின்ற பீதாம்பரமானது சண்டாளர் உடுக்குங் கரிச்சிலையாயிற்று. முன்பு அவனிடத்தில் 'ப்ரகாசித்துக்கொண்டிருந்த ராஜதேஜஸ்ஸும் மறைந்து காணமுடியாத ஓர் கரியவண்ணம் அவனைக் கவர்ந்து கொண்டது. மஹாராஜலக்ஷணங்கள் அமைந்து ஸௌபாக்கியத்தை வெளியிட்டுக்கொண்டிருந்த அம்மன்னவனது சரீரஸௌந்தர்யமும் குலைந்தது. அவனது உருவம் பார்க்கப்பயங்கரமாயிற்று. நீண்டு நிகுநிகென்று கறுத்துக் கடைகுழன்ற கேசங்களும் குறுகிப் பருத்த செம்மயிர்த்திரளாயின. குமுகுமென்று மணங்கமழ்ந்து கொண்டிருந்த அழகான பூமாலையும் சவமாலையாயிற்று.

புனுகு ஜவ்வாது முதலிய வாஸனைகள் கலந்தணிந்த கலவைச்சாந்துஞ் சுடலைச்சாம்பலாய்விட்டது. சிறந்த மூகிய ரத்னங்கள் இழைத்த ஸுவர்ணாபரணங்கள் முழுதும் இரும்பாபரணங்களாயின.

அம்மன்னவன் அங்ஙனம் சண்டாளத்தன்மையடைந்திருப்பது கண்டு அவனுடன் வந்திருந்த மந்திரிகளும் பட்டணத்து ஜநங்களும் ஆகிய அனைவரும் அவனை விட்டுப் பிரிந்து ஓடிப்போயினர். அரசன் ஒருவனா மாத்ரமே தங்கி நின்றனன். அவன் அந்தத் துயரத்தினால் பகலுமிரவும் பரிதபிக்கப்பெற்றவனாயினும் மிகுந்த தைரியத்துடன் வஸிஷ்டருக்கு வைரியாகிக் கடுந்தவம் புரிந்திருக்கிற விசுவாமித்ரரிடம் சென்றனன். குருவினாலும் குருபுத்திரர்களாலும் தனது மனோரதம் விபலமாகச் செய்யப்பட்டுச் சண்டாளரூபமும் பெற்று இக பர லோக ஸுகங்களில் ஒன்றுமின்றி வருந்தலுற்றிருக்கிற, அம்மன்னவனை நோக்கி விச்வாமித்ரருக்கு மிகவுங் கருணை உண்டாயிற்று.

அம்முனிவர் தார்மிகோத்தமரும் மிகுந்த ப்ரபாவம் பொருந்தியவருமானது பற்றிக் கோரமான உருவங்கொண்ட அம்மன்னவனை நோக்கிக் கருணை மேலிட்டு 'உனக்கு நன்மை உண்டாகுக' என்று அனுக்கிரகஞ்செய்து 'அப்பா! மன்னவர்புதல்வனே! நீ இங்கு வந்த காரியமென்ன? மேலான உனது பலத்தை அடக்க எவர்க்கும் தரமன்று. மேலும், அயோத்திமாநகருக்கதிபதியாகினறனை. இப்படி வீரனாகிய உனக்குச் சாபத்தினால் சண்டாளத்தன்மை உண்டாவதற்குக் காரணமென்?" என்று வினவினர். வாக்கியங்களை உரைக்கவல்ல அம்மாமுனிவர் மொழிந்த மொழியைக்கேட்டுச் சண்டாளத்தன்மை அடைந்திருக்கிற அம்மன்னவன் வாக்கியந்

களின் கருத்தை அறிந்தவனுனது பற்றிக் கையைக் கூப்பிக்கொண்டு 'நான் ஒரு மனோரதத்தை உத் தேசித்து எனது குலகுருவையும் குருபுத்திரர்களையும் அந்த மனோரதத்தை யீடேறச்செய்யும்படி வேண்டிக் கொள்ள' அவர்கள் என்னை நிராகரித்துவிட்டனர். அம் மனோரதம் கைகூடாமற் போயிற்று. இப்படி அது ஈடேறுமற்போனது மாத்திரமன்றியே அதற்கு விபரீத மான பலனும் எனக்கு நேரிட்டது.

நற்கருத்துடையவரே! இந்தச்சரீரத்தோடுகூடவே ஸ்வர்க்கமேறவேண்டுமென்று எனக்கு ஓரெண்ணம் உண்டாயிற்று. நான் வீணுக அங்ஙனம் ஆசைப்பட வில்லை. அதற்காக நூறு யாகங்களைச் செய்தேன். அவைகளுக்குப் பயன் ஒன்றும் யான் பெறவில்லை. [1] பொய்யுரைப்பதினுல அந்த யாகத்தின் பயன் கெட்டுப் போயிற்றென்று நினைக்கவும் வழியில்லை. எப்படிப் பட்ட ஆபத்காலத்திலும் நான் இதுவரையில் ஒரு பொய் யுஞ் சொன்னதில்லை. இவ்விஷயத்தில் இப்பொழுது உம்மெதிரில் எனது க்ஷத்ரிய தர்மத்தின் மீது ஆணை யிடுகின்றேன். பல யாகங்களைச் செய்தனன். தர்மந் தவறுமல் பிரஜைகளைப் பரிபாலித்து வந்தனன். மஹா னுபாவர்களாகிய குருஜநங்களையும் விநயம் முதலிய எனது நற்குணங்களைக்கொண்டு சந்தோஷிக்கச் செய் தனன். இன்னும் என்ன செய்யக்கூடும்? இப்படி தர் மத்தைச் சம்பாதிக்கும் பொருட்டு யக்ஞஞ் செய்து கொ ண்டு அதற்காக யாகஞ்செய்ய முயன்று வேண்டிக்கொ ள்ள, எனது குருக்கள் அவ்விஷயத்திற் சந்தோஷம்

1 'யஜ்ஞோநாூதேந க்ஷரதி' என்று 'யாகம் பொய் சொல்லுவ தால் க்ஷயித்துப்போகும்' என்கிற வசநத்தை இவ்விடத்தில் கண்டு கொள்வது.

பெற்றிலர். இவையெல்லாவற்றையும் பார்க்கில் ஒருத்தரிடத்திலும் ஒருகுற்றமுஞ் சொல்ல வழியில்லை. தெய்வமே மேலென்று எனக்குத் தோற்றுகின்றது. அதுவே மனிதனுக்கு நன்மைதீமைகளை விளைவிக்கின்றதன்றி, மற்றெதுவுமன்று. பௌருஷத்தினால் பிரயோஜனமொன்றுமில்லை. அதனால் தெய்வத்தை மீறிப்போக முடியாது. ஆனதுபற்றி எனது தாமாநுஷ்டானங்களெல்லாம் வீணாய்விட்டன. தெய்வம் எல்லாவற்றையும் மறுத்துத் தானொன்றே மேலாகி நிற்கின்றது. அதுவே யாவற்றையும் உண்டாக்கவல்ல முக்கியகாரணம். ஆகையால் என்னைப்போன்றவன் என்ன செய்தால் எது உண்டாகும்? தெய்வம் நான் செய்கிற புருஷப்ரயத்நங்களெல்லாவற்றையும் பறக்கடிக்கின்றது. ஆனதுபற்றி மிகத்துயரங்கொண்டு நிற்கிற யான் உமது அநுக்கிரகத்தை வேண்டுகின்றனன். உமக்கு நன்மை யுண்டாகவேண்டும். என் மீது அருள்புரியவேண்டும். நான் மற்றெவரிடத்தும் போகேன். உம்மைத் தவிர மற்றெவரும் எனக்குத் திக்கன்று. வஸிஷ்டரே நேராக இனி அழைத்தாராயினும் நான் அவரைச் சரணம்புகேன். ஆகையால் உமது அநுக்கிரகமாகிய புருஷகாரத்தினால் ப்ரதிகூலமாகிய எனது தெய்வத்தைத் திருப்பி அநுகூலமாகச்செய்ய வேண்டும்' என்றனன். ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### விசவாமித்ரர் த்ரிசங்குவுக்காக யாகஞ்செய்ய முடன்றது.

சண்டாளனைப்போலவே உருவந்தரித்து நிற்கிற அம்மன்னவன் இங்ஙனம் வேண்டிக்கொள்ள, விச்வாமித்ரர் அருள்புரிந்து இங்ஙனம் இனிதாக மொழிந்

தனர். 'இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த மஹாராஜனே! குழந்தாய்! த்ரிசங்குவே! உனக்கு நல்வரவு உண்டாக வேண்டும். நீ மிகவும் தர்மிஷ்டனென்பது எனக்குத் தெரியும். உன்னை நான் காப்பாற்றுகின்றேன். நீ இனிப் பயப்படவேண்டாம். அரசர்களிற் றலைவனாகிய உனக்குப் பயம் தகுமோ? நீ நடத்துகிற யாகத்திற்குச் சகாயமாகும் பொருட்டு நற்செய்கையுடைய மஹர்ஷிகள் யாவரையும் வரவழைக்கின்றேன். அதனால் நீ ஸுகமாக யாகஞ் செய்யலாம். உனக்கு நேரிட்டிருக்கின்ற இச்சண்டாளரூபம் குருசாபத்தினாலுண்டானது பற்றிப் பிரமனாலுந் தடுக்கமுடியாது. ஆகையால் இவ்வுருவம் உன்னிடத்திலேயே இருக்கட்டும். ஆனாலென்ன? இத்தன்மையோடு கூடிய இச்சரீரத்துடனே நீ ஸ்வர்க்கலோகம் போவாய். விச்வாமித்ரன் சரணமடைந்தவர்களை எவ்விதத்திலும் கைவிடாது காப்பாற்றவல்லவன். அப்படிப்பட்டவனை நீ சரணம் புகுந்தனை. ஆகையால் ஸ்வர்க்கம் உன் கையிலிருப்பதாகவே நான் எண்ணுகின்றேன்' என்றிவ்வாறு மொழிந்தனர்.

பின்பு மஹாதேஜஸ்வியாகிய விச்வாமித்ரர் மிகவுந் தர்மிஷ்டர்களும் மிகக் கற்றறிந்தவர்களுமாகிய தனது புத்ரர்களைப் பார்த்து யாகஸம்பாரங்களைச் சித்தப் படுத்தும்படி ஆஜ்ஞாபித்துப் பிறகு சிஷ்யர்கள் அனைவரையும் அழைத்துக் 'குழந்தைகளே! நீங்கள் எனது ஆணையைக் கொண்டு சென்று ரிஷிகளையும் அவர்களது சிஷ்யர்களையும் ஸ்நேஹிதர்களையும் ரித்விக்குகளையும் வித்துவான்களையும் மற்ற அனைவரையும் அழைத்துவாருங்கள். நீங்கள் சென்று கூப்பிடும்பொழுது எனது வாக்ய பலத்தாலேவப்பட்டவன் எவனாவது அநாதரஞ்செய்து ஏதாவது மறுமொழி உரைப்

பானுயின், அவ்வுரைகள் அனைத்தையும் எனக்குச் சொல்லவேண்டும்' என்று ஆஜ்ஞாபித்து அனுப்பினர். அதைக்கேட்டு அச்சிஷ்யர்களும் குருவின் ஆணையைக் கொண்டு நான்கு திசைகளுக்குஞ் சென்று ஸகல தேசங்களிலுமுள்ள ப்ராஹ்மணர்களையும் அழைத்து வந்தனர். அப்படியே எல்லாத்தேசங்களினின்றும் வேதங்களை ஓதியுணர்ந்த முனிவர்கள் யாவரும வந்து சேர்ந்தனர்.

சிஷ்யர்கள் அனைவரும் மிகத் தேஜஸ்பொருந்தி விளங்கிய குருவினிடம் வந்து ப்ரஹ்மவாதிகள் அனைவரும் உரைத்த உரைகளை இங்ஙனம் மொழிந்தனர். உமது வார்த்தையைக் கேட்டு ப்ராஹ்மணர்கள் அனைவரும் வந்துகொண்டிருக்கின்றனர். மஹோதயனென்ற ஒரு முனிவனும் வஸிஷ்டபுத்ரர்கள நூற்றுவரும் தவிர, ஸகல தேசங்களிலுமுள்ள மற்றை யாவரும் வெகுவாக வந்து விட்டனர். வஸிஷ்டபுத்திரர்கள் நூறுபேர்களும் மஹோதயனும் மிகக்கோபங்கொண்டு எழுத்துக்கள் தெறித்து மறையும்படி உரைத்த உரைகளையெல்லாஞ் சொல்லுகின்றனம்; கேளீர். 'யாகஞ் செய்விப்பது ப்ராஹ்மணன் ஒருவனுக்கே தகும். இப்படியிருக்க, யாகஞ் செய்விப்பவன் க்ஷத்ரியனும். யாகஞ் செய்பவனோ சண்டாளனும். இது மேலும் விசேஷம். நல்லது நல்லது. அச்சண்டாளனது ஸபையில் வந்து தேவதைகள் எப்படி ஹவிர்ப்பாகம் பெறுவார்கள், ரிஷிகள் தாமாயினும் ரித்விக்குகளாகி யாகத்தின மிச்சமாகிய ஹவிஸ்ஸை எப்படி புசிப்பார்கள்? மஹாநுபாவர்களாகிய ப்ராஹ்மணர்களும் விச்வாமித்ரன் தம்மைப் ப்ரதுகாத்து வந்தானாயினும் சண்டாளனது அந்நத்தைப் புசித்து எங்ஙனம் ஸ்வர்க்கமேறவல்லர்?

என்று இப்படி மஹோதயனும் வஸிஷ்டகுமாரர்களும் கண்கள் சிவக்கும்படி மிகக் கோபாவேசங்கொண்டு கடோரமாகிய இம்மொழிகளை மொழிந்தனர்' என்றிவ்வாறு விச்வாமித்ரருக்குச் சிஷ்யர்கள் சொல்லி முடித்தனர்.

விச்வாமித்ரரும் அவர்களனைவரும் இங்ஙனஞ் சொன்ன சொற்களைக் கேட்டுப் பெருஞ்சினங் கொண்டு கண்கள் சிவந்து அந்தக் கோபாவேசம் உள்ளடங்காமல் 'மஹாநுபாவர்களின் தேஜோ விசேஷத்தினால் எவ்வித கெடுதியும் உண்டாகாதென்கிற நியாயம் ஒன்றில்லையோ? அதைப் பற்றியன்றோ சண்டாளனாயினும் அவனைக் கொண்டு யாகஞ் செய்விக்க யான் முயன்றனன். ஆகையால் நான் துஷ்டனாகக்கூடுமா? மேலும் நான் மிகக்கடுமையாகத் தவம்புரிந்தவனே. யுன்றி ஸாமர்த்யனன்று. இவை யெல்லாவற்றையும் அறியாமலும் எனது பெருந்தவத்தைக் கணிசியாமலும் என்னைத் தூஷிக்கிற துராத்மாக்கள் சாம்பலாகப்போகின்றனர். இதற்குச் சந்தேகமில்லை. இப்பொழுது அவர்கள் காலபாசத்தினால் கட்டுண்டிழுக்கப்பட்டு யமனது வீட்டுக்குச் செல்வார்கள். இவ்வளவேயன்றி அவர்கள் எழுநூறு ஜந்மங்கள் வரையிலும் எங்கும் உள்ள பிணங்களைப் பிடுங்கித் தின்றுகொண்டு முஷ்டிகரென்னும் ஹீநஜாதியிற் பிறந்து மன இரக்கமின்றி நாய் மாமஸத்தைத் தவறாது புசித்துச் செயல் பேச்சு முதலிய ஸகல வியாபாரங்களும் விகாரமாகி விகார ரூபமுங்கொண்டு இவ்வுலகமெங்குந் திரிவார்கள். மஹோதயன் துர்புத்தியாகித் தூஷிக்கத் தகாத என்னைத் தூஷித்தானன்றோ? அவனே ஸகலலோகங்களிலும் தூஷிக்கப்பட்டு வேடத்தனம் பெற்றுத் தயையற்றுப் பலாத்காரமாகப்

பிராணிகளைப் பீடிப்பதில் விருப்பங்கொண்டு வெருகால்ம் எனது கோபத்தினால துர்க்கதியைப் பெறவேண்டும்' என்றனர். பெருந்தவம் புரிந்து மஹாப்ரபாவம் பெற்ற விச்வாமித்ரர் ரிஷிகளின் இடையில் இவ்வளவு மட்டுஞ் சொல்லி நிறுத்திவிட்டனர். ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விச்வாமித்ரர் த்ரிசங்குவுக்காக மற்றொரு ஸ்வர்க்கம் நிருமித்தல்.

மிகப் பிரபாவம் பொருந்திய விச்வாமித்ரர் தமது தவமகிமையால் மஹோதயனுடன் வஸிஷ்டகுமாரர்கள் அனைவரையும் பாழாகச் செய்து ரிஷிகளின் இடையில் மீளவும் 'இவன் இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்தவன்; த்ரிசங்குவென்று எங்குங் கியாதி பெற்றவன்; மேலும், மிக்க தர்மம் பொருந்தியவன். தானஞ்செய்வதில் இவனுக்கொத்தவன் எவனுமில்லை. முன்பு க்ஷத்ரியனாயிருந்த இவன் இப்பொழுது சாபத்தினால் சண்டாளரூபம் பெற்று இந்தச் சரீரத்தோடுகூடவே ஸ்வர்க்கம் போகவேண்டி என்னைச் சரணமடைந்தனன். இவன் தனது சரீரத்துடனே ஸ்வர்க்கத்துக்குப் போகும்படி நீங்களும் நானுங்கூடி யாகத்தை நடப்பிக்கவேண்டும்' என்றனர்.

விச்வாமித்ரரது வார்த்தையைக் கேட்டு, மஹர்ஷிகள் அனைவரும் ஒருமித்துக்கூடி தர்மத்தை அறிந்தவர்களாகையால் தர்மம் பொருந்தியிருக்குமாறு தமக்குள் 'இவ்விச்வாமித்ர முனிவர் குசிகவம்சத்திற் பிறந்தவர்; மிகவும் கோபஸ்வபாவமுடையவர். ஆகையால் இவர் சொல்லியதை வெறுமெனச் செய்வதேயன்றி நன்றாகச் செய்து முடித்தேயாகவேண்டும். இதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால்.— இவர் அக்நியைப் போன்றவர்;

அபாரமகிமையுள்ளவர். நாம் இவருக்குக் கோபத்தை உண்டாக்கினோமாயின், நம்மைச் சபித்துவிடுவார் ஆகையால் நாம் இந்த யாகத்தை நடப்பிக்கவேண்டும் வெறுமெனே நடத்துவது மாத்திரமேயன்றி இவ்விக்ஷ்வாகுவம்சத்து மன்னவன் விச்வாமித்ரரது பிரபாவத்தினால் இச்சரீரத்தோடு கூடவே ஸ்வர்க்கத்துக்குப் போகும்படி இதை நடத்தவேண்டும். ஆனதுபற்றி அனைவரும் தொடங்கி ரித்விக்குகளாகி நின்று, நந்தமது காரியத்தை நிறைவேற்றவேண்டும்' என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு, அப்பொழுதே அனைவரும் அந்தந்தக்காரியங்களை நடத்தத் தொடங்கினர்.

அவ்வேள்வியில் மஹாதேஜஸ்வியாகிய விச்வாமித்ரர் அத்வர்யுவாயிருந்தனர். மந்திரங்களை நன்குணர்ந்த ரித்விக்குகள் யாவரும் சாஸ்த்ரங்களை அநுஸரித்துக் கல்பஸூத்ரங்களிற் சொல்லியபடி க்ரமந்தவறாமல் ஸகல கர்மங்களையும் நடத்தினர். பின்பு விச்வாமித்ரரும் தமது தவத்தின் மகிமையால் ஹவிர்ப்பாகங் கொடுப்பதற்காகத் தேவதைகள் அனைவரையும் மந்த்ரங்களைச் சொல்லி அழைத்தனர். மீளவும் மந்த்ரங்களைச் சொல்லி வெகு நேரமாக அழைத்தும் தந்தமது ஹவிர்ப்பாகத்தைப் பெறுதற்குத் தேவர்களில் ஒருவரும் வரவில்லை. பின்பு அம்முனிவர் மிகக் கோபாவேசங்கொண்டு ஹோமஞ் செய்கிற அகப்பையை உயர எடுத்துக்கொண்டு த்ரிசங்குவைப் பார்த்து 'த்ரிசங்கு மன்னவனே! உனது யாகம் அப்படி இருக்கட்டும். நான் சேர்த்து வைத்த எனது தவத்தின் பிரபாவத்தைப் பார். இதோ எனது தவமகிமையால் உன்னை ஸ்வர்க்கலோகத்துக்கு இத்தேகத்தோடுகூடவே போகச் செய்கின்றேன். மற்றொருவன் எப்பாடு பட்டபோதிலும் சரீரத்தோடு போகமுடி

யாத ஸ்வர்க்கத்துக்குச் சரீரத்துடன் போவாயாக. மன்னவனே! நான இத்தனை காலமாகச் செய்து ஸமபாதித்து வைத்த தவத்தின் பயன் சிறிதாயினும் இருக்கின்ற தன்றோ? அதற்குள்ள அஸாதாரணப்ரபாவத்தினால் நீ சரீரத்தோடுகூடவே ஸ்வாக்கத்துக்குச் செல்வாயாக' என்றனர்.

அம்முனிவர் அங்ஙனஞ் சொல்லுகையில் ரிஷிகள் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் அம்மன்னவன் அபபொழுதே ஸவர்க்கலோகம் போய்ச் சோநதனன். தேகதேதாடுகூடவே ஸ்வர்ககத்துக்கு வந்திருக்கிற° த்ரிசங்கு மனனவனைப பாாத்து, தேவேந்திரன ஸமஸ்த தேவர்களோடுங்கூடி 'த்ரிசங்குவே! மீளவும் போய்ச் சேருவாயாக. நீ ஸ்வர்க்கத்தில் வாஸஞ் செய்யத் தகுந்தவனல்லை. மதிகெட்டவனே! குரு சாபம் பெற்றுக் கெட்டுப் போயிருக்கிற நீ எங்கே? ஸ்வர்க்கம் எங்கே? போரும் போரும். தலை கீழாகப் பூமியில் விழுவாய்' என்றனன். அங்ஙனம் தேவேந்திரன் சொல்ல, த்ரிசங்குமன்னவன் தபோதநராகிய விச்வாமித்ரரைப் பார்த்து 'ஸ்வாமீ! என்னைக் காப்பாற்ற வேண்டும்' என்று கதறிக்கொண்டு மீளவும் பூமியில் வந்து விழுந்தனன். விச்வாமித்ரரும் அங்ஙனங் கதறிக்கொண்டு விழுகிற அம்மன்னவன் மொழியைக் கேட்டு மிகுந்த கோபாவேசங்கொண்டு 'த்ரிசங்கு! அவ்விடத்திலேயே நில்; நில்' என்று மொழிந்து மிக்க ஒளியுடன் விளங்கிய விச்வாமித்ரர் ரிஷிகளின் நடுவில் வேறொரு ப்ரஹ்மதேவனென்னும்படி நின்று, த்ரிசங்கு மன்னவன் இருக்குமிடத்தில் மற்றொரு ஸ்வர்க்கத்தை நிருமிக்க முயன்று, தெற்குத் திசையின் வழியில் வேறாகவே ஸப்த ரிஷிகளைப் படைத்தனர். இவ்வளவேயன்று; கோபங்

தலையெடுக்குமாயின், அது எதைத்தான் செய்விக்காது? அம்முனிமன்னவர் ரிஷிகளின் நடுவில் நின்றுகொண்டு தமது கீர்த்தி எங்கும் விளங்குமாறு தென்திசையில் புதிதாக வேறு நக்ஷத்திரங்களை வரிசையாகப் படைத்து அவ்வளவோடு நிற்காமல், கோபத்தினால் மனக்கலக்க முற்று 'மற்றொரு இந்திரனையாவது படைத்து விடுகின்றேன். இல்லையாயின், நான்படைத்த லோகத்துக்கு த்ரிசங்கு இருக்க, இந்திரனென்று மற்றொருவன் ஏதுக்காக வேண்டும்' என்று முயன்று இந்திரனாகிய த்ரிசங்குவுக்குப் பரிவாரமாகத்தக்க வேறுதேவர்களையும் படைக்கத் தொடங்கினர்.

அதைக் கண்டு தேவாஸுரர்களும் ரிஷிகளும் கூட்டங்கூட்டமாகி 'நமக்கெதிராக வேறு தேவர்களைப் படைத்தால், நாம் ஸஹிக்கமுடியுமா' என்று மிகவும் பரபரத்து, அம்மாமுனிவரிடம் வந்து பலவகை நல்வார்த்தைகளைச் சொல்லிக் கோபத்தைத் தணித்து 'மிகுந்த பாக்கியம் பொருந்தினவரே! உமக்குத் தெரியாதது யாதும் இல்லை. இவன் குருசாபத்தினால் கெட்டுப்போனவன். ஆனதுபற்றி இச்சரீரத்தோடு கூடவே ஸ்வர்க்கமேறத் தக்கவனல்லன்' என்றுரைக்க, அம்முனிமன்னவரும் அவர்களது வசனத்தைக் கேட்டு 'தேவர்களே! உங்களுக்குச் சுபம் உண்டாகவேண்டும். இந்த த்ரிசங்கு மன்னவனுக்குச் சரீரத்தோடுகூடவே ஸ்வர்க்கம் போகும்படி பிரதிஜ்ஞை செய்து யான் அதைப் பொய்யாகச் செய்யப்பொறேன். இந்த த்ரிசங்கு தன் சரீரத்தோடு நிலைபெற்றிருக்கிற இத்தேசமே சாச்வதமான ஸ்வர்க்கமாக வேண்டும். மேலும் இந்த லோகங்கள் எத்தனை காலமிருக்குமோ, அத்தனை காலமும் நான் படைத்த இந்த நக்ஷத்திரங்கள் யாவும் சாச்வத

மாயிருக்கவேண்டும். இதை நீங்கள் அனைவரும் ஒத்துக்கொள்ளவேண்டும்' என்றனர்.

அம்முனிவர் அங்ஙனம் மொழியத் தேவர்கள் எல்லோரும் 'மாமுனியே! அப்படியே ஆகட்டும். உமக்குச் சுபம் உண்டாகுக. நீர் நிருமித்த பலவகை நக்ஷத்திரங்கள் யாவும் ஆகாயத்தில் அநாதியாகிய சோதிமண்டல வழிக்கு வெளியில் சாச்வதமாக நிலைபெற்று விளங்குக. நீர் படைத்த இச்சோதிகளின் இடையில் த்ரிசங்கு மன்னவன் குருவினிடம் அபசாரப்பட்டது பற்றித் தலைகீழாகவே இருந்து மிக்க ஒளிபொருந்தித் தேவர்களைப் போல் விளங்கட்டும். இந்த மனனவர் தலைவன ஸ்வர்க்க லோகமடைந்தவரைப்போல் பயனெல்லாம் பெற்றவனாகிப் பெருங்கீர்த்தி அமைந்திருப்பான். இந்தச்சோதிகளெல்லாம் த்ருவனை ஸ்வர்க்கநக்ஷத்திரங்கள் தொடர்ந்து செல்வதுபோல, இவனைத் தொடர்ந்து போகட்டும்' என்றனர்.

தர்ம சிந்தையுடையவரும் மிக்க ப்ரபாவம் பொருந்தினவருமாகிய அவ்விச்வாமித்ரமாமுனிவரும் ஸகல தேவர்களாலும் ரிஷிகளாலும் துதிக்கப்பெற்றுத் தேவர்களை நோக்கி 'அப்படியே ஆகட்டும்' என்று மொழிந்தனர். புருஷோத்தமா! ராமா! பிறகு யாகம் முடிகையில், தவத்தையே பொருளாகப்பெற்று மஹாநுபாவர்களாகிய ஸகலமான முனிவர்களும் தேவர்களும் வந்தவழியே திரும்பிப் போயினர். அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ அம்பரீஷன் தனது யாகத்துக்குச் சுநச்சேபனை நரபசுவாக வேண்டிக்கொள்ளுதல். }

பிறகு ஆண்சிங்கமென விளங்கிய மஹாவீரரும் மஹாநுபாவருமாகிய விச்வாமித்ரமாமுனிவர் தமது

கட்டளையின்படி யாகத்திற்கு வந்திருந்த ரிஷிகள் யாவ ரும் புறப்பட்டுப் போகக் கண்டு தமது தபோவனத்தில் வாஸஞ்செய்கிற முனிவர்களை நோக்கி 'மஹாநுபாவர்க ளே! நாம் செய்ய முயன்ற தவத்திற்கு இந்தத் தென் திசையில் பெரிய இடையூறு உண்டாய்விட்டது. ஆகை யால் நாம் வேறொரு திசைக்குச் சென்று அங்குத் தவம் புரிவோம. மேற்குத்திசையில் மிக விசாலமாகிய தபோ வனங்கள் உண்டு. அதில் புஷ்கரதீர்த்தத்தின் கரைக ளிற் சென்று ஸுகமாகத் தவஞ் செய்வோம். அதுவன் றே தபோவனங்கள் அனைத்திலும் மேன்மை பெற்றது' என்றனர். இப்படி மஹாதேஜஸ்வியாகிய அம்முனிமன னவர் உரைத்து மேற்குத்திசைக்குச் சென்று அங்குக் காய்கிழங்குகளை ஆஹாரஞ்செய்துகொண்டு புஷ்கர தீர்த்தத்தின கரைகளில் யாவராலும் இடையூறு செய் யமுடியாதபடி மிகப் பயங்கரமாகத் தவஞ்செய்து கொண்டிருந்தனர்.

இக்காலத்திலேயே அயோத்யைக்கு மன்னவனாகிய அம்பரீஷனென்னும் அரசன் தான் ஒரு யாகஞ் செய்ய முயன்று நடத்திவருகையில் அவனது வேள்விக்குதிரை யை இந்திரன திருடிக்கொண்டு போயினன். அங்ஙனம் யாகபசு கண்ணுக்குப் புலப்படாமற் போகையில் புரோ ஹிதர் அரசனைப் பார்த்து 'மன்னவனே! நீ ஊக்கமற்றி ருந்ததுபற்றி உனதுயாகக்குதிரையை இப்பொழுது யா ரோ கொண்டுபோய்விட்டனர். ஆகையால் அது புலப் படவில்லை. இங்ஙனம் ஊக்கமின்றி வேள்விப்பசுவைப் பத்திரமாகக் காப்பாற்றுவிடில் அந்தப்பசு கெட்டுப்போ வது முதலிய தோஷங்கள் பலவும் உண்டாகி அரசனைக் கெடுத்துவிடும். இப்பொழுது இப்பசு கெட்டுப்போன தற்குச் செய்யவேண்டிய ப்ராயச்சித்தமோ நிறைவேற்ற

மிகவும் அரிதாயிருக்கின்றது. இந்த யாக காரியந் தொடங்குவதற்கு முன்னமே கெட்டுப்போன பசுவைத் தேடிக்கொண்டு வருவாயாக. இல்லையாயின் எவனை யாவது ஒருமனிதனை இந்த யாகத்திற்குப் பசுவாக விரைவிற் கொண்டுவருவாயாக' என்றுரைத்தனர்.

இங்ஙனம் உபாத்தியாயர் மொழிந்த மொழிகளைக் கேட்டுப் பேரறிவு பெற்றுப் புருஷர்களிற் சிறந்த அவ் வம்பரீஷமன்னவன அநேகமாயிரம்பசுக்களைக கொடுத்து நரபசுவைத தேடிக்கொண்டுவர முயன்று புறப்பட்டு அந்தந்த நாடுகளும நகரங்களும் காடுகளும் ரிஷிகள் வஸித்திருக்கிற புண்யாச்ரமங்களுமாகிய ஒவ்வோரிடத் திலும் தேடிக்கொண்டு சென்று எங்கும் நரபசுவைப் பெறுமல் ப்ருகுதுங்கமென்னும் ஓர் பர்வதத்துக்குச் சென்று அங்கு ரிசீகரென்னும் மாமுனிவர் தமது பிள்ளை களோடும் மனைவியோடும ஸுகமாக வாஸஞ்செய்து கொண்டிருக்கக் கண்டனன். மஹாதேஜஸ்வியாகிய அவ் வம்பரீஷனென்னும் ராஜர்ஷி தவப்பெருக்குற்று மிக்க ஒளியுடன் விளங்குகிற அந்த ப்ரஹ்மரிஷியைக் கண்ட மாத்திரததிலேயே மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அதனால் வடிவெங்கும் ஒளி விளங்கப்பெற்று அம்முனி வருக்கு நமஸ்காரஞ் செய்து அவரை அருள்புரியச் செய்து எல்லாவற்றிலும க்ஷேமம் விசாரித்து 'மஹாநு பாவரே! யான் ஒரு யாகஞ் செய்யத் தொடங்கி அந்த யாகத்தின பசு கெட்டுப்போகையில் அதற்குப் பதிலாக நரபசுவை வேண்டுகின்றனன. நான் உமக்கு நூறாயிரம் பசுக்களை விலையாகக் கொடுக்கின்றேன். அதைப் பெற் றுக்கொண்டு உமது புதல்வர்களில் ஒருவனை யாகத்துக் குப் பசுவாக எனக்குக் கொடுப்பீராயின, நான் காரியங் கைகூடப் பெறுவேன். ப்ருகுவம்சத்திற் பிறந்த மஹா

பாக்யசாலியாகிய ரிசீகமுனிவரே! தேசங்களெல்லாம் போய்ச் சுற்றிப் பார்த்தனன். ஆயினும் எங்கும் நரபசு அகப்படவில்லை. உமது புதல்வர்களில் ஒருவனை விலை பெற்றுக்கொண்டு எனக்குக் கொடுக்கவேண்டும்' என்று கேட்டுக் கொண்டனன்.

அதைக் கேட்டு மிகத்தேசுபொருந்திய ரிசீகமுனிவரும் 'மன்னவனே! நீ என்ன விலை கொடுத்தாயாயினும் எனது மூத்த குமாரனைக் கொடுக்கமாட்டேன்' என்று திரமாகச் சொல்லிவிட்டனர். மஹாநுபாவர்களாகிய அப்புதல்வர்களின் தாயும், மிகத்தவம் புரிந்த ரிசீக முனிவர் இங்ஙனம் மொழிந்தது கேட்டு அம்பரீஷமன்னவனைப் பார்த்து 'வேந்தே! ப்ருகுவம்சத்திற் பிறந்த இம்மஹாநுபாவர் மூத்த குமாரனை விற்கமாட்டேனென்று மொழிந்து விட்டனரன்றோ? எனக்கும் கடைசிப் புதல்வனாகிய சுநகன் என்பவன் மிகவும் அன்புக்கிடமாயிருக்கின்றனன். மன்னவனே! ஆதலால் கடைசிக்குமாரனை உனக்குக் கொடுக்கமாட்டேன். நான் விபரீதமாக யாதுஞ் சொல்லவில்லை. மஹாராஜனே! பெரும்பாலும் தந்தைகளுக்கு மூத்த பிள்ளைகளிடத்திற் பிரீதி அதிகம் என்பதும், அப்படியே தாய்மார்களுக்குக் கடைசிக்குமாரர்களிடத்திற் பிரீதி அதிகமென்பதும் உலகத்திலெங்குமுள்ள வழக்கமேயன்றி வேறில்லை. ஆகையால் கடைசிப்புதல்வனை யான் காத்துக் கொள்ளுகின்றேன்' என்றனள்.

ராமா! இங்ஙனம் அந்த ரிசீகமுனிவரும் அம்முனிவரது மனைவியும் மொழிந்து விடுகையில், நடுவிற்பிள்ளையாகிய சுநச்சேபன் என்பவன் தானாகவே அரசனைப் பார்த்து 'மஹாராஜனே! எனது தகப்பன் மூத்தகுமாரனை விற்கமாட்டேனென்றனன். தாயும் கடைசிக்

குமாரனைக் கொடுக்கமாட்டேனென்றனள். ஆகையால் நடுப்பிள்ளையாகிய என்னை உனக்கு [1] விற்றுவிட்டார்களாக நினைக்கின்றேன். ஆனதுபற்றி என்னை நீ கொண்டுபோவாயாக' என்றனன். பின்பு அத்தாணியாளன் மிக்க ஆநந்தம் அடைந்து நாறாயிரம் பசுக்களைக் கொடுத்துச் சுநச்சேபனை வாங்கிக்கொண்டு அவனை விரைவில் தேரில் ஏற்றிக்கொண்டு மிகவுமொளிபெற்றுத் தனது கீர்த்தி எத்திசையிலும் பரம்பும்படி பட்டணமேறச் சென்றனன். அறுபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விசுவாமித்ரர் சுநசசேபனைக் காத்தல்.

புருஷோத்தமா! ரகுநந்தனு! பெருங்கீர்த்தி பெற்ற அம்மனனவன் சுநச்சேபனை அழைத்துக்கொண்டு செல்ல மத்யாஹ்நமாகையில் புஷ்கரக்ஷேத்திரத்தில் இளைப்பாறத் தங்கினன். சுநச்சேபன் தனது குணங்களால் எங்கும் புகழ் பெற்றவன். ஆனாலென்? தகப்பனது கட்டளை மிக்க மேலாயினும் பிராணங்கள் அதினும் இனியவையன்றோ? ஆகையால் தன்னை யாகத்துக்குப் பசுவாக வேண்டிக்கொண்டு போவதற்கு மிகவும் பரிதபித்து அம்மன்னவன் இளைப்பாறுந் தருணங்கண்டு புஷ்கரக்ஷேத்திரத்திற்குச் சென்று அங்கு ரிஷிகளுடன் தவஞ்செய்து கொண்டிருக்கிற தனது மாமனாகிய விச்வாமித்ரரைக் கிட்டி மிக்க மனத்துயரத்துடன் கண்டு நீர்வேட்

1. பிள்ளையைத் தானம் செய்கையும விக்ரயம செய்கையும கூடாதென்று சாஸ்த்ரம் நிஷேதித்ததேயாயினும், ஒருவம்சம் முதலே நசித்துப்போகையில் பிள்ளையைத் தானம் செய்வது எப்படி தர்மமோ, அப்படியே யாகத்திற்காக விக்ரயம் செய்வதும் தோஷமாகாதென்று தெரியவருகின்றது.

கையாலும் வழி நடந்த இளைப்பினாலும் முகம் வாடி மிக்க பேதைத்தனம் வழிய அம்முனிவரது மடியில் வெகு வேகத்துடன் வந்து விழுந்து 'நற்கருத்துடைய மாமுனியே! (மாமா) எனக்குத்[1] தாயும் இல்லை, தந்தையும் இல்லை. ஆனபின்பு ஞாதிகளும் பந்துக்களும் இருக்கிறார்களென்பது எதுக்காக? நீர் முனிவர்களில் மேன்மைபெற்று மஹாநுபாவராயிருக்கின்றீர். ஆகையால் தர்மத்தை நினைத்து நீர் என்னைக் காக்கவேண்டும். நீர் கேவல ரிஷிகளைப்போலன்றி மிகுந்த மகிமையெல்லாம் அமைந்தவர். ஆனதுபற்றியே நீர் யாவரையுங் காக்கின்றவர். இயற்கையாகவே நீர் யாவர்க்கும் நன்மை செய்பவர். ஆகையால் என்னொருவனைக்காப்பது உமக்கு ஒரு விஷயமோ? ஆயினும் என்னைக் காக்கும்பொழுது இம்மன்னவன் செய்ய முயன்ற யாகத்துக்கு யாதொரு கெடுதியும் நேரிடாமலிருக்க வேண்டும். மன்னவனது காரியங் கைகூடும்படிக்கும், நானும் உமது கருணையால் வாழ்நாள் வளரப்பெற்று யாதொரு கெடுதியும் நேரிடப் பெறாமல் மேலான தவங்களை நடத்தி ஸ்வர்க்கமேறும்படிக்கும் நீர் என்னைக் காக்கவேண்டும். தர்மத்தில் மனஞ்சென்ற மாமுனியே! நாதனற்ற எனக்கு நீர் மனமிரங்கி நன்மனத்தோடு நாதனாகவேண்டும். மகனைத் தந்தை காப்பதுபோல, எனது பாபத்தினாலுண்டாகிய இவ்வருத்தத்தினின்றும் விடுவித்து நீர் என்னைக் காக்கவேண்டும்' என்றிங்ஙனம் உரைத்தனன்.

விச்வாமித்ரரும் அதைக் கேட்டுத் தமது பெருந்தவத்தின் மகிமையால் அவனைக் காக்க வல்லமையுள்ள

1. (தாயுமில்லை, தந்தையுமில்லை) தாய் தந்தைகளிருக்கையில் இது எப்படியெனில்—இருந்தும் தன்னைக் காக்காமற் கைவிட்டபடியால் இங்ஙனஞ் சொல்லுகின்றான்.

துபற்றி அவனுக்குப் பலவாறாகத் தேறுதல் சொல்லிவிட்டுத் தன் புதல்வர்களை நோக்கி 'நன்மையை விரும்புந் தந்தையர் எந்த ப்ரயோஜநத்திற்காகப் புத்திரர்களைப் படைக்கின்றார்களோ, அப்படிப்பட்ட ப்ரயோஜநத்திற்கு இப்பொழுது ஸமயம் வந்திருக்கின்றது. அந்த ப்ரயோஜநம் தந்தையர் மொழிந்தவற்றைத் தவறாமல் நடத்துகையன்றோ? அங்ஙனஞ் செய்வதனால் உங்களுக்குமாத்திரமேயன்றி எனக்கும் பரலோகத்தை விளைவிக்க வல்ல தர்மம் ஸித்திக்கும். ஒரு முனிகுமாரனாகிய இப்பாலகன தன்னைக் காப்பாற்றும்படி என்னை வேண்டிக்கொள்ளுகின்றனன். புத்திரர்களே! நீங்கள் இவனுக்கு ப்ராணனைக் கொடுத்து ப்ரியஞ் செய்ய வேண்டும். நீங்கள் எல்லோரும் புண்யத்தையே செய்பவர்; தர்மத்திலேயே ஊற்றமுடையவர். ஆகையால் அம்பரீஷனது யாகத்திற்கு உங்களில் எவனாவதொருவன் பசுவாகச் சென்று அக்நிக்குத் திருப்தி செய்ய வேண்டும். நீங்கள் இப்படிக்குச் செய்வீர்களாயின, சுநச்சேபன் நாதனுள்ளவனாகிப் பிழைத்துப் போவான். அம்பரீஷனது யாகமும் இடையூறின்றி நிறைவேறும். தேவர்களும் திருப்தியடைவார்கள். தந்தையாகிய எனது வசநத்தையும் தவறாமற் செய்ததாகும்' என்று மொழிந்தனர்.

மதுஷ்யந்தன் முதலிய குமாரர்கள் அம்முனி வசனத்தைக் கேட்டு அஹங்காரங் கொண்டு பரிஹாஸத்துடன 'தந்தையே! நீர் எங்களுககு பிரபு. ஆயினும் தனது வயிற்றிற் பிறந்த பிள்ளைகளைப் பாதுகாப்பது தவிர்ந்து மற்றொருவன் பிள்ளையைக் காக்க முயல்வது எப்படி? இது எவ்விடத்து வழக்கமோ? நற்சுவையுணவைத் தள்ளி நாயின் மாம்ஸத்தைத் தின்பதுபோல்,

இது செய்யத்தகாத காரியமென்று எண்ணுகின்றோம்' என்றனர். அங்ஙனம் அந்தப் பிள்ளைகள் மொழிந்த மொழியைக் கேட்டு விச்வாமித்ரமாமுனிவர் மிக்க கோபங்கொண்டு கண்கள் சிவந்து தனபுத்திரர்களைப் பார்த்துச் சொல்லத் தொடங்கி 'அடா துஷ்டர்களே! 'தகப்பன வார்த்தையைத் தள்ளலாகாது' என்று சிறிதும் அச்சமின்றி, "தந்தை சொற்படி நடக்கவேண்டும்' எனனுந தர்மத்தையுந தள்ளிவிட்டு என் வார்த்தையை உல்லங்கநஞ் செய்து எனக்கு மயிர்க் கூச்சலுண்டாகும் படி இங்ஙனங் கடுமமாகிய மொழிகளை உரைத்தீர் களன்றோ? ஆகையால் நீங்கள் எல்லோரும் வஸிஷ்ட புத்திரர்களைபபோல் முஷ்டிகஜாதியர்களாகி நாயின் மாம்ஸத்தைத் தின்றுகொண்டு ஆயிரமாண்டுகள் நிரம் பும் வரையில் பூமியில் திரியவேண்டும்' என்று சபித்தனர்.

இங்ஙனம் புத்திரர்களைச் சாபங்கொண்டவர்களாகச் செய்து, முனிவர்களிற் சிறந்த விச்வாமித்ரர், பயந்து வருந்தி நிற்கும் சுநச்சேபனுக்குப் பயமொன்றுமிலலா மற்படி விபூதி முதலியவற்றை மந்திரித்து ரக்ஷை செய்து, அவனை நோக்கி 'முனிபுத்திரனே! நீ பாவநமா கிய தர்ப்பக்கயிற்றினுற் கட்டுண்டு சிவந்த பூமாலையுஞ் சந்தநமுந் தரித்து விஷ்ணுவைத் தேவதையாகவுடைய யூபஸ்தம்பத்தினருகிற் சென்று அக்நிக்கு எதிராக நின்று கொண்டு நான சொல்லுகிற இவ்விரண்டு மந்தி ரங்களைச் சொல்லவேண்டும். இதோ இவ்விரண்டு மந் திரங்களை உனக்குச் சொல்லுகின்றேன். இவைகளில் ஒன்று இந்திரனையும் மற்றொன்று உபேந்திரனையும் குறித்தது. அற்புதங்களாகிய இவ்விரண்டுமந்திரங்களை மாத்திரம் நீ அம்பரீஷனது யாகத்திற் சென்று காநஞ்

செய்ய வேண்டும். அதனால் நீ உனது [1] எண்ணம் நிறைவேறப் பெறுவாய்' என்றனர்.

சுநச்சேபனும் மிக்க மனஊக்கத்துடன் அவ்விரண்டு மந்திரங்களையும் பெற்றுக்கொண்டு மனக்கவலை தீர்ந்து வேகமாகச்சென்று சிங்கம்போன்ற அவ்வம்பரீஷமஹாராஜனைப் பார்த்து, மிக்க பலம்பொருந்திய மன்னவர் தலைவனே! யாகத்திற்குக் கெடுதிநேராதபடி எங்கெங்கும் திரிந்து என்னைபபசுவாகப் பெற்றனை. இனி ஏன் காலக்கழிவு செய்யவேண்டும? சீக்கிரமாக யாகசாலைக்குப் போவோம். நீ தீக்ஷை பெற்றுக்கொண்டு யாகத்தை நிறைவேற்றுவாயாக' என்று மொழிந்தனன். இவ்வாறு சுநச்சேபன மொழிந்த அம்மொழியைக் கேட்டு அம்பரீஷ மன்னவனும் மிக்க ஸந்தோஷமடைந்து யாகமநடத்துவதில் அதிக மனவிருப்பமுங்கொண்டு சிறிதுஞ் சோம்பலின்றி வேகமாக யாகசாலைக்குப் போய்ச் சேர்நதனன்.

பின்பு அந்த மன்னவன் யாகத்துக்குரிய ஸபிகர்களின அநுமதிபெற்று யாகத்துக்குப் பசுவென்று தெரியும்படி இவனைத் தர்ப்பக் கயிற்றால் கட்டிச் சிவப்பு வஸ்திரந தரிக்கச்செய்து பசுவாகக்கொண்டு யூபஸ்தம்பத்திற் கட்டுகையில், அம்முனிகுமாரனும் கட்டுண்டு மிக்கமேன்மை பொருந்திய அவ்விரண்டு மந்திரங்களைக் கொண்டு பலியைப் புசிப்பவனாகிய இந்திரனையும் யூபஸ்தம்பத்திற்குத் தேவதையாகிய உபேந்திரனையும் விதிப்படிக்குத் துதி செய்தனன். ராகவா! பின்பு ஆயிரக் கண்ணனாகிய தேவேந்திரனும் தனக்கு ப்ரபுவாகிய விஷ்ணுவை ரஹஸ்யமாகத் துதிசெய்ததற்கு மிகவுந்

---

1 எண்ணம்-சாவாமற் பிழைக்கவேணுமென்னும் கருத்து.

திருப்தி யடைந்து தன்னைத் துதித்ததற்கும் மிகுந்த ஸந்தோஷம் பெற்று அவனுக்கு தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தனன். புருஷர்களிற் சிறந்த ராமனே! அம்பரீஷ மன்னவனும் தேவேந்திரனது அனுக்கிரகத்தினால் யாகத்தின பலனைப் பலமடங்கதிகமாகப் பெற்றனன். தர்மத்தில் நிலைநின்று மிக்க தவமுடைய விச்வாமித்ரரும புஷ்கரக்ஷேத்திரத்திலேயே மீளவும் ஆயிரமாண்டுகள் தவஞ்செய்தனர். அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விச்வாமித்ரர் மஹரிஷித்வம் பெறுதல்.

இங்ஙனம் ஆயிரமாண்டுகள் நிரம்பினபின்பு, தேவர்கள் அனைவரும் அம்மாமுனிவர் செய்த பெருந்தவத்திற்குப் பலன்கொடுக்க விரும்பி விரதத்தை முடித்து ஸ்நானஞ் செய்து எழுந்தருளியிருக்கிற அம்முனிவரிடம் வந்தனர். அப்பொழுது மிக்க ப்ரபாவமுடைய ப்ரஹ்மதேவன் அந்த முனிவரைப் பார்த்து 'உனக்குச் சுபம் உண்டாக வேண்டும். இதுவரையில் நீ ராஜரிஷியாயிருந்தனை. நீ நடத்திய நற்றவங்களால் இப்பொழுது [1] ரிஷியாகவே ஆய்விட்டனை' என்று இம்மொழியைச் சொல்லினன். வானவர் வேந்தனாகிய ப்ரஹ்மதேவன் விச்வாமித்ரருக்கு இவ்வாறு சொல்லிவிட்டுத் தேவலோகம் போய்ச் சேர்ந்தனன். மிக்க தேசு பொருந்திய விச்வாமித்ரரும் அவ்வளவில் திருப்தி அடையாமல் மீளவும் பெருந்தவம் புரியத் தொடங்கினர். புருஷர்களிற் சிறந்த ராமனே! பிறகு வெகுகாலஞ் சென்றபின் ஒருகாலத்தில் அப்ஸரமடந்தையர்களில் தலைவளாகிய மேநகை அந்தப்புஷ்கர

---

1 இதுவரையில் ராஜரிஷியாயிருந்தா யென்றும், இப்பொழுது கேவல ரிஷியாய் விட்டாயென்றும் கருத்து.

தீர்த்தத்துக்கு வந்து ஸ்நாநஞ்செய்யத் தொடங்கினள். குசிகவம்சத்திற் பிறந்த விச்வாமித்ரர் மிக்க ப்ரபாவ முள்ளவராயினும் மேகத்து நடுவில் விளங்கும் மின்னற் கொடிபோல் அந்தப் புஷ்கர தீர்த்தத்தில் இழிந்து ஸ்நாநஞ் செய்துகொண்டிருக்கின்ற அழகில் ஒப்பில் லாத அம்மேநகையெனனும் அப்ஸரமடந்தையைக் கண்டனர். அம்முனிவர் அம்மேநகையைக் கண்டவுடன் காமனுக்கு ஆளாகி அவளை நோக்கி 'ஓ அப்ஸர மடந் தையர்மணியே! உனக்கு நல்வரவு உண்டாகவேண்டும். நீ இங்கு எனது ஆச்ரமத்திலேயே வஸித்திருக்கவேண் டும். உன்னைப் பார்த்தவுடன மன்மதனகையில் அகப் பட்டு மிகவும் மோகித்துக் கிடக்கிற எனமீது நீ மன மிரங்கவேண்டும். உனக்கு நன்மை உண்டாகுக' என றிவ்வாறு வேண்டிக்கொண்டனர். இங்ஙனம் முனிவ ரால் வேண்டப்பட்ட அழகில் ஒப்பில்லாத அம்மேநகை யும் ஒத்துக்கொண்டு அவ்வாச்ரமத்திலேயே வஸித்தி ருநதனள். ரகுகுலத்திற் பிறந்த மஹானுபாவனே! ராமா! அங்ஙனம் அம்மேனகை விச்வாமித்ரருடைய ஆச்ரமத்தில் வஸித்திருக்கையில் ஸுகமாகப் பத்து வருஷங்கள் சென்று விட்டன. விச்வாமித்ர மாமுனி வர் அங்ஙனம் பத்துவருஷங்கள் செல்ல அம்மடநதை யுடன கலந்தமையால் உண்டான தவக்கெடுதியை நினைத்து வெட்கமடைந்து சிந்தையும் சோகமுமாகிற பெருங்கடலில் மூழ்கினர். ரகுநந்தா! அம்முனிவர் 'தேவர்கள் அனைவருங் கலந்து எனது தவத்தைக் கெடுக்கச் செய்த கொடுஞ்செயலே இது; வேறன்று. ஐயோ! பத்து வருஷங்களும் ஓர் இராப்பகல் போலவே சென்று விட்டன. நான் காமாவேசங்கொண்டு அறிவு கெட்டுப் போயினன். ஆனதுபற்றியே எனது தவத்

துக்கு இங்ஙனம் இடையூறு நேரிட்டது' என்று கோபத்துடன் தனமனத்திற்றனே நினைத்துக்கொண்டனர். இங்ஙனம் விச்வாமித்ரர் தாம் செய்தவற்றைத் தாமே நினைத்துப் பெருமூச்சுவிட்டு மிகவுந் துயரமடைந்தனர். குசிகவம்ச குமாரராகிய அம்முனிவர் பிறகு 'இவர் நம்மை என்ன சபிப்பரோ' என்று பயந்து நடுக்கமுற்றுக் கையைக் கூப்பிக்கொண்டு எதிரில் நிற்கிற மேநகையைப் பார்த்து (இது எனது அபராதமேயன்றி உன் தபிதம் அன்று. நீ வருந்தவேண்டாம். நானாகவே உன்னை விரும்பினேன். நீ இதற்கு என செய்வாய்'என்று இது முதலிய) இனிய மொழிகளைச் சொல்லி அச்சந் தீர்த்து விடைகொடுத்தனுப்பி விட்டு, உடனே வடக்குத்திசையில் விளங்குகின்ற ஹிமாலயத்திற்குச் சென்றனர். அங்ஙனஞ் சென்று ஐம்புலன்களையும வென்று 'விரதத்தைத் தொடங்கி மிகக மனஊக்கங்கொண்டிருந்து அதை முடிக்கவேண்டும்' என்று முயன்று தம் கீர்த்தி எங்கும் விளங்கும்படி கௌசிகீநதிக் கரையிற் சென்று கடுந தவஞ் செய்தனர்.

அம்முனிவர் அங்ஙனம் ஆயிரமாண்டுகள் அதிபயங்கரமாகத் தவம் புரிந்திருக்கையில், தேவர்களுக்குப் பயம் உண்டாயிற்று. பிறகு தேவர்களும ரிஷிகளும், ஒன்று கூடி ஆலோசித்துக் கொண்டு ப்ரஹ்மதேவனிடஞ் சென்று 'தேவா! இவ்விச்வாமித்ரர் மஹாருஷியெனகிற பட்டம் நன்றாகப் பெறலாம். [1] அதற்காக எழுந்தருள வேண்டும்' எனறழைத்தனர். ஸகலலோகபிதாமஹனாகிய ப்ரஹ்மதேவனும் அவர்களது வசநத்தைக் கேட்டு அப்படியே யென்று விச்வாமிதரரிடம் வநது அந்த மெய்ததவமாமுனியைப் பார்த்து 'ஓ மஹர்ஷீ! உனக்கு,

---

1 (அதற்காக) அவருக்குப் பட்டங்கொடுப்பதற்காக.

நல்வரவு. குழந்தாய்! நீ செய்த கடுந்தவத்திற்கு யான் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனன். உனக்கு மேன்மை கொடுக்கின்றேன். நீ ரிஷிகள் அனைவரிலும் தலைவனாயிருப்பாயாக' என்று இங்ஙனம் இனிய உரைகளை உரைத்தனன்.

ஸகலலோகங்களுக்கும் பிரபுவாகிய ப்ரஹ்மதேவன் மொழிந்த மொழியைக் கேட்டு விச்வாமித்ரமாமுனிவர் வருந்தவுமில்லை; களிக்கவுமில்லை. பிறகு அம்முனிவர் ஸகலலோகபிதாமஹனாகிய அந்த ப்ரஹ்மதேவனை நமஸ்கரித்துக் கையைக் கூப்பி நின்றுகொண்டு 'மஹாநுபாவனே! நான் செய்த நற்றவங்களால் ஒப்பில்லாத மஹர்ஷியென்னும் பட்டத்தை எனக்குக் கொடுத்தாயாயின், நான் அப்பொழுது ஜிதேந்த்ரியனும் ஆய்விட்டேனன்றோ?'' என்றனர். அதைக்கேட்ட நான்முகனும் அம்முனிவரைப் பார்த்து 'நீ முனிவர்கள் அனைவரிலும் தலைவனாயினை. ஆயினும் நீ ஜிதேந்த்ரியனல்லை. மனத்துக்கு விகாரத்தை விளைவிக்கும் காரணங்கள் இருப்பினும் விகாரமின்றி யிருப்பவனன்றோ ஜிதேந்த்ரியனாவான். அதுவோ உனக்கில்லை. அதற்காக நீ இன்னும் ப்ரயத்நஞ் செய்யவேண்டும்' என்று மொழிந்து, தேவலோகத்துக்குச் சென்றனன். பிரமனுடன் தேவர்கள் யாவரும் புறப்பட்டுப் போனார்கள்.

பிறகு அவ்விச்வாமித்ரர் முனிவர்கள் அனைவரிலுந் தலைமை பெற்றுத் தன் முயற்சி வீணானதற்குப் பின்வாங்காமல் கைகளை உயரவெடுத்து யாதொரு பிடிப்பும் இல்லாமல் நின்று வாயுபக்ஷணஞ் செய்துகொண்டு தவஞ் செலுத்தினர். பின்னும் அம்மாமுனிவர் (இரவும் பகலும் தவத்தையே பொருளாக நினைத்து) வெயிற்காலத்தில் நாற்புறமும் அக்கியை வளர்த்தி நடுவிலிருந்து

ஸூர்யனிடத்திற் கண்களைச் செலுத்திப் பஞ்சாக்னி மத்தியத்தில் நின்றுகொண்டும், மழைக்காலத்தில் வெளிப்புறத்தில் நின்றுகொண்டும், குளிர்காலத்தில் ஜலத்தில் நின்றுகொண்டும், இவ்வாறாக ஆயிரமாண்டுகள் மிக்க பயங்கரமாகத் தவம் நடத்தினர். அம்முனிவர் இவ்வண்ணம் கடுந்தவஞ் செய்துகொண்டிருக்கையில் தேவர்களும் இந்திரனும் மிகவும் பயந்து பெருங்கலக்க முற்றனர். இந்திரன் தேவர்கள் அனைவருடனே கலந்து ஆலோசித்து ரம்பை யென்னும் அப்ஸரமடந்தையைப் பார்த்துத் தமக்கு நன்மையையும் விச்வாமித்ராருக்குத் தீங்கையும் விளைவிக்க உத்தேசித்துப் பின்வருமாறு மொழிந்தனன். அறுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்திரன் ரம்பையை அனுப்புதலும்,
விச்வாமித்ரர் அவளைச
சபித்தலும்.

'ரம்பையே! நீ விச்வாமித்ரரைக் காமமோஹங் கொள்ளச்செய்து அவர் மனத்தைக் கலைத்து உன்னிடத்தில் மிகவும் ஆசைப்படச் செய்யவேண்டும். இது ஸாதாரணமான காரியமன்று. இது பெரிய தேவகாரியம். ஆனதுபற்றி நீ இதைத் தப்பாமற் செய்யவேண்டும்' என்று மிகுந்த மதியுடைய தேவேந்திரன் ரம்பையைக் குறித்து மொழிந்தனன். ராமா! அவ்வப்ஸரமடந்தையும் அவ்வார்த்தையைக் கேட்டு 'இதென்ன! அறிவுள்ள இந்திரனும் இவ்வண்ணம் என்னைச் செய்யமுடியாத வார்த்தையைச்சொல்லுகின்றான்' என்று வெட்கமுற்றுக் கையைக் கூப்பிக்கொண்டு தேவேந்திரனை நோக்கி 'வானவர் தலைவனே! இவ்விச்வாமித்ரர் ஸாமாந்யரன்று.

அவர் முனிவர்களில் மேலானவர். இவ்வளவேயன்றி அவர் யாவரையும் பயமுறச் செய்பவர். நான் அங்குச் சென்று ச்ருங்கார விளையாடல்களைக் காட்டினேனாயின், அவர் தாருணமாகக் கோபங்கொண்டு என்னைச் சபித்துவிடுவார். இதற்குச் சந்தேகமில்லை. தேவா! ஆனது பற்றியே நான் போகப் பயப்படுகின்றேன். என்னைப் போகவிடாமல் அருள் புரியவேண்டும்' என்றனள்.

விச்வாமித்ரரை நினைத்துப் பயந்து நடுங்கிக் கையைக் கூப்பிககொண்டு நிற்கிற அம்மடந்தையை நோக்கி ஆயிரங் கண்ணனாகிய தேவேந்திரன் 'ரம்பையே! பயப்படவேண்டாம். என் கட்டளையைத் தவறாமற் செய்வாயாக. உனக்கு நன்மை உண்டாகுக. நான தளிர்த்துப் பூத்து அழகாயிருக்கின்ற மரங்களையுடைய வஸந்தருது வருகையில் மநோஹரமான ஓர் குயிலுருவங் தரித்து மந்மதனுடன்கூடி உன் பக்கத்தில் உனக்கு ஸஹாயமாக வந்திருப்பேன். ரம்பையே! நீயும் உனது அழகைப் பன்மடங்கு அதிகமாக விளங்கும்படி செய்துகொண்டு விச்வாமித்ரரிடஞ் சென்று அவர் செய்கிற கடுந்தவத்தைக் கெடுத்துக் காதலுறச் செய்யவேண்டும்' என்றனன்.

அழகிய அம்மங்கையர்மணியும் இங்ஙனம் இந்திரன் மொழிந்த மொழிகளைக் கேட்டுத் தானும் ஒத்துக்கொண்டு ச்ருங்காரம் பொழியும்படி ஒப்பில்லாத அழகு பொருந்திய உருவங் தரித்து, முகத்திற் புன்னகை தோன்ற விச்வாமித்ரரிடம் வந்து, அம்முனிவரைத் தன் மீது காதலுறச்செய்யத்தொடங்கினள். அப்பொழுது விச்வாமித்ரர் அழகாகக் கூவுகின்ற குயிலின் ஒலியைக் கேட்டுமனங்களித்து உடனே எதிரில்நிற்கிற இந்த ரம்பையைக் கண்ணுற்றனர். அங்ஙனம் அவர் கோகிலத்தின் ஒலியைக் கேட்டும் ரம்பையைப் பார்த்தும் ஒப்பில்

லாத அவ்வரம்பையின் காநத்தைச் செவியுற்றும் 'இதென்ன, தானாக வந்தவளோ? அல்லது இந்திரன் அனுப்பினனோ?' என்று ஸந்தேஹம் அடைந்தனர். பின்பு அம்முனிவர் அவ்வரம்பையின ஸங்கீதம் முதலியவற்றைக் கண்டு 'இவள் இந்திரன அனுப்ப வந்தவளே' என்று நிச்சயித்து, மிகவுங் கோபாவேசங் கொண்டு, ரம்பையைப் பார்த்து 'ரம்பையே! காமக்ரோதங்களை வெல்லக் கருதித் தவஞ்செய்கிற என் மனத்தை நீ நியமுயற்சி கொண்டு கலக்கமுறச் செய்தனை. நீ இங்ஙனஞ் செய்ததற்குப பலமாகப் பதினாயிரமாண்டுகள் கல்லாகக் கிடக்க வேண்டும். ரம்பையே! எனது கோபத்திற் பட்டுக் கல்லாய்க்கிடக்கிற உன்னை, மிகுந்த ப்ரபாவம் பொருந்தியவனும் தவப்பெருக்கமைந்தவனுமாகிய ஓர் அந்தணன் தனது தவமகிமையால் சாபத்தினின்றும் விடுவிப்பான்' என்று சாபங் கொடுத்தனர்.

இங்ஙனம் மஹாதேஜஸ்வியாகிய அம்முனிமன்னவர் கோபத்தை அடக்கமுடியாமல் அம்மடந்தையைச் சபித்துவிட்டுப் பின்பு 'ஐயோ! கோபத்திற்காளாய்விட்டேனே. இவள் செய்த குற்றம் யாது? இவளை ஏன் தயையின்றி யான சபித்தனன்?' என்று பச்சாத்தாபம் அடைந்தனர். அப்பொழுது அம்முனிவரிடம் சாபம் பெற்ற ரம்பையும் கல்லாய்விட்டனள். இங்ஙனம் அம்மஹரிஷி ரம்பையைப் பார்த்துச் சபித்துச் சொன்ன வார்த்தையைக் கேட்டு மந்மதனும் இந்திரனும அவ்விடம் நில்லாமல் பயந்து புறப்பட்டுப் போய்விட்டனர்.

மஹாதேஜஸ்வியான அவ்விச்வாமித்ரரும் தமது தவப்பெருக்கைத் தாமே அங்ஙனம் கோபத்தினால் பாழாக்கிக்கொண்டது கண்டனர். அவ்விச்வாமித்ரருக்குத் தாம் புலன்களை வெல்லாததனால் தமது தவம் பாழாய்

விட்டதுபற்றி மனத்திலுண்டான வருத்தமானது சிறிதுந் தீரவேயில்லை. இங்ஙனம் இந்திரியங்களை வெல்லாததனால் தமது தவமெல்லாங் கெட்டுப்போனதைக் கண்டு அம்முனிவர் தம்மனத்தில் 'நான் இனிக் கோபங் கொள்ளாதிருக்க வேண்டும். யார் எதைச் செய்தபோதிலும் வாய்திறவாமல் மௌனமாகவே இருக்க வேண்டும். அல்லது மூச்சு விடுவதில் கோபம் முதலியவை உண்டாகின்றன. ஆகையால் ஆயிரமாண்டுகள் நிரம்பினவளவிலும் மூச்சு விடாமலே இருக்கவேண்டும். யான் தவமகிமையால் ப்ரஹ்மரிஷியெனகிற பட்டம் பெறுகிறவரையிலும் ஐம்புலன்களையும் வெளியிற் செல்லவொட்டாமல் அடக்கித் தவத்தினால் எனது சரீரத்தை ஒடுக்கி உலர்த்திவிடவேண்டும். அதுவரையில் எத்தனை வருஷங்கள் நடந்தபோதிலும் மூச்சுவிடாமலும் ஆகாரத்தைக் கொள்ளாமலும் இருக்கவேண்டும். நான் தவம் புரிந்தேனாயின் அந்தத் தவத்தின் மகிமையால் எனது அவயவங்கள் ஆகாரம் முதலியவை இல்லாவிடினும் நசிக்கமாட்டா' என்று ஸங்கல்பஞ் செய்துகொண்டனர். இப்படி அம்முனிமன்னவர் ஆயிரமாண்டுகள் மூச்சு விடாமலும் ஆகாரமொன்றும் புசியாமலும் இருந்து விரதத்தில் முயற்சி கொண்டு இதை எவ்விதத்திலாயினும் முடித்தே தீரவேண்டுமென்று ஒப்பில்லாத பிரதிஜ்ஞை செய்துகொண்டனர். அறுபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## விசுவாமித்ரர் ப்ரஹ்மரிஷியாதல்.

ராமா! பின்பு முனிவர்களில் தலைவராகிய விச்வாமித்ரர் ஹிமாலயத்தினால் கியாதி பெற்ற வடக்குத்திசை

யை விட்டுக் கீழ்த்திசைக்குச் சென்று, அங்கு ஆயிர மாண்டுகள் ஒப்பில்லாத மௌனவிரதந் தரித்திருப்ப தாக ஸங்கல்பித்துக்கொண்டு மிக்க பயங்கரமாகி யாவ ராலுஞ் செய்யமுடியாத கடுந்தவத்தை நடத்திக்கொண் டிருந்தனர். இப்படி அவ்விச்வாமித்ரமாமுனிவர் பூர்ண மாக ஆயிரவருஷங்கள் வரையிலும்* கட்டைபோல் நின்று தவஞ் செய்துகொண்டிருக்கையில், எவ்வளவு விக்நங்கள் நேரினும் அவர்மனத்தில் கோபமென்பது சிறிதும் உண்டாகவில்லை. ராமா! அந்த விச்வாமித்ர மாமுனிவர் 'நான் இனிக் கோபமே கொள்ளக்கூடாது' என்று பெருத்த நிச்சயங் கொண்டு விரதத்தில் நன்கு முயன்று எவ்வகை விக்நங்களும் நேரிடாதபடி தவஞ் செய்தனர். ஆனதுபற்றியே கோபத்திற்கு அவகாசம் நேரிடவில்லை.

ரகுவம்சத்திற் பிறந்த மஹாநுபாவனே! ராமா! விரதத்தில் மிகுந்த ஊற்றங் கொண்ட அந்த விச்வாமித் ரமாமுனிவர் தாம் ஸங்கல்பித்துக் கொண்டபடி சிறிதுங் குறையின்றி ஆயிரமாண்டுகள் நிரம்ப விரதத்தைச் செய்து முடித்துவிட்டு, அந்நத்தைப் புசிக்கத்தொடங்கு கையில், தேவேந்திரன் ஓரந்தணன்வேடம் பூண்டு அவ விச்வாமித்ரரிடம் வந்து, அவர் புசிக்க ஸித்தஞ்செய்து வைத்திருக்கிற அந்த அந்நத்தையெல்லாம தனக்குக் கொடுக்கும்படி யாசித்தனன். மௌனமை பெற்றவரும பெருந்தவம் புரிந்தவருமாகிய அவவிச்வாமித்ரமாமுனி வர் அப்பொழுது ஆயிரம் வருஷங்கள் கடந்த பினபு, தாம் பாரணை செய்வதற்காக ஸித்தப்படுத்தி வைத்த அந்நத்தையெல்லாம் அவ்வந்தணன் கேட்டதற்குச் சிறி தும் ஸந்தேஹப்படாமல் தவத்தின் ஸித்தியை விரும்பி வேண்டினவர்களுக்கு அந்நத்தைக் கொடுக்கவேண்டு

வதே யென்று நிச்சயித்துக்கொண்டு பக்வமாயிருக்கிற அவ்வந்நத்தையெல்லாம் அவனுக்குக் கொடுத்துவிட்டுத் தமக்கு ஓரவிழுங்கூட மிச்சமாகாமற் போனது பற்றிப் புசிக்காமலே யிருந்து மௌனவிரதத்தைக் கைப்பற்றிக் கொண்டு அவ்வந்தணனை ஒன்றுஞ் சொல்லாமலிருந்து விட்டனர்.

பின்பு அம்மாமுனிவர் ஆயிர வருஷகாலம் மூச்சு விடாமல் தவஞ் செய்து கொண்டிருந்தனர். இப்படி அம்முனிமன்னவர் மூச்சுவிடாமல் தவஞ்செய்துகொண் டிருக்கையில், அவரது சிரஸ்ஸினின்றும் ஓர் புகை கிளம்பிற்று. அதனால் மூவுலகங்களும் நடுங்கிப் பரி தபிக்கப் பட்டவைபோலாயின. பின்பு தேவர்களும் கந் தர்வர்களும், உரகர்களும், அஸுரர்களும், ராக்ஷஸர் களும் ஆகிய எல்லோரும் அவ்விச்வாமித்ரரது தவமா கிற அக்நியால் தந்தமது ஒளியெல்லாங் குன்றி மதிமயங் கி மிக்க வருத்தமுற்று ப்ரஹ்மாவினிடஞ் சென்று இங் ஙனம் முறையிட்டுக்கொண்டனர். 'தேவா! ரம்பை முதலிய தேவலோகஸ்த்ரீகளை அனுப்பி விச்வாமித்ரரை மனக்கலக்க முறச் செய்யப் பார்த்தனம். ஆயிரமாண்டு கள் நிரம்பினபின்பு, தாம்விரதத்தைமுடித்துப் பாரணை செய்வதற்காகச் சித்தஞ்செய்து வைத்திருந்த அந்நத் தை வாங்கிக்கொள்வது முதலியவற்றால் அம்முனிவருக் குக் கோபத்தையும் உண்டுபண்ணப் பார்த்தனம். இவைதைச் செய்தபோதிலும் அவருடைய தவங் குறையா மற் பெருகிவருகின்றது. அவரிடத்தில் ஏதாவதொரு குற்றமாயினுஞ் சிறிதும் புலப்படவில்லை. ஆகையால் அவர் மனத்தில் விரும்பியது யாதோ, அதை நீர் கொடாவிடின், ஜங்கம ஸ்தாவரங்களடங்கிய மூவுலகங் களையும் அவர் தமது தவத்தீயினால் நாசஞ்செய்து விடு

வார். ஸ்வாமீ! திசைகள் யாவும இருள்மூடிச் சிறிது மொளியற்றவைகளாய்விட்டன. கடல்கள் அனைத்தும் கலக்கமுற்றன. பர்வதங்களெல்லாம் படபடவென்று வெடித்துப் போகின்றன.

பூமியும் கிடுகிடுவென்று நடுங்குகின்றது. வாயுவும் மிக்க கலக்கத்துடன் வீசுகின்றது. இதற்குச் செய்ய வேண்டியது யாதோ, தெரியவில்லை. இங்ஙனம உபத்ர வப்பட்டு ஜனங்கள அனைவரும் நித்யாநுஷ்டானங்களை ஒழித்து நாஸ்திகரைபபோல ஆய்விடுவார்களென்று தோற்றுகின்றது. இதைககாட்டிலும வேறு விபரீதம் யாது உண்டாகவேணடும? மூவுலகஙகளும மிக்கமனக் கலக்கமுற்று மதிமயங்கிக் கிடக்கின்றன. அம்மஹரிஷி யின் தேஜஸ்ஸினால் ஸூர்யனது ஒளியுங் குன்றிவிட்டது. இனி மற்றவைகளைப்பற்றி என்ன சொல்லவேண்டும்? அந்த மாமுனிவரே அக்நியைபபோன்றவர்; மிகுந்த மகிமையோடு கூடி மிக்க ஒளியுடன விளங்குகின்றனர். அப்படிப்பட்ட அமமுனிவா மூவுலகஙகளையும அழிக்க நினைப்பதற்கு முனபே தேவரீர் அவரை அநுக்ரஹிக்க வேண்டும். முன்பு ப்ரளயகாலாக்நி எபபடியோ, அப படியே அம்முனிவா மூவுலகங்களையும தகித்துவிடுவா ரென்று தோற்றுகின்றது. ஒருகால அவர் தேவராஜ் யத்தையும் வேண்டக்கூடும். ஆகையால் அப்படிப் பட்ட விபரீதம் உண்டாவதற்கு முன்னமே அவர் வேண்டிக்கொள்வதைக் கொடுப்பது நலம்' என்றுரைத் தனர்.

பிறகு தேவர்கள் அனைவரும் பிரமனை முன்னிட்டுக் கொண்டு மஹாநுபாவராகிய விச்வாமித்ரரிடம் வந்து 'ப்ரஹ்மரிஷியே! உமக்கு க்ஷேமம் உண்டாகுக. உம்மு டைய தவத்தினால் நாங்களெல்லோரும் மிக்க மகிழ்ச்சி

யுடைநதனம்' என்று இங்ஙனம் இனிதாக உரைத்தனர். அப்பொழுது மீண்டும் ப்ரஹ்மதேவன் இம்முனிவரை நோக்கிக் 'கௌசிகனே! நீ செய்த கடுந்தவத்தினால் ப்ராஹ்மண்யம் பெற்றனை. ஸகல தேவர்களும் யானுமாக உனக்கு நெடுங்காலம ஆயுளையும் வளரச்செய்கின்றோம். நீ நன்மையைப் பெறுவாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகும். நீ இனி இந்தத் தவத்தை நிறுத்திவிட்டுச் சுகமாகப் போகலாம்' என்று மொழிந்தனன். இங்ஙனம பிரமனும் மற்றுமுள்ள தேவர்களும் மொழிந்த மொழியைக் கேட்டு விச்வாமித்ரா ஆநந்தமடைந்து அனைவர்க்கும் நமஸ்காரஞ் செய்து 'நீண்ட வாழ்நாளையும் அந்தணர் தன்மையையுங் கொடுத்தது உண்மையாயின், ஓங்காரமும் வஷட்காரமும் வேதங்களும் தாமே வந்து எனக்குத் தோனறவேண்டும். நான் அவைகளை ஒருவர்க்கு உபதேசிக்கவும் ஒருவர்க்கு யாகஞ் செய்விக்கும்பொழுது அவைகளை உபயோகிக்கவும் உரியவனாகவேண்டும். மற்றொன்றுஞ் சொல்லுகின்றேன்; கேளீர். வஸிஷ்டர் க்ஷத்ரியர்களுக்கு வேண்டிய அதர்வணவேதமெல்லாம் நன்கறிந்தவர்; மேலும் ப்ராஹ்மணர்களுக்கு வேண்டிய வேதங்களை யெல்லா மோதியுணர்ந்து கடைத்தேறினவர். பிரமனுக்கு மானஸ புத்திரர். இப்படிப்பட்ட மகிமையுடைய வஸிஷ்டர் என்னை ப்ரஹ்மரிஷி யென்று சொல்லவேண்டும். எனக்கு இதுவே முக்கியமான மநோரதம். இதை முடித்தீர்களாயின், நீங்கள் என்மீது செயல் தீர்ந்தவர்களாகிப் போய்ச்சேரலாம்' என றனர்.

பின்பு ப்ரஹ்மரிஷியாகிய வஸிஷ்டரைத் தேவர்கள் ப்ரார்த்திக்க, அம்முனிவரும் மனந் தெளிந்து விச்வாமித்ரரோடு நேசஞ் செய்துகொண்டு 'தேவர்கள் சொன்

ணபடியே நீர் ப்ரஹ்மரிஷியாய்விட்டீர்' என்று மொழிந்தனர். பின்பு தேவர்களும் விச்வாமித்ரரை நோக்கி 'நீர் ப்ரஹ்மரிஷியாய் விட்டீர். இதில் சந்தேகமொன்றுமில்லை. யாகஞ் செய்விப்பது வேதங்களை யோதுவிப்பது முதலிய அதிகாரங்கள் யாவும் உமக்குக் கைகூடும்' என்றுரைத்துத் தாங்கள் வந்த வழியே போய்ச் சேர்ந்தனர். விச்வாமித்ரரும் அங்ஙனம் ஒப்பில்லாத ப்ராஹ்மணத்தன்மையைப் பெற்றுப பின்பு தர்மங்களை யெல்லாமறிந்தவராகையால் ப்ரஹ்மரிஷியாகிய வஸிஷ்டரைப் பூசித்துச் செயல் தீர்ந்து தவஞ் செய்துகொண்டே பூமியெல்லாந் திரிந்தனர்.

ராமா! இம்மஹாநுபாவர் இவ்வண்ணம் ப்ராஹ்மண்யம் பெற்றனர். இவர் முனிவர்கள அனைவரிலுஞ் சிறந்தவர்; தவமே ஓர்வடிவு கொண்டதுபோலிருப்பவர்; எப்பொழுதுந் தர்மத்திலேயே ஊக்கமுற்றவர். 'பராக்ரமத்திற்கு இவரே பிறப்பிடம்' என்றிவ்வாறு மஹாதேஜஸ்வியாகிய சதாநந்தமாமுனிவர் விச்வாமித்ரரது மகிமையைச் சொல்லி முடித்தனர். அப்பொழுது ஜநகமஹாராஜனும் ராமலக்ஷ்மணர்களுக்குச் சதாநந்தர் சொல்லிய வாக்கியங்களைக் கேட்டு விச்வாமித்ரரைப் பார்த்துக் கையைக் கூப்பிக்கொண்டு மொழிந்தனர்.

"மாமுனியே! ககுத்ஸ்தவம்சத்திற் பிறந்த மஹாநுபாவர்களாகிய ராமலக்ஷ்மணர்களோடுங்கூடி நீர் எனது யாகத்திற்கு வந்தமையால் யான் தந்யனாயினன். உம்முடைய அநுக்கிரகம் பெற்றனன். மாமுனியாகிய உம்மைக் கண்டதனால் யான் பவித்ரனாயினன். நீர் மஹாநுபாவர். ப்ரஹ்மரிஷிகள் அனைவரிலுஞ் சிறப்புற்றவர். உமது தர்சநத்தினால் எனக்குப் பலநற்குணங்கள் உண்டாயின. மிக்கப்ரபாவம் பொருந்திய நீர் நடத்

றின பெருந்தவத்தைச் சதாநந்தர் பரக்கச் சொல்லிக் கொண்டுவர, யானும் மஹாநுபாவனாகிய ராமனும் கேட்டனம். ஸபிகர்களும் இச்சபைக்கு வந்தமையால் உமது குணங்கள் பலவற்றையுங் கேட்டனர். விச்வாமித்ரமாமுனியே! உமது தவம் என்றும் அளவிடமுடியாதது. அப்படியே உமது பலத்திற்கும் அளவில்லை. உமது தவபலங்களிரண்டும் ப்ரஹ்மதேவனுக்குஞ் சிவனுக்கும் எப்படியோ, அப்படியே விளங்குகின்றன. மிகவும் ஆச்சரியமான உமது கதைகளை எவ்வளவு கேட்கினும் எனக்குத் திருப்தி உண்டாகவில்லை. பொழுது போகின்றது. மாலைக்கடனைச் செய்யவேண்டிய தருணம் நெருங்கிவிட்டது. ஸூர்யாஸ்தமயமாகின்றது. ஆகையால் அடியேனுக்கு இப்பொழுது விடைகொடுக்கவேண்டும். நாளைத்தினங் காலையில் அடியேனை மீளவுங் கடாக்ஷித்தருளவேண்டும். மாமுனியே! உமது வரவு நல்வரவாயிற்று. நான் போய்வருகின்றேன்' என்றனன்.

அப்பொழுது விச்வாமித்ரரும் இவ்வாறு புருஷர்களிற் சிறந்த ஜநகமஹாராஜன சொல்லக் கேட்டு மனமகிழ்ந்து அம்மன்னனைப் புகழ்ந்து போய்வருவாயென்று விடைகொடுத்தனுப்பினர். மிதிலைக் கதிபதியாகிய வைதேஹமன்னவனும் விச்வாமித்ர மஹர்ஷியை இங்ஙனங் கொண்டாடித் தனது புரோஹிதர்களோடும் பந்துக்களோடுங்கூட ப்ரதக்ஷிணஞ் செய்து விடைகொண்டனன். பின்பு தார்மிகராகிய அம்முனிவரும் மஹர்ஷிகளாற் பூசிக்கப்பெற்று ராம லக்ஷ்மணர்களுடன கூடத் தமது இருப்பிடத்திற்குப் போய்ச் சேர்ந்தனர். 'அறுபதைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ஜநக மஹாராஜன் சிவதவநுஸ்ஸின் விருத்தாந்தஞ் சொல்லுதல். }

[1] பிறகு ஜநக மஹாராஜன் உதயமானவுடன் எழுந்திருந்து காலைக் கடன்களைச் செய்து முடித்து மஹாநுபாவராகிய விச்வாமித்ரரை ராம லக்ஷ்மணர்களோடு கூட அழைப்பித்தனன். (அவர்களும் வந்து

---

1 இங்ஙனம் தனது தாயாகிய அஹல்யையின் சாபத்தை விடுவிக்கிறதற்குத் தான் சேர்ப்பானுயிருந்த உபகாரத்தை நினைத்து ப்ரஸங்காயத்தமாகச் சதாநந்தர் சொல்லிய விச்வாமித்ரமுனிவரது சரித்திரத்தினால் உபகாரகனாகிய குருவின் வைபவம் அறியவேண்டியதென்றும், காமக்ரோதங்கள் எவ்விதத்திலும் தடுக்கமுடியாவென்றும், காமக்ரோதங்களை வென்றவனே ப்ராஹ்மணோத்தமனாவானென்றும், ப்ராஹ்மண்யம் ஸாதாரணமாய்க் கிடைக்கத்தக்கதல்லவென்றும், ப்ரஹ்மவித்தாயிருப்பவனிடத்தில் அபசாரப்பட்டால் அது ஸர்வாரம்பங்களுக்குங் கெடுதியை விளைவிக்குமென்றும் இவைமுதலிய அர்த்தங்கள் தோன்றுகின்றன.

இனித் தானே ஸமஸ்தஜநங்களையும் ரக்ஷிப்பதற்கு அவஸரத்தையெதிர் பார்த்துக் கொண்டிருந்த பகவானாகிய ஸர்வேச்வரன் தேவர்கள் செய்த சரணாகதியை வ்யாஜமாகக் கொண்டு ராவணவதத்தின் பொருட்டு அவதாரஞ் செய்து, அதற்கு அவாந்தரோபாயமாயிருப்பவளும் வேதவதி என்கிற பூர்வாவதாரத்தில் தானே ராவணனை வதிப்பதாக ஸங்கல்பஞ் செய்திருப்பவளுமாகிய ஸ்ரீ மஹாலக்ஷ்மியைச் சீலம் வயஸ்ஸு வ்ருத்தம் அபிஜநம் ஆகிய இவைகளாலொத்திருக்கிற கன்னிகையையே மணம்புரிய வேண்டுமெனகிற இவ்வர்த்த விசேஷத்தை வெளியிட உத்தேசித்து ஜநகவம்சத்தில் அவதரிப்பித்து அவளை மணம்புரிய முயன்று அவளது மனக்களிப்பின் பொருட்டுத் தாடகை ஸுபாஹு மாரீசன் ஆகிய துஷ்டர்களை நிக்கிரகஞ் செய்தும் விச்வாமித்ரரது யாகத்தைக் காப்பது அஹல்யையைச் சாபத்தினின்றும் விடுவிப்பது முதலிய சிஷ்டபரிபாலநஞ் செய்தும் நேரே ஸீதையைப் பெறச் செய்த முயற்சியைச் சொல்லுகிறார் இரண்டு ஸர்க்கங்களாலே.

சேர்ந்தனர்). அப்பொழுது ஜநகமஹாராஜனும் தர்மஸ்வபாவனுகையாலே சாஸ்த்ரங்களிற் சொல்லிய கட்டளைப்படி விச்வாமித்ரமுனிவரையும் மஹாநுபாவர்களாகிய ராமலக்ஷ்மணர்களையும் பூசித்துப் பின்பு அம் முனிவரை நோக்கி 'ஸ்வாமீ! மஹாநுபாவரே! உமக்கு நல்வரவாகவேண்டும். பாபமற்றவரே! நான் உமக்கு என்ன செய்யவேண்டுமோ, அதைக் கட்டளையிட்டருள வேண்டும். நான உமது கட்டளையைப் பெறவேண்டிய வனல்லவா?' என்றிவ்வாறு மொழிந்தனன்.

பேசுவதிற் சமர்த்தரும் தர்மஸ்வபாவருமாகிய அந்த விச்வாமித்ரமாமுனிவர், மிகுந்த மகிமை பொருந்திய ஜநகமஹாராஜன் இவ்வாறு சொல்லக் கேட்டு, வல்லமையுள்ள அம்மன்னவனைப் பார்த்து மேல்வருமாறு மொழிந்தனர். 'மஹாராஜனே! இவ்விருவரும தசரத மன்னவனது புதல்வர்கள்; மேலும் உயர்ந்த க்ஷத்ரிய வம்சத்திற் பிறந்தவர்கள்; பின்னும் உலகத்தில் எங்கும் ப்ரஸித்தி பெற்றவர்கள். அப்படிப்பட்ட இவ்விருவரும் உன்னிடத்திலிருக்கிற சிறந்த வில்லைப் பார்க்க விரும்புகின்றனர். இந்த வில்லை இவர்களுக்குக் காட்டுவாயாக. உனக்கு நன்மை உண்டாகுக. இந்த ராஜபுத்ரர்களிருவரும் அவ்வில்லைப் பார்த்து அவ்வளவிலேயே தமது உத்தேசம ஈடேறப்பெற்று இஷ்டப்படி திரும்பிப் போய்விடுவார்கள்' என்றனர்.

ஜநகமஹாராஜனும் அதைக் கேட்டு அம்முனிவரை நோக்கி 'மஹாநுபாவரே! இவ்வில்லானது இவவிடத்தில் எதற்காக இருக்கின்றதோ, அதைச் சொல்லுகிறேன் கேட்பீராக. எங்கள் குலத்துக்கு நிமியென்பவர் கூடஸ்த்தர். அவருக்கு ஆறுவது புருஷர் தேவராதனென்பவர். மஹாத்மாவாகிய சிவன் இவ்

வில்லை வைத்திருக்கும்படி அந்தத் தேவராதரகையிற் கொடுத்தனன். (இது சிவனது வில்லாயிருக்குமாறுரைக்கின்றேன், கேட்பீராக.) முற்காலத்திற் சிவபெருமானானவன தக்ஷரது யாகத்தை அழிக்கும்பொழுது இவ்வலிய வில்லைத் தனது மிகுந்த வலிவினால் விளையாட்டாகவே நாணேறச்செய்து சினந்து தேவாகளை நோக்கி 'தேவர்களே! இந்தயாகத்தில் நான ஹவிர்ப்பாகத்தை விரும்ப, எனக்குப் பாகத்தை ஏற்பாடு செய்யாமற் போனீர்களன்றோ? ஆகையால் இவ்வில்லைக் கொண்டு கிரீடஞ் சூடி விளங்குகின்ற உங்கள் தலைகளை அறுத்துத் தள்ளிவிடுகின்றேன், பாருங்கள்' என்று அலக்ஷ்யமாகச் சொல்லினன்.

முனிவர்களிற் சிறந்த விச்வாமித்ரரே! பின்பு அதைக் கேட்டுத் தேவர்கள் அனைவரும் மனக்கலக்கமுற்றுத் தேவர்களுக்குத் தலைவனாகிய அச்சிவபெருமானைச் சரணம் புகுந்து அருளபுரியச் செய்தனர். அந்தத்தேவனும் அவர்களிடம் மனந்தெளிந்து ப்ரீதியைப் பண்ணினன். சிவன் இவ்வாறு மிகுந்த ஸந்தோஷங் கொண்டு மஹாநுபாவர்களாகிய அந்தத் தேவர்களனைவர்க்கும் அவ்வில்லைக் கொடுத்தனன. இங்ஙனந் தேவர்கள் இவ்வில்லைச் சிவபெருமானிடம் பெற்று எங்கள் குலத்தில் பெரியோராகிய தேவராதரிடம் இதை வைத்துவைக்கும்படி கொடுத்தருளினர.

பின்பு நான் யாகஞ் செய்வதற்காகப் பூமியைச் சோதிக்கவேண்டிக் கலப்பையினால் உழும்போது, அந்தக் கலப்பையினின்று ஒரு பெண்குழந்தை வெளிக்கிளம்பி எனக்கப்பட்டது. அப்பெண்மணி அங்ஙனங் கலப்பையைக் கொண்டு உழுத பூமியினின்றும் உண்டானதுபற்றி ஸீதையென்றே பேர் பெற்று எங்கும் ப்ரஸித்தியடைந்தனள். பூமியிற் பிறந்த அப்பெண்பிள்ளையை

ஙீான் வளர்த்துவர, நாடோறும் வளர்ந்து வந்தனள். நான் வளர்த்ததனுல் அவள் எனக்குப் புதல்வியாயினள். இந்தப்பெண்பிள்ளை அயோநிஜையாகையால் ஸாமாந்ய ராகிய ஒருவர்க்குங் கொடுக்கத்தகாதென்று ஆலோசித்து நம்மிடமிருக்கிற சிவதநுஸ்ஸை நாணேற்றும் வல்லவனுக்கே கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்து இது வரையில் ஒருவர்க்கும் விவாஹஞ் செய்து கொடுக்காமல் நிறுத்தி வைத்திருக்கின்றனன்.

மாமுனியே! இவவாறு பூமியிற் பிறந்து நாளொரு மேனியும் பொழுதொரு வர்ணமுமாக வளர்ந்து வருகிற என் புதல்வியைப் பற்பல மன்னவர்களும் வந்து தமக்கு விவாஹஞ்செய்து கொடுக்கும்படி என்னைக் கேட்டனர். மஹாநுபாவரே! ஆனுல் அப்படி வந்து கேட்ட அரசர்கள் அனைவர்க்கும் 'எனனிடமிருக்கிற சிவதநுஸ்ஸை வளைக்கிறவனுக்கே என்புதல்வியைக் கொடுப்பேன்' என்று சொல்லி என குழந்தையை விவாஹஞ் செயது கொடாமலிருக்கின்றனன.

முனிவர்களிற்றலைவரே! பின்பு நான்கு பக்கத்தினின்றும் மன்னவர் பலரும் ஒன்றுகூடி நான் வளைக்க வேணுமென்ற அவ்வில்லின் வலிமையை அறியவிருமபி இம்மிதிலா நகரத்திற்கு வந்தனர். அவர்கள் அங்ஙனம் வந்து அவ்வில்லின் ஸாரத்தை அறிய விரும்புவதைக் கண்டு நான் அதை வரவழைத்து அவர்கட்குக் காண்பித்தனன். அவர்கள் அந்த வில்லைக் கையில் வாங்கிப் பிடிக்கவாவது தூக்கிப்பார்க்கவாவது வல்லராகவில்லை. மாமுனியே! தவத்தைப் பொருளாகப் பெற்றவரே! அவ்வரசர்கள் பராக்ரமசாலிகளாயிருந்தபோதிலும, அநத வில்லை வளைக்கமுடியாததுபற்றி அவர்களது வல்லமை அற்பமென்றறிந்து கொண்டனன். ஆகையால் நான்

எனது புதல்வியைக் கொடுக்கமாட்டேனென்று அவர்களை நிராகரித்துப் போகவிட்டனன்.

மாமுனியே! மேல் நடந்த சங்கதியைச் சொல்லுகின்றேன; கேட்பீராக. பின்பு அவ்வேந்தர்கள் யாவரும் தமது பராக்ரமத்தில தமக்கே ஸந்தேகமுண்டாகி, அதனல் 'நாம் இவனது புதல்வியைப்பெற முடியாது' என்று தெரிந்துகொண்டு மிகுந்த கோபாவேசம் மேலெழுந்து எரியப், பலாத்காரஞ் செய்யத் தொடங்கி அனைவரும் மிதிலாநகரத்தைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டனர். அம்மன்னவர் தலைவர்கள் அங்ஙனம் எனது நகரத்தைச் சூழ்வதற்கு மற்றொரு காரணம் உண்டு. நான் வீர்யப்பந்தயம் ஏற்படுத்தினதுபற்றித் தம்மை நான் திரஸ்காரஞ் செயததாக அவர்கள் எண்ணிக்கொண்டனர். இப்படி நினைத்து மிகுந்த கோபாவேசங் கொண்டு மிதிலா நகரத்தைச் சூழ்ந்து கொண்டு பிடித்தனர்.

முநிச்ரேஷ்டரே! இவ்விதமாகவே அவர்கள் ஓராண்டு நிரம்பும்வரையில் ஓயாமல் யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில், எனது கோட்டையைப்பத்திரமாக ரக்ஷிக்கைக்குவேண்டியசேனை முதலியஸாதநங்களெல்லாம் நாசமடைந்துவிட்டன. அதனல் யான் மிகத்துயரமடைந்தனன். பிறகு நான் தவஞ்செய்து தேவதைகள் அனைவரையும் அருள்புரியச் செய்கையில், அவர்களும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து எனக்குச் சதுரங்க பலங்களைக் கொடுத்தனர். அந்தப் பலங்களால் கொடிய செய்கையுடைய அந்த வேந்தர்கள் யாவரும் பங்கப்பட்டு வல்லமை யிழந்து இனியும் பராக்ரமத்துக்கு அழிவு நேரிடுமென்று ஸந்தேகித்துக்கொண்டு மந்திரிகளோடுகூட நானகுத் திசைகளிலும் பறந்தோடிப் போய்விட்டனர். முனிவர்களிற் றலைவரே! இவ்வில்லின் மகிமையைக்

கேட்டீரன்றோ. மிக்க ஒளியுடையதாகி விளங்குகின்ற அப்படிப்பட்ட இந்த வில்லை ராம லக்ஷ்மணர்களுக்குங் காட்டுகின்றேன். விச்வாமித்ரமுனிவரே! ராமன் இவ் வில்லை எடுத்து நாணேற்றி விடுவானாயின், அயோநிஜை யும் எனது புதல்வியுமாகிய ஸீதையைத் தசரத மஹா ராஜனது குமாரனாகிய இந்த ராமனுக்குக் கொடுத்து விடுகின்றேன' என்றனன். அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் சிவதநுர்ப்பங்கஞ் செய்தல்.

விச்வாமித்ர மாமுனிவரும் ஜநக மஹாராஜன் மொழிந்த மொழிகளைக்கேட்டு அம்மன்னவனை நோக்கி 'மன்னவனே! ஸ்ரீராமனுக்கு அவ்வில்லைக் கொண்டு வந்து காட்டுவாயாக' என்றனர். பிறகு அந்த ஜநக மஹாராஜனும் மந்திரிகளை அழைத்து 'மந்திரிகளே! நமது திவ்யதநுஸ்ஸை நல்ல வாஸனைகளாலும் மாலை களாலும் அலங்கரித்து இவவிடம் கொண்டுவாருங்கள்' என்று கட்டளையிட்டனன். அந்த மந்திரிகளும் ஜநகனது கட்டளைப்படிப் பட்டணஞ் சென்று அந்தவில்லை முனனே எடுப்பித்துக்கொண்டு நகரத்தினின்றும் வெளிப்புறப் பட்டனர். நீண்ட சரீரமும் மிகுந்த பலமும் பொருந்திய ஐயாயிரம் புருஷர்கள், அந்த வில்லை யுள்ளே வைத்தடக் கலஞ் செய்ததும் எட்டுச் சக்கரங்கள் அமைத்ததுமாகிய ஓர் பெட்டியை இழுததுக்கொண்டு வந்தனர். அவர்கள் ஐயாயிரம பேர்களாயிருந்தும் அந்த ஒரு பெட்டியை மிகவும் ப்ரயாஸப்பட்டு இழுத்தனர்.

அந்த ஜநகமஹாராஜனது மந்திரிகள் சிவதநுஸ் ஸையுள்ளே வைத்திருக்கிற அந்த இரும்புப பெட்டியை யெடுப்பித்துக்கொண்டு வந்து, தேவஸதையைப்போல்

விளங்குகின்ற ஜநக மன்னவனைப் பார்த்து 'மஹாராஜ னே! மிதிலாபுரத்துக் கதிபதியே! ஸீதையைப் பெற விரும்பி வந்த ஸகல அரசர்களும் 'அப்பா! இவ்வில்லின் வலிமை யிருந்தபடி யென்ன!' என்று கொண்டாடின சிறந்தவில் இதோ வந்தது. பார். இதை நீ பார்க்க விரும்பினது பற்றிக் கொண்டுவந்தனம்' என்றனர். இங்ஙனம் அவர்கள் மொழிந்ததைக் கேட்டு அந்த மஹீபதியும், கைகூப்பிக்கொண்டு மஹாநுபாவராகிய விச்வாமித்ரரையும் ராமலக்ஷ்மணர்களிருவரையும் பார்த்து 'அந்தணர்களிற் சிறந்தவரே! இந்தவில் மிகவுஞ் சிறப்புற்றது; ஜநகவம்சத்திற் பிறந்தமஹாராஜர்களால் வெகு காலமாகப் பூசிக்கப்பட்டு வருகின்றது. முன்பு ஸீதையைப் பெற விரும்பி வந்த பற்பல அரசர்களும் தாங்கள் மிகுந்த பராக்ரமசாலிகளேயாயினும் இந்த வில்லை நாணேற்றி முடியாமற்போனது பற்றி 'அப்பா!' என்று இதன் வலிவைகொண்டாடினர். அவ்வரசர்களென்பதென? தேவர்கள் அனைவரும் கூட்டங்கூடி வந்தார்களேயாயினும், மற்றுமுள்ள அஸுரர்களும் ராக்ஷஸர்களும் சிறப்புற்ற கந்தர்வர்களும் யக்ஷர்களும் கிந்நரர்களும்பெரிய உரகர்களும் கூட்டங்கூடிவருவார்களாயினும், இதை நாணேற்றுவது முதலியவற்றைச் செய்ய வல்லராகமாட்டார்கள். இப்படியிருக்க, இனி மனிதர்கள் இவ்வில்லை வளைக்கவும் நாணேற்றவும் பாணத்தைத் தொடுக்கவும் காதுவரையில் நாணை இழுத்துப் பார்க்கவும் அதன் பளுவை அறியும்பொருட்டு அதை அசைத்துப்பார்க்கவும் சக்தியற்றவரென்பதைச் சொல்லவேண்டுமோ? மாமுனிவரே! அப்படிப்பட்ட இந்தச் சிறந்த வில்லை இதோ கொண்டுவந்திருக்கின்றேன். மஹாநுபாவரே! இதை இந்த ராஜகுமாரர்களிருவருக்கும் காட்டுவீராக' என்றனன்.

தர்மஸ்வபாவராகிய விச்வாமித்ராரும் ஜநகனது வார்த்தையைக்கேட்டு, ராமனைப்பார்த்துக் 'குழந்தாய்! ராமனே! வில்லைப் பார்' என்றுரைத்தனர். அப்படியே அந்த ப்ரஹ்மரிஷியின் கட்டளைப்படி ஸ்ரீராமபிரானும் அவ்வில் வைத்திருக்கும் பெட்டியைத் திறந்து அதிலிருக்கும் தநுஸ்ஸைப் பார்த்து 'ப்ராஹ்மணோத்தமரே! இந்தச் சிறந்த வில்லை என் கையினால் தொட்டுப் பார்க்கின்றேன். இவ்வளவேயன்றி இதைத் தூக்கி அசைக்கவும் இதை வணக்கி நாணேற்றவும் ப்ரயத்நஞ் செய்கின்றேன்' என்று கூறினன். அதைக் கேட்டு ஜநகமஹாராஜனும் விச்வாமித்ரமாமுனியும் ராமனை நோக்கி 'அப்படியே யாகட்டும்' என்றனர். ரகுகுலகுமாரனாகிய அந்த ராமனும் விச்வாமித்ரமுனிவரது மொழியைக் கேட்டு அநேகமாயிரம் புருஷர்கள் பார்த்துக் கொண்டிருக்கையில் விளையாடுவதுபோல அவ்வில்லை நடுவில் பிடித்து எடுத்து நிறுத்திவிட்டனன். (தர்மஸ்வபாவனாகிய அந்த ராஜகுமாரன் அந்த வில்லை அலக்ஷ்யமாகவே எடுத்து நாணேறிட்டனன்.) அங்ஙனம் தர்மத்தையே சரீரமாகக் கொண்டவனும் புருஷர்களிற் சிறந்தவனுமாகிய ராமன்[1] அந்த வில்லை எடுத்து நாணேற்றிக் கணை தொடுத்

( ) இவ்வண்ணம் அடையாளஞ் செய்யப்பெற்றவை யெல்லாம் மூலத்தில் குண்டலஞ்செய்யப் பெற்றவைகளின் பொருளென் றுணர்க.

1 கீழ்ச் சொல்லிக்கொண்டு வந்த ப்ரகாரமாக மிகவு முயர்ந்திருக்கிற அவ்வில்லின் நுனி பாலனாகிய ராமனுக்கு எட்டமுடியாதாகையால் அவன் அதை யெப்படி வளைத்து நாணேற்றக் கூடுமென்றால்— அவன் ஆச்சர்யகரமான சக்தியுடையவனாகையால் அவன் கைப்பட்ட மாத்திரத்திலேயே அந்த வில் வளைந்துவிட்டதென்று தெரிகிறது. ஆகையால் இதில் யாதொரு கேள்விக்கு மிடமில்லை யென்று கண்டு கொள்வது.

துக் காதுவரையில் நாணை இழுத்தனன். அப்படி இழுக்க அவ்வில்லானது மளமளவென்று நடுவில் முறிந்து விட்டது. அதனால் ராமனது கீர்த்தி நான்குத் திசைகளிலும் பரம்பி நின்றது.

அங்ஙனம் முறிந்த அவ்வில்லினின்றும இடியிடிப் பதுபோல் மிகவும் பயங்கரமான ஒரு பெருஞ் சப்தம் உண்டாயிற்று. அதனால் பூமியானது, பர்வதம் பிளந்து வெடிக்கும்பொழுது நடுங்குவதுபோல் கிடுகிடுவென்று நடுங்கிவிட்டது. அப்பொழுது முநிச்ரேஷ்டராகிய விச்வாமித்ரரும் ஜநகமஹாராஜனும் ராமலக்ஷ்மணர்களுந் தவிர அங்குள்ள மற்றை ஜநங்கள் யாவரும் அவவொலியைக் கேட்டு மூர்ச்சை அடைந்து பூமியில் விழுந்துவிட்டனர். பின்பு அந்த ஜநங்கள் எல்லோரும் தேறி எழுந்திருக்கையில, ஜநகமஹீபாலனும் பயந்தீர்ந்து கையைக் கூப்பிக்கொண்டு பேசுவதில் தனக்குள்ள வல்லமை விளங்குமாறு அம்மாமுனியைப் பார்த்து 'மஹாநுபாவரே! தசரத குமாரனாகிய இந்த ராமனது பராக்ரமத்தை நான கண்டு கொண்டனன. இப்பாலகன் எங்கே? மிகுந்த வலிமை யுடைய இவ்வில்லை நாணேற்றுவது எங்கே? இது மிகவும் அற்புதமாயிருக்கின்றது. மேலும் இது எங்குங் காண முடியாதது. ஆகையால் 'இப்படி, அப்படி' என்று எண்ணவுங்கூட எட்டாதிருக்கின்றது. இவ்வளவேயன்றி, இது மனிதர்க்கே ஸாத்யமன்று, ஆனதுபற்றி இப்படி ஸம்பவிக்குமென்று நான் ஊஹிக்கவேயில்லை. [1] எனது புதல்வியாகிய

---

1 இங்கு
'ஜநகாநாம குலே கீர்த்திமாஹரிஷ்யதி மே—ஸுதா,
ஸீதா ஹாத்தா ரமாஸாத்ய ராமம் தசரதாத்மஜம்'
என்று மூலம். இதற்கு விசேஷார்த்தம் தனிஸ்லோகியில் காண்க.



350 ஜநகன்து யாகஸபையில் ரிஷிகள் வேதநிர்ணயங்கள் செய்தல்.

இந்த ஸீதை தசரதகுமாரனான ராமனைப பர்த்தாவாகப் பெற்று ஜநகவம்சத்தரசர்களின் குலத்திற்குப் பெரும்புகழை விளைவிப்பவளாவாள். குசிகவம்சத்திற் பிறந்த விச்வாமித்ரரே! சிவதநுஸ்ஸை நாணேற்றும் படியான வலிமையுடையவனுக்கே எனது அருமைப் புதல்வியைக் கொடுப்பேனென்று நான் செய்த ப்ரதிஜ்ஞையும் நிறைவேறிற்று. எனக்கு ப்ராணனிலும் மேலாகி இஷ்டையாயிருக்கின்ற எனது அருமைப்புதல்வியாகிய ஸீதையை ராமனுக்கு அவச்யமாக விவாஹஞ் செய்து கொடுக்கவேண்டும். ஆதலால் அந்தணரே! உமக்கு நன்மையுண்டாகுக. எனது மந்திரிகள் உம்மிடம் அநுமதி பெற்று ரதத்தின் மீதேறிக் கொண்டு விரைவில் அயோத்யைக்குப் போக வேண்டும். அவ்விடஞ் சென்று மிக்க வணக்கத்துடன இனிய சொற்களைச் சொல்லி அத்தரணியாளனை எனது பட்டணத்துக்கு அழைத்துக்கொண்டு வரவேண்டும். அயோத்திக்குச் சென்று அம்மன்னவனைக் காணும்போழுது காகுத்ஸ்த்த குலதிலகர்களாகிய இந்த ராமலக்ஷ்மணர்கள் இருவரும் விச்வாமித்ர முனிவரால் காக்கப்பட்டு க்ஷேமமாயிருக்கின்றார்களென்றும், [1]வீர்யத்தைப் பந்தயமாகவுடைய ஸீதையை [2]விவாஹஞ்செய்து கொடுக்கப்

1 (வீர்யத்தைப் பந்தயமாகவுடைய) சிவதநுர்ப்பங்கஞ் செய்கைக்குரிய வல்லமையுள்ளவனுக்கே கொடுக்கவேண்டு மிவளை யென்று ஜநகன் ப்ரதிஜ்ஞை செய்திருந்ததுபற்றி இங்ஙனஞ் சொல்லப்படுகின்றது.

2 (விவாஹஞ் செய்து கொடுக்கப் போகின்றார்களென்றும்) இப்பொழுது ராமன் சிவதநுர்ப்பங்கஞ் செய்ததுபற்றி ராமனுக்கு ஸீதையை விவாஹஞ் செய்து கொடுக்கப்போகின்றார்களென்றும் என்று பொருள்.

போகின்றார்களென்றும் இவ் விருத்தாந்தங்களை விரிவாகச்சொல்லி அவனுக்குச் சந்தோஷத்தை விளைவித்து அம்மன்னவனைச் சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வர வேண்டும்' என்றனன். தர்மஸ்வபாவராகிய விச்வாமித்ர முனிவரும் 'அப்படியே' என்றுரைத்து அவ்வரசனது மந்திரிகளை அழைத்துத் திருமணப் பத்திரிகையுங் கொடுத்து 'அம்மன்னவனுக்கு இங்கு நடந்த விருத்தாந்தங்களை யெல்லா மெடுத்துரைத்துக் கூடவே அவனை அழைத்துக்கொண்டு வரவேண்டும்' என்று கட்டளையிட்டு அயோத்யைக்கு அனுப்பினர். அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## { தூதர்கள் தசரதமஹாராஜனை அழைத்துக் கொண்டு வருதல். }

இவ்வாறு ஜநக மஹாராஜன் கட்டளையிட்டனுப்பிய அந்தத் தூதர்கள் வாஹநங்களின் மீதேறிக்கொண்டு மிகுந்தவேகத்துடன் போகையில், வாஹநங்கள் களைத்துப்போனதுபற்றி நடுவழியில் மூன்றிரவுகள் தங்கியிருந்து பிறகு அயோத்யாபுரிக்குப் போய்ச்சேர்ந்தனர். அவர்கள் அங்ஙனம் அந்தப் பட்டணஞ் சேர்ந்து அங்கு அரசன் மாளிகைக்குச் சென்று அவ்விடமிருக்கும் வாசற்காப்பவர்களை நோக்கி 'நாங்கள் ஜநக மஹாராஜனது தூதர்கள். இதை உங்களரசனுக்கு விரைவாகத் தெரிவியுங்கோள்' என்றுரைத்து நிற்க, அந்த த்வாரபாலகர்களும் தசரதமன்னவனுக்கு அவர்கள் வந்திருப்பதைத் தெருவித்தனர். தூதர்கள் தம்மை ஜநக மஹாராஜன் அனுப்பினதாகச் சொல்லக் கேட்டுத் தசரத சக்ரவர்த்தி அவர்களை அழைத்துக் கொண்டு வரக் கட்டளையிட்டனன்.

அந்தத் தூதர்களும் வாசற்காப்பவர்களைப் பின்பற்றிச் சென்று அரசன் மாளிகைக்குப் போய்ச்சேர்ந்து, அங்குத் தேவதைபோல் விளங்குபவனும் வயது சென்றவனுமாகிய தசரத வேந்தனைக் கண்டனர். அவர்கள் அவ்வரசனது [1] ஸௌஜந்யத்தைக் கண்டு சிறிதும் பயமின்றி அனைவரும் அஞ்சலிஹஸ்தர்களாகி அம்மன்னவனைப் பார்த்து மிக்க வணக்கத்துடன் மேல்வரும் இனிய உரைகளைக் கூறினர். 'மஹாராஜனே! மிதிலாதிபதியாகிய ஜநகமஹீபாலன் அடிக்கடி ஸந்தோஷத்தைப்பொழிகிற இனிய வுரைகளால் 'உனக்கு க்ஷேமமா' என்றும் 'நீ புரஸ்கரித்து வருகிற உனது அக்நிஹோத்ரங்கள் இடையூறின்றி நடந்து வருகின்றனவா? மற்றும், நீ ப்ரேமையுடன் ஆதரித்துவருகிற உனது உபாத்யாயர்களும் புரோஹிதர்களும் க்ஷேமமாயிருக்கின்றனர்களா?' எனறும் வினவுகின்றனன். இங்ஙனம் எமது விதேஹராஜன் உனது க்ஷேமம் விசாரித்து விச்வாமித்ர முனிவருடைய அநுமதிப்படி உனக்கு இவ்வாறு தெரிவிக்க எமக்குக் கட்டளையிட்டனன். 'சிவதநுஸ்ஸை வளைக்கும் வல்லவனுக்கே எனது பெண்ணைக் கொடுப்பேன்' என்று பூர்வத்தில் நான் ப்ரதிஜ்ஞை செய்திருக்கிற ஸங்கதியும் அரசர்கள் பலரும் வந்து பார்த்து அந்த வில்லை வளைக்க முடியாமல் என்மீது கோபாவேசங்கொண்டதும், அவர்களை நான் அடித்துத் துரத்த, அவர்கள் வல்லமை யற்று விமுகர்களாகி ஓடிப்போனதும் உனக்குத் தெரிந்த விஷயமே. இப்படி ஸமஸ்த அரசர்களாலும் விரும்பப்பட்ட, எனது புதல்வியாகிய ஸீதையை மஹாநுபாவனாகிய உனது குமாரன், விச்வாமித்ரமுனிவரை முன்னிட்டுக்கொண்டு எனது பாக்ய

1 (ஸௌஜந்யம்) நல்ல ஸ்வபாவமுடையவனாயிருக்கை.

வசத்தினால் மிதிலைக்குவந்து வீர்யமஹிமையால் தனக்கு வசமாக்கிக்கொண்டனன். அந்த விதஞ் சொல்லுகின்றேன், மஹாராஜனே! ராமன் தனது மஹாபலத்தினால் எனது [1]யாகாவஸாநத்திற் கூடிய பலஜனங்கள் நிறைந்த பெரிய ஸபையில் மிகுந்த மஹிமை பொருந்திய சிவதநுஸ்ஸை நடுவிற் பிடித்து முறித்துவிட்டனன். என் புதல்வியைச் சிவதநுர்ப்பங்கஞ் செய்தவனுக்குக் கொடுக்கவேண்டுமாகையால் இவ்வில்லை முறித்த ராமனுக்கே இந்தப் பெண்ணைக் கொடுக்க வேண்டியதாயிருக்கின்றது. ஆகையால் நான்செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற விரும்புகின்றேன. அதற்கு நீ அநுமதி செய்ய வேண்டும். மஹாராஜனே! நீ உபாத்யாயர்களையும் புரோஹிதர்களையும் முன்னிட்டுக்கொண்டு சீக்கிரமாக வந்து சேரவேண்டும். உனக்கு நன்மையுண்டாகுக. உனது ப்ரியகுமாரர்களாகிய ராமலக்ஷ்மணர்களை இப்பொழுது நீயும் பார்க்கவேண்டும். ராஜாதிராஜனே! நான் உனது தர்சநம் பெற்றும் உனது புத்திரனுக்கு என்புதல்வியாகிய ஸீதையை விவாஹஞ்செய்வித்தும் ஸந்தோஷம்பெற விரும்புகின்றேன். அந்தச் சந்தோஷத்தை எனக்கு நீ நிறைவேற்றிக் கொடுக்கவேண்டும். இந்தக் குழந்தைகளையும் இவர்களது விவாஹோத்ஸவத்தையுங் கண்டு நீயுங் களிப்பாயாக' என்று விதேஹதேசாதிபதியாகிய ஜநகமஹாராஜன விச்வாமித்ரரிடம் அநுமதி பெற்றும் சதாநந்தருடைய ஸம்மதியைக் கொண்டும் இவ்வினியமொழிகளை உன்னிடஞ்சொல்லும்படி எங்களுக்குச் சொல்லியனுப்பினன்' என்றிவவாறுரைத்து அந்தத் தூதர்கள் அவ்வரசனிடத்தில் கௌரவத்தினால அதற்குமேல் அதிகமாகச் சொல்லச் சங்கைப்பட்டு அவ்வளவோடு முடித்து நின்றனர்.

---

1. (யாகாவஸாநம்) யாகத்தின் முடிவு.

தசரதவேந்தனும் அந்தத் தூதர்களது வாக்யங்களைக் கேட்டு மிகவும் ஆநந்தம் அடைந்து வஸிஷ்டரையும் வாமதேவரையும் மற்றுமுள்ள மந்திரிகளையும் பார்த்துக் 'கௌஸல்யைக்குக் களிப்பை விளைவிப்பவனாகிய ராமன் விச்வாமித்ரரால் காக்கப்பட்டுத் தம்பியாகிய லக்ஷ்மணனுடன்கூடி விதேஹ தேசத்தில் க்ஷேமமாயிருக்கின்றனன். மஹாபராக்ரமசாலியாகிய ஜநகமஹாராஜனும் ராமனது வல்லமையைத் தெரிந்துகொண்டனன். ஆகையால் அவன் தனது புதல்வியை ராமனுக்குக் கொடுத்து விவாஹஞ் செய்ய விரும்புகின்றனன். மஹாநுபாவனாகிய ஜநகமன்னவன் சொல்லியனுப்பின இந்த விருத்தாந்தம் உங்களுக்கு அபிமதமாயிருக்குமாயின், மிதிலாநகரத்திற்குச் சீக்கிரமாகப் போவோம்' என்றனன். அதைக் கேட்டு மந்திரிகளும் மஹர்ஷிகளும் 'நல்லது, அப்படியே செய்வாய்' என்று ஒப்புக்கொண்டனர். அரசனும் அதற்கு மிகவும் ஸந்தோஷித்து 'நாளைக்குப் புறப்படலாம்' என்று மந்திரிகளுக்குச் சொல்லிவிட்டனன். ஜனகராஜனது மந்திரிகளும் மந்திரிகளுக்குரிய குணங்களெல்லாம் அமைந்துவிளங்குபவர்களாகையால் தசரதமன்னவனிடம் மிகுந்த ஸத்காரம் பெற்று ஸந்தோஷித்து அன்றிரவெல்லாம் அங்கே வஸித்திருந்தனர். அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதசக்ரவர்த்தி மிதிலைக்குப் போதல்.

பிறகு அன்றிரவு கடந்தவுடனே தசரதசக்ரவர்த்தி ரித்விக்குகளோடும் பந்துக்களோடுங்கூடி ஸந்தோஷத்துடன் ஸுமந்திரனைப் பார்த்து 'இன்று நமது கருவூலங்காப்பவரெல்லோரும் ஏராளமான தனங்களை

யும் அநேக விதமான ரத்னங்களையும் எடுத்துக்கொண்டு திருமணத்திற்கு வேண்டிய கார்யங்களையும் ஏற்பாடு செய்துகொண்டு தகுந்த ஜாக்ரதையுடன் முன்னதாகவே புறப்பட்டுப்போகவேண்டும். நான் கட்டளையிட்டவுடனே நான்கு பக்கங்களிலுமுள்ள சதுரங்க ஸைன்யங்களும் உயர்ந்த ரதங்கள் பல்லக்குகள் முதலிய வாஹநங்களும் சீக்கிரமாய்ப் புறப்படவேண்டும். வஸிஷ்டரும் வாமதேவரும் ஜாபாலியும் காச்யபரும் நன்கு வளர்ந்த ஆயுளையுடைய மார்க்கண்டேயரும்காத்யாயன ரிஷியும் ஆகிய இந்த அந்தணர்கள் யாவரும் முன்னே போகவேண்டும். காலதாமதஞ் செய்யாமல் எனது ரதத்தையும் ஸித்தப்படுத்தி இங்கு அனுப்புவார்களாக. ஜநகராஜனது தூதர்கள் என்னை அவஸரப்படுத்துகின்றார்கள்' என்றனன். அந்தத் தசரதமன்னவன் இவ்வாறு மொழிந்து ரிஷிகளோடுகூடப் புறப்பட்டுப் போகையில், அவனது கட்டளைப்படி சதுரங்கஸேனை அவனைப் பின்றொடர்ந்து போயிற்று. அம்மன்னவன் இவ்வாறு நாலுநாள் வழி நடந்து சென்று (ஐந்தாவது நாள்) விதேஹதேசம் போய்ச் சேர்ந்தனன். ஐச்வர்யங்களெல்லாம் அமைந்த ஜநகமஹாராஜனும் தசரத சக்ரவர்த்தி வந்த சங்கதியைக் கேட்டு உபஹாரங்களைச் சித்தப்படுத்திக்கொண்டனன். பிறகு ஜநகமன்னவன வ்ருத்தனாகிய தசரதசக்ரவர்த்தியினிடம் வந்து அவனைக் கண்டு ஸந்தோஷம் அடைந்து 'இனி ஸீதைக்குச் சீக்கிரத்தில் விவாகம் நடக்கலாம்' என்று பேரானந்தம் பெற்றனன்.

புருஷர்களிற் சிறந்த ஜநகமஹீபதி புருஷர்களிற் சிறப்புற்ற அந்தத் தசரதமன்னவனைப் பார்த்துச் சந்தோஷம் பெருகப்பெற்று 'மஹாராஜனே! உனக்கு

நல்வரவா? ரகுகுலத்திற் பிறந்த மஹாநுபாவனே! நீ எனது பாக்யவசத்தினால் இவ்விடம் வந்து சேர்ந்தனை. உன்புத்ரர்கள் வில்லை முறித்தது முதலிய பராக்ரம வியாபாரங்கள் உனக்கு ஸந்தோஷத்தை விளைவிக்கப் போகின்றன. அவர்களைக் கண்டு அந்த ஆநந்தத்தை அநுபவிப்பாயாக. மஹாதேஜஸ்வியும் மஹிமைகளெல்லாம் அமைந்தவருமாகிய வஸிஷ்டமஹரிஷியும் ப்ராஹ்மணோத்தமர்களோடு கூடி எனது பாக்யவசத்தினால் தேவதைகளோடு கூடிய தேவேந்திரன்போல் வந்து சேர்ந்தனர். இப்படிப்பட்ட மஹாநுபாவர்களை வரவழைத்துக் கொடுக்கிற எனது அத்ருஷ்டத்தினால் எனது விக்நங்களெல்லாம் அற்றுப்போய் விட்டன. பராக்ரமத்தினால் மிகவும் மேன்மை பெற்றவர்களும் மஹாநுபாவர்களுமாகிய ரகுவம்சத்திற் பிறந்தவர்களோடு ஸம்பந்தம் பெறும்படியாக நேரிட்ட இந்தப் பாக்யத்தினால் எனது குலம் மேன்மை பெற்றது. மன்னவனே! நீ இப்புவியிலுள்ள அரசர்களுக்குள் இந்திரன்போல் விளங்குகின்றனை. இப்படிப்பட்ட நீ நாளைத்தினம் விடியற்காலத்தில் விவாஹத்தைப் பற்றிய ப்ரஸங்கத்தை நடத்த வேண்டும். மானவரேறே! எனது யாகம் இன்னும் மூன்று நான்கு திநங்களில் முடிந்துவிடும். அது முடிந்தவுடனே ரிஷிகளுக்கு ஸம்மதமாகிய ப்ராஹ்ம விவாஹத்தை நீ நிறைவேற்றவேண்டும்' என்றிவ்வாறு மொழிந்தனன்.

தசரதசக்ரவர்த்தியும் வாக்யங்களின் உட்கருத்தறிவதில் மிகுந்த வல்லமையுள்ளவன். ஆகையால் அம்மன்னவன் ஜநகமஹாராஜன் மொழிந்த மொழியைக் கேட்டு ரிஷிகளினிடையில் அம்மஹாராஜனை நோக்கிக் 'கொடுக்கிறவன் எப்பொழுது கொடுப்பனோ, அப்பொ

மூதே வாங்கிக்கொள்ளுகிறவன் வாங்கிக்கொள்ளவேண்டுமேயன்றி வேறில்லை. ஆகையால் ப்ரதிக்ரஹமென்பது தாதாவின் அதீநத்தில் இருக்கின்றது. நீ வீர்ய சுல்கமாக ஏற்படுத்தின இந்தக் கந்யாப்ரதாநத்தை முன்னமே கேட்டிருக்கின்றோம். மஹாராஜனே! [1] தாதாவாகிய நீ எப்படி சொல்லுகின்றாயோ, அப்படியே வாங்கிக்கொள்ளுகிற நாங்கள் நடக்க ஸித்தமாயிருக்கின்றோம். நீ தர்மங்களை யெல்லாம் அறிந்தவன். ஆகையால் உனக்குத் தெரியாத தர்மம் ஒன்றுமில்லை' என்றனன்.

ஸத்யஸந்தனாகிய தசரதன் இப்படி மிகவும் தர்மம் பொருந்தியும் கீர்த்தியை விளக்கத்தக்கதுமாக உரைத்த வார்த்தையைக் கேட்டு விதேஹ தேசாதிபதியாகிய ஜநகராஜன் மிகவும் ஆச்சரியம் அடைந்தனன். பின்பு முனிவர்கள் அனைவரும் ஒருவர்க்கொருவர் கலந்திருக்கப்பெற்று மிகவும் ஆநந்தம் அடைந்தவராகி அன்றிரவு அங்கே ஸுகமாக வஸித்திருந்தனர். தசரதனும் ரகுகுலத்திற்கு அலங்காரமாயிருக்கின்ற தனது குமாரர்களைக் கண்டு மிகுந்த ஸந்தோஷம் பெற்று ஜநகன் செய்த ஸத்காரங்களைக்கொண்டு மேலான மகிழ்வடைந்து மனம் பூரித்திருந்தனன். தத்வங்களை உணர்ந்தவனும் மிகுந்த ப்ரபாவம் பெற்றவனுமாகிய ஜநகமஹாராஜனும் யாககாரியங்களை யெல்லாஞ் சாஸ்த்ரப்படி செய்து முடித்துப் பெண்களுக்கு முன்பு செய்யவேண்டிய அங்குரார்ப்பணம் முதலியவற்றையும் நிறைவேற்றி அவ்விரவைக் கடத்தினன். அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 தாதா=கொடுப்பவன்.

## வஸிஷ்டர் ஜநகனுக்கு இக்ஷ்வாகுவம்ச க்ரமத்தைச் சொல்லுதல்.

பிறகு பொழுது விடிந்தவுடனே ஜநகமஹாராஜன் எழுந்திருந்து மஹர்ஷிகளைக் கொண்டு யஜ்ஞாதிகார்யங்களை முடித்துவிட்டு, வாக்யங்களின் கருத்தறிய வல்லனாகிய அம்மன்னவன் தன்னுது புரோஹிதராகிய சதாநந்தரைப் பார்த்து, 'சதாநந்தரே! [1] ஸாங்காச்யையென்று பட்டணம் உண்டல்லவா? அது மிகவும் அழகியது. அதைச் சுற்றிலும் அகழிபோல் சூழ்ந்திருக்கிற இக்ஷுமதியென்னும் ஆற்றின் ப்ரவாஹத்தில் பகைவர் அண்டவொண்ணுதபடி காக்கும்பொருட்டுச் சூலங்கள் நாட்டப்பட்டிருக்கின்றன. மேலும் அந்நதியைச் சுற்றி நீர்நெல்லி மரங்கள் நெருங்கி விளங்குகின்றன. [2] ஸுக்ருதம்போல அப்பட்டணம் தன்னிடம் வஸிப்பவர்களுக்கு ஸகல அபீஷ்டங்களையுங் கொடுத்துக் கொண்டு புஷ்பக

---

1. இதிலுள்ள விசேஷங்கள் சதாநந்தருக்குத் தெரிந்தவையேயாயினும் தெரியச சொல்லுகைக்குக் காரணம் அவை பரம்பரையாகத் தசரதன் செவியிற் படவேண்டுமென்னுங் கருத்தே யன்றி வேறில்லை.

2 (ஸுக்ருதம்போல) புண்யம்போல. அதாவது—எப்படி ஜந்மாந்தரத்திற் செய்த புண்யம் பரிபாகதசைக்கு வந்து, ஸகல அபீஷ்டங்களையுங் கொடுக்குமோ, அப்படியே இப்பட்டணமும் ஸகல அபீஷ்டங்களையுங் கொடுக்கின்றதென்று கருத்து. ஜந்மாந்தரத்திற் புண்யஞ் செய்தவனே மறு ஜந்மத்தில் சுகங்களைப்பெறுவானென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. அப்படியே இப்பட்டணத்தில் வஸிப்பவர் அனைவரும் ஸகல ஸுகங்களையும பெற்று வாழ்ந்திருக்கின்றனர் ஸுகமோ புண்யத்தின் பலமென்று சொன்னேம். ஆகையால் இந்நகரத்தில் வஸிப்பவர் ஜந்மாந்தரத்தில் மிகுந்த ஸுக்ருதஞ் செய்தவரென்று தோற்றுகின்றது. இவர்கள் செய்த புண்யமே இவர்களுக்குப் பலங் கொடுக்கைக்காக இந்நகர வடிவங் கொண்டு வந்ததோ என்னும்படியிருக்கின்றது இங்ஙனங் கருதியே (ஸுக்ருதம்போல) என்று கூறப்பட்டது.

விமாநம்போல் ப்ரகாசிக்கின்றது. மஹாபராக்ரமசாலி யும் மிகவும் தர்மஸ்வபாவனும் எனக்குப் பின் பிறந்தவ னும் எங்கும் ப்ரஸித்தி பெற்றவனுமாகிய குசத்வஜ னென்பவன் அப்பட்டணத்தில் இக்ஷுமதி யெனனும் அந்நதியின் ஜலத்தைப் பாநஞ்செய்துகொண்டு வஸித்தி ருக்கின்றனன். அவன் அப்பட்டணத்தி லிருந்துகொண் டு எனது யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களை அப் போதைக்கப்போது ஸித்தஞ்செய்துகொடுத்துக்கொண் டிருப்பதுபற்றி எனது யாகத்தைக் காப்பவன் அவ னேயென்று நான் நினைத்திருக்கின்றனன். ஆகையால் அவனை இப்பொழுது நான் பார்க்க விரும்புகின்றேன். அம்மஹாதேஜஸ்வியும் இந்த விவாகத்தைப் பற்றிய ஸந்தோஷப்பெருக்கை என்னோடு கலந்து அநுபவிக்க வேண்டியவன்' என்றனன்.

(சதாநந்தருக்கு எதிரில ஜநகமன்னவன் இங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கையில் மிகவுஞ் சுருசுருப்புள்ள சில தூதர்கள் அவ்விடம் வந்தனர். அவர்களைக் கண்டு அவ்வரசன் குசத்வஜனை அழைத்துக் கொண்டு வரும்படி கட்டளையிட்டனன.) இங்ஙனம ஜநகமஹா ராஜன் ஆலோசித்துத் தூதர்களுக்குக் கட்டளையிட, தூதர்களும் விரைவிற் செல்லவல்ல குதிரைகளின்மீது ஏறிக்கொண்டு, இந்திரனிடங்கட்டளை பெற்று ஸ்ரீமஹா விஷ்ணுவை அழைத்துக்கொண்டு வருபவர்போல, அம் மன்னவனிடங் கட்டளைபெற்றுப் புருஷர்களிற் றலைவனா கிய குசத்வஜனை அழைத்துக்கொண்டு வரப் புறப்பட் டனர். அங்ஙனம் புறப்பட்டுச் சென்று ஸாங்காச்யா நகரியைச் சேர்ந்து குசத்வஜனைக் கண்டு, ராமன் சிவத நுர்ப்பங்கஞ் செய்தது முதலிய நடந்த விருத்தாந்தங் களையும் அதைக் கண்டு ஜநகமஹாராஜனுக்குள்ள அபி ப்ராயத்தையும் தெரியப் படுத்தினர்.

அந்தக் குசத்வஜனும் பலிஷ்டர்களாகிய அந்தத் தூதச்ரேஷ்டர்களிடம் அந்த விருத்தாந்தங்களையெல்லாங் கேட்டு அவ்வரசனது கட்டளையைச் சிரஸில் வஹித்து அங்கிருந்து புறப்பட்டு வந்து, மஹாநுபாவனும் தர்மஸ்வபாவனுமாகிய ஜநகமஹாராஜனைக் கண்டனன். முதலிற் சதாநந்தருக்கும் பிறகு ஜநக மன்னவனுக்கும் நமஸ்காரஞ் செய்து அவர்களிடம் அநுமதி பெற்று அரசர்களுக்குத் தக்கதும் மிக்க அழகுள்ளதும் பெருவிலை பெற்றதுமாகிய ஓர் ஸிம்ஹாஸநத்தின்மேல் ஏறி உட்கார்ந்தனன். மிகவுந் தேஜஸ்விகளாகிய அண்ணன் தம்பிகளிருவரும் ஆஸநத்திலுட்கார்ந்துகொண்டு ஸுதாமனென்னும் மந்திரிசிகாமணியைப் பார்த்து 'மந்திரிகளிற் றலைவனே! நீ விரைவாகச் சென்று, அளவில்லாத காந்தியுடையவனும் யாவராலும் எதிரிட முடியாத பராக்ரமுடையவனும் இக்ஷ்வாகுவம்சத்திற்கு அலங்காரமுமாகிய தசரதமஹீபாலனையும் அவனது குமாரர்களையும் மந்திரிகளையும் அழைத்துக்கொண்டு வருவாய்' என்றனுப்பினர். அம்மந்திரியும் ரகுகுல சிகாமணியாகிய தசரதன் இழிந்திருக்கிற விடுதிக்குச் சென்று அம்மன்னவனைக் கண்டு தலை வணங்கி நமஸ்காரஞ் செய்து 'அயோத்யாபதியே! வீரர்களிற்றலைவனே! மிதிலாதிபதியாகிய வைதேஹமன்னவன் உன்னை உனது உபாத்யாயர்களோடும் புரோஹிதர்களோடுங்கூடப் பார்க்க விரும்புகின்றனன்' என்று கூறினன்.

அந்த மந்திரி சிரோமணியின் வார்த்தையைக் கேட்டுத் தசரதசக்ரவர்த்தி ரிஷிக்கூட்டங்களோடும் பந்துக்களோடுங்கூடி ஜநகனிருக்குமிடத்திற்குப் போயினன். பேசுவதில் ஸமர்த்தனாகிய அந்தத் தசரதமன்னவன் இங்ஙனஞ்சென்று நண்பர்களும் பந்துக்களும் உபாத்

தியாயர்களுஞ் சூழ இருந்து ஜநகமஹீபாலனைக்கண்டு 'மஹாராஜனே! பகவானாகிய வஸிஷ்டமஹர்ஷி எமது இக்ஷ்வாகுவம்சத்திற்குப் பரமகுருவென்றும், உமக்கு வேண்டிய கார்யங்கள் எல்லாவற்றையும் தாமே முனைனின்று பேசி நிறைவேற்ற வல்லவரென்றும் உமக்குத் தெரிந்தேயிருக்கின்றது. தர்மஸ்வபாவராகிய இம்மாமுனிவர் விச்வாமித்ரரிடம் அநுஜ்ஞை பெற்ற மஹர்ஷிகள் அனைவருடன்கூடி எனது வம்சத்தை க்ரமமாகச் சொல்லுவர்' என்று மஹாநுபாவர்களாகிய அரசர்களினிடையில் மொழிந்து நரச்ரேஷ்டனாகிய தசரதமன்னவன் பேசாமலிருந்தனன்.

ஸமஸ்த மகிமைகளும் பொருந்திப் பேசுவதில் மிருந்த வல்லமையும் அமைந்த வஸிஷ்டமாமுனிவர் விதேஹாதிபதியாகிய ஜநகமன்னவனையும் அவனது புரோஹிதராகிய சதாநந்தமுனிவரையும்பார்த்து இங்ஙனம் உரைத்தனர். 'எவ்விதத்திலும் அறிவதற்கரிய வஸ்துவாகையால் விஷ்ணுவை அவ்யக்தமென்று சொல்லுவர்கள். அவ்விஷ்ணுவுக்குப் பிரமன் பிறந்தனன். அந்தப் பிரமன [1] சாச்வதனும் நித்யனும் அவ்யயனுமாயிருப்பவன. அந்த ப்ரஹ்மாவுக்கு மரீசி உண்டாயினர். மரீசிக்குக் காச்யபர் பிறந்தனர். காச்யபருக்கு ஸூர்யன் உண்டா

---

1 வெகுகாலமிருப்பவனாகையால (சாச்வத) னென்றும், இரண்டு பரார்த்தகாலம் நாசமின்றி இருப்பவனாகையால் (நித்ய) னென்றும், ப்ரவாஹ ரூபமாக இடையின்றிக் கல்பந்தோறும் இருப்பவனாகையால் (அவ்யய) னென்றும் கண்டுகொள்வது. (சாச்வதன், நித்யன், அவ்யயன்) என்கிற இம்மூன்று சப்தங்களும் நாசமின்றி யிருக்கும் வஸ்துவைச் சொல்லுகின்றன. ஆகையால் ஒருபதஞ்சொன்னால் போராதோ என்னும் ஸந்தேஹத்தைக் கீழ்சொன்ன அர்த்தபேதத்தைக் கொண்டு தீர்த்துக்கொள்வது.

யினன். ஸூர்யனுக்கு மநு என்னும் புதல்வன் பிறந்த னன். அம்மநுவே முன்பு ராஜாவாயிருந்தனன். மநு விநுடைய புதல்வன் இக்ஷ்வாகு. அந்த இக்ஷ்வாகுமன்ன வனே அயோத்யையை ஆண்டுவந்த அரசர்களிற் றலைவன்.

இக்ஷ்வாகுவுக்கு மிகுந்த செல்வமுடைய குக்ஷி யென்பவன் உண்டாயினன். குக்ஷிக்கு மிக்க அழகுடைய விகுக்ஷியென்பவன் தோற்றினன். விகுக்ஷிக்கு மஹா தேஜஸ்வியும் மிக்க பராக்ரமசாலியுமாகிய பாணனென் னும் புதல்வன பிறந்தனன். பாணனுக்குத் தேஜஸ்வியும் ப்ரதாபசாலியுமாகிய அநரண்யனென்னும் புத்திரன் உண்டாயினன். அநரண்யனுக்கு ப்ருதுவென்னும் புத் திரன் பிறந்தனன். ப்ருதுவுக்கு த்ரிசங்கு உண்டாயினன். த்ரிசங்குவின் பிள்ளை துந்துமாரன். அவன் மிகவுங் கீர்த்திபெற்றவன். அவனுக்கு யவநாச்வனென்று வே றொரு பேரும் உண்டு. அந்த யவநாச்வனது புதல்வன் மாந்தாதா. மாந்தாதாவின் பிள்ளை ஸுஸந்தி யென் பவன். அவன் மிகுந்த செல்வம் பெற்றவன். ஸுஸந் திக்கு த்ருவஸந்தியென்றும் ப்ரஸேநஜித்தென்றும் இர ண்டு பிள்ளைகள் உண்டாயினர். த்ருவஸந்திக்குப் பெருங் கீர்த்தி பெற்ற பரதனென்பவன் பிறந்தனன். பரதனுக்கு மஹாதேஜஸ்வியாகிய அஸிதனென்பவன் உண்டாயினன்.

அந்த அஸிதனுக்கு ஹைஹயரென்றும் தாலஜங் கர்களென்றும் சூரர்களாகிய சசிபிந்துக்களென்றும் இவ்வரசர்கள் சத்ருக்களா யிருந்தனர். அவ்வஸிதன் அந்தப் பகைவேந்தருடன் யுத்தத்தில் எதிர்த்துச் சண் டை செய்து அந்த யுத்தத்திலேயே பராஜயம் பெற்று ராஜ்யத்தினின்றுந் துறத்தப்பட்டனன். அப்பொழுது அஸிதன் சிறிது மிச்சமாயிருந்த தன் ஸேனையுடனும்

மந்திரிகளுடனும் ஹிமாலயத்திற்குச்சென்று அங்கு ப்ருகுப்ரஸ்ரவணமென்னும் சிகரத்தில் வஸித்துக் கொண்டிருந்தனன். அவனது பத்நிகளிருவரும் அப்பொழுது கர்ப்பவதிகளாயிருந்தார்களென்று கேள்வி. அவவிருவர்களில் ஒருத்தி தன்சக்களத்தியாகிய மற்றொருத்திக்கு, அவள் கருவைக் கெடுக்கவேணுமென்று கருதி விஷத்துடன் கலந்த பக்ஷயத்தைக் கொடுத்தனள். பிறகு ப்ருகுவம்சத்திற் பிறந்த ச்யவநரென்னும் முனிவர் அவ்வாசன தனது தேசத்தில் வஸிப்பவனென்னும் அபிமாநங்கொண்டு அவனிடம் அருள்புரிந்தவராகி வரங்கொடுக்கைக்காக மலைகளிற் சிறந்து மிகவும் அழகாகி விளங்கும் அந்த ஹிமவத் பர்வதத்திற்கு வந்தனர். அவ்விருவரில் விஷத்தைச் சாப்பிட்ட மூத்தவள் மிகுந்த பாக்யமுடையவளும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவளுமாகி விளங்கி நிற்பவள். அவள், க்ஷேமமாகப் புதல்வன் பிறக்கவேணுமென்று விருப்பமுற்றவளாகித் தேவர்களுக்கொப்பான காந்தியையுடைய அந்தப் பார்க்கவராகிய ச்யவந மாமுனிவர்க்கு நமஸ்காரஞ்செய்தனள்.

அவள் காளிந்தியென்னும் பேர் பூண்டவள். அவள் அம்மாமுனிவர்க்கு நமஸ்காரஞ் செய்து சுச்ருஷையுஞ் செய்து கொண்டிருந்தனள். இவவாறு தனக்கு யாதொரு தடையு மின்றிப் புதல்வன் உண்டாகவேணுமென்று விருப்பத்துடன் தனக்குச் சுச்ருஷைசெய்து கொண்டிருக்கிற அந்தக் காளிந்தியைப் பார்த்து அந்தணர் தலைவராகிய அநத ச்யவநமாமுனிவர் பிள்ளை பிறக்கும் விஷயத்தைப்பற்றித் 'தாமரையிதழ்போன்ற கண்களையுடைய பாக்யவதியே! உனது வயிற்றில் மிகுந்த பலமுடையவனும் சிறந்த பராக்ரமம் பொருந்தியவனும்

மஹாதேஜஸ்வியும் ஐச்வர்யங்களெல்லா மமைந்தவனு மாகிய புதல்வன் விஷத்தோடுகூடவே விரைவில் பிறக்கப் போகின்றனன். விஷத்துடன் கூடப் பிறப்பானென்று பயப்படவேண்டியதில்லை. யாதொரு கெடுதியும் நேராது' என்றனர்.

பதிவ்ரதையும் பட்டமஹிஷியுமாகிய அந்த ராஜ புத்ரியும் இங்ஙனம் அருள்பெற்று அந்த ச்யவநமாமுனி வர்க்கு நமஸ்காரஞ் செய்தனள். பிறகு கூடிய சீக்கிரத் திலேயே [1] பதிவியோகம் நேரிட, அந்தச் சோகத்தால் மிகவும் வருத்தமுற்ற அம்மடந்தை பின்பு ச்யவநமஹர் ஷியின் அனுக்கிரகத்தினால் ஒருபுதல்வனைப் பெற்றனள். கர்ப்பத்தைக் குலைக்கவேணுமென்று அந்தக்காளிந்திக்கு அவளது சக்களத்தி விஷத்தைக் கொடுத்தனளன்றோ? அவ்விஷத்துடன் கூடவே பிறந்தமையால் அந்தப் புதல் வன் [1] ஸகரனென்று பேர்பெற்றனன். அந்த ஸகரனு க்கு அஸமஞ்ஜனென்பவன் பிறந்தனன். அஸமஞ்ஜனுக் கு அம்சுமான் உண்டாயினன். அம்சுமானுக்குத் திலீ பன் தோன்றினன். திலீபனுக்குப் பகீரதன் ஜனித்த னன். பகீரதனுக்குக் ககுத்ஸ்தன் பிறந்தனன். ககுத் ஸ்தனுக்கு ரகு பிறந்தனன். ரகுவுக்கு அளவற்ற ஒளி யுடைய ப்ரவ்ருத்தனென்பவன் பிறந்தனன்.

இவன் முதலில் ப்ரவ்ருத்தனென்று பேர் பெற்றி ருந்து பிறகு என்னுடைய சாபத்தினால் ராக்ஷஸனாய் விட்டனன். அவனைக் கல்மாஷபாதனென்று சொல்வார்

---

1. பதிவியோகம்—பர்த்தாவை விட்டுப் பிரிகை. அதாவது-அவன் மரணமடைந்தது பற்றி விதவை யாகையிலென்க.

1 கரமென்றால் விஷம். அத்தோடுகூடப் பிறந்தவனாகையால் ஸகரன்.

கள். இவன் வஸிஷ்டமாமுனியால் சபிக்கப்பட்டு ராக்ஷஸனாகித் தானும் அம்மாமுனியைச் சபிக்கத் தொடங்கி ஜலத்தைக் கையிலெடுக்க, அப்பொழுது அவனது பாரியை வேண்டாமென்று நல்வார்த்தை சொல்லித் தடுக்கையில் அந்த ஜலத்தைத் தன் பாதத்தில் கொட்டிக்கொண்டு கல்மாஷபாதனென்று பேர் பெற்றனன். (கல்மாஷமென்றால் நாநாவர்ணத்தையுடையது. சாபஜலம் பட்டபடியால் நாநாவர்ணங்களையுடைய பாதத்தையுடையவனாயினன்.)

அவனுக்குச் சங்கணனென்பவன் பிறந்தனன். சங்கணனுக்கு ஸுதர்சநன் பிறந்தனன். ஸுதர்சநனுக்கு அக்னிவர்ணன் பிறந்தனன். அக்னிவர்ணனுக்குச் சீக்ரகன் பிறந்தனன். சீக்ரகனுக்கு மரு பிறந்தனன். மருவுக்கு ப்ரசுச்ருகனென்பவன் பிறந்தனன். ப்ரசுச்ருகனுக்கு அம்பரீஷன் பிறந்தனன். அம்பரீஷனுக்கு நஹுஷனென்னும் மஹாராஜன் பிறந்தனன். [1] நஹுஷனுக்கு யயாதி பிறந்தனன். யயாதிக்கு நாபாகன் பிறந்தனன். நாபாகனுக்கு அஜமஹாராஜன் பிறந்தனன். அவனுக்குத் தசரதசக்ரவர்த்தி பிறந்தனன். இந்தத் தசரதமஹாராஜனுக்கு, அண்ணன தம்பிகளாகிய இந்த ராமலக்ஷ்மணர்கள் பிறந்தனர். ஓ ஜநகமஹாராஜனே! இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த மன்னர்கள் முதலே பிடித்துப் பரிசுத்தமானவம்சமுடையவர்களும் பரமதார்மிகர்களும் மிகுந்த பராக்ரமமுடையவர்களும் உண்மையையே உரைப்பவர்களுமாயிருப்பவர். அப்படிப்பட்டவர்களது வம்சத்திற் பிறந்த இந்த ராமலக்ஷ்மணர்களுக்காக உன்

1. இந்த நஹுஷ யயாதிகள் சந்த்ரவம்சத்து நஹுஷ யயாதிகளைக்காட்டிலும் வேறுபட்டவர். இதில் முறை வேறுபாடு கல்பபேதத்தினுலுண்டானதென்று தெரிகின்றது.

புதல்விகளை வரிக்கின்றனன். உமது புதல்விகளுக்கு இந்தக் குமாரர்களே தகுந்தவர்கள். இந்தக் குமாரர்களுக்கும் உனது புதல்விகளே தகுந்தவர்கள். இப்படித் தகுந்திருப்பவர்களுக்கு அங்ஙனந் தகுந்திருக்கிற பெண்களை விவாஹஞ் செய்து கொடுப்பது உனக்குத் தகும்' எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---


ஜநகமஹாராஜன் தனது வம்சக்ரமத்தைச் சொல்லுதல்.


வஸிஷ்டமாமுனிவர் இங்ஙனஞ் சொல்லிமுடிக்கையில் ஜநகமஹாராஜனும் கையைக் கூப்பிக்கொண்டு அம்முனிவரைப் பார்த்து 'மஹாநுபாவரே! உமக்குச் சுபம் உண்டாகவேண்டும். புகழத்தக்க எமது வம்சத்தைச் சொல்லுகின்றேன்; கேட்கவேண்டும். நற்குலத்திற் பிறந்தவனாயிருப்பவன் ஒருவன் தான் கந்யாதாநஞ் செய்யும்பொழுது தனது வம்சத்தை யெல்லாங் குறையற எடுத்துக் கூறவேண்டுமல்லவா? மாமுனியே! ஆகையால் எமது வம்சத்தைச் சொல்லுகின்றேன்; கேட்பீராக. யாவருங் கண்டு புகழும்படியான மிகுந்த செயல்களால் மூவுலகங்களிலும் ப்ரஸித்தி பெற்ற நிமியென்னும் ஓர் அரசர் உண்டு. அவர் மிகவும் தர்மஸ்வபாவர்; பலசாலிகள் அனைவரிலுந் தலைவர். அவருக்கு மிதியென்னும் ஓர் புதல்வர் உண்டாயினர். அந்த மிதியென்னும் மன்னவராற்றான் இம்மிதிலாபுரம் நிருமிக்கப்பட்டது. அவரே ஜநகவம்சத்திற்கு முதல்வர். அவருக்கு உதாவஸுவென்னும் புதல்வர் பிறந்தனர். உதாவஸுவுக்கு தர்மஸ்பாவராகிய நந்திவர்த்தநர் பிறந்தனர். நந்திவர்த்தநருக்கு ஸுகேது என்று ப்ரஸித்தி

பெற்ற ஒருபுத்ரர் பிறந்தனர். ஸுகேதுவுக்கு தர்மஸ்வ பாவரும் மிக்க பலிஷ்டருமாகிய தேவராதர் பிறந்தனர்.

ராஜர்ஷியாகிய அந்தத் தேவராதருக்கு ப்ருஹத்ரதரென்பவர் பிறந்தனர். ப்ருஹத்ரதருக்கு மஹாப்ரதாபமுடையவரும் சூரருமாகிய மஹாவீரரென்பவர் பிறந்தனர். அம்மஹாவீரருக்கு மிகுந்த தைர்யசாலியும் உண்மையான பராக்ரமமுடையவருமாகிய ஸுத்ருதியென்பவர் பிறந்தனர். அந்த ஸுத்ருதிக்குத் தர்மத்தில் மனஞ் சென்றவரும் தர்மத்தை யநுஷ்டிப்பவருமாகிய த்ருஷ்டகேது பிறந்தனர். ராஜர்ஷியாகிய அந்த த்ருஷ்டகேதுவுக்கு ஹர்யச்வரென்பவர் பிறந்தனர். ஹர்யச்வருக்கு மருவென்பவர் பிறந்தனர். அந்த மருவுக்கு ப்ரதிந்தகரென்பவர் பிறந்தனர். அந்த ப்ரதிந்தகருக்கு தர்மஸ்வபாவராகிய கீர்த்திரதரென்னும் மன்னவர் புதல்வராகப் பிறந்தனர். கீர்த்திரதருக்கு தேவமீடரென்பவர் பிறந்தனர். தேவமீடருக்கு விபுதரென்பவர் பிறந்தனர். விபுதருக்கு மஹீத்ரகரென்பவர் பிறந்தனர்.

மஹீத்ரகருக்கு மஹாபலிஷ்டராகிய கீர்த்திராதரென்பவர் பிறந்தனர். ராஜர்ஷியாகிய கீர்த்திராதருக்கு மஹாரோமரென்பவர் பிறந்தனர். மஹாரோமருக்கு தர்மஸ்வபாவராகிய ஸ்வர்ணரோமரென்பவர் பிறந்தனர். ராஜர்ஷியாகிய அந்த ஸ்வர்ணரோமருக்கு ஹ்ரஸ்வரோமரென்பவர் பிறந்தனர். தர்மத்தையுணர்ந்தவரும் மஹாத்மாவருமாகிய அந்த ஹ்ரஸ்வரோமருக்கு இரண்டு புத்திரர்கள் பிறந்தனர். அவர்களில் நான் மூத்தவன். வீரனுகிய குசத்வஜன் என்னுடைய தம்பி. எனது தகப்பனர் மூத்தவனுகிய என்னை ராஜ்யத்தில் அபிஷேகஞ்

செய்து குசத்வஜனைப் போஷிக்கவேண்டிய பாரத்தை யும் என்மேல் புகட்டுத் தபோவநத்திற்குச் சென்றனர். வ்ருத்தராகிய எமது தகப்பனுர் தேகத்தை விட்டு ஸ்வர்க்கத்திற்குச் செல்லுகையில், நான் தேவர்களுக் கொப்பான என் தம்பி குசத்வஜனை எப்பொழுதும் மிக்க ப்ரீதியுடன் பார்த்துக்கொண்டு தர்மம் தவருது ராஜ்ய பரிபாலநஞ் செய்து வந்தனன்.

பின்பு சில காலம் போகையில், மிகுந்த வீர்யம் பொருந்திய ஸுதந்வாவென்னும் மன்னவன் ஸாங்காச்ய நகரத்தினின்றும் முற்றுகையிடுதற்காக மிதிலாபுரத் தின் மேல் எதிரிட்டுவந்து ஒப்பில்லாத சிவதநுஸ்ஸை யும் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஸீதையை யும் தனக்குக் கட்டாயமாய்க் கொடுக்கவேண்டுமென்று என்க்குச் சொல்லியனுப்பினன். ப்ரஹ்மரிஷியாகிய வஸி ஷ்ட்டமுனிவரே! வில்லையாவது ஸீதையையாவது நான் கொடுக்கவில்லை. அதனுல் அவன் என்னோடு யுத்தஞ் செய்வதாகத் தலைப்பட்டு வருகையில், என்னை யெதிரிட் டு வந்த அந்த ஸுதந்வராஜனை அந்த யுத்தத்தில் நான் முடித்துவிட்டனன். அங்ஙனம் அந்த மன்ன வனைத் துலைத்து ஸாங்காச்யநகரத்திற்கு மிக்க வீர்யம் பொருந்தி என்னுடன்கூடப் பிறந்தவனுகிய குசத்வஜனை அரசனுகப் பட்டங்கட்டி வைத்தனன். என்னுடன் பிறந்தவனுகிய இந்தக் குசத்வஜன் எனக்கு இளையவன். நானே மூத்தவன.

முனிவர்களில் தலைவரே! நீர் வரித்தபடியே மிகுந்த ப்ரீதியுடன் எனது புதல்விகளிருவரையும் விவாஹஞ் செய்து கொடுக்கின்றனன். உமக்குச் சுபம் உண்டாக வேண்டும். ராமனுக்கு ஸீதையையும் லக்ஷ்மணனுக்கு ஊர்மிளையையும் கொடுக்கின்றேன். வல்லமையையே

விலையாகப் பெற்றவளும் தேவகந்யகை போன்றவளுமாகி னது மூத்த புதல்வியாகிய ஸீதையையும் இரண்டாவது புதல்வியாகிய ஊர்மிளையையும் [1] த்ரிகரணங்களிலும் வேறுபாடின்றி மிகுந்த ப்ரீதியுடன் மூன்றுதரம் கொடுக்கின்றேன். ஓ தசரதமஹீபாலனே! ரகுகுலதிலகனாகிய உனக்கு மிகுந்த ஸந்தோஷத்தோடு என்பெண்களை மணாட்டுப்பெண்களாகக் கொடுக்கின்றேன்.

ராம லக்ஷ்மணர்களுக்கு விவாஹத்திற் செய்யவேண்டிய கோதானமென்கிற ஸமாவர்த்தநம் முதலிய விவாஹாங்கமான கர்மங்களைச் செய்விப்பாயாக. உனக்கு நன்மை உண்டாகுக. விவாஹகாலத்திற் செய்யவேண்டிய பித்ருகார்யமாகிய நாந்தீச்ராத்தத்தையும் நடத்துவாயாக. நீண்ட புஜங்களையுடைய மஹாநுபாவனே! இன்றைத்தினம் மகாநக்ஷத்திரம் அன்றோ? இன்றைக்கு மூன்றாவது நாள் மங்களகரமாகிய உத்தரபல்குநீ நக்ஷத்ரம் வருகின்றது அதில் விவாஹகார்யத்தை நடத்துவாயாக. ராம லக்ஷ்மணர்களுக்கு மேன்மேலும் மிகுந்த க்ஷேமங்களை விளைவிக்கும்படியான கோதானம் பூதானம் திலதானம் ஹிரண்யதானம் முதலிய தானங்களை நடத்துவாயாக', எழுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன் தனது பிள்ளைகளின் விவாஹத்திற்காகக் கோதானம் முதலியவற்றைச் செய்தல்

இங்ஙனஞ் ஜநகமஹாராஜன் சொல்லி முடித்து நின்றனன். பின்பு விச்வாமித்ர மாமுனிவர் வஸிஷ்டருடன்கூட வீரனாகிய அந்த ஜநகமஹாராஜனைப் பார்த்து

---

[1] த்ரிகரணங்கள்—மூன்று கரணங்கள். மனோவாக்கியங்கள். வாக்-பேசசு; காயம்-சரீரம்.

'மன்னவர் தலைவனே! இக்ஷ்வாகுவம்சமும் விதேஹவம்சமும் ஆச்சரியத்தை விளைவிக்கின்றவை. அவ்விரண்டு வம்சங்களின் மஹிமையும் இவ்வளவு அவ்வளவென்று அளவிடக் கூடாதிருக்கும். ஆனதுபற்றியே இந்த இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கும் விதேஹவம்சத்தரசர்களுக்கும் ஒப்பானவன் ஒருவனும் இல்லை. ஸீதையையும் ஊர்மிளையையும் ராமலக்ஷ்மணர்களுக்குத் தர்மந் தவறாது கொடுக்கிற இந்த விவாஹஸம்பந்தமானது ஒன்றோடொன்று ஒத்திருக்கிற குலங்களுக்கு நேரிடுகையால் மிகவும் அமைந்திருக்கின்றது. மேலும் பெண்பிள்ளைகளிருவரும் ஸௌந்தர்யத்தின் மிகுதியில் ஒருவருக்கொருவர் ஒத்திருப்பதனாலும் இந்த ஸம்பந்தம் அமைந்திருக்கின்றது. உனக்கு மற்றொரு விஷயம் சொல்ல வேண்டியதாயிருக்கின்றது. அதை ஊக்கத்துடன் கேட்பீராக. இந்தக்குசத்வஜமஹாராஜன் உனக்கு இளையவன்; மேலும் தர்மங்களை யறிந்தவன். ஆகையால் உன்னைப்போலவே இவனும் ஸம்பந்தத்திற்கு உரியவனாயிருக்கின்றனன். தர்மாத்மாவாகிய இந்தக் குசத்வஜனுக்கு ஒப்பில்லாத அழகு பொருந்திய இரண்டு பெண்கள் இருக்கின்றார்களன்றோ? அப்பெண்களையும் மற்றவர்க்கு விவாஹஞ்செய்து கொடுக்கும்படி கேட்டுக் கொள்கின்றோம். மற்றவர் தாமும் ஆரோ என்று நினைக்கவேண்டாம். சின்னவனாகிய பரதனும் புத்திமானாகிய சத்ருக்னனும் இருக்கின்றார்களன்றோ? அம்மஹாநுபாவர்களுக்கே குசத்வஜனுடைய பெண்களிருவரையும் விவாஹஞ் செய்து கொடுக்கும்படி வரிக்கின்றனம். தசரதனுடைய இப்புதல்வர் அனைவரும் நல்ல ஸௌந்தர்யமும் யௌவநமும் உடையவர்கள். அனைவரும் திக்பாலகர்களை நிகர்த்தவர்கள். எல்லோரும் தேவதைகளைப்போன்ற பராக்ரம

முடையவர்கள். நீங்கள் இருவரும் இவ்வாறு ஒருவருக்கொருவர் ஸம்பந்தஞ் செய்யப் பெற்று, தோஷமொன்றுமின்றி விளங்கும் இக்ஷ்வாகுவம்சமும் நற்செய்கையுடைய உனது வம்சமும் ஒன்றுக்கொன்று மேன்மேலென மேன்மையைப் பெறுவதாக' என்றனர்.

இங்ஙனம் விச்வாமித்ரர் மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு வஸிஷ்டரிடம் அநுமதியும் பெற்றுக்கொண்டு, அப்பொழுது ஜநகமஹாராஜன் கைகளைக் கூப்பிக்கொண்டு அவ்விருவரையும் நோக்கி 'முனிமன்னவர்களே! இக்ஷ்வாகு வம்சத்தோடு ஸம்பந்தஞ் செய்வது மிகவுந் தகுதியே. அப்படி தகுந்திருக்கிற இந்த ஸம்பந்தத்தைச் செய்யும்படி நீங்களே ஆஜ்ஞாபிப்பதனால் எனது குலம் மிகவும் மேன்மை பெற்றதென்று நினைக்கின்றனன். நீங்கள் ஆஜ்ஞாபித்தபடியே ஆகட்டும். உங்களுக்குச் சுபம் உண்டாக வேண்டும். எப்பொழுதும் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியாதிருக்கும் இந்தப்பரத சத்ருக்நர்கள் இருவரும் குசத்வஜனுடைய பெண்களாகிய இவ்விருவரையும் விவாகஞ்செய்துகொள்ளட்டும். மாமுனியே! மஹாபலசாலிகளாகிய ராஜகுமாரர்கள் நால்வரும் ஒரு தினத்திலேயே இந்த ராஜபுத்திரிகள் நால்வரையும் மணம் புரிவார்களாக. அந்தணர் தலைவரே! பகன் என்பவனைத் தேவதையாக உடைய உத்தரபல்குநீ நக்ஷத்திரத்தில் பகலில் விவாஹஞ்செய்வது உத்தமமென்று பண்டிதர்கள் புகழ்ந்து சொல்லுகின்றனர். (ஆகையால் நாளையினன்றைக்குவரும் உத்தரபல்குநீ நக்ஷத்திரத்தில் விவாஹத்தை முடித்துவிடவேண்டுமெ'என்றிங்ஙனம் மிகவும் அழகாகக்கூறி, மீளவும் அம்முனிவர்கள் இருவருக்கும் எதிரில் நின்றுகொண்டு கையைக் கூப்பிக்கொண்டு ஜநகமன்னவன் 'நீங்கள், நான் கந்யாப்ரதா

களு செய்யும்படி என்மீது அருள்புரிந்து எனக்குச் சிறந்த தர்மத்தை உண்டாக்கினீர்கள். உங்கள் இரு வர்க்கும் நான் எப்பொழுதும் சிஷ்யனுய் விட்டனன். நீங்கள் என் தம்பி குசத்வஜனுடையவும் என்னுடைய வும் தசரதமஹாராஜனுடையவும் ஆகிய இம்மூவருடை யவும் ஸிம்ஹாஸநங்களில் ஏறி வீற்றிருந்து எங்கள் மூவ ருடைய ராஜ்யத்தையுங் கைப்பற்றிப் பரிபாலித்து வரு வீர்களாக. 'தசரதனுடைய ராஜ்யத்தைக் கொடுக்க நீ ஆர்?' என்று கேட்க வேண்டாம். இந்த மிதிலாநகரம் எப்படி தசரத மஹாராஜனுக்கு ஸ்வாதீநமோ, அப் படியே அயோத்யாபுரி எனக்கு ஸ்வாதீநம். ஆகையால் நான் தசரதனது ராஜ்யத்தையும் உங்களுக்குக் கொடுக் கத் தகும். ஆனது பற்றி இம்மூன்று ராஜ்யத்திலும் உங்களுக்கு ப்ரபுத்வம் உண்டென்பதற்குஸந்தேஹமில்லை நாங்கள் அனைவரும் உங்களுக்கு ஸ்வாதீநர்களாயிருப்ப வர்கள். நீங்கள் எல்லோரும் எங்களுக்கு ஹிதத்தை உபதேசித்து எங்களுக்குத் தகுந்தபடி எக்கார்யமாயி னும் செய்துகொள்ளத் தகும்' என்றனன்.

ஜநகமஹாராஜன் இங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக் கையில் ரகுகுலதிலகனுகிய தசரதசக்ரவர்த்தி மிகுந்த ஸந்தோஷமடைந்து அந்த ஜநகமன்னவனைப் பார்த்து 'மிதிலாநகரத்திற்கு அதிபதிகளாகி அண்ணன் தம்பி களுமாகிய உங்களிருவருடையவும் நற்குணங்கள் கணக் கிட்டுக் கூடாதிருக்கின்றன. ஆனதுபற்றி அரசர்களும் ரிஷிஜனங்களும் உங்களால் நன்கு பூஜிக்கப்பட்டிருக்கின் றனர். நீ நன்மையைப் பெறுவாயாக. உனக்கு மங் களம் உண்டாகவேண்டும். நான் எனது இருப்பிடத் திற்குச் சென்று ச்ராத்தகர்மங்கள் யாவையும் நடத்திக் கொள்கின்றேன்' என்று மொழிந்து அப்பொழுது அம்

மன்னவனிடத்தில் அநுமதிபெற்று முனிவர்கள் இருவரையும் முன்னிட்டுக்கொண்டு மஹாயசஸ்வியாகிய அந்தத் தசரதமன்னவன் விரைவில் தனவிடுதிக்குச் சென்று நாந்தீச்ராத்தத்தை விதிப்படி நடத்திப் பின்பு பொழுது விடிகையில் விடியற்காலத்தில் எழுந்திருந்து அப்பொழுது செய்யவேண்டிய உத்தம காரியமாகிய கோதாநமென்கிற ஸமாவர்த்தந கர்மத்தைச் செய்வித்தனன்.

பின்பு பெரும்புகழ் பெற்ற அந்தத் தசரத சக்ரவர்த்தி தன் புத்திரர்கள் ஒவ்வொருவரையும் உத்தேசித்து லக்ஷம் பசுக்கள் விதமாக ப்ராஹ்மணர்களுக்குத் தர்மந் தவறாது தாநஞ் செய்தனன். ரகுகுலத்திற் பிறந்து புருஷர்களிற் சிறந்த அந்தத் தசரதமஹாராஜன் புத்திரர்களிடத்தில் மிகவும் வாத்ஸல்யமுடையவன். ஆகையால் அவன் இவ்வளவோடு நிற்காமல் அவர்களது ஸமாவர்த்தநோத்ஸவத்தைப் பற்றிப் பொன்கொம்புகள் பூட்டப் பெற்றவைகளும் பால் நிரம்பிய மடிகளை யுடையவைகளும் கன்றுகளோடு கூடியவைகளுமான நாலுலக்ஷம் பசுக்களையும் பால் கறப்பதற்காக அத்தனை வெண்கலப் பாத்திரங்களையும் ப்ராஹ்மணர்களுக்குத் தாநஞ்செய்து மேலும் சிறந்த பலவகை தநங்களையும் அப்படியே அந்தணர்களுக்குத் தந்தனன். அப்பொழுது ஸமாவர்த்தநஞ் செய்துகொண்ட புத்திரர்கள் தன்னைச் சூழ்ந்திருக்க அந்தத் தசரதமஹீபாலன் திக்பாலகர்களால் சூழப்பெற்று முகம் மலர்ந்து விளங்கும் ப்ரஹ்மதேவன்போல் விளங்கினன். எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---



ஸீதாகல்யாணம்.

தசரதமஹாராஜன் தனது குமாரர்களுக்கு ஸமாவர்த்தந கர்மத்தை மிக்க சிறப்புடன் நடத்தின அன்றைத்தினமே சூரனாகிய யுதாஜித்தென்பவன் அவ்விடம் வந்து சேர்ந்தனன். அந்த யுதாஜித்தென்பவன் கேகயராஜனது குமாரன்; பரதனுக்கு நேரே தாயுடன் பிறந்த மாமன். அவன அவ்விடம் வந்து தசரதனைப் பார்த்து க்ஷேமம் விசாரித்து 'ராஜேந்திரனே! கேகயராஜர் ஸ்நேஹத்துடன் உமது க்ஷேமத்தை விசாரிக்கச் சொல்லினார். நீர் யாருடைய க்ஷேமத்தை எப்பொழுதும் விரும்புகின்றீரோ, அப்படிப்பட்ட நாங்கள் அனைவரும் இப்பொழுது க்ஷேமமாயிருக்கின்றனம். எனது தகப்பனாராகிய அந்தக் கேகயராஜர் என் தங்கையின பிள்ளையாகிய பரதனைப் பார்க்க விரும்புகினறனர். ஆகையால் அவனை அழைத்துக்கொண்டு போவதற்காக நான் அயோத்யைக்குப் போயிருந்தனன். அயோத்யையில் நீரும் உமது குமாரர்களும் விவாஹத்திற்காக மிதிலாபுரத்திற்குப் போயிருப்பதாகக் கேள்விப்பட்டு என் தங்கையின் குழந்தையாகிய பரதனைப் பார்ப்பதற்காக அவ்விடமிருந்து சீக்கிரமாக இங்கு வந்து சேர்ந்தேன்' என்றுரைத்தனன்.

பின்பு, தசரதசக்ரவர்த்தியும் தனக்கு ப்ரியாதிதியாக யுதாஜித்து வந்ததைக் கண்டு, பூஜிக்கத்தக்க அந்த யுதாஜித்தை நன்றாகப் பூஜித்தனன். இங்ஙனம் வந்த யுதாஜித்தைப் பூஜித்த பின்பு அந்தத் தசரதமஹாராஜன் மஹாநுபாவர்களாகிய தன்குமாரர்களோடு அன்றிரவைக் கடத்தி மறுநாள் காலையில் எழுந்திருந்து அந்தந்தக் காலங்களில் செய்யவேண்டிய கருமங்களை யெல்லா முணர்ந்தவனாகையால் அப்பொ

பூது செய்யவேண்டிய கருமங்களைச் செய்து முடித்து ரிஷிகளை முன்னே அழைத்துக்கொண்டு யாகசாலையின் ஸமீபத்திற்கு வந்து சேர்ந்தனன். ராமனும் ஸமஸ்த ஆபரணங்களையும் பூண்டு விளங்குகின்ற தம்பிகளுடன் கூடி, கல்யாணகங்கணங்கட்டிக்கொள்கிற மங்களாசாரத்தையும் நிறைவேற்றிவிட்டு, விவாஹத்திற்குரியதும் ஜயத்தைக் கொடுக்கத் தக்கதுமாகிய சுபமுஹூர்த்தத்தில் வஸிஷ்டரையும் மற்றுமுள்ள மஹர்ஷிகளையும் முன்னிட்டுக்கொண்டு யாகசாலைக்குப் போய்ச் சேர்ந்தனன். (அங்ஙனஞ் சென்று தம்பிகள் தனனைச் சூழ்ந்திருக்கத் தகப்பனுருடைய அருகில் உட்கார்ந்திருந்தனன்.)

பகவானுகிய வஸிஷ்டமாமுனிவர் ஜநகனிடஞ் சென்று அவனைப் பார்த்து 'அரசர்களிற்றலைவனே! தசரதமஹீபாலன் கங்கணங்கட்டிக கொண்டிருக்கிற பிள்ளைகளோடுகூடக் கந்யாப்ரதானஞ் செய்கிற உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனன். (கந்யையைக் கொடுப்பவனுக்கும் பெற்றுக் கொள்ளுகிறவனுககும் ஸமஸ்தபுருஷார்த்தங்களும் உண்டாகின்றன.) கொடுப்பவனும் கொள்கின்றவனும் அமைந்திருக்கில் ஸகல புருஷார்த்தங்களும் நிறைவேறும். (அவவிருவர்களாலுமே கன்னிகையைக் கொடுப்பது வாங்கிக் கொள்வது முதலிய விவாஹகாரியங்கள் யாவும் நடக்க வேண்டும். ஆகையால் கந்யாப்ரதானஞ் செய்யவேண்டிய நீ வெறுமனே இருக்கலாகாது). கந்யாதானஞ் செய்து நீ செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றிக் கொள்வாயாக' என்றிவவாறு மொழிந்தனர்.

மிகவும்பராக்ரமசாலியாகிய ஜநகமஹாராஜன தாநசீலர்களில் தன்னைப்போல் மற்றொருவருங் கிடையா

ரென்னும்படி பெரும் புகழ் பெற்றவன்; பின்னும் மேலான தர்மங்களெல்லாம் அறிந்தவன். ஆகையால் அவன் விவாஹத்திற்குத் தான் செய்யவேண்டிய விதிகளையெல்லாம் தீர்த்துக்கொண்டிருந்தனன். ஆனது பற்றி மஹாநுபாவராகிய வஸிஷ்டமாமுனிவர் அங்ஙனஞ் சொல்லக் கேட்டுத் தான் அம்மாமுனியை நோக்கி 'மஹாநுபாவரே! நீங்களாகவே ஏன் சீக்கிரமாக வராமலிருக்கின்றீர்கள்? நீங்கள் வந்தீர்களாயின், உங்களைத் தடுக்கும்படியான வாசற்காப்பவன் அங்கு எவனாவது இருக்கின்றானோ? நீங்கள் இங்கே வருகைக்கு யாருடைய ஆஜ்ஞையை எதிர்ப்பார்க்கின்றீர்கள்? உமக்கு உம்முடைய ராஜ்யம் எப்படியோ, அப்படியே இந்த ராஜ்யமும் ஸ்வாதீனமாயிருக்கின்றது. எனது ராஜ்யமே உம்முடைய ஸொத்தாயிருக்க, இனி என்னுடைய கிருகம் உமக்கு அதீனமென்பது சொல்லவேண்டுமோ? ஸொந்த கிருகத்தில் விசாரமயாதிருக்கின்றது? எனக்காக நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறதாகச் சொன்னீர். எனது கன்னிகைகள் விவாஹத்திற்கு வேண்டிய மங்களாசாரங்கள் யாவுஞ் செய்துகொண்டு ஜ்வலித்துக் கொண்டிருக்கிற அக்நிஜ்வாலைகள்போல் ப்ரகாசித்துக்கொண்டு விவாஹவேதிகையின் அருகில் வந்திருக்கின்றனர். நானும் ஸித்தனாகவே இவ்வேதிகையிலிருந்துகொண்டு உங்களை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றேன். ஆகையால் தசரத மஹீபதி சுபகாரியத்தை நிரவிக்நமாக நடத்தட்டும். விளம்பஞ் செய்வது எதுக்காக?" என்றனன்.

இங்ஙனம் ஜநகமஹாராஜன் மொழிந்தவற்றையெல்லாம் வஸிஷ்டமாமுனிவர் சொல்லியனுப்பிய புருஷனமூலமாகக் கேட்டுத் தசரதசக்ரவர்த்தி தன்குமாரர்

களையும் ரிஷிகளையும் மற்றுமுள்ள யாவரையும் கூடவே யழைத்துக்கொண்டு யாகசாலைக்குட் ப்ரவேசித்தனன். பின்பு விதேஹராஜனாகிய ஜநகமன்னவன வஸிஷ்ட மாமுனியைப் பார்த்து 'முனிவர்களில் தலைவரே! நீர் தர்மங்களையெல்லாம் அறிந்து அறிந்தபடியே நடத்துந் தன்மையர்; மேலும் எனக்கு ப்ரபுவாயிருக்கின்றீர். ஆகையால், உலகங்களையெல்லாங் களிக்கச்செய்யுந் தன்மையனாகிய நமது ராமனுக்குச் செய்யவேண்டிய விவாஹகாரியங்கள் அனைத்தையும் நீர் ரிஷிகளுடன்கூடி நடத்துவீராக' என்றனன. பகவானாகிய வஸிஷ்டமாமுனியும் அப்படியே யாகட்டுமென்றுரைத்து விச்வாமித்ர முனிவரையும் தாமிகராகிய சதாநந்தரையும் முன்னிட்டுக்கொண்டு விவாஹத்தின்பொருட்டுப் பச்சையிலைகளாற் புதிதாகக் கட்டப்பட்ட கல்யாணப் பந்தலின் நடுவில் சாஸ்த்ரவிதிபபடி விவாஹவேதியைக் கட்டுவித்து அதற்கு நான்கு பக்கத்திலும்[1] கந்த புஷ்பங்களையும் முளைகளுடனகூடிய பொற்பாலிகைகளையும், முளைகளோடு கூடிய அடியில்லாத பாத்ரங்களையும், முளைகளோடுகூடிய மடக்குகளையும், தூபங்களோடு கூடிய தூபபாத்ரங்களையும, சங்குமயமான பாத்ரங்களையும், நெய் ஹோமஞ் செய்வதற்கு வேண்டிய ஸ்ருக்கு ஸ்ருவம் என்கிற பாத்ரங்களையும், அர்க்யத்தின்பொருட்டு ஜலம் நிரம்பிய பாத்ரங்களையும் பொரிகளால் நிறைந்கப்பெற்ற பாத்ரங்களையும், மஞ்சளைப்பூசி ஸம்ஸ்காரஞ் செய்யப் பெற்ற அக்ஷதைகளையும் வைத்து, அந்த வேதிகையை அலங்கரித்தனன்.

எல்லா மறியவலலவரும் மிகுந்த ப்ரபாவம் பெருந்

1 கந்தம்—சந்தநம்.

தியவருமாகிய வஸிஷ்ட பகவானனவர் சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி மந்த்ரங்களைச் சொல்லிக்கொண்டு அந்த வேதிகையில் ஒன்றோடொன்று சரியாயிருக்கின்ற தர்ப்பங்களைப் பரப்பிச் சாஸ்த்ரந் தவறாமல் மந்த்ரங்களைச் சொல்லிக்கொண்டே அக்கிகுண்டத்தில் அக்கியைச் சேர்த்து அவ்வக்கியில் கல்யாணப் பெண் பிள்ளைகளுக்கு நன்மை உண்டாகும்பொருட்டு ஹோமஞ் செய்தனர். பின்பு ஜநகமஹாராஜன் ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்காரஞ் செய்யப்பெற்ற ஸீதையை அக்கிக்கு முன்பாக அழைத்துக்கொண்டு வந்து ராமனுக்கு எதிரில் நிறுத்திக்கொண்டு கௌஸல்யைக்கு மஹாநந்தத்தைக் கொடுப்பவனாகிய அந்த ஸ்ரீராமனைப் பார்த்து '[1] இந்த ஸீதையானவள் என்னுடைய புதல்வி; உனக்குத் தர்ம பத்நியாயிருப்பவள். நீ இவளை அங்கீகரிப்பாயாக. உனக்குச் க்ஷேமம் உண்டாக வேண்டும். உனது கையால் இவளது கையைப் பிடித்துக் கொள்வாயாக. இவள் பதிவ்ரதையாயிருப்பவள்; பின்னும், மிகுந்த பாக்யமுடையவள்; உன்னை யெப்பொழுதும் நிழல்போல் அநுஸரித்திருப்பாள்' என்று உரைத்து ராமனது ஹஸ்தத்தில் அப்பொழுது மந்திரத்தினால் பரிசுத்தமாகிய ஜலத்தைச் சேர்த்தனன. அப்பொழுது 'மேல் மேல்' என்று தேவர்களும் ரிஷிகளும் கொண்டாடினர். அச்சமயத்தில் தேவதுந்துபி வாத்யங்களும் முழங்கின. ஆகாயத்தினின்று புஷ்பவர்ஷமும் உண்டாயிற்று. இவ்வாறு ஜநகமஹாராஜன் மந்த்ரபூர்வகமாக ஸீதையைத்

---

1 இதற்கு—

'இயம்ஸீதா மம ஸுதா ஸஹயர்மசரீ தவ'

ப்ரதீச்சசைநாம் பத்ரந்தே பாணிம் க்ருஹ்ணீஷ்வபாணிநா'

என்றுமூலம். இதற்கு விசேஷார்த்தம் தனிஸ்லோகியில் காண்க.

தாரைவார்த்துக் கொடுத்து, மிகுந்த ஸந்தோஷம் அடைந்து லக்ஷ்மணனைப் பார்த்து [1] 'லக்ஷ்மணா! இப்படி வருவாயாக. உனக்கு மங்களம் உண்டாகவேண்டும். நான் ஊர்மிளையை உனக்கு விவாஹஞ்செய்து கொடுப்பதாக நிச்சயித்து விட்டேன். நீ இவளைக் கொள்ள வேண்டும் காலவிளம்பமின்றி இவளை நீ பாணிக்ரஹணஞ் செய்வாயாக' என்றனன். இங்ஙனம் அம்மன்னவன் லக்ஷ்மணனுக்குச் சொல்லி, பரதனைப் பார்த்து ரகுகுலத்தைக் களிக்கச் செய்பவனே! பரதா! உனது கையினால் மாண்டவியின் கையைப் பிடிப்பாயாக' என்றுரைத்தனன், தர்மாத்மாவாகிய அந்த ஜநகமஹாராஜன் சத்ருக்நனையும் பார்த்துப் 'பருத்தபுஜங்களையுடைய சத்ருக்நனே! உன் கையினால் ச்ருதகீர்த்தியின் கையைப் பிடித்துக் கொள்வாயாக. நீங்கள் எல்லோரும் அழகு பொருந்தியவர்கள். நீங்கள் யாவரும் நல்ல நடவடிக்கையுடையவர்கள். இப்படிப்பட்ட உங்களுக்கே எங்கள் புதல்விகள் பத்நிகளாகத் தக்கவர். ஆகையால் ககுத்ஸ்த்தவம்சத்திற் பிறந்த மஹாநுபாவர்களே! நீங்கள் எல்லோரும் [2] பத்நிகளுடன்கூடி எங்கள் நூண்

---

1 பரதன் பெரியவனாயிருக்கச் சிறியவனாகிய லக்ஷ்மணனுக்கு முன்பு விவாஹஞ் செய்வது தோஷமென்று நினைக்கலாகாது. 'பித்ருவ்யபுத்ரே ஸாபத்நே பரநாரீஸுதேஷு வா, விவாஹதாநயஜ்ஞாதௌ பரிவேதோ ந விதியதே' என்று பெரியவனுக்கு முன்பு விவாஹஞ் செய்யவேண்டுமென்கிற விதி ஸஹோதரர்களுக்கே யன்றிச் சக்களத்திப் பிள்ளைகளுக்கில்லை.

2 (பத்நிகளுடன்கூடி) என்கையால் தாரை வார்த்தாயிற்றென்று தோற்றுகின்றது. ஜநகன் மூத்தவனாகையால் மாண்டவீச்ருதகீர்த்திகளைப் பற்றி அநுஜ்ஞைமாத்திரஞ் செய்தனன். அவர்களைத் தாரை வார்த்துக் கொடுத்தவன் குசத்வஜனே.

னுக்கு ஸந்தோஷத்தை விளைக்கவேண்டும். காலவி ளம்பஞ் செய்யவேண்டாம்' என்று மொழிந்தனன்.

அந்த ராஜகுமாரர்கள் நால்வரும் இவ்வாறு ஜநகமஹாராஜன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு, வஸிஷ்டரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு ராஜபுத்ரிகள் நால்வருடையவும் ஹஸ்தங்களைப் பிடித்துக் கொண்டனர். அப்பொழுது மஹாநுபாவர்களாகி ரகுக்களில் சிறப்புற்ற ராமலக்ஷ்மண பரத சத்ருக்நர்கள் தம் பாரியைகளுடன் கூட [1]அக்நிக்கும் விவாஹவேதிகைக்கும் ஜநகமஹாராஜனுக்கும் மற்றும் அங்குள்ள ரிஷிகளுக்கும் ப்ரதக்ஷிணஞ் செய்து சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி கல்பஸூத்ரங்களையும் அநுஸரித்து வேறுவேறாக விவாஹத்தைநடத்திக்கொண்டனர். காகுத்ஸ்தகுலதிலகர்களாகிய ராமலக்ஷ்மண பரத சத்ருக்நர்கள் தம் பத்நிகளாகிய அப்பெண்மணிகளின் அழகான ஹஸ்தங்களைப் பிடித்துக்கொள்ளும்பொழுது மிகவும் அழகிய பெரும் புஷ்பவர்ஷமானது ஆகாயத்தினின்றும் உண்டாயிற்று. தேவதைகளும் துந்துபிவாத்யங்களைக் கணகணவென முழக்கினர். அப்ஸரமடந்தையர்களும் கூட்டங்கூட்டமாகவாத்யங்களை வாசித்து வாயினுற்பாடி ஆடினர். கந்தர்வர்களும் மதுர

---

1 முதலிற் வஸிஷ்டமாமுனிவர் ஹோமஞ் செய்தது ராமாதிகளின் நன்மைக்காக வென்று தெரிகின்றது. பின்பு அக்நியைப் ப்ரதிஷ்டை செய்து விவாஹஹோமம் ராமாதிகள் செய்தனர் பாணிக்ரஹணமான பின்பு அவ்வக்நிக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் கந்யாதாநஞ் செய்கிற ஜநகனுக்கும் ராமாதிகள் பிரதக்ஷிணஞ் செய்து, பின்பு ஸ்வகல்பாநுஸாரமாக ஒவ்வொருவரும் வேறுவேறாக அக்நியை ப்ரதிஷ்டை செய்து விவாஹஹோமஞ் செய்தனர். பின்பு லாஜஹோமமும் நடத்தித் தந்தமாது அக்நிகளுக்கு மும்முறை ப்ரதக்ஷிணஞ் செய்தனரென்று க்ரமங் கண்டுகொள்வது.

மாகக் காநஞ் செய்தனர். ரகுகுலதிலகர்களாகிய அந்த ராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்களின் விவாஹமஹோத்ஸவத்தில் அது மிகவும் அற்புதமாயிருந்தது. இங்ஙனம் மங்களவாத்யம் முதலியவைகளின் கோஷங்களால் நாற்புறமும் முழங்கிக்கொண்டிருக்க, மிகுந்த தேஜஸ்ஸுடன் விளங்குகின்ற அந்த ராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்கள் நால்வரும் அக்நியை மூன்று ப்ரதக்ஷிணஞ் செய்து பாரியைகளை விவாஹஞ் செய்து கொண்டனர். பின்பு அந்த ரகுகுலகுமாரர்கள் நால்வரும் தந்தமது பத்நிகளோடுகூட விடுதிகிருகத்திற்குப் போய்ச் சேர்ந்தனர். தசரத சக்ரவர்த்தியும் பாரியைகளுடன் கூடி விளங்குகின்ற புதல்வர்களைக் கண்ணாரக் கண்டுகொண்டே ரிஷிக்கூட்டங்களோடும் பந்துக்களோடுங்கூடிப் பின் சென்றனன். எழுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பரசுராமதர்சநம்.

பின்பு அன்றிரவு கழிந்து மறுநாளுதயகாலையில் விச்வாமித்ரமாமுனிவர், தசரத மஹாராஜனையும், ஜநக மஹீபாலனையுங் கண்டு விடைபெற்றுக்கொண்டு, (ராம லக்ஷ்மண பரதசத்ருக்நர்களையும், ஸீதோர்மிளாமாண்டவீ ச்ருதகீர்த்திகளையும் ஆசீர்வதித்து) வடதிசையில் தான் வஸித்திருந்த ஹிமவத் பர்வதத்திற்குப் போய்ச் சேர்ந்தனர். இங்ஙனம் விச்வாமித்ரர் போனபின்பு தசரத வேந்தரும் மிதிலாதிபதியாகிய ஜநகமன்னவனிடம் விடைபெற்றுக்கொண்டு விரைவிற் றமது பட்டணத்திற்குப் போகப்புறப்பட்டனர். அங்ஙனந் தசரதமன்னவன் புறப்பட்டுப் போகையில் ஜநகமஹீபாலனும் வழிவிடுவதற்காகக் கொஞ்சதூரம் வரையில் பின்றொடர்ந்து

சென்றனன். பின்பு அவ்விதேஹராஜன் தன் பெண்களுக்குச் சீதனமாகப் பல பொருள்களைக் கொடுக்கத் தொடங்கி, அநேக லக்ஷம்பசுக்களையும், விலையுயர்ந்த லக்ஷக்கணக்குள்ள மேலான கம்பளங்களையும், மிகவும் உயர்ந்த பட்டுவஸ்த்ரங்களையும், நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்று திவ்யமான உருவங்களையுடைய யானைகளையும் குதிரைகளையும் தேர்களையும் காலாட்களையும் விலையேறப்பெற்ற அணிகளாலணிந்து மேம்பாடுள்ள அழகியர்களாகிய சில தாதிகளையும் அத்தன்மையராகிய வேலைக்காரர்களையும் அவர்களுக்குத் தந்தனன். பின்னும் அம்மஹீபதி மிகவும் உள்ளங் குளிர்ந்து எல்லையிறந்த வெள்ளி பொன் முத்து பவளங்களையும் பெண்களுக்குச் சீதனமாகக் கொடுத்தனன்.

இப்படி பெண்களுக்கு அபாரமாகத் தநங்களைக் கொடுத்துத் தசரதமஹாராஜனிடம் விடைபெற்றுக்கொண்டு அம்மிதிலாதிபதியாகிய ஜநகமஹாராஜன் தனது இருப்பிடம் வந்துசேர்ந்தனன். அயோத்யாதிபதியாகிய தசரத மஹாராஜனும் சதுரங்கபலங்களும் மற்றுமுள்ள பரிஜநங்களும் சூழ மஹாநுபாவர்களாகிய பிள்ளைகளுடன்கூடி ரிஷிகளனைவரையும் முன்னிட்டுக்கொண்டு தனது பட்டணத்திற்குப் போயினன். இப்படி அந்தத் தசரதமன்னவன் ரிஷிகளோடும் மற்றுமுள்ள ஜநக்கூட்டங்களோடும் பிள்ளைகளோடும் போய்க்கொண்டிருக்கையில், அவனுக்கெதிரில் ஆகாயத்திற் பறவைகள் அசுபத்தைத் தோற்றுவித்துக்கொண்டு ஆங்காங்குப் பயங்கரமாகக் கூச்சலிட்டன. பூமியிலுள்ள மிருகங்கள் மட்டும் அவனுக்கு ப்ரதக்ஷிணமாகச் சென்று சுபத்தைத் தோற்றுவித்தன.

அவ்வசகுநங்களைக் கண்டு தசரதமன்னவன் வஸிஷ்

டமாமுனியைப் பார்த்து 'ஸ்வாமீ! க்ரூரமான பக்ஷிகள் பலவும் பயங்கரமாகக் கூவுகின்றன. மிருகங்கள் மட்டும் ப்ரதக்ஷிணமாகச்செல்லுகின்றன. அசுபசகுநங்களும்சுப சகுநங்களும் காணப்படுகின்றன. இது இன்னதென்று தெரியாமல் என் ஹ்ருதயம் நடுங்குகின்றது. இது சுப மோ, அசுபமோ என்று நிச்சயிக்கப்போகாமல் என் மனம் மிகவும் வருந்துகின்றது. இதை எனக்குத் தெரி யச் சொல்லவேணும்' என்று கேட்கலாயினன்.

வஸிஷ்டமஹர்ஷியும் இங்ஙனம் தசரதமன்னவன் சொன்னதைக் கேட்டு 'மன்னவனே! இதற்கு யாது பலன் உண்டாகுமோ, அதைச் சொல்லுகின்றேன், கேள். ஆகாயத்திற்பறவைகள் கூவுகிறபடியால் ஸமீபத் தில் நமக்கு ஒரு பயம் உண்டாகுமென்று ஏற்படுகின்றது பூமியில் மிருகங்கள் நம்மை வலம் வந்து செல்லுகிறபடி யால், அந்தப் பயமும் தானே நீங்கிவிடுமென்று தோற்று கின்றது. ஆகையால் இந்த மநஸ்தாபத்தை விடுவாயாக' என்று இவ்வினிய மொழியைக் கூறலாயினர்.

அவர்கள் இங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கையில் அங்குப் பூமி முழுவதும் கிடுகிடென்று நடுங்கும்படியும் அழகிய மரங்கள் யாவும் அப்படியே பேர்ந்து விழும்படி யும் ஓர் பெருங்காற்று வீசிற்று. ஐயோ! ஸூர்யனை இருட்டு மூடிக்கொண்டது. திக்குகள் யாவும் வெளிச்ச மற்றவைகளாய்விட்டன. அந்தத் தசரதனுடைய படை கள்யாவும் புழுதியால் மூடப்பட்டு ஒன்றுந் தோன்றாமல் நின்றுவிட்டன. அப்பொழுது அவ்விடத்தில் வஸிஷ் டரும் மற்றுமுள்ள மஹர்ஷிகளும் தசரதமஹாராஜ னும் அவனது புத்ரர்களாகிய ராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்களுமே ப்ரஜ்ஞையுடன் இருந்தனர். மற்றை யனைத்தும் ப்ரஜ்ஞையற்றிருந்தது. பயங்கரமாகிய அவ்

விருட்டில் அந்தத் தசரதனது ஸைந்யமானது புழுதி யால் மூடப்பட்டதுபோலாய் விட்டது.

அப்பொழுது அந்தச் சைன்யமானது அதிபயங்கர ஞகி ஜடைகளைத் தரித்து வருகின்ற பரசுராமனைக் கண் டது. அவன் பிருகுவம்சத்திற் பிறந்தவன்; ஜமதக்நியின் குமாரன். மஹாராஜர்களாயினும் அவர்களை யெல்லாம் அவன் வென்று முடித்தவன். கைலாஸபர்வதம்போல் அசைக்கக் கூடாதவன்; பிரளயகாலாக்னிபோல் யாவ ராலும் பொறுக்கமுடியாதவன்; மிகுந்த காந்தியுடன் அக்நி ஜ்வாலைபோல் விளங்குகிறபடியால் ஸாதாரண ஜநங்களுக்குக் கண்கொண்டு பார்க்க முடியாதிருப்பவன். அம்மஹாதீரன் தோளின்மீது கோடரியை வைத்து, மின்னற் கூட்டங்கள்போல் தனது தேஜஸ்ஸினுல் விளங் கும் வில்லையும் சிறந்த பாணத்தையும் கைகளில் பிடித்து த்ரிபுரதஹநஞ் செய்த சிவபிரானே இவன் என்னும்படி புலப்பட்டனன்.

ஜபத்தையும் ஹோமங்களையும் இடைவிடாமற் செய்துகொண்டிருக்கும் மஹாநுபாவராகிய வஸிஷ்டர் முதலிய அந்தணர்களனைவரும் அதிபயங்கரனுகி அக்நி போல் ஜ்வலிக்கின்ற அப்பரசுராமனைக் கண்டு அனைவரு மொன்றுகூடி 'இப்பரசுராமன், தனது தகப்பனை ஒரு க்ஷத்ரியன் கொன்றுனென்று முன்பு க்ஷத்ரிய ஜாதி ஸா மாந்யத்திலும் கோபித்துக் கொண்டிருப்பான். மறு படியும் இப்பொழுதாவது க்ஷத்ரியர்களை வதஞ் செய்யா திருப்பானு? முன்னமே க்ஷத்ரியர்களை வதஞ்செய்து தன் கோபமும் மனக்கவலையுந் தீரப் பெற்றவனுகையால், மறு படியும் க்ஷத்ரியவதஞ் செய்யவேண்டுமென்கிற கருத்து இவனுக்கு இராது' என்று இவ்வாறு தமக்குள் ஒரு வர்க்கொருவர் சொல்லிக்கொண்டனர். ரிஷிகள் இவ்

வாறு சொல்லி அர்க்கியத்தை யெடுத்துக்கொண்டு பயங்கரமான ரூபத்தையுடைய அந்தப் பரசுராமனை நோக்கி 'ராமா! ராமா!' என்று இனிய மொழிகளால் அழைத்துப் பூஜைசெய்ய, மஹாபராக்ரமமுடையவனும் ஜமதக்னி குமாரனுமாகிய அந்தப் பரசுராமனும் ரிஷிகள் செய்த அந்தப் பூஜையைப் பெற்றுக் கொண்டு தசரத சக்ரவர்த்தியின் புதல்வனாகிய ராமனைப் பார்த்து இங்ஙனம் உரைத்தனன். எழுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பரசுராமன் ராமனைத் திக்காரஞ் செய்தல்.

'ராமா! தசரதகுமாரனே! ராமா! உனது பராக்ரமம் அற்புதமாயிருக்கின்றதென்று உலகத்தில எங்குங் கேள்விபபடுகின்றனன். சிவபிரானது வில்லை முறித்தது, தாடகாஸம்ஹாரஞ் செய்தது முதலிய உன் விசேஷாரங்களெல்லாவற்றையுங் கேட்டேன். சிவபெருமான் வில் எங்கே? நீ யெங்கே? அபபடிப்பட்ட வில்லை நீ முறித்தது மிகவும் அற்புதமா யிருக்கின்றது. மேலும் அது இப்படியப்படி யென்று நினைக்கவுங்கூட முடியாதது. அதைக் கேட்டு, நான் மேலான மற்றொரு வில்லைக்கொண்டுவந்திருக்கின்றனன. அதிபயங்கரமாகிய அப்பெரிய வில் இது தான். இதை என் தகப்பனாராகிய ஜமதக்னி எனக்குத் தந்தனர். இதில் பாணத்தைத் தொடுத்து எதோ! உன் பலத்தைக் காட்டுவாயாக. இவ்வில்லை யெடுத்து வளைத்து நாணேற்றுவாயாயின், உன் வீரியத்தை நான் அறிந்துகொள்வேன். ராகவா! அப்பொழுது உன் பராக்ரமம் புகழத்தக்கதாகும். அப்படிப்பட்ட பராக்ரமத்தையுடைய உனக்கு த்வந்த்வயுத்தங் கொடுக்கின்றேன்' என்றனன்.

இங்ஙனம் அந்தப் பரசுராமன் மொழிந்த மொழிகளைக் கேட்டுத் தசரதமன்னவன் துயரமுற்று முகம் வாடி மனக்களிப்பின்றிக் கைகளைக் கூப்பிக்கொண்டு அப்பரசுராமனைப் பார்த்து 'நீ க்ஷத்ரியர்களின மீது முன் உண்டாயிருந்த கோபத்தை விட்டு மிகவும் மனத் தெளிவுபெற்றனை. மேலும் ப்ராஹ்மணனாயிருக்கின்றனை. பிராஹ்மணர்களுக்குச் சாந்தியே யன்றோ ஸ்வரூபம். அதிலும் பெருங்கீர்த்தி பெற்றவன். ஆகையால் ஸஹஜமாகிய சாந்தியை விட்டு அந்தக் கீர்த்தியைக் கெடுத்துக்கொள்வது நலமன்று. நீ எல்லாவற்றிலும் நன்றாகத் தேர்ந்திருப்பவன். என் பிள்ளைகளோ பாலர்கள். (அறியாதவர்கள்.) ஆகையால் வீரர்களிடத்தில் ரோஷத்தைப் பாராட்டி, பாலர்களாகிய என் புதல்வர்களுக்கு அபயங் கொடுக்கவேண்டும். எப்பொழுதும் வேதாத்யயநம் முதலிய விரதங்களை யநுஷ்டித்துக்கொண்டிருக்குந் தன்மையராகிய பார்க்கவர்களின் வம்சத்திற் பிறந்தனை; இந்திரனிடம் பிரதிஜ்ஞை செய்து ஆயுதத்தை விட்டுவிட்டனை. அன்றியும் நீ தர்மத்தில் மனஞ் செலுத்திக் காச்யபருக்குப் பூமியை யெல்லாந் தானஞ்செய்து, வநத்திற்குச் சென்று மஹேந்த்ரபர்வதத்தில் வாஸஞ் செய்கின்றனை. நீ மறுபடியும் ஏதுக்குத் திரும்பிவந்தனை? எங்களனைவரையும் நாசஞ்செய்கைக்கே நீ மீளவும் திரும்பிவந்தாயென்று தெரிகின்றது. 'யான் உங்களை நாசஞ்செய்யப்போகிறதில்லை; ஆனால் ராமன் ஒருவனையே நாசஞ் செய்கிறேன்' என்று உரைக்கவேண்டாம். ராமனொருவனை நீ கொன்றாயாயின், அப்பா! நாங்களனைவரும் பிழைத்திருக்கமாட்டோம்' என்றனன்.

இவ்வாறு தசரதமன்னவன் சொல்லிக்கொண்டிருக்கையில், ஜமதக்னி குமாரனாகிய அந்தப் பரசுராமன்

மஹா பராக்ரமசாலியாகையால் அவ்வார்த்தையைச் சிறிதுஞ் செவியிற் கொள்ளாமல் விட்டுவிட்டு ராமனிருக்குந திசைக்கே முகத்தை மாற்றிக்கொண்டு "ராமா! உலகத்தில் சிறப்புற்ற வில்லுகள் இரண்டே உள்ளவை. இவ்வில்லுகளிரண்டும் தேவலோகத்திலுண்டானவை; உலகத்தில் எங்கும் பிரஸித்தி பெற்றவை; மிகவும் உறுதியானவை; சிறந்த ஸாரமுள்ளவை; வில்லுகளனைத்திலும் முக்கியமாயிருப்பவை. அவைகள் விச்வகர்மாவினால் மிகுந்த பிரயத்தினத்துடன் நிருமிக்கப்பட்டவை. அவ்விரண்டு விற்களில் ஒன்றை த்ரிபுராஸுரர்களுடன் யுத்தஞ் செய்ய விரும்பின சிவனுக்குத் தேவர்கள் கொடுத்தனர். அது அப்பொழுது த்ரிபுராஸுரர்களைக் கொன்றது. புருஷோத்தமா! காகுத்தனே! அதையே நீ முறித்தனை. என் கையிலிருக்கின்ற இவ்வில் இரண்டாவது. இதைத் தேவர்கள் விஷ்ணுவுக்குக் கொடுத்தனர். ராமா! மிகவும் ப்ரகாசிக்கின்ற இவ்வில் விஷ்ணு தேவனுடையது. இதுவும் சிவனது வில்லோடொத்த வலிவுடையது. 'இது சிவனது வில்லைப்போன்றதேயாகுமாயின், அதைப்போலவே இதுவும் எனக்கு ஒரு சரக்கோ' என்று நினைக்கவேண்டாம். அச்சிவனது வில் சிதிலமாயிருந்தது பற்றி அதை நீ முறித்துவிட்டனை. இல்லையாயின் நீ அதை முறிக்கவல்லனல்லை. அது சிதிலமானதற்குக் காரணஞ் சொல்லுகின்றேன்; கேள்.

சிவன் த்ரிபுரங்களைத் தஹித்தபின்பு, தேவர்கள [1] சிவனுடையவும் விஷ்ணுவினுடையவும் பலாபலங்களை அறிய விரும்பி, அனைவரும் ப்ரஹ்மதேவனைப் பார்த்து

---

1 தேவதைகள் ப்ரஹ்மாவைப் பார்த்து 'முன்பு வ்ராஹாதி ரூபங்களால் பூமியை யெடுக்கை முதலிய காரியங்களை விஷ்ணு செய்தது பற்றி அவ்விஷ்ணுவே அதிகனென்று நீ புகழ்ந்துரைக்க நாங்கள்

'சிவகேசவர்களில் மிகுந்த பலமுடையவன் யாவன்?' என்று வினவினர். அந்த ப்ரஹ்மதேவனும் ஸத்யவான் களனைவரிலும் தலைவனாகையால், சிவகேசவர்களின் ஏற்றக் குறைகளைக் குறித்து அத்தேவன் சொன்ன உபதேசங்களை ஸத்யமாகவே தேவர்கள் நம்புவார்களே யாயினும் கண்குளிரக் கண்டல்லது அவர்களது மனத்திற்கு ஸமாதாநம் உண்டாகவில்லை. ஆகையால் அத்தேவன் அவர்களின் அபிப்ராயத்தை அறிந்துகொண்டு சிவகேசவர்களுக்கு [1] விரோதத்தை உண்டாக்கினன். விரோதமுண்டாகையில் சிவனும் விஷ்ணுவும் ஒருவர்க்கொருவர் ஜயிக்க முயன்று லோகங்களெல்லாம் பயமுற்று மயிர்க்கூச்சலடையும்படி அதிபயங்கரமாக யுத்தஞ் செய்தனர். அப்பொழுது விஷ்ணுதேவன் ஹூங்காரஞ் செய்ய, பயங்கரமான சக்தியுடையதாயினும் சிவனுடைய வில் அடிபட்டுச் சிதிலமாயிற்று. அந்த ஹூங்காரத்தில் மஹாதேவனென்னும் பேர் கொண்டு முக்கண்ணனாகிய

---

கேட்டிருக்கின்றனம் இப்பொழுது சிவன் விஷ்ணுவைக் கேவலம் ஒரு ஸாதநமாகச் செய்துகொண்டு தானே முக்கியனாகி த்ரிபுரங்களையுங் கொளுத்தினதைக் கண்டால் சிவனே அதிகனென்று எங்களுக்குத் தோற்றுகின்றது. ஆகையால் (இவ்விருவரிலும் மேலானவன் யாவன்) என்று வினவினரென்று தெரிகின்றது.

1 ப்ரஹ்மதேவன் விஷ்ணுவைப் பார்த்து 'த்ரிபுரஜயத்தில் சிவன் தானே வில்லாளியாயிருந்தபடியால் அந்த ஜயத்தில் தானே முக்கியனென்றும், நீ ஸாதநமாக மாத்திரமிருந்தாயாகையால் அமுக்கியனென்றும் என்க்குச் சொன்னான்' என்றுரைத்து அத்தேவனுக்குச் சிவனிடத்தில் விரோதத்தையும், சிவனைப் பார்த்து 'விஷ்ணு, உனது பாணத்தின் நுனியில் தானிருந்தது பற்றி, நானே த்ரிபுரங்களை ஜயித்தேனென்றும் சிவனல்லவென்றும் என்னுடன் சொன்னான்' என்று மொழிந்து அச்சிவனுக்கு விஷ்ணுவிடத்தில் விரோதத்தையும் விளைவித்தானென்றுணர்க.

சிவபெருமானும் கைகாலாடாமல் நின்றுவிட்டனன். அப்பொழுது தேவர்களும் ரிஷிகளும் சாரணர்களும் கும்பற்கூடி வந்து 'இனி யுத்தம் வேண்டாம்' என்று ப்ரார்த்திக்க, தேவர்களிற் சிறந்த அவ்விருவரும் ஓய்ந்துபோயினர். அப்பொழுது தேவர்களும் விஷ்ணுவின் பராக்ரமத்தினால் சிவனது வில் சிதிலமானது கண்டு 'விஷ்ணுவே பலாதிகன்' என்று நினைத்தனர்.

மஹாயசஸ்வியாகிய அச்சிவபெருமானும் இங்ஙனம் வில் முறிந்து தனக்குக் குறை நேரிட்டது பற்றிக் கோபாவேசங் கொண்டு அவ்வில்லைப் பாணத்துடன்கூட விதேஹதேசத்தையாளுந் [1]தேவராதனென்னும் ராஜ

1 தக்ஷயஜ்ஞத்தின் முடிவில் சிவன் தநுஸ்ஸைத் தேவர்களுக்குக் கொடுத்தானென்று முன்பு சொல்லப்பட்டது. சிவன் வில்லைத் தேவராதனிடம் கொடுத்தானென்று இவ்விடத்திற் சொல்லப்பட்டது. விசுவாமித்ராச்ரமத்தில் ரிஷிகள் 'தேவதைகள் ஜநகனுக்கு யாகத்திற் கொடுத்தனர்' என்று மொழிந்தனர். ஸீதை அநஸூயையுடன் வருணன் அந்த வில்லை ஜநகனுக்குக் கொடுத்தானென்று சொல்லினள். இவையெல்லாம் ஒன்றோடொன்று விருத்தமாயிருக்கின்றன. இவைக்கு ஸங்கதி யெப்படியெனில், தக்ஷயாகத்தின் முடிவில் சிவன் கோபத்தோடு அவ்வில்லைத் தேவர்களுக்குக் கொடுக்க முயலுகையில், அக்கோபத்தைக் கண்டு தேவதைகள் அவனருகிற் சென்று அவ்வில்லை வாங்கிக்கொள்ளப் பயந்து அதைத் தமக்குப் பதிலாகத் தேவராதனிடங் கொடுக்கும்படி ப்ரார்த்திக்க, சிவன் அதைத் தேவராதனிடம் வைத்தனன். ஆனது பற்றியே சிவன் அதைத் தேவர்களுக்குக் கொடுத்தானென்றும், தேவராதனுக்குக் கொடுத்தானென்றும் இரண்டும் பொருந்துகின்றன. சிவன் தேவராதனிடம் வைத்தானென்கையில் அவனுக்குத் தேவதைகள் சொந்தமாகக் கொடாமல் வைத்திருக்கச் சொல்லிக் கொடுத்தனரென்று தெரிகின்றது. பின்பு ஜநகன் யாகத்தினால் தேவதைகளைக் களிக்கச் செய்து, தன்னிடம் வைத்திருக்கச் சொல்லிக் கொடுத்த வில்லைச் சொந்தமாகத் தனக்குக் கொடுக்கும்படி ப்ரார்த்திக்க, தேவர்களும் அதை அவனுக்குச் சொந்தமாகக் கொடுத்துவிட்டனர்

ரிஷிக்குக் கொடுத்தனன். ராமா! சத்ருக்களின் பட்டணங்களை வெல்லவல்லதும் விஷ்ணுவினுடையதுமாகி என் கையிலிருக்கின்ற இந்த உத்தம தநுஸ்ஸை அவ்விஷ்ணு தேவன் பார்க்கவராகிய ரிசீகருக்கு 'நீ இதை வைத்துக் கொண்டிரு' என்று கொடுத்தனன். மஹாதேஜஸ்வியாகிய அந்த ரிசீகரும் நினைத்த காரியங்களெல்லாவற்றையும் தடையின்றி நிறைவேற்ற வல்லவரும் மஹாநுபாவரும் தம் குமாரரும், எனக்குத் தந்தையுமாகிய ஜமதக்நிக்கு அந்த திவ்யதநுஸ்ஸைத் தந்தனர். அவவில் தம்மிடத்திலிருப்பினும் என் தகப்பனாராகிய ஜமதக்நி ஆயுதமெடுப்பதை விட்டுத் தவம் நடத்திக்கொண்டிருந்தனர். அப்படி தபோபலத்துடனிருப்பினும், கார்த்தவீர்யார்ஜுனன தாமஸபுத்தி கொண்டு அவரைக் கொன்றுவிட்டனன்.

இப்படிப்பட்டது மற்றொன்று ஏதாயினும் உளதா? இது எவ்வளவு க்ரூரமாயிருக்கின்றது! இதைக்கேட்டு நான் கடுங்கோபாவேசங் கொண்டு க்ஷத்ரிய ஜாதியைக் கொல்லத் தொடங்கி அநேகந்தரம் உலகத்திற் பிறக்கும் க்ஷத்ரியர்களை யெல்லாம் அப்பொழுதைக்கப்பொழுதே வதஞ்செய்து, அவராளும் பூமியையெல்லாங் கைப்பற்றிக்கொண்டு, யாகஞ்செய்து யாகத்தின் முடிவில் நற்செய்கையுள்ளவரும் மஹாநுபாவருமாகிய காச்யபருக்கு அப்பூமியைத் தக்ஷிணையாகக் கொடுத்து, மஹேந்த்ர

ஆகையால் தேவதைகள் அதை ஜநகனுக்குக் கொடுத்தார்களென்பது உபபந்நமாகின்றது. மேலும் தேவர்கள் தேவராதனுக்குக் கொடுக்கும் பொழுது வருணனைக் கொண்டு கொடுப்பித்தனராகையால் வீதை அநஸூயையுடன் 'வருணன் அதை ஜநகனுக்குக் கொடுத்தான்' என்று சொன்னதுஞ் சேருகின்றது. ஆகையால் ஒன்றுக்கும் விரோதமில்லையென்று கண்டுகொள்வது.

பர்வதத்தில் வாஸஞ் செய்துகொண்டு தவம் புரிந்து தபோபலமுடையவனாயினன். (தேவர்களால் சூழப்பட்ட அம்மலையில் ஸுகமாகத் தவஞ்செய்து கொண்டிருக்கின்றனன். ஆனால் இப்பொழுது இவ்விடம் வந்ததற்குக் காரணமென்னவென்றால், மிகுந்த பலமுடைய நீ உனது மேலான பராக்ரமத்தினால்) சிவதநுஸ்ஸை முறித்த ஸங்கதியைக் கேள்விப்பட்டேன். ஆனதுபற்றியே வேகமாக வந்து சேர்ந்தனன். ராமா! தகப்பன் பாட்டன் வரிசையிலிருந்து க்ரமமாக எனக்கு வந்ததும், அவ்விஷ்ணுதேவன் வைத்துக்கொண்டிருந்ததும் பெருமை பொருந்தியதுமாகிய அவ்வில் இதோ இருக்கின்றது. நீ க்ஷத்ரியனாயிருப்பவன். ப்ராஹ்மணனைபபோல் எனக்கையிலாகாதென்று உரையாமல் க்ஷத்ரிய தாமத்தை முன்னிட்டுக்கொண்டு சிவனது வில்லைப்போல் சிதிலமாகாமல் மிகுந்த வலிவுடைய இம்மேலான வில்லை வாங்கிக்கொள்வாயாக. விற்களனைத்திலும் உயர்ந்த இவ்வில்லில், நீ வல்லவனாயின், சத்ருபட்டணங்களைத் தொலைக்கவல்லதான ஒரு பாணத்தைத் தொடுப்பாயாக. காகுத்தனே! பிறகு உன் சக்தியை அறிந்து கொண்டு உன்னுடன் த்வந்த்வயுத்தஞ் செய்கின்றேன்' என்றனன்.

எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பரசுராம கர்வபங்கம்.

அப்பொழுது தசரதகுமாரனாகிய ராமன், ஜமதக்நியின் புத்திரனான அந்தப் பரசுராமன் மொழிந்தவற்றைக் கேட்டுத், தான் தந்தையின் அருகில் இருப்பது பற்றி அவரிடத்தில் கௌரவம் வைத்துப் பரசுராமனை அதிகமாக ஒன்றும் பேசாமல் அவனை நோக்கிப் 'பார்க்

கவி ராமனே! தந்தையின் கடனைத் தீர்க்க முயன்று நீ செய்த செயல்களை யெல்லாங் கேட்டிருக்கின்றனன், (அதாவது, உனது தகப்பனை ஒரு க்ஷத்திரியன் கொன்றனென்று க்ஷத்ரியப்பூண்டையெல்லாம் நீ நாசஞ் செய்த வரலாற்றை முற்றுங் கேட்டிருக்கின்றனன்.) சூரனயிருப்பவன் வைரத்தைத் தீர்த்துக்கொள்ள வேண்டியதன்றோ? ஆகையால் அதற்கு நான மிகவும் சந்தோஷப்படுகிறேன். நீ என்னை வீர்யமற்றவனுகவும், க்ஷத்ரிய தர்மப்படி ஆயுதத்தைக் கையிலேந்தி யுத்தஞ் செய்யச் சக்தியில்லாதவனுகவும் நினைத்து அவமதிசெய்கின்றனை. இது யுக்தமாகுமா? பகைவரைத் தரைப்படச் செய்ய வல்ல ஒப்பற்ற என் தேஜஸ்ஸையும், சத்ருக்களை யடக்க வல்ல என் பராக்ரமத்தையும் இதோ காட்டுகின்றேன். பாராய்' என்று மொழிந்து மிகுந்த கோபங் கொண்டு அந்தப் பரசுராமனது கையிலிருந்து தநுஸ்ஸையும் பாணத்தையும் ([1] விஷ்ணுவின் அவதாரமானதுபற்றி அவனிடமிருக்கிற [2] வைஷ்ணவகலையையும்) மிகுந்த பராக்ரமசாலியாகையால் அலக்ஷயமாகவே வாங்கிக் கொண்டனன்.

பிறகு ஸ்ரீராமன் அவ்வில்லை வளைத்து நாணேற்றிட்டு அதில் பாணத்தைத் தொடுத்து ஜமதக்நி குமாரனுகிய ராமனைப் பார்த்து மிகுந்த கோபத்துடன் 'பரசுரா

---

1 'இத்யுக்த்வா தேவி வைஷ்ணவ்யா ஶக்த்யா தத்ஸஹிதயாஸஹ। ஜஹ்ரே ராமோ வைஷ்ணவம் சாபம் விநயேநச லீலயா' என்று பாத்மபுராணத்திற் சொல்லப்பட்டது. இதற்குப் பொருள்—தேவி! அந்த ராமன் இங்ஙனம் உரைத்து அந்தப் பரசுராமனிடத்திலிருந்த விஷ்ணு சக்தியுடன் அவ்வைஷ்ணவ தநுஸ்ஸை வணக்கத்தோடு அவலீலையாக வாங்கிக் கொண்டனன்—என்பது.

2 வைஷ்ணவகலை—விஷ்ணுவின் அம்சம்.

மனே! நீ ப்ராஹ்மணனானது பற்றியும் [1] விச்வாமித்ரமா முனிவருக்காகவும் நான் உன்னிடத்தில் மேன்மை வைக்க வேண்டியிருக்கின்றது. ஜமதக்நிகுமாரனே! ஆகையால் உன் ப்ராணங்களைப் போக்கவல்ல இந்தப் பாணத்தை உன்மீது பிரயோகிக்க முடியாதிருக்கின்றனன். ஓ ராமனே! நீ நடப்பதற்குரிய இப்பாதங்களின சக்தியையாவது, நீ தபோபலத்தினால் ஸம்பாதித்திருக்கிற ஒப்பில்லாத [2] உலகங்களையாவது இவ்விரண்டில் உனக்கு எது இஷ்டமோ, அதைக் குறிப்பிடுகின்றனன். இந்தப் பாணம் திவ்யமானது; மேலும் விஷ்ணுவைத் தேவதையாக உடையது; ஆகையால் சத்ருபட்டணங்களையெல்லாம் ஒழிக்கவல்லது. இது இப்படிப்பட்டதாகையால் பிறருடைய பலத்தையும் செருக்கையும் தன் வீரியத்தினால் அழிக்கவல்லது. இது ஒருகாலுங் குறி தப்பி வீண் போகக்கூடியதன்றே' என்றனன்.

அவ்விடத்தில் ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸர மடந்தையர்களும் ஸித்த சாரண கிந்நரர்களும் யக்ஷ ராக்ஷஸர்களும் உரகர்களும் திரள் திரளாக ப்ரஹ்மதேவனை முன்னிட்டுக் கொண்டு விஷ்ணுவின் மேலான ஆயுதமாகிய அவ்வில்லைக் கையிலேந்தி

---

1 விச்வாமித்ரமுனிவரது உடன்பிறந்தவளாகிய ஸத்யவதியென்பவள் ரிசீகருடைய பாரியை. ரிசீகர் அவளிடத்தில் ஜமதக்நியைப் படைத்தனர். ஜமதக்நி பரசுராமனைப் பெற்றனன். இப்படி பரசுராமன் விசுவாமித்ரமாமுனியோடு பந்துத்வமுடையவனாகையால் விச்வாமித்ரரைப் பற்றிப் பரசுராமனை ராமன் கொல்லமுடியாதிருந்தனனென்று கருத்து.

2 உலகங்களை யென்றால் உலகங்களின் ப்ராப்தியை யென்க. அல்லது—அதற்கு மூலமாகிய புண்யகர்மங்களை யெனறுணர்க.



395 பரசுராம கர்வபங்கம்.

விளங்குகின்ற ராமனையும், மிகவும் அற்புதமாகிய அவனது செயலையும் பார்க்கும் பொருட்டு வந்தனர். ராமன் அவ்வில்லைக் கையிலேந்தினபொழுது உலகிலுள்ள ஜநங்கள் யாவும் திகைத்திருந்தன. ஜமதக்நி குமாரனுகிய பரசுராமனும் (தன்னிடமிருந்த விஷ்ணு தேஜஸ்ஸு போனபடியால்) வீரியமற்று ராமனைக் கண்ணுற்றனன். இப்படி ராமனது பராக்ரமத்தினுல் தன் வீரியந் தொலைந்து போகையில், ஜமதக்நி குமாரன் திகைத்து நின்றவனுகித் தாமரையிதழ் போன்ற கண்களையுடைய ராமனைக் கண்டு மெதுவாக இவ்வண்ணம் மொழிந்தனன். 'காகுஸ்த்த குலதிலகனே! ராமா! முன்பு இப்பூமியனைத்தையும் நான் காச்யபருக்குக் கொடுக்கும் பொழுது, அவர் என்னைப் பார்த்துப 'பரசுராமனே! என் தேசமாகிய இப்பூமியில் நீ வஸிக்கலாகாது' என்றனர். காச்யபருக்குப் பூமியையெல்லாம் ஸ்வாதீநஞ் செய்து விட்டனன். 'உமது தேசத்தில் வஸிக்கிறதில்லை' என்று பிரதிஜ்ஞையுஞ் செய்தனன். ஆகையால் நான் குருவாகிய காச்யபர் சொல்லியபடி செய்ய முயன்று ராத்திரியில் இப்பூமியில் வஸிக்கிறதில்லை. வீரர்களிற் றலைவனே! ஆகையால் எனது இப்பூதங்களிலுள்ள கமநசக்தியைப் போக்க வேண்டாம். ஏனெனில், நான் இதில் நில்லாமல் மநோ வேகத்தினுல் மஹேந்த்ரபர்வதத்திற்குப் போகவேண்டியவன். நான் தவஞ்செய்து ஒப்பில்லாத உலகங்களை ஸம்பாதித்திருக்கின்றனன். உனது மேலான பாணங்களால் அவைகளை [1] அடிப்பாயாக. கால விலம்பஞ் செய்ய

---

1 உலகங்களை யடிக்கையாவது-உலகங்களைப் பெறுதற்கு ஹேதுவாகிய கர்மங்களை விபலமாகச செய்கை. ஒரு காரியம் மூர்த்தமாயினும் அமூர்த்தமாயினும் அதைத் தடுக்கையே ராமபாணங்களுக்கு-

வேண்டாம். நான் வேகமாகப் போகவேண்டும். இவ் வில்லை அலக்ஷ்யமாக வாங்கிக்கொண்டமையால் தேவர் களுக்குத் தேவனும் ஆதியந்தமில்லாத பரஞ்சுடருமாகிய மதுசூதனன் நீயே யென்று அறிந்துகொண்டனன். பகைவரைத் தபிக்கச்செய்ய வல்ல பராக்ரமசாலியே! உனக்கு மங்களம் உண்டாகுக. இதோ தேவர்களனைவரும் திரள் திரளாக வந்து யுத்தத்தில் யாவராலும் எதிரிட வொண்ணாத உன்னையும் ஒப்பில்லாத உன் வீரச்செயல்களையும் காண்கின்றனர். மூவுலகங்களுக்கும் நாதனாகிய உன்னிடத்தில் நான் தோல்வியடைந்தது எனக்கு அவமானமாகமாட்டாது. ஸ்வாமியினிடத்தில் தாஸனுக்கு நேரிட்ட தோல்வி அவமதிப்பை விளைக்காதன்றோ? ராமா! சத்ருக்களை யடக்குகையே உனக்கு மேலான விரதம். ஆகையால் ஒப்பின்றி மேன்மை பெற்றிருக்கிற உனது பாணத்தை விடுவாயாக. நீ பாணம் விடுவதைக் கண்டு பர்வதங்களிற் சிறந்த மஹேந்த்ர பர்வதத்திற்குப் போய்ச் சேருகின்றேன் என்றனன்.

ஜமதக்நி குமாரனாகிய பரசுராமன் இங்ஙனஞ் சொல்லக் கேட்டுத் தசரதசக்ரவர்த்தியின் புத்திரனாகிய ஸ்ரீராமன் உத்தமமாகிய அந்தப் பாணத்தைப் பிரயோகித்தனன். பரசுராமனும் தான் தவஞ்செய்து ஸம்பாதித்த லோகங்களெல்லாம் ராமனால் அடிக்கப்பட்டது கண்டு வேகமாக மஹேந்த்ர பர்வதத்திற்குப் போயினன். இங்ஙனம் அந்தப் பரசுராமன் புறப்பட்டுப் போன பின்பு திக்கு விதிக்குகள் யாவும் இருள் நீங்கினவைகளாயின. தேவர்களும் ரிஷிஸமூஹங்களும் அச்

---

அபேக்ஷிதம். மூர்த்தமென்றால்-சரீரமுடையது. அமூர்த்தமென்றால்_ அதில்லாதது,

பெரும் வில்லை ஊன்றிக்கொண்டிருக்கிற அந்த ராமனை மிகவும் புகழ்ந்தனர். ஜமதக்நி புத்ரனாகிய பரசுராமனும் தாசரதி ராமனைக் கொண்டாடி, பின்பு பிரதக்ஷிணம் செய்து தனது இருப்பிடத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். எழுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ தசரதசக்ரவர்த்தி புத்ரர்களுடன் அயோத்யைக்குப் போதலும், ஸீதாராமர்களின் பரஸ்பரப்ரீதியும். }

இங்ஙனம் பரசுராமன் புறப்பட்டுப் போனபின்பு தசரதகுமாரனாகிய ராமன் கோபத்தை விட்டு மனந்தெளியப்பெற்றுத் தம்மிடமிருந்த அந்த தநுஸ்ஸை மஹா ப்ரபாவமுடைய வருணன் கையில் பாணத்தோடு கூடக்கொடுத்தனன். பின்பு ரகுகுலத்தைக் களிக்கச் செய்யுந் தன்மையனாகிய ராமன் வஸிஷ்டர் முதலிய ரிஷிகளுக்கு நமஸ்காரஞ் செய்து, பரசுராமனிடமிருந்து பயந்து [1] திகைத்து நிற்கின்ற தனது தந்தையைப் பார்த்து 'ஜமதக்நிகுமாரனாகிய பரசுராமன் போய்விட்டனன்; ஆகையால் ரத கஜ துரக பதாதிகளாகிய நான்கு அங்கங்களோடு கூடிய நமது ஸைந்யமானது நாதனாகிய உம்மாற் பாதுகாக்கப்பட்டு அயோத்யையை நோக்கிப் புறப்பட்டுப்போகலாம். (இச்சேனை உமது ஆஜ்ஞையை யெதிர்பார்த்திருக்கின்றது. ஆகையால் அதற்குப் பிரயாணமாகும்படி கட்டளை யிடுவீராக. சாதகப்பறவைகள்

---

1 தசரதன் திகைத்து நின்று கொண்டிருந்ததனால் பரசுராமன் ராமனைப் பரதைவமாக ஸ்தோத்ரஞ் செய்ததும், விஷ்ணுதனுஸ்ஸை ராமன் வருணனது கையிற் கொடுத்ததும் அறியானென்று தோற்றுகின்றது. மற்றவர்களுக்கு மாயாதிரோதாநத்தினால் அவை தெரியவில்லை யென்றுணர்க.

மேகத்தினின்றும் ஜலத்தை விரும்புவதுபோல் இச் சேனை உமது ஆஜ்ஞையை எதிர் பார்த்துக் கொண்டிருக்கின்றது') என்றனன்.

தசரதசக்ரவர்த்தி இவ்வண்ணம் ராமன் மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு அப்புதல்வனை இரண்டு கைகளாலும் கட்டியணைத்து உச்சி மோந்தனன். முதலில் பரசுராமன் போனானென்று ராமன் சொல்லியும் அப்பொழுது பயத்தினால் அவ்வார்த்தையை ஸ்பஷ்டமாகத் தசரத மன்னவன் அறியாதிருந்து கொஞ்சம் தெளிந்தபின்பு மீளவும் ராமன் உரைக்க, பரசுராமன் போனானென்று கேள்விப்பட்டு உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலிட்டுப் பேரானந்தம அடைந்து, அப்பொழுது தானும தன் புத்ரர்களும் தப்பிப் பிழைத்தது புநர்ஜந்மமென்றெண்ணினன்.

பிறகு அம்மன்னவன் தன் ஸைந்யம் வேகமாக அயோத்யாபுரிக்குப் பிரயாணமாய்ப் போகும்படி கட்டளையிட்டனன். அப்பொழுது அவ்வயோத்யாநகரமும், த்வஜபடங்களோடுகூடிய பெரியதுஞ் சிறியதுமாக நாட்டப்பட்டிருக்கிற கொடி மரங்களால் அலங்காரஞ் செய்யப்பட்டு அழகியதாகி, மங்களவாத்ய கோஷங்களால் எங்கும முழங்கப்பெற்று விளங்கிற்று. ராஜமார்க்கங்களும் ஜலந்தெளித்து நாற்புறத்திலும் மலர் தூவப்பெற்று மிகவும் அழகாயிருந்தது. அரசன் வருகிறானென்கிற ஸந்தோஷத்தினால் முகம் மலரப்பெற்று ஆடையாபரணங்களால் நன்கு அலங்காரஞ் செய்து கொண்டு மங்களமொழி கூறும் பட்டணத்து ஜநங்கள் கூட்டங்கூட்டமாக ஆங்காங்கு நிறைந்திருந்தனர்; இப்படி மிகவும் அழகாயிருக்கின்ற அப்பட்டணத்தில் அம்மன்னவன் ப்ரவேசித்தனன்.

அப்பொழுது அப்பட்டணத்தில் வஸிக்கும் ப்ராஹ்மணர்களும் மற்றுமுள்ள நகரத்து ஜநங்களும் வெகுதூரம் அவ்வரசனை எதிர்கொண்டு சென்றனர். பெரும் புகழ்பெற்ற அந்தசரத மஹாராஜன் தான் வெகுதூரத்தில் வந்துகொண்டிருக்கும் பொழுதே அங்ஙனம் தனக்கு மேன்மைசெய்யக் கருதி எதிர்கொண்டுவந்த அந்தணர்களாலும் மற்றுமுள்ள ஸாதாரண ஜநங்களாலும் மிகுந்த ஸௌந்தர்யமுடைய தன் புத்திரர்களாலும் பின்தொடரப்பட்டவனாகி ஹிமவத்பர்வதம்போல் மிகவும் உயர்ந்து அகன்று வெளுத்துப் பளபளவென்று நிர்மலமாக விளங்குகின்ற தனது அரண்மனைக்குள் ப்ரவேசித்தினன்.

அப்பொழுது அந்த ராஜகிருகத்திலுள்ள ஜநங்கள் யாவரும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். அரசனும் இஷ்டபூர்த ஸாதநங்களாகிய ஸகலபதார்த்தங்களாலும் பூஜிக்கப்பட்டு பந்துஜநங்களோடு கூடிய பேராநந்தம் பெற்றனன். அப்பொழுது கௌஸல்யையும் ஸுமித்திரையும் அழகிய இடையுள்ள கைகேயியும் மற்றுமுள்ள ராஜ ஸ்த்ரீகளும் [1] மருகியர்கள் நால்வர்க்கும் உபசாரங்களைச் செய்து அந்தப்புரத்திற்கு அழைத்துக் கொண்டுபோக முயன்று மஹா பாக்யவதியாகிய ஸீதையையும் மிக்கபுகழ்பெற்ற ஊர்மிளையையும் குசத்வஜனது புதல்விகளாகிய மாண்டவீ ச்ருதகீர்த்திகளையும் உளளே அழைத்துக் கொண்டு சென்றனர்.

அம்மருகியர்களும் மங்களாசீர்வசநங்களைப் பெற்று மங்களாலங்காரங்களையும் அணிந்து வெண்பட்டு வஸ்த்ரங்களைத் தரித்து கிருகதேவதாலயங்களுக்குச் சென்று சந்தநம் புஷ்பம் தீபம் முதலிய பூஜாஸாதநங்களைக்

1 மருகியர்-மருமக்கள்.

கொண்டு பூஜை செய்தனர். அப்பொழுது அந்த ராஜ புத்ரிகள் யாவரும் வணங்க வேண்டியவர்கள் அனைவரையும் வணங்கிக் (குபேரனது கிருகம்போல் மிகவும் அழகாயிருக்கின்ற தந்தமது கிருகங்களுக்குச் சென்று,) பசுக்களையும் தநதாங்யங்களையும் கொடுத்து ப்ராஹ்மணர்களுக்குத் திருப்தி செய்வித்து, அம்மருகியர்கள் எல்லோரும் மிகுந்தமனக்களிப்புற்று, ஏகாந்தத்தில் தந்தமது கணவர்களோடு கூடி க்ரீடித்துக் கொண்டிருந்தனர்.

மஹாநுபாவர்களாகிய அந்த ராஜ குமாரர்களும் பூமியில் எங்கும் பராக்ரமத்தில் ஒப்பற்றவர்களாகித் தமக்கு அநுரூபைகளாகிய பத்னிகளை இங்ஙனம் மணம் புரிந்து அஸ்த்ரங்களனைத்திலும் தேர்ச்சி அடைந்து அளவிறந்த செல்வம் பெற்றுப் பல நண்பர்களோடுகூடி மனிதர்கள் அனைவரிலும் சிறப்புற்றுத் தமது தந்தையாகிய தசரதசக்ரவர்த்திக்கு இடைவிடாமல் சுச்ரூஷை செய்துகொண்டு ஸுகமாக வாழ்ந்திருந்தனர். (மேலும் அவர்கள் அந்தந்தக் காலங்களுக்குரிய நீதிகளை அறிந்து தமது குணங்களால் தந்தைக்கு மனக்களிப்பை விளைவித்துக்கொண்டிருந்தனர்.)

இங்ஙனம் சில நாள் செல்ல, ரகுகுலத்திற் பிறந்த மஹாநுபாவனாகிய தசரத சக்ரவர்த்தி கைகேயியின் அருமைப்புதல்வனும் தன் புத்திரனுமாகிய பரதனைப் பார்த்துக் 'குழந்தாய்! வீரனே! பரதா! கேகயராஜன் குமாரனும் உனக்கு மாமனுமாகிய யுதாஜித்து உன்னை அழைத்துக் கொண்டு போவதற்காக இங்கு வந்திருக்கின்றனன். (அவன் மிதிலாபட்டணத்தில் ரிஷிகளினடுவில் என்னைப் பார்த்து உன்னை அநுப்பும்படி வேண்டிக் கொண்டனன். நீ தர்மங்களெல்லாம் அறிந்தவன்;

ஆகையால் அவனுக்கு பரீதியைச் செய்வாயாக') என்றனன்.

இங்ஙனம் தசரதன உரைத்த வார்த்தையைக் கேட்டுக் கைகேயியின் அருமைப் புதல்வனாகிய பரதனும அப்பொழுது (தந்தையாகிய தசரத சக்ரவர்த்தியையும் ராமனையும் நமஸ்கரித்து லக்ஷ்மணனைக் கட்டியணைத்துச்) சத்ருக்நனோடுகூட ப்ரயாணமாய்ப் புறப்பட்டுப் போகத் தொடங்கினன். புருஷர்களிற் சிறந்த அந்தப் பரதன் தான் போகும்பொழுது தந்தையாகிய தசரத சக்ரவர்த்தியினிடத்திலும் யாவர்க்கும் வருத்தமின்றி ஏக்காரியத்தையும் செய்யுந் தன்மையனாகிய ராமபிரானிடத்திலும் அன்னையர்களிடத்திலும் மற்றுமுள்ள பெரியோர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு சத்ருக்நனோடுகூடிக் கேகயநாட்டுக்குப் புறப்பட்டுப் போயினன்.

அப்பொழுது பரதன் புறப்பட்டுப் போகையில் மஹாபலமுடைய ராமனும் லக்ஷமணனும் தேவதையைப்போன்ற தமது தந்தைக்குச் சுச்ரூஷையைச்செய்துகொண்டிருந்தனர். ராமனும் தர்மஸ்வபாவனாகையால் தந்தையின் ஆஜ்ஞையை முன்னிட்டுக்கொண்டு பட்டணத்தில் வஸிக்கும் ஜநங்களுக்கு நன்மையை விளைத்தல் தீமையைப் போக்குதல் ஆகிய ஸகல காரியங்களையும் நடத்திக்கொண்டு வந்தனன். இங்ஙனம் பட்டணத்து ஜநங்களுக்கேயன்றி, ராமன் ச்ருதி ஸ்ம்ருதிகளிற் சொல்லிய நியமங்களுக்கு உட்பட்டு நடப்பவனாகையால் தாய்மார்களுக்குச் செய்யவேண்டிய காரியங்களைத் தாய்மார்களுக்கும் பெரியோர்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்களைப் பெரியோர்களுக்கும் அந்தந்தக் காலங்களில் ஊக்கத்துடன் நடத்திக்கொண்டிருந்தனன்.

ராமனுக்குள் இவ்வித ஸ்வபாவத்தையும் நல்ல நடவடிக்கைகளையும் அப்பொழுது தசரதன் கண்டு மிக வும் மனக்களிப்புற்றவனாயினன். அவன் ஒருவன் களிப் பது ஆச்சரியம் அன்று. ப்ராஹ்மணர்களும் வர்த்தகர் களும் அவனது தேசத்திலுள்ள மற்றை ஸகல ஜனங் களும் களிப்புற்றனர். உலகத்திலுள்ள அந்த ப்ராஹ் மணர் முதலிய ஸமஸ்த ஜனங்களுக்குள் மஹாயசஸ்வியும் உண்மையான பராக்ரமசாலியுமாகிய ராமன் தனது நல்ல ஸ்வபாவத்தினாலும் நல்லொழுக்கத்தினாலுமே யன்றி மற் றைக்குணங்களாலும் ப்ரஹ்மதேவன்போல் ஸகல பூதங் களுக்கும் மிகவும் ப்ரியனாகி, அவர்கள் அனைவரினும் குணங்களால் மேன்மை பெற்று விளங்கிவந்தனன்.

[1] மற்றும், அவன் தர்மத்திற்கு விரோதமின்றிக் காமபோகத்தில் மனஞ் செலுத்தி அதில் மிகுந்த ஆவலுடையவனாகி ஸீதையினிடத்தில் அளவற்ற அன்பு கொண்டு அவளது மனத்தில் தானும் நிலைபெற்றுப் பல ருதுக்களாக அவளுடன்கூடி க்ரீடித்துக் கொண்டிருந்த னன். தனது தந்தையே பார்த்து ஏற்படுத்தின பத்னி யென்று ராமனுக்குச் ஸீதை அன்புக்கிடமாயிருந்தனள். இவ்வளவே யன்று; பதி சுச்ரூஷை செய்வது முதலிய குணங்களைப் பற்றியும் ஸௌந்தர்ய குணத்தைப் பற்றி யும் நற்குலத்தில் பிறந்தமை முதலியவற்றைப் பற்றியும் ராமனுக்கு ஸீதையினிடத்திற் ப்ரீதி மேன்மேலும் பெருகிக்கொண்டு வந்தது.

---

1 இதற்கு மூலம்—

'ராமஸ்து ஸீதயா ஸார்த்த விஜஹார ப³ஹூந்ருதூந், 
மநஸ்வீ தத்³ க³தஸ்தஸ்யா நித்யம் ஹ்ருதி³ ஸமர்ப்பித:'

இதற்கு விசேஷார்த்தம் தனிஸ்லோகியில் கண்டு கொள்க.

ராமனது ப்ரீதி அங்ஙனமிருக்க, ஸீதையின் மனத்திலும் அவள்பர்த்தாவாகிய ராமன் இருமடங்காகச் சுற்றிக் கொண்டிருந்தனன். (அதாவது ஸீதையின் மனத்திலும் [1] பர்த்தாவினிடத்தில் ப்ரேமமானது இருமடங்காகப் பெருகிக்கொண்டிருந்தது.) ஸீதையின் மனத்திலுள்ள பதிப்ரேமமானது யாவருமறிய வொண்ணாதபடி மறைந்திருப்பினும், அந்த ராமன் அதற்குள்ள அடையாளங்களால் ஊஹித்துத்தெரிந்துகொண்டிருந்தனன். எப்பொழுதும் தான் அவள் மனத்திலேயே சுற்றிக் கொண்டிருப்பவனாகையால் அவளது ப்ரேமம் எவ்வளவு மறைந்திருப்பினும், அதை அவன் அறியாதிருப்பனோ?

ஸீதையும் தனது அந்தரங்கத்தை ராமன் அறிவதைக்காட்டிலும் மிகவும் மேலாகவே அவனது மனத்தைத் தான் அறிந்துகொண்டிருந்தனள். எப்படியெனில் ஸீதையோ மிதிலாபுரத்தில் பிறந்தவள்; ஜநகராஜன் புதல்வி. ஆகையால் தேசஸ்வபாவத்தினாலும் வம்ச ஸ்வபாவத்தினாலும் ஸூக்ஷ்மங்களை அறியுந்திறமுடையவள். தேவதைகளைப்போன்றவளாகையால் மிகுந்த [2]ப்ராகல்ப்ய முடையவள்; அழகில், அனைவர்க்கும் புலப்படும்படி வடிவுகொண்ட நேரே ஸ்ரீமஹாலக்ஷ்மிபோலிருப்பவள். ஆகையால் இத்தன்மையளான அப்பெண்மணிக்குப் புத்திவிசேஷம் ஸஹஜமென்பது சொல்லவேண்டுமோ? ஆகையால் ராமனது மனத்தை அவனையும் விஞ்சித்

1 இங்கு (பர்த்தாவினிடத்தில்) என்கையால், ராமனுக்குத் தந்தை யேற்படுத்திய பார்யை யென்றும் ஸௌந்தர்யம் முதலிய குணங்களையுடையவ ளென்றும் ஸீதையினிடத்தில் ப்ரீதி உண்டாயிற்று. ஸீதைக்கோ என்றால்—கேவலம் பர்த்தாவாயிருப்பது மாத்திரத்தினால் ராமனிடத்தில் ப்ரீதி உண்டாயிற்றென்று தோற்றுகின்றது.

2. ப்ராகல்ப்யம் – திறமை.

தான் அறிபவளாயினள். [1] ராஜர்ஷியாகிய தசரதசக்ரவர்த்தியின புத்திரனும் அன்னனங் குணங்களையுடையனுமாகிய ராமன் அரசர்களிற் சிறந்த ஜநகமஹாராஜனின் புதல்வியும் அழகான ரூபமுடையவளும் மிகுந்த காமத்தையுடையவளுமாகிய அந்த ஸீதையுடன் கூடி, மஹாலக்ஷ்மியோடு கூடிய தேவாதிதேவனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவைப்போல் ப்ரகாசித்தனன். ஏழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

பாலகாண்டமும் முற்றுபெற்றது.

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:



1 (ராஜர்ஷியாகிய தசரத சக்ரவர்த்தியின் புத்திரன்) என்கையால் அளவற்ற போகோபகரண ஸம்பத்துக்களுண்டென்று தெரிகின்றது. (அரசர்களிற் சிறந்த ஜநகமஹாராஜன் புதல்வி) என்கையால் அவனைக் காட்டிலும் அதிகமான போகோபகரண ஸம்ருத்தி ஸீதைக்கும் உளதென்று ஸூசிப்பிக்கப்படுகின்றது. (மிகுந்த காமத்தையுடையவள்) என்கையால்—ராமனுக்குத் தன்மீதுள்ள காமத்தைக் காட்டிலும் ராமனிடத்தில் தனக்கு அதிகமான காமம் உண்டென்று கருத்து ஒன்றோடொன்றொத்திருக்கும்படியான அநுராகமும் அளவற்ற காமமுமுடையவனுக்கு இப்படிப்பட்ட போகஸம்ருத்திஹேதுவான ப்ரீதிவ்ரதை உண்டாயிருப்பதுபற்றி (ப்ரகாசித்தனன்) என்று சொல்லப்பட்டது.